OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

## அறிந்தது - அறியாதது - அறியமுடியாதது

Ashtavakra Mahagita - Vol.5

ஓஷோ



5

# அஷ்டாவக்ர மகாகீதை

## ஐந்தாம் பாகம்

## அறிந்தது - அறியாதது - அறியமுடியாதது

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 133 முதல் 163 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு


## ஓஷோ

தமிழாக்கம்:

**டாக்டர் என். ஸ்ரீதரன்**





Since 1976

## கவிதா பப்ளிகேஷன்

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (ஐந்தாம் பாகம்) - அறிந்தது-அறியாதது-அறியமுடியாதது

முதற் பதிப்பு : 2018

**விலை** : ₹ 400/-

**Ashtaavakra Mahageethai - Part-5**

Originally published in Hindi under the title:
**ASHTAVAKRA MAHAGITA, VOL. 5**



Reprint: (Actual year of reprint)



| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 2018 |
| Pages | : | 416 |
| **Price** | **:** | **₹ 400/-** |
| ISBN | : | 978-81-8345-660-9 |
| DTP | : | S. Asokkumar |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**

# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஸ்ரத்தத்ஸ்வ தாத ஸ்ரத்தத்ஸ்வ நாத்ர மோஹம்
குருத்ஸ்வ போ: |
க்ஞானஸ்வ ரூபோ பகவானாத்மா த்வம் ப்ரக்ருதே: பர: || 133

குணை: ஸம்வேஷ்டிதோ தேஹஸ்திஷ்ட த்யாயாதி யாதி ச |
ஆத்மா ந கந்தா நாகந்தா கிமேனமனுஸோசதி || 134

தேஹஸ்திஷ்டது கல்பாந்த: கச்சத்வத்யைவ வா புன: |
க்வ வ்ருத்தி: க்வ ச வா ஹானிஸ்தவ சின்மாத்ர ரூபிண: || 135

த்வய்யனந்தமஹாம் போதெள விஸ்வவீசி: ஸ்வபாவத: |
உதேது வாஸ்துமாயாது ந தே வ்ருத்திர்ன வா க்ஷதி: || 136

தாத சின்மாத்ரரூபோஅஸி ந தே பின்னமிதம் ஜகத் |
அத: கஸ்ய கதம் குத்ர ஹேயோபாதேய கல்பனா || 137

ஏகஸ்மின்னவ்யயே ஷாந்தே சிதாகாஸேஅமலே த்வயி |
குதோ ஜன்ம குத: கர்ம குதோஅஹங்கார ஏவ ச || 138

**ஆ**ல்பர்ட் ஐன்ஸ்டீனின் கண்டுபிடிப்புகளுக்கு முன்னால் மனித வாழ்க்கையை காலம், இடம் (time, space) என்னும் இரண்டு கூறுகளாக மட்டும் பிரித்துப் பார்க்கும் வழக்கம் இருந்தது. ஐன்ஸ்டீன் ஒரு மாபெரும் சிந்தனைப் புரட்சியைத் தோற்றுவித்தார். அவர் காலமும் இடமும் வெவ்வேறானவை அல்ல என்றும், அவை ஒரே சத்தியத்தின் இரண்டு முகப்புகள், இரண்டு அம்சங்கள் என்றும் அறிவித்தார்.

இந்த இரண்டும் இணைந்து spaciotime — காலயிடம், காலளவை-என்றொரு புதிய சொல் உருவாக்கம் பெற்றது.*

இந்த அடிப்படையை அறிந்து கொண்டால் அஷ்டாவக்ரர் மேலே கூறியுள்ள சூத்திரங்களைப் புரிந்து கொள்வது சுலபமாகும். காலமும் இடமும் தனித்தனி அல்ல என்று எடுத்த எடுப்பில் முடிவு செய்வது சிரமம்தான். காலம் என்பது இடத்தின் (விண்வெளியின்) ஓர் உருவளவை அல்லது வழிகாட்டும் அம்சம் என்றார் ஐன்ஸ்டீன். காலம் என்பதிலிருந்து இடத்தை (அம்பரத்தை) நோக்குபவரின் பார்வை ஒருவிதமாக இருக்கும். இடம் (சேணிடம்) என்ற அம்சத்திலிருந்து காலத்தை அளப்பவரின் பார்வை வேறுவிதமாக இருக்கும்.

காலம் என்னும் கோணத்திலிருந்து உலகை ஆராய்பவன் வாழ்க்கையில் கர்மமே-செயல் புரிதலே-முக்கியமானது என்ற முடிவிற்கு வருவான். ஏனெனில் காலம் என்பது தொடர்ந்த இயக்கத்தை, ஓடிக்கொண்டே இருப்பதைக் குறிப்பிடும் அம்சமாகும். காலமும் செயலும் கைகோத்துச் செல்கின்றன. ஒன்றை ஒன்று தூண்டுகின்றன.

வெற்றிடம் (ஸ்பேஸ்) என்ற அம்சத்திலிருந்து உலகை நோக்குபவன் கர்மம் புரிதல்-செயல் நடவடிக்கைகள்-வீண் என்ற முடிவிற்கு வருவான். ஏனெனில் இடம் என்னும் கோட்பாடு சூன்யத்தின் வெளிப்பாடு ஆகும். அங்கே (விண்வெளியில்) இயக்கம் இல்லை.

காலத்தின் கோணத்திலிருந்து நோக்குபவனுக்கு உலகம் துவைதம் (இருமை) கோட்பாட்டில் இயங்குவதாகத் தெரியும். அது பன்மை வாதத்தின் (pluralism) அடிப்படையில் இயங்குவதாகக் கொள்ளவும் வாய்ப்புண்டு.

---

* (அடிக்குறிப்புகள் மொழிபெயர்ப்பாளருடையவை.)

ஐசக் நியூட்டன் காலத்தில் இடம் மூன்று அளவையும், காலம் ஓர் அளவையும் கொண்டதாகக் கருதப்பட்டது. இவற்றை இணைத்து ஐன்ஸ்டீன் சார்பியல் கோட்பாட்டில் மாற்றம் கொண்டு வந்தார். Space-time=single entity that relates space and time in a four-dimensional structure postulated by Einstein in his theory of relativity.

நான் இப்போது, இங்கே இருக்கிறேன் (here and now). நேற்று இருந்த நான் இப்போது இல்லை. நாளை பற்றித் தெரியாது. நாளை இருக்கமாட்டேன். ஆனால் நான் இறப்பதால் நீ இறந்துவிடப் போவதில்லை. நான் பிறந்ததற்கும் உன் பிறப்பிற்கும் சம்பந்தம் இல்லை. நீயும் நானும் வேறு என்பது உறுதி. மரங்கள், மலைகள் எல்லாம் தனித்தனி. காலம் எல்லாவற்றையும் வரையறுக்கிறது. ஆனால் இடம் என்னும் பரவெளியில் எல்லாப் பொருட்களும் ஒன்றேதான். ஏனெனில் இருக்கும் பரவெளி ஒன்றே ஒன்றுதான்.

காலத்தின் ஓட்டம் பொருட்களைத் துண்டு துண்டாகப் பிரிக்கிறது. பிரித்தல் என்பதே காலத்திலிருந்துதான் நடைமுறைக்கு வருகிறது. காலம் என்னும் கோட்பாட்டிலிருந்து வாழ்க்கையைப் பார்ப்பவன் அது ஏராளமான கூறுகள், பிரிவுகள் கொண்டதென நினைப்பான். பரவெளியிலிருந்து பார்ப்பவன் எல்லாவற்றையும் ஒன்றெனக் காண்பான்.

காலத்தின் தரப்பிலிருந்து பார்ப்பவன் முயற்சிகளையும் விளைவுகளையும் சொற்களின் மூலம் ஆராய்வான். ஓரிடத்தில் இலக்கொன்று காத்திருக்கிறது. அதை நோக்கிச் செல்ல வேண்டும்; அதற்கென பாடுபட வேண்டும்; முயற்சியெடுக்க வேண்டும்; சபதம் மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு எப்படியாவது இலக்கை அடைந்துவிட வேண்டும். இதற்கு மாறாக, பரவெளியிலிருந்து பார்ப்பவனுக்கோ போய்ச்சேருமிடம் என்று எதுவும் தனியாக இல்லை.

வர்த்தமான மகாவீரர் நிலைநாட்டிய சம்பிரதாயம் ச்ரமணம் (சமணம்) எனப்படுகிறது. அதாவது, சிரமப்பட்டால் எதையும் பெறலாம் என்பது இம்மதத்தின் அடிப்படை. சிரமப்பட்டால் (கடும் விரதம் மேற்கொண்டால்) இறைவனை அடையலாம்; சத்தியத்தை அடையலாம்.

இந்து மதத்தின் இன்னொரு பெயர் பிராம்மணம். 'நீ பிரம்மம்' என்பது இதன் அடிப்படை ஆகவே நீ பாடுபட்டுத் தேடிப் பெறுவதற்குப் பிறிதொன்றுமில்லை. ஞான விழிப்பு ஏற்பட்டால் போதும். 'நீ கடவுள்' என்பதை அறிந்துகொண்டால்

போதும். நீ சுபாவமாகவே, இயற்கையாகவே கடவுள்தான். ஏனெனில் இறைவன் உனக்குள் வீற்றிருக்கிறார். இந்தக் கண்ணோட்டம் பரவெளியிலிருந்து வாழ்க்கையைக் காணும் நோக்காகும்.

மகாவீரர் ஆத்மாவிற்குச் சூட்டிய பெயர் 'ஸமய்' (காலம்) என அறிந்து உனக்கு வியப்புண்டாகும். எனவே மகாவீரரின் சாதனை முறையில் சமாதிநிலை 'ஸாமாயிக்' என அழைக்கப் படுகிறது.

நான் ஜைன குடும்பத்தில் பிறந்தவன். எங்கள் சம்பிர தாயத்தின் (பிரிவின்) பெயர் 'ஸமையா'. இது ஸமய் (காலம்) என்ற சொல்லின் திரிபு. மகாவீரரின் உபதேசப்படி, காலத்தில் ஆழ்தல் எனில் தியானம் கூடிவிட்டது என்று பொருள். உன் இலக்கை அடைந்துவிட்டதாக அர்த்தம்.

இந்துமதக் கண்ணோட்டம் காலம் என்ற அம்சத்திற்கு சிறப்பிடம் தருவதில்லை. ஆகவே சிரமப்படுவதற்கும், பாடுபடுவதற்கும் மதிப்பு இருப்பதில்லை. பரவெளிக்குத்தான் மதிப்பு. அங்கே சிரமப்பட்டுப் போய்ச்சேர இலக்கு எதுவுமில்லை.

அஷ்டாவக்ரரின் சூத்திரங்கள் இடம் (பரவெளி) என்பதுடன் தொடர்புடையவை. காலம் அல்லது இடம் என்னும் இரண்டு அம்சங்களில் எதன் ஒன்றின் மூலமாகவும் இலக்கை அடையலாம்.

காலத்தை அடிப்படையாகக் கொள்பவனிடம் சமர்ப்பண மாகும் உணர்வு இருக்காது. அவனிடம் சபதம் மேற்கொண்டு போராடிப் பெறும் தீவிரம் நிறைந்திருக்கும். அவன் நல்லது, கெட்டது என்னும் இரண்டினிடையே நிகழும் போராட்டத்தை உணர நேரிடும். அவன் தீயதை ஓட்டி, நல்லதை நாட்ட வேண்டும். ஆகவே, சமயம் என்பதைப் பின்னணியாகக் கொண்ட சமண மதத்தில் ஒழுக்கக் கோட்பாடுகளைப் பின்பற்றுவதற்கு முதலிடம் தரப்பட்டுள்ளது.

சமண மதத்தில் இருளை வெட்டிவீழ்த்தி, ஒளியைக் கொண்டுவர சாதகர் ஒரு வீரன்போல் ஆக வேண்டும். அதற்கான

மாவீரத்தை வெளிப்படுத்தியதால்தான் வர்த்தமானர் என்பவர் பிற்காலத்தில் மகாவீரர் என்றே அழைக்கப்படலானார். அவர் ஒரு வெற்றிவீரர். ஜைனர்-ஜீனர் என்பதற்கு வென்றவர் என்று பொருள்.

ஆனால் பக்தி வழியைப் பின்பற்றுபவன் இந்தக் கண்ணோட்டத்தைத் தவறு என்பான். நாம் வென்று கிடைப்பதில்லை கடவுள், தோற்பதால் அவர் கிடைப்பார் என்பது பக்தரின் வாதம். 'இறை உணர்வைப் போராடும் குணமாக மாற்றாதே. தோல்வியடை, சரணடை, சமர்ப்பணமாகு. உடனே கடவுள் உனக்கு வசப்படுவார்' என்பது பக்தி மார்க்கம் கூறும் ஆலோசனையாகும்.

ஒரே விஷயமான கடவுள் கிடைத்தல், இரு மொழிகளில் சொல்வதைப் போல், இரண்டு விதமாகக் கூறப்படுகிறது. இரண்டு வழிகளாலும் மக்கள் கடவுளை அடைந்துள்ளனர். எவ்வழி உனக்குப் பிடித்திருக்கிறதோ அதுவே உனக்குப் பொருத்தமான வழியும் ஆகும். எனினும் ஒரு வழியைக் கடைப்பிடிப்பவர் இன்னொரு வழியைத் தவறெனக் கூறும் வழக்கம் மனத்தின் இயற்கையான குணமாகும்.

சபதம் (சங்கல்பம்) எடுத்து முயலுபவன் சமர்ப்பணம் மூலம் கடவுள் கிடைப்பார் என்பதை எப்படி ஒப்புக்கொள்வான்? இதேபோல், தன்னை அர்ப்பணிப்பதன் மூலம் கடவுள் கிடைப்பார் என நம்புபவன், சபதம் எதுவும் எடுக்க வேண்டிய தேவையில்லையே என்றுதான் நினைப்பான். பிறகு அவன் சூளுரை அடிப்படையில், தீவிர முயற்சியின் பேரிலும் கடவுள் கிடைப்பார் என்பதை அறியவந்தால், அர்ப்பணிப்பு உணர்வு மீது அவன் கொண்டிருந்த மதிப்பு சற்று குறைந்து விடுகிறது. எனவே இந்த இரு தரப்பினரும் ஒதுவரை ஒருவர் குறை கூறி விமர்சிக்கின்றனர்.

இந்துக்கள், முஸ்லீம்களிடையே கூட இவ்வளவு வேற்றுமை கிடையாது என அறிந்தால் நீ ஆச்சரியப்படுவாய். இந்த இரு மதத்தினரும் ஏறத்தாழ ஒரே வழியையே பின்பற்றுகின்றனர். ஆனால் இந்திய மதமான சமணம் இந்துமதத்திலிருந்து முரண்படுகிறது. அடிப்படையிலேயே இவை வித்தியாசப்படுகின்றன. முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், இந்துக்கள் இடம் என்னும்

கோட்பாட்டை-பரவெளி சித்தாந்தத்தை-ஏற்று நடக்கின்றனர். அவர்கள் தரும் விளக்கம் மொழி வேறுபாட்டால் சற்று வேறுபடலாம். ஆனால் அடிப்படைக் கொள்கை ஒன்றேதான். ஆனால் புத்தரும் மகாவீரரும் காலம் என்ற கோட்பாட்டை மேற்கொண்டனர்.

உலகிலுள்ள அனைத்து மதங்களையும் சிரமணம்-பிராம்மணம் என்று இரண்டாகப் பிரித்துவிடலாம். இந்த இரண்டில் எதைப் பின்பற்றியும் மக்கள் இலக்கை அடைந்திருக்கின்றனர் என்பதை மறுபடியும் நினைவூட்டுகிறேன். ஆகவே உனது வழி சரியா-தவறா என்று குழப்பமடையாதே. எவ்வழியோடு தொடர்புபடுத்திக் கொள்வது உனக்கு எளிதாக உள்ளது என்று கவனி. உனது உள்ளம் எவ்வழியில் இயல்பாக லயிக்கிறது என்று கண்டுபிடி. அவ்வழியில் செல். மேற்கொண்டு ஆராய்ச்சி செய்யாதே.

இந்துமதம் அத்துவைதக் கொள்கையின் மூலம் உச்ச கட்டமான நிலையை அடைந்தது. ஆனால் மகாவீரரால் அத்துவைதக் கண்ணோட்டத்தை ஏற்க முடியவில்லை. ஏனெனில் அத்துவைதத்தின் அடிப்படையே ‘தேடுவதற்கு ஒன்றுமில்லை, பெறுவதற்கு ஒன்றுமில்லை, வெளியில் எதுவும் இல்லை’ என்பதுதான். இன்னொன்று என ஒன்று இருந்தால், தானே அதை அடைய முயலலாம். இன்னொருவர் இருந்தால் தானே அவருடன் போரிடலாம்; அவரைத் தோற்கடிக்கலாம். எதிர்ப்பதற்கு யாரும் இல்லாவிடில் ஒருவன் வீரனாயிருந்து என்ன பயன்? அவனது இடையில் செருகப்பட்டிருக்கும் வாளால் என்ன உபயோகம்? வீரனுக்குத் தன் வலிமையை வெளிப்படுத்த இன்னொருவன் தேவை. அந்த இன்னொருவன் ‘என்னுடன் மோதிப் பார்’ என்று சவால் விடுபவனாக இருக்க வேண்டும்.

மகாவீரர் உலகத்தையும் கடவுளையும் தனித்தனிப் பொருட்கள் போல் காண்கிறார். இவற்றினிடையே மோதல் போக்கு காணப்படுகிறது. உணர்வுநிலைக்கும் ஜடப்பொருள் நிலைக்குமிடையே போராட்டம். இப்படிப் பிரிப்பதால் மகாவீரரை துவைதவாதி (இருபொருள்வாதி) என்று கருத வேண்டும். அவரது

பார்வையில், உயிரும் உணர்வும் ஒருபுறம்; பொருள்மயமான உலகம் மறுபுறம். இந்த இருவேறு உலகங்கள் என்றும் ஒன்றாக இணைய முடியாது.

அஷ்டாவக்ரர் அத்துவைதவாதி (ஒரு பொருண்மைவாதி). ஆகாயம் போல், உள்ளது எல்லாம் ஒன்றுதான் என்பவர். பரம்பொருள் ஒன்றே. உலக இயக்கங்களும் நடவடிக்கைகளும் அதன் லீலைகள்தாம். அதுவே வெவ்வேறு உருவங்களாக பிரதிபலிப்பாகிறது. கடவுள்தான் உனக்குள்ளே எப்பொழுதும் வீற்றிருக்கிறார். நீ உறங்கும்போது அவர் வெளியேறி விடுவதில்லை. உனக்கும் அவருக்கும் இடையே போதல்-திரும்பிவருதல் என்றெல்லாம் இடைவெளி கிடையாது. நீ அவரை அடைய எங்கும் பயணிக்க வேண்டியதில்லை.

உதாரணமாக, சூரியன் உதித்துவிட்டது. நீ கண்களை மூடி உட்கார்ந்திருக்கிறாய். நாற்புறமும் ஒளிமழை. ஆனால் மூடிய கண்கள் காரணமாக நீ இருட்டில் உள்ளாய். நீ இமையைத் திறந்தால் போதும். ஒளியால் நிரம்பி வழிவாய். நீ ஒளியைத் தேடி போக வேண்டியதில்லை. ஒளி உன் கண் இமையில்தான் அமர்ந்திருந்தது. இமைக் கதவைத் திறக்கும்படி தட்டிக் கொண்டிருந்தது. இமைகள் திறந்தன. எங்கும் ஒளிமயம். இதேபோல், சத்தியத்தை அடைதலும் சுலபமானது, சகஜமானது. சமாதிநிலை ஏற்படுவதும் அவ்வளவு கஷ்டமானதன்று. மிகுந்த நம்பிக்கையுடன், அக்கறையுடன், சமர்ப்பண உணர்வுடன் அணுகினால் சமாதி சாத்தியமாகும்.

மகாவீரரும் புத்தரும் தர்க்க சாஸ்திர அடிப்படையில் போதித்தார்கள். அவர்களது வாதம் நுணுக்கமானது. காரண-காரிய அடிப்படையில் நிரூபிக்க முடியாத உபதேசம் ஒன்றுகூட மகாவீரரிடம் காண முடியாது. இதனால் அவரும் புத்தரும் கடவுளைப் பற்றி பேசவில்லை. புத்தர் மேலும் ஓர் அடி முன்னே சென்றுவிட்டார். அவர் ஆத்மாவைப் பற்றிகூட குறிப்பிடவில்லை. ஏனெனில் தர்க்கத்தின் அடிப்படையில் ஆத்மா உண்டென நிரூபிக்க உபாயமில்லை என்புதை அவர் அறிந்திருந்தார்.

ஐரோப்பிய சிந்தனையாளரான லுட்விக் விட்கிங்ஸ்டன் இந்த நூற்றாண்டின் சிறப்பான நூல் என்று குறிப்பிடத்தக்க நூல் எழுதியுள்ளார். அதில் அவர் ஓரிடத்தில், 'சொற்களால் விளக்க முடியாத ஒன்றை மறந்தும் கூற முயலாதே. பேச்சிற்கு அடங்காத ஒன்றை வெளியிடுவதற்குச் சிறிதும் முயலாதே' என எச்சரிக்கிறார். இவரும் மகாவீரர்-புத்தரின் கண்ணோட்டப் பரம்பரையிலேயே வருகிறார். இவரும் தர்க்கக் கண்ணோட்டம் கொண்டிருந்தார்.

மகாவீரர் தர்க்கத்தின் அடிப்படையில் உபதேசங்களை மொழிந்தமையால் அவற்றில் இலக்கியச் சுவை காணப்பட வில்லை. கவிதைக்குத் தர்க்கம் தேவையில்லை. உணர்வு பொங்கும்போது கவிதை சுயமாக வெளிப்படுகிறது. ஏதாவது கருத்தை முன்கூட்டியே நிச்சயித்து, அதை நிரூபிக்கத் திட்டமிட்டு, கவிதை எழுதினால் அந்தக் கவிதை செத்துவிடுகிறது.

யாராவது உன்னிடம் ஒரு கவிதையைக் குறிப்பிட்டு அதன் அர்த்தம் என்ன என்று கேட்டால், மறந்தும் அதற்கு விளக்கம் தராதே. கவிதையைப் பிரித்துப்போட்டு, ஆய்வு செய்து, அர்த்தம் கூறுவதில் ஈடுபட்டால் அந்த முயற்சியில் கவிதை செத்து விடுகிறது. சுலபத்தில் அர்த்தம் புரிந்தால் சரிதான். இல்லாவிடில் கவிதையை அப்படியே விட்டுவிடு.

மகாவீரரிடம் துல்லியம் காணப்படுகிறது. தர்க்கம் காணப்படுகிறது. புத்தர் விஷயத்திலும் இதே நிலைதான். நம்பிக்கையை மட்டும் கருவியாக வைத்துக்கொண்டு அவர்கள் உபதேசிக்கவில்லை. கண்ணை மூடிக்கொண்டு எதையும் ஒப்புக்கொள்ளுமாறு அவர்கள் கூறியதில்லை. எது இருக்கிறதோ அதை அறிய முடியும் என்றார்கள். அறிவைக் கொண்டு முழு முயற்சி செய்ய வேண்டியதுதான் மிச்சம்.

இந்துமதப் பரவெளிக் கோட்பாட்டின்படி, அறிவின்வழி முயற்சி ஒரு தடைக்கல்லாகக் கருதப்படுகிறது. அந்த வழியிலான முயற்சி ஆன்ம விடுதலைக்கான வழியாக அமையாமல் தர்க்கம் என்னும் சிறைக்குள் தள்ளிவிடுகிறது.

அறிவின் மூலம் சிலவற்றைத் தெரிந்துகொள்ள முடியும்தான். ஆனால் சில விஷயங்களை புத்தியின் துணையால் அறிய முடியாது. சில விஷயங்கள் புத்தியைக் கடந்து முன்னால் உள்ளன. சில புத்திக்குப் பின்னால் அமைந்துள்ளன. நீ அறிவின் பின்னால்தான் இடைவெளி விட்டு வந்து கொண்டிருக்கிறாய். நீ அறிவைக் கடந்து முன்னால் செல்பவனாக இல்லை. நீ பின்னணியில் இருப்பதால்தான் அறிவு முன்னோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. முன்னால் செல்லும் புத்தி பின்பக்கமாகத் திரும்பி உனக்கு எப்படி அறிவூட்ட முடியும்? ஆனால் நீ இல்லாமல் உன் அறிவும் இல்லை.

என் கையில் ஓர் இடுக்கி கிடைத்தால் அதன் மூலம் நான் எந்தப் பொருளையும் பிடித்துக் கொள்ள முடியும். ஆனால் அந்த இடுக்கியால் அதே இடுக்கியைப் பிடிக்க முடியாது. முயன்றால் அது கீழே விழுந்துவிடும். பிறகு கையால் எதையும் பிடிக்க முடியாது. இதேபோல் உன் வெளி அறிவால் நீ எதையும் புரிந்துகொள்ள முடியும். ஆனால் அறிவால் உன்னை அறிய முடியாது. அறிவியலால் எல்லாவற்றையும் விளக்க முடிகிறது. ஆனால் அறிவியலும், தன்னை அறியும் அறிவும் வெவ்வேறு.

மகாவீரரின் கண்ணோட்டமும் புத்தரின் கண்ணோட்டமும் அறிவியலுடன் ஒத்துப் போகின்றன. அறிவியலார் மகாவீரரின் உபதேசங்களைப் படித்தால் அசந்துபோய் விடுவார்கள். ஏனெனில் இக்காலத்தில் அவர்கள் சொல்வதை மகாவீரர் 2500 ஆண்டுகளுக்கு முன்பே கூறியிருக்கிறார். அவர் கூர்மையான தர்க்கத்தை மேற்கொண்டு நுணுக்கமாகக் கருத்துகள் கூறினார். விஞ்ஞானிகள் போல் தர்க்கம் மூலமே எல்லாவற்றையும் ஒப்புக் கொள்வது என்ற தவற்றை அவர் செய்யவில்லை. எதை எதுவரை தர்க்கத்தின் மூலம் அறிய முடியுமோ அதை மட்டுமே அவர் வெளியிட்டார். தர்க்கத்தின் மூலம் நிலைநாட்ட முடியாத எதைப் பற்றியும் அவர் எதுவும் கூறவில்லை. அது குறித்து எந்தக் கோட்பாட்டையும் உருவாக்கவில்லை. ஆனாலும் அவர் தன்னைப் பின்பற்றுபவர்களை அவர்கள் அறியாதபடி கொஞ்சம்-கொஞ்சமாக, மெதுவாக, தர்க்கத்திற்கு அப்பாற்பட்ட நிலைக்கு அழைத்துச் சென்றார். வாதங்கள் மூலம் தர்க்கத்தின் எல்லைக்

கரையை அடைந்தபின், மேற்கொண்டு இனி பறக்க முடியாத நிலையை அடைந்தபின், மேற்கொண்டு இயங்க முடியாத நிலையை அடைந்தபின், தர்க்கமும் தலை குப்புற விழுந்தபின் உனக்குக் கிடைப்பது பரம்பொருளின் அனுபவம் என்றார் மகாவீரர். அறிவுவழி முயற்சி தவிர்க்க முடியாதது என்றார்.

இந்துமதக் கண்ணோட்டத்தில் பகுத்தறிவையே நம்பி நீண்ட ஆன்மிகப் பயணம் மேற்கொள்வது தேவையற்றதாகக் கருதப்படுகிறது. முதலடி எடுத்து வைக்கும்போதே தர்க்க அறிவு வீழ்ச்சியடைந்தால் போய்ச்சேரும் இடமும் உடனே அங்கேயே வாய்த்துவிடுகிறது. நீ கடைசியில்தான் பகுத்தறிவை உதறித் தள்ளுவாய் என்றால், சரி, உன் இஷ்டம். நீ விரும்பும் காலம்வரை அதைச் சுமந்து திரி. உடனே கீழே போட்டால் கைமேல் பலன் என்பதை மட்டும் நினைவில் கொள். குறிப்பிட்ட கட்டத்தை அடைந்தபின்தான் பகுத்தறிவைக் கைவிடுவதால் பலன் கிடைக்கும் என்றில்லை. நீ எந்தக் கட்டத்தில் அதைக் கைவிட்டாலும் அவ்விடமே உன் ஆன்மிக இலக்காக அமைந்து உன் தேடல் முடிந்துவிடுகிறது. பகுத்தறிவின் இடத்தை ஆழ்ந்த நம்பிக்கை (சிரத்தை) பிடித்துக் கொள்கிறது.

'அன்பனே! திட நம்பிக்கை கொள். பற்றுக் கொள். ஆனால் மோகமடையாதே. நீ ஞானவடிவினன், நீ கடவுள். நீ இயற்கை சக்திகளைக் கடந்தவன்.' **(சுலோகம் 133)**

**கு**ருவிற்குச் சீடன் பிரியமானவனாக இருக்கிறான். ஆகவே அஷ்டாவக்ரர் ஜனகரை 'அன்பனே' என விளிக்கிறார்.

உறங்குபவனை எழுப்ப குரு எல்லா முயற்சியும் செய்கிறார். தன்னை மறந்தவனுக்கு அவன் யாரென நினைப்பூட்டுகிறார். வழி தவறியவனை மீட்டு, சரியான பாதைக்குக் கொண்டு வருகிறார். அவர் தன் சீடன் எந்த அளவிற்கு ஆன்ம இலக்கை நெருங்கி விட்டான் என்பதைக் கவனிக்கிறார். அஷ்டாவக்ரருக்கு ஜனகர் ஆன்ம இலக்கை நெருங்கிவிட்ட சீடராகவே தெரிகிறார். ஜனகரின் கண்கள், முகபாவனை, உடலியக்கங்கள், அமர்தல்-எழுதல் ஆகியவை கண்டு அவர் சமாதி நிலையை நெருங்கிவிட்டதை அஷ்டாவக்ரர் ஊகித்துவிடுகிறார்.

நீ ஒரு மலர்த் தோட்டத்தை நோக்கிச் செல்கிறாய். தொலைவில் தெரிகிறது தோட்டம். அதை நெருங்கும் முன்பே காற்று குளிர்ச்சியாக வீசுகிறது. காற்றின் மூலமாகப் பூக்களின் மணம் உன்னை வந்தடைகிறது. நீ தோட்டத்தை இன்னும் அடையவில்லை என்றாலும் சரியான திசையில்தான் போகிறாய் என்று நீ பூக்களின் மணத்தால் உணர்கிறாய். குளிர்ச்சி அதிகமாகி, நறுமணம் கூடுதலாகப் பரவினால் நீ சரியான திசையில் செல்வதும், தோட்டம் நெருங்கிவிட்டதும் உறுதிப்படுகிறது.

ஆன்மிகத்தின் இறுதிக் கட்டத்தை நெருங்கும்போது சீடன் இதேபோல் பரவசநிலையை அடைகிறான். அவன் கண்களில் ஒருவித போதை. அவனது இதயம் சொட்டுச் சொட்டாக இறையமுதத்தால் நிரம்புகிறது. ஜனகரின் இந்த நிலை கண்டு அவரை 'பிரியமானவனே' என்றழைக்கும் தருணம் நெருங்கி விட்டதை குரு அறிகிறார். சீடனைத் தன்னருகில் தனக்கு சமமாக உட்காரவைக்க வேண்டிய வேளை வந்துவிட்டதை குரு உணர்கிறார். குருவுக்கும் சீடனுக்கும் இடையே வித்தியாசங்கள் நீங்கிவிட்ட நிலை இது. 'பிரியமானவனே' என்று அழைத்தல் இதன் அடையாளமாகும். பிரியமானவன் என்பதற்குச் சிறப்பான அர்த்தம் உண்டு. 'நான் உன்னை என் இதயத்தில் ஏற்றுக் கொள்கிறேன். உன்னை எனக்கு சமம் எனக் கருதுகிறேன். நம்மிடையே வித்தியாசம் கிடையாது. குரு யார்-சீடன் யார் என்று பிரித்தறிய முடியாது' என்றெல்லாம் குரு கூறுவதாகப் பொருள்.

நமக்கு யாரிடம் அன்பு மேலிடுகிறதோ அவரை நமக்கு சமமானவராக நினைக்கத் தொடங்குகிறோம். அன்பில் பலவகை. தந்தை மகனிடம், மகளிடம் வைக்கும் அன்பை வாத்சல்யம் அல்லது பாசம் என்கிறோம். இந்த அன்பில் தந்தை உயரத்திலும் மகன்/மகள் கீழேயும் உள்ளனர். தந்தை உயரே இருந்து அன்பைப் பொழிகிறார். குழந்தைகள் பாத்திரம்போல் அதைப் பிடித்துக் கொள்கின்றனர்.

குருவின் மீது நமக்கு ஏற்படும் அன்பை சிரத்தை என்கிறோம். அதை மரியாதையுடன் வெளிப்படுத்துகிறோம். குரு உயரத்தில் வீற்றிருக்கிறார். நாம் நமது சிரத்தையை மேல்நோக்கிச்

சாம்பிராணிப் புகையைப்போல் அனுப்புகிறோம். 'அன்பு' என்னும் சொல்லை உபயோகிக்கும்போது நமது அன்புக்குரியவர் நமக்கு சமமானவர் என்றே கருதுகிறோம்.

சில சமயம் குடும்பத்தில் கணவர் நிலையில் இருப்பவர் என்னிடம் வந்து துறவறம் ஏற்பது உண்டு. சிலர் சொல்வார்கள்: "என் மனைவியும் என்னுடன் இங்கு வந்து துறவியாக வேண்டு மென்பது என் விருப்பம். ஆனால் எவ்வளவோ அறிவுறுத்தியும் அவள் என் பேச்சைக் கேட்க மறுக்கிறாள்."

அப்படிப் புகார் செய்பவர்களிடம் நான் கூறுவது, "நீ மறந்தும் அத்தகைய முயற்சியில் இறங்கக்கூடாது. அப்படி வற்புறுத்தி மனமாறுதல் ஏற்படுவது வழக்கமில்லை. நீ அவளிடம் காட்டிய அன்புணர்வின் காரணமாக அவளை உனக்கு சமம் என்று நினைக்கச் செய்துவிட்டாய். ஆகவே அவளால் உன்னை குரு ஸ்தானத்துக்கு உயர்த்தி உன் கட்டளையை ஏற்க முடியாது."

அரிதாக சில சமயம் மனைவி நிலையிலுள்ள பெண்மணி என்னிடம் வந்து சந்நியாச தீட்சை பெறுவதுண்டு. அவளும் கணவனையும் தன்னுடன் அழைத்துவரவே விரும்புகிறாள். இந்த விருப்பம் இயற்கையானதுதான். தாம் பெறும் இன்பம் தாம் நேசிப்பவருக்கும் கிடைக்க வேண்டுமென ஆசைப்படுவது நியாயம்தான். ஆனால் இந்த விருப்பம் நிறைவேறுவதில்லை. கணவன் மறுத்துப் பிடிவாதம் பிடிக்கிறான். மனைவி சொல்லை குருவின் கட்டளைபோல் நினைத்து ஏற்க அவன் மனம் ஒப்புவதில்லை.

இந்த விஷயத்தில் கணவன் மனைவிக்குள் ஒருபொழுதும் சமரசம் ஏற்படுவதில்லை. இது மிகவும் சிக்கலான விஷயம். ஒருவரையொருவர் கட்டுப்படுத்த முயன்றால், அவர்களிடையே இடைவெளிதான் அதிகரிக்கிறது. கோபம் அதிகரிக்கிறது. இந்த வம்புக்கே போக வேண்டாம் என்று நான் அவர்களுக்குச் சொல்வது வழக்கம்.

கணவன்-மனைவி அன்பினால் பிணைக்கப்பட்டவர்கள். ஆகவே அவர்கள் சமமானவர்கள். ஒருவர் குருபோல்

கட்டளையிட வேண்டுமெனில், அவர் இணைந்து செல்வதைக் கைவிட்டு முன்னால் விரைந்து செல்ல நேரிடும். பிறகு திரும்பிப் பார்த்து மற்றவரைத் தொடர்ந்து தன் பின்னால் வந்து தான் உள்ள இடத்திற்கு வந்துவிடுமாறு கட்டளையிட நேரிடும்.

அன்பின் ஒவ்வொரு கட்டமும் வாழ்க்கையில் பூர்த்தி யாகிறது. பெற்றோரின் வாத்ஸல்யம் முதலில். பிறகு இளமையில் எதிர்பாலாருடன் காதல். பிறகுதான் சிலர் ஆன்மிக நாட்டம் கொண்டு, குருவிடம் பயிற்சி பெற்று அவரைப்போல் ஆக முயலுகின்றனர். அத்தகையோரை குரு தமக்கு பிரியமானவர் என்றழைத்து அன்புமழை பொழிகிறார். சீடனைத் தமக்கு சமமெனக் கருதி திருப்தி பெறுகிறார்.

சிரத்தை என்பது மேலோட்டமான நம்பிக்கையைக் குறிப்பிடும் சொல்லன்று-**not belief but faith.** ஏதோ கொள்கையை, ஏதோ சாஸ்திரத்தை மேலாக நம்புவது போதாது. தனது சுபாவமான தகுதியில், சத்தியத்தில், வாழ்க்கையில், வாழ்வதில், பற்றுறுதி கொள்வதுதான் சிரத்தை என்பதன் விரிவாக்கம்.

ஜனகருக்கு ஆன்ம விழிப்பு நேரவுள்ளதை அஷ்டாவக்ரர் ஊகித்துவிட்டார். அவருக்குச் சிறிது சந்தேகம் தோன்றினாலும் மறுபடியும் உறங்கப் போய்விடுவார்! "நான் இதுவரை அயர்ந்து உறங்கிக் கொண்டுதான் இருந்தேன். குழப்பம் ஏதுமின்றி எல்லாம் நல்லபடியாகத்தான் நடைபெற்று வந்தது. இப்போது விழித்தால் ஒரு புதிய வேலை, ஒரு புதிய முயற்சியை மேற்கொள்ள வேண்டியிருக்கும். இதனால் முன்பறியாத சுகம் கிடைக்குமா, கிடைக்காதா என்று தெரியவில்லை. எதிரே நிகழ்வது பெரிய காரியமாயிற்றே. அதனுடன் சேர்ந்து கொள்வதா அல்லது திரும்பிப் படுக்கைக்குப் போய்விடலாமா? எனது பழைய உலகம், எனது பழைய வாழ்க்கை எனக்கு அறிமுகமான, சௌகரியமான ஒன்றாயிற்றே. கண் விழித்தால் புதிய பாதையில் அல்லவா செல்ல வேண்டும். வழிகாட்டும் படமும் கையில் இல்லையே"- இவ்வாறெல்லாம் ஜனகரோ, ஆன்மிக சாதகரோ குழப்பமடைய வாய்ப்புண்டு. சிரத்தை என்ன சொல்கிறது? 'முன்பின் அறியாத ஒன்று உன் வீட்டுக் கதவைத் தட்டி அழைத்தால் அதனுடன் சேர்ந்து கிளம்பிவிடு" என்கிறது.

ஆழ்ந்து பார்க்காமல் மேலோட்டமாக நாம் நம்பும் விஷயங்களும் உள்ளன. நீ இந்து, நீ முஸ்லிம் என்பதெல்லாம் இவ்வகை நம்பிக்கை. அந்தந்த மதக் குடும்பத்தில் பிறந்ததால் சாதாரணமாக நிகழ்வது. ஆனால் ஆழ்ந்த ஆன்மிகவாதி ஆவதற்கு முயலும்போது அது சிரத்தையாகிறது.

நீ திருக்குர்ரானை நம்புகிறாய் எனில் நீ முஸ்லீம் ஆகிறாய். நீ மகாவீரரை நம்புகிறாய் எனில் ஜைனர் எனப்படுகிறாய். ஆனால் இந்த நம்பிக்கை சிரத்தை அளவிற்கு வளரவில்லை. சிரத்தை என்பது ஒரு புனிதரையோ, புனித நூலையோ சார்ந்திருக்கவில்லை. அது உனக்கு வெளியேயும் உள்ளேயும் உன்னைச் சூழ்ந்துள்ள வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்டது. வாழ்க்கையின் உண்மைப் பொருளில் பிடிப்புதான் சிரத்தை என்பது.

ஒருவன் நம்மிடையே திடீரென வந்து 'தீ பிடித்துவிட்டது' என்று கத்தினால் எல்லோரும் அவன் காட்டும் திசையில் ஓடுவோம். உண்மையில் அப்படி ஆபத்தில்லை என்றாலும் 'நெருப்பு' என்னும் சொல்லை நம்புகிறோம். ஆனால் அந்தச் சொல் எதையும் எரித்துவிடாது. ஆனால் உன் கையில் சிறு தணலை வைத்தால் அந்த இடம் வெந்து கொப்புளமாகிவிடும். நெருப்பு என்னும் சொல் நிஜத்தில் நெருப்பில்லை. அதுபோல் கடவுளைப் பற்றிய கொள்கையோ, அவரை வர்ணிக்கும் சொற்களோ கடவுளாகிவிடாது.

வாழ்க்கையைக் குறித்து எத்தனை எண்ண ஓட்டங்கள் உள்ளனவோ அவை எல்லாம் மொழி என்னும் எல்லைக்கு உட்பட்டவை. அறியமுடியாததை அறிந்துகொள்ள வைப்பதற்கான முயற்சிகளே அந்தக் கருத்துகள். வரையறுக்க முடியாததை வரையறுத்துக் கூற மனிதன் உபாயம் தேடுகிறான். ஏதாவது ஒரு பெயரைச் சூட்டிவிட்டால், ஒரு லேபில் ஒட்டிவிட்டால், கொஞ்சம் ஆறுதலாக இருக்கிறது. ஏதோ கொஞ்சம் புரிவதுபோலிருக்கிறது.

கடவுள் என்பது மாபெரும் மகோன்னத சக்தி. அதை யார் எப்பொழுது முழுமையாக அறிய முடிந்திருக்கிறது? யாரால் முழுமையாக அறிய முடியும்? ஏனென்றால் பார்க்க முடியும்

எந்தப் பொருளுக்கும் குறுக்கும் நெடுக்குமாக எல்லைகள் இருக்கும். எல்லைகள் உள்ள ஒன்று கடவுளாக இருக்க முடியாது. கடவுள் எல்லையற்றவர். கரைகள் அற்றவர். தொடக்கமும் முடிவும் இல்லாதவர். நீ அவரை எப்படி முழுமையாக அறிந்து கொள்ள இயலும்? ஒருபொழுதும் இயலாது. கடவுளின் ரகசியம் அப்படியே ரகசியமாக நீடிக்கும்.

அறிவியலார் அறிவியலில் முக்கியமான இரண்டு சொற்கள் உள்ளன என்கிறார்கள்-அறிந்துள்ளது, அறியாதது **(known and unknown)** அறியாததை கால ஓட்டத்தில் அறிந்துகொள்ள முடியும் என அவர்கள் நம்புகிறார்கள்.

ஆன்மிகவாதிகள் மூன்று சொற்கள் உள்ளன என்கிறார்கள்- அறிந்தது, அறியாதது, அறியமுடியாதது **(unknowable).** கடவுள் அறியமுடியாதது (அக்ஞேய) என்னும் வகையில் சேருகிறார். அவரை நாம் என்றுமே, எவ்விதத்திலும் முழுமையாக அறிய வாய்ப்பில்லை. இந்த நிலையிலும் அவர் உண்டு என்று உறுதியாக நம்புவதன் பெயர்தான் சிரத்தை. அவரைப் பற்றி நிறைய அறிந்திருந்தும் இன்னும் முழுமையாகச் சொல்ல முடியாத நிலையிலும் அவரை நம்புவதன் பெயர்தான் சிரத்தை. அறிந்தது கைப்பிடி அளவு, அறியாதது கடல் அளவு என்னும் நிலையிலும் கடவுளை நம்புவதன் பெயர்தான் சிரத்தை. ஆகவே அஷ்டாவக்ரர் 'சிரத்தை செய்' என்று இந்த சுலோகத்தில் இரண்டு முறை கூறுகிறார்.

ஆன்மிகப் பாதையில் குதித்து முன்னேற ஒருவன் முயலும்போது, அவனது அதுவரையிலான வாழ்க்கை அவனைப் பின்னுக்கு இழுக்கிறது. கடந்த காலம் சக்திவாய்ந்தது. இத்தனை ஆண்டுகளாக அதனுடன் சேர்ந்து வாழ்ந்த பழக்கம் சங்கிலியைப் போல் பின்னால் இழுக்கிறது. பழைய பழக்கமான வாழ்க்கை எச்சரிக்கிறது:

"எங்கேயடா போகிறாய் நீ? முன்பின் அறியாத பாதையில் ஏன் நடைபோடுகிறாய்? வழி தவறிப் போய்விடுவாய். பழகிய பாதையிலேயே செல். அந்தப் பாதையிலிருந்து மாறாதே. அதுவே ராஜபாதை. எல்லோரும் பழகிய பாதையிலேயே செல்கின்றனர்.

நீ இந்துவாக அப்படியே இரு. முஸ்லீமாக இருந்தால் அப்படியே இரு. நீ ஓதுவது எதுவோ-திருக்குர்ரானோ, பகவத்கீதையோ-அதையே தொடர்ந்து ஓது. வாழ்க்கை என்பது பிரம்மாண்டம். நீ அற்ப பிராணி. படைப்பென்பது மாகடல். நீ ஒரு நீர்த்துளி மாத்திரமே. நீ அதில் விழுந்தால் காணாமல் போய்விடுவாய். திரும்பிவர முடியாது. ஆராய்ச்சியைக் கைவிட்டு இப்போது உள்ளதுடன் திருப்தியாக இரு.''

மோகம் என்பது கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டது. சிரத்தை என்பது எதிர்காலத்துடன் தொடர்பு கொண்டுள்ளது. நாம் ஏற்கெனவே இதுவரை எதனுடன் சேர்ந்திருந்தோமோ அதன்மீது நமக்கு ஏற்படும் உணர்வு மோகம் எனப்படும். இதுவரை நாம் சேர்ந்திருக்கும் வாய்ப்புக் கிட்டாத ஒன்றின்மேல் நமக்கு உண்டாகும் பிடிப்பு சிரத்தை எனப்படும். கோழைக்கும் மோக உணர்வு இருக்கும். ஆனால் சிரத்தை என்பது மன உறுதி என்னும் மாவீரம் படைத்தவருக்கே சாத்தியமாகும். அறியாமையில் மூழ்கிக் கிடப்பவன் எளிதில் மோகவசப்படுகிறான். ஞானத்தைத் தேடுபவனுக்குத்தான் சிரத்தை வசப்படுகிறது.

'நான் ஒரு இந்து என்கிறாய்' நீ. இது மோகமா, சிரத்தையா? இந்த இரண்டினிடையே உள்ள வித்தியாசத்தைப் பார். அதைப் புரிந்துகொள்ள முயலு. நீ இந்து குடும்பத்தில் பிறந்திடாவிடிலோ, குழந்தையிலேயே ஒரு முஸ்லீம் குடும்பத்தில் சேர்க்கப்பட்டிருந்தாலோ, நீ உன்னை முஸ்லீம் என்றே நினைத்திருப்பாய். இப்போது இந்துவாக இருப்பதில் உனக்கு எவ்வளவு மோகமோ அதே அளவு மோகம் நீ உன்னை முஸ்லீமாகக் கருதினாலும் ஏற்படும். இந்த மனநிலையில் இந்து-முஸ்லீம் கலவரம் வெடித்தால் நீ முஸ்லீம்களின் தரப்பிலிருந்து கொண்டு தாக்குதல் நடத்துவாய். நீ பிறப்பில் முஸ்லீமாயிருந்து குழவிப் பருவத்திலேயே ஓர் இந்து குடும்பத்தில் வளர்க்கப்பட்டிருந்தால், கலவர சமயம் நீ இந்துக்களின் சார்பாகத் தாக்குவாய். உண்மை நிலவரம் தெரியாத போது ஒன்றின்மீது நீ நம்பிக்கை கொண்டு இயங்குகிறாய்.

இந்த நம்பிக்கைதான் மோகம் என்பது. இதற்கு ஆதாரம் கிடையாது. உன் நம்பிக்கையின் ஆதாரம் பழக்க வாசனைதான்.

மீண்டும்-மீண்டும் ஒரே விதமாக வாழ்ந்து ஒரு தனித்தன்மை உண்டாகிவிடுகிறது. இந்த நிலையை யாரும் அலசி ஆராய்வதில்லை.

சிரத்தை எப்போதும் விழிப்புடன் இருக்கும். 'நடந்து போனது முடிந்துவிட்டது. இனி நடக்கப்போவதை எதிர்கொள்ள நான் தயாராக இருக்கிறேன்' என நினைப்பது புதிய அக்கறை. சிரத்தை. 'நடக்கப் போவதை வரவேற்க என் வீட்டுக் கதவுகள் திறந்தே இருக்கும். நடக்கக்கூடியது என்னும் கயிற்றைப் பிடித்துக் கொண்டு நான் முன்னேறுவேன். கடவுள் என்னை எங்கே இட்டுச் செல்கிறாரோ, எதையெல்லாம் காணவைக்கின்றாரோ, எதை-எதைச் செய்விக்கிறாரோ அதற்கெல்லாம் நான் உடன்படுவேன். என்னை இழக்க நேர்ந்தாலும் சித்தமாக உள்ளேன்' என்று சிரத்தை உள்ளவன் நினைப்பான்.

மோகத்துடன் சேர்ந்து வாழ்வதைவிட சிரத்தையுடன் சேர்ந்து தன்னை இழப்பது மேலானது. இத்தனை காலமாக மோகத்துடன் சேர்ந்திருந்து என்ன பலன் கிடைத்தது? கணக்குப் போட்டுப்பார். உனக்குள் எத்தனை-எத்தனை நம்பிக்கைகள் நிறைந்துவழிகின்றன. அவற்றால் என்ன லாபம்? அவையெல்லாம் சொல்லளவிலான நெருப்பு என்பதற்கே சமம். அந்த வெறும் சொல் எதையும் எரிக்காதே. அல்லது 'அமிர்தம்' என்னும் சொல்லை எடுத்துக்கொள். காகிதத் துண்டுகளில் அமிர்தம் என்று எழுதி அவற்றை நீரில் கரைத்துக் குடி. அதனால் உண்மையான அமிர்தத்தின் பலன் கிடைத்துவிடாது.

எது உண்மையில் உள்ளதோ அதைத் தேடி செல்வதே சிரத்தை. சத்தியத்தைத் தேடும் முயற்சியின் மறுபெயரே சிரத்தை. அற்ப நம்பிக்கைகளை சிரத்தை என்று சொல்லக்கூடாது.

நீ மனிதன். ஆனால் முழுமையானவன் இல்லை. உன்னைக் கூறுகளாக்கிக் கொண்டே போகலாம்- இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர்... இந்து எனில் பிராமணர், சத்திரியர், சூத்திரர்... பிராமணர் எனில் சைவர், வைஷ்ணவர், மாத்வர், ஸ்மார்த்தர்... ஆண்-பெண்... ஏழை-பணக்காரர்... அழகர்-குரூபி... கிழவர்-இளைஞர் — இப்படித்

துண்டு துண்டாகி அற்பக் கூறாக மனிதன் நிற்கிறான். அவன் இப்படி எத்தனையோ தளைகளால் கட்டுண்டு கிடக்கிறான்.

ஆனால் நான் உன்னிடம், "உன் கண்ணோட்டத்தை மாற்றிக்கொள். நீ கடவுள்" என்றால், உன்னால் நம்ப முடிவதில்லை. உடனே நீ மறுப்பாய் "நான் எங்கே, கடவுள் எங்கே? உளறாதீர்கள். என்னைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? நான் மகாபாவி, ஆயிரம் பாவங்கள் செய்தவன். திருடியுள்ளேன். நான் ஒரு சூதாடி, குடிகாரன். என்னைப் போய் கடவுள் என்கிறீர்களே,". என்று கூறுவாய்.

நான் சொல்கிறேன்-இதெல்லாம் உன் எல்லைகள் என நீதான் நினைக்கிறாய். நீ துணிந்து, இந்த எல்லைகளைக் கடந்து, நிமிர்ந்து நில். அப்போது எல்லா எல்லைகளும் வீழ்ந்துவிட்டதை அறிவாய். உன் உண்மையான சொரூபம் எல்லை கடந்தது.

நீ ஞான விழிப்பு பெறும் நேரம் வந்ததும் 'நீ கடவுள்' என்று குரு உனக்கு அழுத்தம் திருத்தமாகத் தெரிவிக்க வேண்டியுள்ளது. ஏனெனில் நீ குறிப்பிட்ட எல்லைகள் பழைமையானவை; கடந்த காலத்தைச் சேர்ந்தவை. அவற்றின் பாதிப்பு வலுவாகப் பதிந்துள்ளது. கடந்த காலத்தின் மீதுள்ள மோகம் நீ பாவம் எனக் கருதும் செயல்களின் பட்டியல் தயாரிக்கிறது. புதிதாக இறங்கிவரும் கடவுள் கிரணம் புதியது, மென்மையானது.

ஒருவன் என்னிடம் வந்து, "நீங்கள் சொன்னாலும் நான் சந்நியாசத்துக்கு ஏற்றவனில்லை," என்கிறான். நான் அதை மறுத்து, "நீ கவலைப்படாதே. நீ சந்நியாசத்துக்குத் தகுதியானவன்தான். அதை நான் விளக்குகிறேன்," என்கிறேன்.

"நான் சிகரெட் பிடிப்பவனாயிற்றே, சுவாமி."

"அதனாலென்ன? சிகரெட் பிடிப்பதால் சந்நியாசம் பாதிக்கப்படுமானால் அந்த சந்நியாசம் அற்பமானது, காசு பெறாதது. சந்நியாசம் பலம் வாய்ந்தது. அது சிகரெட் பழக்கத்தை ஒழித்தேவிடும். தற்போது சிகரெட் பிடிப்பது சந்நியாசம் மேற்கொள்வதற்குத் தடையில்லை."

“ஆனால், சுவாமி, எனக்கு குடிப்பழக்கம் உண்டே. என்னால் குடிக்காமல் இருக்க முடியாதே,” என்கிறான் இன்னொருவன்.

“சரி, கவலைப்படாதே. தொடர்ந்து குடி. நான் உனக்கு வேறுவிதமான உயர்ந்ததொரு மதுபானம்-ஆன்மிக பானம்-தருகிறேன். அது உனது சாதாரண மதுவை வென்றுவிடும்.”

கடந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் இடையே போராட்டம் மூண்டால், நீ எதிர்காலத்தையே ஆதரி. ஏனெனில் இனிமேல் வரக்கூடிய வாய்ப்பை எதிர்காலம் சுட்டுகிறது. கடந்த கால வாய்ப்புகளோ முடிந்துபோன விஷயமாகி விட்டன. அவை இறந்துபோய்ச் சாம்பல்தான் மிஞ்சியுள்ளது. அதில் தணல் துணுக்குகூட இல்லை. உயிரோட்டமில்லை. பயணம் முடிந்து விட்டது. தடம் மாத்திரம் எஞ்சியுள்ளது. அந்தப் பாதையில் நீ முன்பு பயணித்தாய். யாத்திரிகள் கூட்டம் போய்விட்டது. அவர்கள் எழுப்பிய தூசிப் படலம் மட்டும் நீடிக்கிறது. கடந்த காலத்தை அசைபோடுவது இனிமையானது. ஆனால் அப்பழக்கம் வேண்டாம். உனக்கு ஏற்கெனவே தெரிந்த கடந்த காலத்தை மீண்டும் ஏன் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்?

ஒருவன் கார் ஓட்டுகிறான். முன்னால் பாதையைப் பார்த்தபடிதானே ஓட்ட வேண்டும்? ஆனால் பக்கக் கண்ணாடி களையே பார்த்தபடி பின்னால் வருபவற்றைக் கவனித்தால் விபத்து ஏற்படத்தானே செய்யும். நம் நிலையும் ஏறத்தாழ அப்படித்தான் உள்ளது. வாழ்க்கையில் முன்னேறுவது நமது நோக்கமும் கடமையும் ஆயினும் நமது பார்வை என்னவோ பின்புறமே பதிந்துள்ளது. இந்த நிலையில் நமது ஆன்மிகப் பயணமும் விபத்துக்குள்ளாகும்.

எங்கே போகிறாயோ அத்திசையில் உன் பார்வையைச் செலுத்து. இதுதான் உனக்குள்ள சிரத்தையை நிரூபிக்கும் வழி. நீ எதிர்காலத்தில் பயணிக்கச் செல்கிறாய். வரவுள்ளது நீ அறிந்திராதது; உனக்குப் பழக்கமற்றது. அதன்மீது வலுவான நம்பிக்கை வை. நீ தடுமாறினால் சிரத்தை என்ற உயரத்திலிருந்து மோகம் என்னும் பள்ளத்தில் வீழ்வாய்.

சிறையில் 20 ஆண்டுகள் அடைபட்டிருந்த ஒரு கைதி விடுதலையாகிறான். அவன் இதுவரை தனக்கு மாட்டியிருந்த விலங்குகளை மோகத்துடன் பார்த்தபடியே செல்கிறான். இருபது ஆண்டுத் தொடர்பு என்பது சும்மாவா?

**பி**ரான்ஸ் நாட்டில் புரட்சி உதித்தது. மாபெரும் கோட்டையான பாஸ்டில் கோட்டையைப் புரட்சிக்காரர்கள் தகர்த்தார்கள். அங்கே ஆயுள் கைதிகள் சிறை வைக்கப் பட்டிருந்தனர். பலர் 50 ஆண்டுகளாக கைதிகளாக இருந்தனர். ஒரு கைதி 70 ஆண்டுகள் அங்கேயே கழித்திருந்தார். அவ்வளவு காலமும் கைகளிலும் கால்களிலும் விலங்குகள் மாட்டப் பட்டிருந்தன. தற்காலம்போல் அவற்றை சாவிபோட்டுத் திறக்க முடியாது. உயிருடன் யாரும் விடுதலையாகப் போவதில்லை என்பதால், கைதி இறந்தபின் அவன் கைகளையும், கால்களையும் வெட்டி இந்த விலங்குகள் நீக்கப்பட்டன!

புரட்சியாளர்கள் இவர்கள் மீது இரக்கம் கொண்டனர். ஆகவே அவர்கள் பாஸ்டில் கோட்டையைக் கைப்பற்றி அங்கிருந்த கைதிகளை விடுவித்தனர்.* சுமார் 4000 கைதிகள்! கைதிகள் முதலில் வெளியேற மறுத்தனர். இந்த வாழ்க்கை எங்களுக்குப் பழகிப்போனதால் இதுவே பிடித்திருக்கிறது என்றனர்! ஆனால் பிடிவாதக்காரர்களான புரட்சியாளர்கள் பலவந்தமாக கைதிகளின் விலங்குகளை உடைத்தெறிந்து அவர்களைச் சிறைக்கு வெளியே விரட்டிவிட்டனர்.

இரவானது. போக்கிடம் இல்லாததால் பெரும்பான்மையான கைதிகள் கோட்டைச் சிறைப்பகுதிக்குத் திரும்பிவிட்டனர். விலங்குகள் மாட்டப்படாத நிலையில் தங்களுக்குத் தூக்கம் வரவில்லை என்றனர்! அவர்களுக்கு 50 ஆண்டுகளாக கை-கால்களில் விலங்கு இருந்தே பழக்கமாகிவிட்டது. விலங்குகளின் கனம் நீங்கியதால் அவர்கள் நிர்வாணமாகி விட்டதுபோல்

---

* பிரெஞ்சுப் புரட்சியின்போது 14.7.1789 அன்று பாரிசில் புரட்சியாளர்களின் கூட்டம் பாஸ்டில் கோட்டையைக் கைப்பற்றி, அங்கிருந்த கைதிகளை விடுதலை செய்தார்கள். இந்த தினம் (ஜூலை 14) இப்போதும் பிரான்சில் தேசிய விடுமுறை நாளாகப் பின்பற்றப்படுகிறது.

உணர்ந்தார்களாம். தாங்கள் வெறுமையாகிவிட்டதுபோல் நினைத்தார்களாம். சிறையிருட்டே பழக்கமாகிவிட்ட நிலையில் அவர்கள் வெளிச்சத்துக்குவர அஞ்சினார்கள்.

இது உண்மையாக நடந்த சம்பவம். அந்த கைதிகள் 50-70 ஆண்டுகள்தாம் சிறையிலிருந்தனர். மனித இனமோ அதைவிட நீண்ட காலமாக ஒருவகைச் சிறையில் இருந்து வருகிறது. பல பிறவிகளாக நாம் பலவகையான கட்டுப்பாடுகளில் சிறைப்பட்டுள்ளோம். இந்நிலையில் அஷ்டாவக்ரர்போல் ஒருவர் வந்து நமக்கு ஆன்ம விடுதலை பெற்றுத் தருவதாகக் கூறினால் நாம் தடுமாறித்தான் போவோம். கடந்த காலத்தின் மீது நமக்குள்ள மோகம் தீவிரமடையும். அது நம்மைத் தடுத்து. "இதென்ன தடுமாற்றம்? எங்கும் கிளம்பாதே. முன்பின் தெரியாத உலகில் காலை வைக்காதே. இருட்டில் செல்லாதே. கடந்த காலத்தைக் கைவிடாதே. பரம்பரைச் சிந்தனை ஓட்டத்திலேயே நீடித்திரு." என்று கூறும்.

இந்த சுலோகத்தில் 'நீ கடவுள்' என்றும் கூறப்படுகிறது. இவ்வாறு உன்னைப் பார்த்து ஒருவன் கூறினால் உன்னைக் கிண்டல் செய்வதாக நினைப்பாய். மறைமுகமாக உன்னைப் பழிப்பதாக நினைப்பாய். ஏனெனில் நீ மகாபாவி என்னும் எண்ணத்தை மதத் தலைவர்களும் ஆச்சார்யர்களும் உனக்குள் ஆழமாகப் பதித்துவிட்டார்கள். நீ நரகத்தில் வாழத்தான் லாயக்கு என்று அறிவித்துவிட்டார்கள். உன்னை மிருகங்களைவிட கேவலமானவன் என்று ஏசினார்கள். அந்த ஆச்சார்ய புருஷர்கள் மதத்தின் உண்மையான சொரூபத்தை அறிந்திருக்கவில்லை. அவர்கள் உன்னை விதிமுறைகளால் கட்டுப்படுத்தினர். உனக்குச் சடங்குகளாலான விலங்குகள் பூட்டினர். உன்னைச் சுற்றிலும் சிறைச்சுவர்களை எழுப்பினர். ஆனால் உண்மையான மதகுரு, 'நீ ஏற்கெனவே சுதந்திரமானவன். சுதந்திரமாக இருப்பது உனது சுபாவம்' என்று நினைவூட்டுவார்.

அஷ்டாவக்ரர் கூறும் 'பகவான்' என்னும் சொல் சிறப்பானது. இதற்கு 'பாக்கியசாலி' என்று பொருள். எனவே 'நீ கடவுள்' என்றால் நீ பாக்கியசாலி என்றும் அர்த்தமாகிறது.

பாக்கியசாலிக்கு நல்ல எதிர்காலம் உண்டு என்பதால், இனியும் கடந்த காலத்தைப் பற்றி நினைத்தபடி இருக்காதே.

ஒரு கூழாங்கல். அதற்கு எதிர்காலம் கிடையாது. அது கடவுள் ஆகாது. கல்லாகவே இருக்கும். அதன் அருகே ஒரு விதை கிடக்கிறது. விதைக்கு எதிர்காலம் உண்டு. கல், விதை இரண்டையும் பூமியில் புதை. சில நாள் கழித்துப் பார். கல் அப்படியே இருக்கும். விதை செடியாக முளைத்திருக்கும். அதற்கு எதிர்காலம் உண்டு. எதிர்காலம் உள்ள இடத்தில் கடவுள் மறைந்து நிற்கிறார்.

உன் எதிர்காலத்தின் எஜமானன் நீதான் என்பது 'பகவான்' என்னும் சொல்லின் விளக்கம். கடந்த காலத்துடன் உன் கதை முடிந்துபோய் விடவில்லை. உன் வாழ்க்கையில் எதிர்ப்பட்ட பிரச்சினைகளைக் கடந்து வந்துள்ளாயே தவிர நீ அவற்றில் கரைந்துபோய் விடவில்லை. நீ இன்னும் எவ்வளவோ வளர வேண்டியுள்ளது. பகவான் என்னும் சொல் நீ இன்னும் முடிந்து போகவில்லை; உன் வாழ்க்கை இன்னும் முற்றுப்புள்ளியை நெருங்கவில்லை என்பதை நினைவூட்டுகிறது. உன் கதை தொடரப் போகிறது. உண்மையில், உன் கதை என்றுமே முடிவடைவதில்லை நீ எவ்வளவு உயர்ந்தாலும் மேலும் உயர்வதற்கு இடமிருக்கும். விதை, செடியாகும். செடி, மரமாகும். பூ பூக்கும்; காய் காய்க்கும், காய் பழமாகும். மீண்டும் புதிய விதைகள் என்னும் வளர்ச்சி முடிவற்றது. உனது எதிர்காலமும் உன் மூலமாகவும், உன் பரம்பரை மூலமாகவும் பரந்து விரிகிறது.

சமயத் தலைவர்கள் பகவான் என்பதன் அர்த்தத்தைச் சுருக்கிவிட்டார்கள். பகவான் என்பவன் பவ என்னும் உலகைப் படைத்தவன் என்ற கூறுவதுடன் நிறுத்திக் கொண்டார்கள். ஜனகர் நிச்சயமாக உலகைப் படைத்தவரில்லை. ஆகவே அஷ்டாவக்ரர் அவரை நோக்கி 'நீ கடவுள்' என்று கூறுகையில் ஜனகர் உலகைப் படைத்தவர் என்ற அர்த்தத்தில் சொல்லியிருக்க முடியாது.

பகவான் என்பதற்கு வேறு அர்த்தமும் உண்டு. எதை முழுமையாக நிரப்ப முடியாதோ அது பகவான். எதை பூர்த்தி

செய்ய முடியாதோ அது பகவான். எதன் வளர்ச்சி முடிவின்றி நடைபெறுகிறதோ அது பகவான்.

நாம் பயன்படுத்தும் 'ஈஸ்வரன்' என்னும் சொல்லும் சிறப்பானது. ஈஸ்வரன் என்பதற்கு ஐஸ்வர்யம் நிறைந்தவர் என்று பொருள். அவர் சத்-சித்-ஆனந்தம் என்னும் செல்வத்தால் நிறைந்து விளங்குகிறார். அவர் அந்த மகா ஐஸ்வர்யத்துடன் உனக்குள்ளே வீற்றிருக்கிறார். ஆகவே நீ ஒருவகையில் இயற்கையிலேயே செல்வந்தன்தான். ஆனால் கடந்த காலத்திலேயே தேங்கி நீ பிச்சைக்காரனாகிவிட்டாய். இது நீ செய்த தவறு. பகவான் ஆவதற்கு நீ எதிர்காலத்துடன் தொடர்புகொள்ள வேண்டும். இடைவிடாத இயக்கம், இடைவிடாத பிரவாகம்தான் உன்னை பகவானாக்கும். நீ முன்னேறினால் கடவுள். நடுவில் நின்றுவிட்டால் கல்.

ஆனால் நீயோ கற்சிலைகளைக் கடவுளாக வணங்குகிறாய். கடவுளைக் கல்லில் ஒருபோதும் செதுக்காதே. ஏனெனில் கல்லிலே இயக்கமோ, பிரவாகமோ துளிக்கூட கிடையாது. ஆதிகால இந்துக்கள் நதிகளை வழிபட்டார்கள், சூரியனை வணங்கினார்கள். அவற்றில் கடவுட்தன்மை அதிகம் உள்ளது. நதி தொடர்ந்து பாய்கிறது. பிரவாகிப்பது அதன் குணம். சூரியன் உதிக்கிறது, வளர்கிறது, முன்னேறுகிறது. இயங்குவது அதன் வழக்கம். நீ பளிங்கில் சிலை செய்தாலும் அவை பிணத்திற்கே சமம். அவற்றில் எந்த இயக்கமும் இல்லை. செத்த கல்லை வணங்குகிறாயே. உயிருள்ள விதையை வணங்கு.

ஐரோப்பியர்கள் இந்தியாவில் பிரவேசித்தபோது இந்துக்கள் மர வழிபாடு செய்வது கண்டு திகைத்தனர். இந்துக்களை நாகரிகமற்றவர்கள் என நினைத்தனர். ஆனால் இந்துக்களின் வாழ்க்கை முறையைப் புரிந்துகொள்ள ஆழமான பார்வை வேண்டும். இந்துக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்க்கையை ஆழமாக ஆராய்ந்து பார்த்தவர்கள்.

ஒருமுறை நான் அலகாபாத் சென்றேன். பிரயாகை அருகே ரயில் கங்கைப் பாலத்தில் செல்ல ஆரம்பித்தது. பெட்டியில் இருந்த கிராமத்து மக்கள் சிலர் கங்கையில் காசுகளை எறிந்து

வணங்கினர். என்னருகே அமர்ந்திருந்த பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவர், “இதென்ன பட்டிக்காட்டுத்தனம்! இந்த மூடர்கள் காசுகளைத் தண்ணீரில் எறிகிறார்களே இதென்ன அர்த்தமற்ற செய்கை,” என்று அலுத்துக்கொண்டார்.

நான் மறுத்தேன். “மேலோட்டமாகப் பார்த்தால் இவர்களை முட்டாள் என்றுதான் நினைக்கத் தோன்றும். கங்கையில் ஏன் காசு போடுகிறோம் என்பதன் காரணத்தை அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். ஆனால் சற்று ஆழமாக யோசித்துப் பாருங்கள். அனுதாபத்துடன் அவர்கள் செயலைப் புரிந்துகொள்ள முயலுங்கள்,” என்றேன்.

கங்கை எப்போதும் பிரவாகித்தபடியே இருக்கிறது. இமயமலையிலிருந்து வங்காளக் கடல்வரை ஓடுகிறது. எங்கும் நிற்காமல், தேங்காமல் பாய்கிறது. இந்துக்கள் பல புண்ணியத் தலங்களை கங்கைக் கரையில் ஏற்படுத்தியுள்ளனர். கங்கையும் இதர நதிகளும் இயங்கும் தன்மையின் சின்னங்கள். இவை வாழ்க்கையில் உயிரோட்டமுள்ளதன் அடையாளங்கள். காசு எறிவதை நான் நியாயப்படுத்தவில்லை. ஆனால் இதில் ஒரு ரகசியம் அடங்கியுள்ளது. இக்காலத்தவர்களுக்கு அது தெரியாமலிருக்கலாம். ஆனால் முதன்முதலாக கங்கையில் காசை சமர்ப்பித்தவன் கைகூப்பி, “கங்கை அன்னையே, உனது பொங்கி வரும் பிரவாகத்துடன் ஒப்பிடும்போது என் செல்வமெல்லாம் அற்பமானது. உன் செல்வம் உயிரோட்டமுள்ளது. இந்தக் காசு உயிரற்றது. இதை ஒப்புக் கொள்ளும் வகையில் என் காசை உன் திருவடிகளுக்கு அனுப்புகிறேன்,” என்று கூறியிருப்பான்.

மரத்தை வழிபடுவது கூடுதலான பக்தியின் அடையாள மாகும். மரம் வளர்ச்சியுடையது, உயிரோட்டமுள்ளது. அதில் புதிது புதிதாக இலைகள் தோன்றும்; கனிகள் பழுக்கும். மரத்திற்கு எதிர்காலம் என்பது உண்டு. மரத்திற்கென்று ஐஸ்வர்யமும் உண்டு. மரத்தில் மலர்ந்துள்ள பூக்களைப் பார்த்தால் இது விளங்கும்.

இயேசுநாதரும் அதிசயிக்கிறார். ‘வனமெங்கும் மலர்ந்துள்ள பூக்களைப் பாருங்கள். இவற்றின் சிறப்பு எங்கிருந்து வருகிறது? இவ்வளவு அழகை இவற்றிற்குக் கொடுத்துவிட்டுப் போவது யார்?

எங்கேயிருந்து பிரசாதம்போல் இவை பொழிகின்றன?' என்று கேட்கிறார்.

ஐஸ்வர்யசாலியாக இருப்பது உன் சுபாவம். கடவுளாக வேண்டும் என்பது உனக்கு சாத்தியம்தான். நீ உன் செல்வச் செழிப்பை வெளிப்படுத்து. உன்னிடமும் கடவுட்தன்மை உண்டு என்று அறிவிப்புச் செய். உனது இந்த அறிவிப்பில் எல்லா உயிர்களின் கடவுட்தன்மை நிறைந்து நிற்கிறது. நீ மட்டுமே கடவுள் என்றும், மற்றவர்கள் கடவுள் இல்லையென்றும், நீ முடிவுகட்டினால் தவறான முடிவாகும். இந்த மனப்பான்மை அகங்காரத்தின் வெளிப்பாடாகும். இந்த மமதை உன்னைக் கடவுளிடமிருந்து வெகுதொலைவில் கொண்டுபோய் விடும். இது கடவுளுக்கு எதிரான கண்ணோட்டமும் ஆகும். 'நான்' என்னும் உணர்வு முழுமையாக நீங்குமிடத்தில்தான் கடவுள் தோற்றம் தருகிறார்.

'முக்குணங்களின் தாக்கம் உள்ள இந்த உடல் வருகிறது, போகிறது. ஆத்மாவோ செல்வதுமில்லை, வருவதுமில்லை. இவை குறித்து நீ ஏன் துக்கிக்கிறாய்?' **(சுலோகம் 134)**

**நீ** பானை (கடம்) வாங்குகிறாய். அதனுள் வெற்றிடம் உண்டு. அது கடாகாசம் என்ற சொல்லப்படுகிறது. நீ பானையை வீட்டிற்கு எடுத்துச் செல்கிறாய். கடையில் வாங்கியபோது இருந்த அதே வெற்றிடம்தான் இப்போதும் உள்ளதா என்று பரிசோதித்தால் அந்த வெற்றிடம் அப்படியே இருப்பதைக் காண்பாய். கடைத் தெரு, வீடு என்று மாறியதால் பானையின் வெற்றிடம் புதிதாக வரவுமில்லை; ஏற்கெனவே இருந்தது நீங்கிப் போகவுமில்லை, என அறிவாய்.

ஆத்மா ஆகாயம் போன்றது. உடல், குணங்களால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. உடம்பு ஒரு மண் பானைக்கு சமம். நீ போனால் உடலும் போய்விடும் ஆனால் உன் ஆத்மா போவதில்லை.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். ரயில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. அவர் இருக்கையில் உட்காராமல் வேகமாகப் பெட்டிக்குள்

ஓடியபடி இருந்தார். உடை வியர்வையால் நனைந்திருந்தது. ஒருவர் தடுத்து, "நஸ்ருத்தீன், என்ன விஷயம்? ஏன் இப்படிப் பெட்டியில் ஓடுகிறாய்?" என்று விசாரித்தார்.

"ரயில் ஓடும் வேகம் போதாது. நான் சீக்கிரமாக ஊருக்குப் போக வேண்டும். அதற்காகத்தான் ரயிலுடன் சேர்ந்து நானும் ஓடுகிறேன்," என்றார் முல்லா.

கேள்வி கேட்டவர் சிரிப்பை அடக்கிக் கொண்டார். "நீ பெட்டிக்குள்ளேயே வேகமாக ஓடினாலும், இருக்கையில் அமர்ந்தாலும் ஒரு வித்தியாசமும் ஏற்படப்போவதில்லை. ரயில் ஏற்கெனவே ஓடுவதால் உன் ஓட்டத்தால் பயன் கிடையாது. ரயில் எந்த இடத்தில் போய்க்கொண்டிருக்கிறதோ அங்குதான் நீயும் இருப்பாய்," என்று விளக்கினார்.

உன் உடல் எங்காவது சென்றாலும் நிஜமான நீ ஒரேயிடத்திலேயே இருக்கிறாய். உள்ளே எந்த அசைவும் கிடையாது. உள்ளே இருக்கும் வெற்றிடம் (சூன்ய ஆகாசம்) மாறாமல் ஒரே மாதிரியே நீடிக்கும். இங்கிருந்து எழுந்திருக்கிறாய், அங்கே உட்காருகிறாய், அங்கேயிருந்து எழுகிறாய், வேறெங்கோ அமர்கிறாய்; ஏழையாய் இருந்தாய், பணக்காரன் ஆனாய்; ஒரு பதவியிலும் இல்லாதவனாய் இருந்தாய், ஜனாதிபதி ஆகிவிட்டாய்; தரையில் உட்கார்ந்திருந்தாய், அரியணையில் வீற்றிருக்கிறாய். ஆனால் உனக்குள்ளே ஒளிந்திருப்பவன் எங்கும் வருவதோ, போவதோ இல்லை. அவனை அறிமுகப்படுத்திக் கொள். நீ சாப்பிட்டாலும் அவன் சாப்பிடுவதில்லை. நீ பாதையில் நடந்தாலும் அவன் நடப்பதில்லை. நீ இரவில் தூங்குகையில் அவன் தூங்குவதில்லை. அவன் எப்பொழுதும் ஒரேவிதமாக நீடிக்கிறான்.

இது சம்பந்தமாகக் கவலைப்பட ஏதுவுமில்லை. முல்லா நஸ்ருத்தீனைப் போல் கவலைப்படுவது வீணானது.

குணங்களின் ஆளுகைக்குட்பட்ட இந்த உடல் நிச்சயமாக வருகிறது, போகிறது, பிறக்கிறது, பால பருவம்-இளமை-முதுமைக்கு உள்ளாகிறது, நோயுறுகிறது, ஆரோக்கியமடைகிறது. வாழ்வில் உடலுடன் தொடர்புடைய ஆயிரக்கணக்கான

சம்பவங்கள் நிகழ்கின்றன. ஆனால் உள்ளே இருப்பவன் துளியும் மாறாமல் ஒரேமாதிரியாக இருக்கிறான்.

மண்பானை வாங்கி வா. அதற்குத் தங்கத் தகடு போடு. சுற்றிலும் வைரம்-ரத்தின மாலையால் அலங்கரி. ஆனால் உள்ளே இருக்கும் வெற்றிடத்தில் மாறுதல் ஏற்படுவதில்லை. தங்கக் குடமே வாங்கிப் பார்த்தாலும் அதனுள் வேறு விதமான வெற்றிடமா தெரியும்? அது பானையின் வெற்றிடத்திலிருந்து வித்தியாசமாகவா தெரியும்? எல்லா பாத்திரங்களின் உள்ளேயும் ஒரேமாதிரி வெற்றிடம்தான் காணப்படும். அது வெளிப்புற அமைப்புடன் சம்பந்தப்படுவதில்லை. அதுபோல் வெளிப்புறமான உடல் அழகாயிருந்தாலும் சரி, குரூபமாயினும் சரி, நகைகளால் உடலை அலங்கரித்தாலும் சரி, நிர்வாணமாக நின்றாலும் சரி-உள்ளே இருப்பது பாதிப்படைவதில்லை.

பிறகு ஏன் கவலை? உள்ளே எதனாலும் எந்த மாறுதலும் நிகழ்வதில்லை. முன்பும் ஏற்பட்டதில்லை. எல்லாம் எப்படியோ அப்படியே உள்ளது. உள்ளே மையத்தில் இயக்கம் கிடையாது. இழத்தல் இல்லை, வளர்ச்சி இல்லை, புதிதாக ஆவதில்லை. ஆகாயத்தைப் போன்ற நிலைமை. ஆகாயத்தில் மேகங்கள் சூழ்கின்றன, மழை பெய்கிறது, மேகங்கள் கலைகின்றன, இரவு வருகிறது, இருட்டாகிறது, பகல் வருகிறது, வெளிச்சமாகிறது. ஆனால் வானம் மாசடையாமல் அப்படியே உள்ளது. உடல், கால எல்லைகளுடன் சம்பந்தப்பட்டது. ஆனால் உள்ளே இருப்பதைக் காலத்துடன் சேர்த்துப் பார்க்கக்கூடாது.

'உடலானது யுகம் முடியும்வரை நீடித்தாலும் சரி, அல்லது இப்போதே அழிந்துபோனாலும் சரி, ஆன்ம உணர்வு என்னும் நிஜமான உனக்கு வளர்ச்சியும் இல்லை, அழிவும் இல்லை.' **(சுலோகம் 135)**

**நீ** ஆத்மா. உனக்கு வளர்ச்சியுமில்லை, தேய்வுமில்லை.

'எல்லையற்ற மாகடலில் உலக இயக்கங்கள் என்னும் அலைகள் தாமாகவே தோன்றுகின்றன; பின்னர் மறைகின்றன. ஆனால் ஆன்மாவாகிய உனக்கு எழுச்சியுமில்லை, வீழ்ச்சியுமில்லை.' **(சுலோகம் 136)**

**உ**லகமெனும் கடலில் அதன் நடவடிக்கைகளான அலைகள் தோன்றுவது இயற்கைதான். ஆனால் ஆத்மா வளர்வதும் வாடுவதும் இல்லை.

உலக இயக்கம் தானாகவே நடைபெறுகிறது. அவை தொடர்ந்து நடக்கட்டும். நீ சாட்சிபோல் பார்ப்பதுடன் நிறுத்திக் கொள்.

'அன்பனே, நீ ஆன்ம உணர்வு உருவினன். உனது இந்த ஆன்ம உலகம் உன்னிடமிருந்து வேறுபட்டிருக்கவில்லை. ஆகவே எதைத் தள்ள வேண்டும், எதை ஏற்க வேண்டும்; ஏன் அவ்வாறு செய்ய வேண்டும்; எங்கே அதைச் செய்ய வேண்டும் என்றெல்லாம் எதற்காகக் கற்பனை செய்கிறாய்?' **(சுலோகம் 137)**

**ஆ**ன்ம உணர்வினனாகிய உன்னிடமிருந்து இந்த உலகம் வேறுபட்ட ஒன்று அல்ல. நாம் காணும் வேறுபாடுகள் மேலோட்டமானவை. வண்டிச் சக்கரத்தைப் பார். அதில் ஆரங்கள் உள்ளன. அவை இடைவெளி விட்டுத் தனித்தனியாகக் காணப்படுகின்றன. ஆனால் அவை மையத்தில் ஒன்றுசேர்ந்து விடுகின்றன. ஒரு வேடிக்கை என்னவென்றால், சக்கரம்தான் சுழலுமே தவிர அதன் மையப் பகுதி (கீல், இருசு, அச்சு) சுழலுவதில்லை. அது அப்படியே இருக்கிறது. எதன் அடிப்படையில் சக்கரம் சுழல்கிறதோ அது ஸ்திரமாக இருக்கிறது. இருசும் சுழன்றால் சக்கரம் குடை சாயும்.

இந்த உலகனைத்தும் சுழன்று இயங்கிக் கொண்டிருக்கிறதே அது கடவுள் என்னும் கண்ணுக்குத் தெரியாத ஒன்று (சூன்யம்) ஸ்திரமாக இருப்பதால்தான் சாத்தியப்படுகிறது. உன் உடல் உனது ஆத்மா என்னும் அச்சின் மீது சுழல்கிறது. அது சுழலுகையில் குழந்தைப் பருவம், இளமை, முதுமை, சுகம்-துக்கம், வெற்றி-தோல்வி, கௌரவம்-அவமானம் எல்லாம் வந்துபோகின்றன. இவை ஆரங்களாகச் சுழல்கின்றன. ஆனால் உன் அச்சு அசையாமல் இருக்கிறது. அந்த அச்சை சமாதிநிலையில் உணர்ந்து கொள்ளலாம். ஆரங்கள்போல் உயிர்கள் பல. ஆனால் அச்சைப்போல் ஆத்மா ஒன்றுதான்.

மகாவீரரின் உபதேசப்படி, தனக்கும் உலகிற்கும் இடையே உள்ள வேற்றுமைகளை (பேதங்களை) அறிந்துகொள்வதே ஞானம்

எனப்படுகிறது. எனவே அவரது சாஸ்திரம் 'பேத விஞ்ஞானம்' என்று அறியப்படுகிறது. இந்த சாஸ்திரப்படி, 'நான் ஜடப் பொருளில்லை. வெளியே தெரியும் உலகம் நானில்லை,' என்று நம்மை உணரச் சொல்கிறது.

யோகம் என்னும் சொல்லுக்கு கூட்டல், கூடுதல், இணைதல், ஒன்றாதல் என்றுதானே நம்மில் பெரும்பாலோர் அர்த்தம் கொள்கிறோம். ஆனால் மகாவீரரோ யோகம் என்றால் 'தனித்தனி' என்கிறார்! ஆகவே 'யோக நிலைக்கு முயலாதீர்கள், அயோக நிலையை அடையுங்கள்' என உபதேசிக்கிறார். ஆகவே சாதகன் அடையக்கூடிய உச்ச நிலையை, பரம உன்னதத்தை அவர் அயோகம் என அழைக்கிறார். இவர் மொழியைக் கையாளும் விதம் வழக்கத்திற்கு மாறாக உள்ளது.

பதஞ்சலி முனிவர் நாம் யோகத்தை அடைய வேண்டும் என்கிறார். இரண்டு தத்துவங்கள் இணைய வேண்டும் என்கிறார். மகாவீரரோ நம்மை அயோக நிலையை அடையச் சொல்கிறார். இரண்டும் பிரிந்து போகட்டும் என்கிறார். இன்றைய மொழி நடையில் பதஞ்சலி திருமண நிலைக்கு முயலச் சொல்கிறார். மகாவீரர் 'தலாக்' (விவாகரத்து) பெறச் சொல்கிறார்! இரண்டும் உடையட்டும். இரண்டும் பிரியட்டும் இரண்டாக உடைந்தால், 'நானும் உடலும் வெவ்வேறு; நானும் உலகமும் வெவ்வேறு' என்னும் ஞானம் கிடைக்கும். இது மகாவீரர் காட்டும் வழி.

ஆனால் இந்துக்களோ, 'எல்லாம் ஒன்றே. எதுவும் இரண்டல்ல' என்பதை அறிவதே ஞானம் என்கின்றனர். எனவே ஜைன சமய சாஸ்திரம் பழகிப் போனவர்களுக்கு அஷ்டாவக்ரரின் கண்ணோட்டத்தைப் புரிந்து கொள்வது கடினம்தான். அவர் சொல்வது ஜைனக் கருத்துக்குத் தலைகீழாக உள்ளது.

இந்துக்களுக்கு யோகத்தைவிட உயர்ந்ததொரு சொல் கிடையாது. அது பெருமதிப்புடைய சொல்லாகும். மகாவீரரோ யோகத்தை பாவமாக நினைக்கிறார். போகம் பாவம்தான். யோகம் காரணமாகத்தான் போகம் தொடர்கிறது என்கிறார் மகாவீரர். நீ யோகத்தில் இன்னொன்றுடன் இணைவதால் அதுவே போகமும்

ஆகும். இணைப்பை உடை, பிடுங்கி எறி, முற்றிலும் தனியாகப் போய்விடு என்று மகாவீரர் கட்டளையிடுகிறார்.

இந்துக்களோ 'நீ பிரிந்திருப்பது அகங்காரத்தைக் காட்டுகிறது. போய் இணை. கடவுள் என்னும் மாசக்தியுடன் சேர்ந்துவிடு. துளிக்கூட வித்தியாசம் இல்லாமல் போகட்டும். பேதமின்மையே - அபேதம்தான்-ஆனந்தம்' என்கின்றனர்.

அஷ்டாவக்ரர் சொல்வது புரட்சிகரமானது, எது நல்லது-எது கெடுதல்; எது தள்ளுவதற்கு உரியது-எது ஏற்பதற்கு உரியது; சுபம் எது-அசுபம் என்று தெரியாது. எது-எது நடைபெறுகிறதோ அதுவே நடைபெறுகிறது. எப்படி நடைபெறுகிறதோ அப்படித்தான் நடக்கும். நடப்பது நடக்கட்டும். எதுவும் நன்மையானதோ, தீமையானதோ இல்லை. நடைபெறுவதெல்லாம் இயற்கையானது.

இப்படிச் சிந்தித்தால் வாழ்க்கையில் முழுமையான அமைதி உதயமாகும். அமைதியின்மை-சஞ்சலத்தன்மை-இரண்டு விதமாக நிலவக் காண்கிறோம். சராசரி மனிதன் எப்படி தான் சாது மகாத்மாவாக ஆவது என்று கவலைப்படுகிறான். அதற்கான முயற்சியில் ஈடுபடுகிறான். ஆனால் அடிக்கடி தோல்வியுறுகிறான். இதனால் தன்னம்பிக்கையை இழக்கிறான். இருட்டில் மூழ்குகிறான். துடிதுடிக்கிறான். பச்சாதாபப்படுகிறான்.

இன்னொருவர் எப்படியோ சாது சந்நியாசியாகிவிட்டார். ஆனால் 'என் வாழ்க்கை வறண்டுவிட்டதே. மற்றவர்கள் சந்தோஷம் அனுபவிக்கிறார்களே' என்று அவருக்குள் ஏக்கம் எழுவதை அவரால் தடுக்க முடிவதில்லை. நான் பார்த்துள்ள துறவிகளில் பலர், வெளியே சொல்ல முடியாவிட்டாலும், 'துறவறம் மேற்கொண்டது ஒருவேளை முட்டாள்தனமோ' என சந்தேகப்படுகிறார்கள். 'நாம் கைவிட்ட இன்பங்களை மற்றவர்கள் நன்றாக அனுபவிக்கிறார்களே' என்று பொறாமையும்படுகிறார்கள்.

**க**னக விஜயர் என்றொரு சமணத் துறவி. என் விருந்தாளியாகத் தங்கியிருந்தார். சில நாட்களில் அவர் எனது பெருந்தன்மையான, எதிலும் குற்றம் காணாத சுபாவத்தை அறிந்துகொண்டார். ஒருநாள் தனிமையில் அவர் என்னைச்

சந்தித்துச் சொன்னார்: "உங்களிடம் ஒரு விஷயம் தெரிவிக்க ஆசைப்படுகிறேன். வேறு யாரிடமும் அதை வெளியிட முடியாது. வேறு யாரிடமாவது சொன்னால் ஒரு துறவி பேசும் பேச்சா இது என்று ஏளனம் செய்வார்கள். எனக்கு ஒன்பது வயதாகும்போது தாயார் இறந்துவிட்டார். என் தந்தை சமணத் துறவியாகிவிட்டார். என்னை வளர்க்க யாரும் இல்லாததால் அவர் என்னையும் சந்நியாசியாக்கி மடத்தில் சேர்த்துவிட்டார்."

சமண மதத்துறவியின் வாழ்க்கையோ மிகவும் கடுமையானது. இப்போது அவருக்கு வயது 60. ஆனால் அவரது மனத்தில் ஒன்பது வயதுக்குரிய ஏக்கம் நீடிக்கிறது. ஏனெனில் வாழ்க்கையில் அவரால் எதையும் அறிய, அனுபவிக்க முடியாமல் போய்விட்டது. துறவி மனப்பான்மை ஏற்படவும் பக்குவப்படவும் வாழ்க்கையில் துன்பங்களை அனுபவித்திருக்க வேண்டும். புத்தகம் படித்துத் துறவியாவது அஸ்திவாரம் அற்ற கட்டடமாகும்.

யோசித்துப் பாருங்கள். மற்ற சமவயதுச் சிறுவர்கள் ஐஸ்க்ரீம் சுவைக்கிறார்கள். இந்த ஒன்பது வயது சந்நியாசிக்கு அந்த வாய்ப்பு இல்லை. அவன் மீது நமக்கு இரக்கம் ஏற்படுகிறதல்லவா?

மற்ற சிறுவர்கள் திரையரங்கங்களின் வாசலில் டிக்கட் வாங்க வரிசையில் நிற்கிறார்கள். சமூகத்திலுள்ள பெரியவர்களும் டிக்கட் வாங்க நிற்கிறார்கள். இந்த ஒன்பது வயதுத் துறவிக்குத் திரைப்படம் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்காது.

இப்போது 60ஆம் வயதில் என்னிடம் மட்டும் அவர் தமது ஆசையை வெளியிட்டார். "சுவாமி, நான் ஒருமுறையாவது சினிமா பார்த்துவிட விரும்புகிறேன். தியேட்டருக்குள் என்ன நடக்கிறது என்பதை நான் அறிந்ததில்லை. சினிமா பார்க்க மக்கள் நீண்ட வரிசையில் நிற்கிறார்கள். சில சமயம் அவர்களிடையே தகராறு விளைகிறது. டிக்கட் வாங்க அடிதடியில்கூட இறங்கி விடுகிறார்கள். அப்படியென்ன சினிமாவில் இருக்கிறது?" என்று கேட்டார்.

அவர் திரைப்படமே பார்த்ததில்லை. அவருக்கு ஏற்பட்டுள்ளது இயற்கையான ஏக்கம்தான். உனக்குச் சிரிப்பு

வரலாம். ஏனென்றால் நீ சினிமாப் பைத்தியம், திரைப்படம் பார்ப்பது அப்படியென்ன பெரிய விஷயமா என்று நீ நினைப்பாய். ஆனால் நீ இவரது இடத்தில் உன்னைக் கற்பனை செய்துபார்.

அவருக்கு நான் உதவவே விரும்பினேன். ஒரு நண்பரை அழைத்து இந்த ஜைனத் துறவியை அழைத்துப்போய் ஓர் இந்தி சினிமா காண்பித்து வருமாறு சொன்னேன்.

அவர் திடுக்கிட்டார். தற்செயலாக அவரும் ஜைன சமயத்தவர், குடும்பஸ்தர். "ஐயோ, எங்கள் மதத் துறவியை நான் சினிமாவிற்கு அழைத்துப்போனது தெரியவந்தால் எங்கள் சமூகம் என்னைச் சும்மாவிடாது," என்று பதறினார்.

நானும் விடவில்லை. பிறகு அவர் ஓர் உபாயம் கூறினார்: "கண்டோன்மெண்ட் ஏரியாவில் ராணுவத்தினருக்காக ஆங்கிலப் படம் காண்பிக்கிறார்கள். அங்கே இவரை அடையாளம் கண்டுகொள்ள மாட்டார்கள். ஆனால் இவருக்கு இங்கிலீஷ் புரியாதே," என்றார்.

இதற்குத் துறவியே பதிலளித்தார்: "சினிமா என்றால் என்ன என்று எனக்குத் தெரிந்தால் போதும். படம் சீனமொழி, ஜப்பானிய மொழியிலிருந்தாலும் ஆட்சேபணையில்லை," என்றார்.

துறவி கனகவிஜயர் திரைப்படம் பார்த்துவிட்டுத் திரும்பினார். என்னைச் சந்தித்து, "இப்போதுதான் மனசு இலேசாகி யிருக்கிறது. ஒரு சுமை என் மனத்தைவிட்டு இறங்கிவிட்டது. இதுவரை அந்தச் சுமை தாங்கமுடியாமல் இருந்தது. சினிமாவில் அப்படி ஒன்றும் ரசிக்கும்படி இல்லை என்பதும் புரிந்தது," என்றார்.

வாழ்க்கையை அனுபவிக்காமல் போய்விட்டால் மனத்தில் நிறைய குப்பை-கூளம் சேர்ந்துவிடும். ஆனால் வாழ்க்கையில் இன்பங்களை, போகங்களை, அனுபவித்தால் உனக்கு முக்தி கிடைத்துவிடும் என்று கூறவில்லை. சிலர் 50-60 ஆண்டுகளாகத் திரைப்படம் பார்க்கிறார்கள். ஆனாலும் தொடர்ந்து பார்க்கப் போவதைக் கைவிடவில்லை. திரைப்படம் பார்த்தவர்கள் ஆன்ம விடுதலை பெற்றுவிட்டதாக நான் கூறவில்லை. அறிவின்

துணைகொண்டு திரைப்படம் பார்க்கும் பழக்கத்தை ஆராய்பவர்கள் மட்டும் அதிலிருந்து விடுபட வாய்ப்புள்ளது திரைப்படமே பார்த்திராதவர்களின் பிரச்சினை சிக்கலானது. அவர்கள் நல்ல அறிவு பெற்றிருப்பினும் பயனில்லை. ஏனெனில் தான் ஓர் இன்பத்தை அறிந்திராவிடில் அதிலிருந்து விடுதலை பெறுவது என்னும் பேச்சுக்கே இடமில்லை.

'எதுவும் தீயது அன்று, எதுவும் நல்லது அன்று. நடப்பதை நடக்கவிடு' என்கிறார் அஷ்டாவக்ரர். இப்படி ஒரு கண்ணோட்டம் அமைய அபாரமான துணிச்சல் வேண்டும். நடப்பதைத் தடுக்க வேண்டாம். வாழ்க்கை பிரவாகத்தில் எதிர்நீச்சல் போடவேண்டாம். இங்கே உலகில் இழப்பதற்கு உனக்குச் சொந்தமானது என்ன உள்ளது? இங்கே உனக்கென நிரந்தரமாக என்ன ஏற்பட முடியும்? இவ்வாறு உன் வாழ்க்கையை அதன் இயற்கையான போக்கில் செல்லவிட்டு, வாழ்க்கை பிரவாகத்தை நீ பார்த்தபடி இருந்தால் உனக்கு சாட்சி மனப்பான்மை அமைந்துவிட்டது என்று பொருள்படும். நடப்பதெல்லாம் இயற்கையின் லீலைகளே என்பதைப் புரிந்து கொள்வாய்.

'நீ ஒன்றேயானவன், நிர்மலமானவன், என்றும் அழியாதவன், சாந்தமானவன், ஆகாயம் போன்ற ஆன்ம வடிவினன். உனக்குப் பிறப்பேது? உன் கர்மங்கள் (செயல்கள்) என்று என்ன உள்ளன? இந்நிலையில்-கர்மங்களற்ற நிலையில்-அகங்காரத்துக்கு இடமேது?' **(சுலோகம் 138)**

**நீ** ஒருவனே உள்ளாய். உன்னைத் தவிர இரண்டாவதென (துவைதம்) வேறொன்றுமில்லை. எல்லாம் உன்னிலேயே அமைந்திருக்கின்றன. நீ எல்லாவற்றிலும் கலந்திருக்கிறாய்.

நீ என்றும் கறைபட்டவனல்லன்; என்றும் எக்குற்றமும் புரிந்தவனல்லன். உன்னால் எந்த பாவமும் விளைந்ததில்லை. ஏனெனில் நீ கர்த்தாவே (தொழில் புரிபவனே) இல்லையே. நீ சாட்சி மாத்திரமே. நீ உருவம் காட்டும் கண்ணாடி போன்றவன். கண்ணாடியின் எதிரே ஒருவன் இன்னொருவனைக் கொன்றால் அதைப் பார்க்கும் கண்ணாடி பாவியாகிவிடாது.

நீ அடிப்படையில் ஆத்ம சொரூபமானவன். ஆகவே என்றும் அழியாதவன். நீ உணர்ச்சிகளால் பாதிப்படையாதவன். ஆகவே நீ சாந்தமானவன்.

ஆத்மாவாகிய உனக்குப் பிறப்பு-இறப்பு கிடையாது. உடல் பிறக்கிறது-உடல் இறக்கிறது என்பது வேறு விஷயம்.

செயல்கள் உன் உடல் மூலம் நடைபெற்றாலும் அடிப்படையில் அவற்றைச் செய்பவன் நீ அல்லன்.

அகங்காரம் (மமதை) என்பது 'என்னால்தான் எல்லாம் நடக்கிறது' என்னும் பெருமித உணர்வு காரணமாக ஏற்படுவதாகும். தொழில் புரிபவன் நீ அல்லன், அதாவது நீ என்பவனே இல்லாத நிலை. எதையும் செய்ததாக நீ கூறமுடியாது. ஆகவே அகங்காரப்படவும் வாய்ப்பில்லை. மேலும், யாரிடம் நீ அகங்காரப்படுவாய்? உன்னைத் தவிர (ஆன்ம நிலையில்) வேறு யாரும் இல்லாதபோது யாரிடம் பெருமை பேசுவாய்?

இவ்வாறு அறிவதால், இவ்வாறு ஞானத்தை எழுப்புவதால், இத்தகைய நம்பிக்கை கொள்வதால் சமாதிநிலை வாய்க்கிறது. எல்லா முரண்பாடுகளும் நீங்கி சமாதானம் தோன்றிவிட்டதை சமாதிநிலை குறிக்கிறது. எல்லா பிரச்சினைகளும் நீங்கிவிட்டன என்பதையும், எல்லாக் கேள்விகளுக்கும் விடை கிடைத்துவிட்டது என்பதையும் சமாதிநிலை காட்டுகிறது. மனத்தின் நடவடிக்கைகள் எல்லாம் கேள்வி-பதிலாகவே அமைந்துள்ளன. சமாதிநிலையில் எண்ணங்கள் எழுவதில்லை. ஆகவே கேள்வி-பதிலுமில்லை. இதுவே வாழ்க்கையை அதன் போக்கில் ஏற்றுக் கொள்வதாகும். இதுவே சாட்சி மனப்பான்மை.

வெளியில் நிகழ்பனவற்றைத் தொடரவிடு. நீ எதையும் தேர்ந்தெடுக்காதே. எது எப்படி என்று நீயாக முடிவு செய்யாதே. நல்லது-கெட்டது என்று பிரிப்பதில் ஈடுபடாதே. நீ பார்வை யாளனாக மட்டும் இருந்துவிடு.

நமது கல்வி முறை இக்கண்ணோட்டத்திற்கு நேர்மாறாக உள்ளது. நாம் பயிலும் கல்வி என்ன சொல்கிறது? 'கோபம் வருகிறதா? அழுத்தி அடக்கிவிடு, தடு, கோபப்படாதே, கோபம்

ஒரு கெட்ட குணம்' என்கிறது. அன்பு பிறந்தால், 'அதை வெளியிடு. வாய் திறந்து சொல். அன்பு ஒரு நல்ல குணம்' என்கிறது. நமது கல்வி முறையில் எல்லா நடவடிக்கைகளும் இதுவா-அதுவா என்று பிரித்துத் தேர்ந்தெடுப்பதன் அடிப்படையிலேயே நடைபெறுகின்றன.

'அந்த ஒன்றே எல்லாமும்:அந்த ஒன்றிலேயே எல்லாமும்' என்ற இந்துமதக் கண்ணோட்டம் உலகில் பெரிய பாதிப்பை உண்டாக்கவில்லை. சமண பரம்பரையின் பாதிப்பே அழுத்தமாக உள்ளது. இத்தனைக்கும் சமண மதத்தைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை அதிகமில்லை. ஏனெனில் சமணத்தின் கொள்கைகள் தர்க்கத்தின் அடிப்படையிலானவை. அறிவின் துணைகொண்டு மனிதன் அவற்றைப் புரிந்துகொள்ள முடியும். இந்துமதத்தில் முதலிடம் பெறும் உள்ளுணர்வைப் புரிந்து கொள்வது சிலரால்தான் முடியும்.

மகாத்மா காந்தி இந்துமத சாஸ்திரமாகிய பகவத்கீதையைப் போற்றுகிறார். ஆனால் அவர் அந்நூலுக்கு எழுதியுள்ள உரை விளக்கமோ சமணமதக் கோட்பாடுகளை ஒட்டியுள்ளது. காந்திஜி இந்துமதத்தையே தீவிரமாகப் பின்பற்றியபோதிலும் ஜைன மதக் கொள்கைகளின் தர்க்கப் பொருத்தமும் கணிதத்தின் துல்லியமும் அவரைக் கவர்ந்திருக்கும். மக்கள் எதிலும் தர்க்கப் பொருத்தமும் தெளிவுமே எதிர்பார்க்கின்றனர். புரியும்படியாக இருக்கும் விஷயங்களைத்தான் அவர்கள் வரவேற்கின்றனர்.

'கெட்டதைக் கைவிடு-நல்லதை நாடு' என்பதை மதங்களின் சாரம் என்று கூறலாம். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இப்படி உபதேசிக்கப்பட்டும் கெட்டது தொடர்ந்து நடைபெறுகிறது. நல்லது அரிதாக நிகழ்கிறது. இது சங்கடம் தருகிறது. இவ்வளவு சிறந்த கொள்கை இந்த அளவிற்குத் தோல்வி கண்டுள்ளது. உன் சொந்த வாழ்க்கையிலேயே இதைக் காணலாம். கெடுதலைக் கைவிட்டு நல்லதே செய்ய நீ எவ்வளவோ முயல்கிறாய். எனினும் அறிந்தும்-அறியாமலும் நீ கெட்டதையே தொடர்கிறாய்.

புனிதர் அகஸ்டின்* கூறுகிறார்: 'இறைவா! நான் எதைச்

* 354-430 BC. Best known work 'The Confessions.' இந்நூல் 'ஞானோதயம்' என்னும் பெயரில் இம்மொழிபெயர்ப்பாளர் எழுதி வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

செய்ய வேண்டுமோ அதை என்னால் செய்ய முடிவதில்லை. நான் எதைச் செய்யக்கூடாதோ அதனையே செய்துவருகிறேன். எதையெல்லாம் செய்யக்கூடாது என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் அதையே செய்கிறேன். எதெல்லாம் சரி என்று எனக்குத் தெரியும். ஆனால் அதைச் செய்ய முடியவில்லை.'*

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மற்ற மனிதர்களின் வருத்தமும் இதுவேதான்.

அஷ்டாவக்ரரோ வேறு விதமாகக் காண்கிறார். மனத்தில் ஆன்மிகப் புரட்சி நல்லது-கெட்டது என்று பிரித்து, நல்லதைத் தேர்ந்தெடுப்பதால் விளைவதில்லை என்கிறார். நல்லது-கெட்டது இரண்டிற்கும் நாம் சாட்சியாகிவிட வேண்டும். உனக்குக் கோபம் வந்தால் அதை சாட்சிபோல் கவனி. ஓர் ஆண்டு முழுதும் கோபம் தலைதூக்கும் போதெல்லாம் அதைக் கவனி. இதேபோல் கெட்டவை என நீ நினைப்பவை உன்னிடம் தோன்றும் போதெல்லாம் அவற்றை நோக்கு. உணர்ச்சி வசப்படாமல் சாந்தமாக அவற்றை நோக்கு.

ஓராண்டில் நீ உள்ளத்தில் ஒரு சன்னல் திறப்பதுபோல் உணர்வாய். உன் மனத்திலிருந்த கெட்டவை எல்லாம் சிறிது சிறிதாகக் குறைந்து வருவதையும், நல்லவை வலுப்பெறுவதையும், அவை கெட்டவை காலிசெய்த இடத்திலும் பரவுவதைக் காண்பாய். சாட்சி ஒருவன் இடைவிடாமல் கவனிக்கிறான் என்பது தெரிந்தாலே கெட்டவை தாமாகவே பின்வாங்கத் தொடங்கிவிடும்.

உன்னால் கெடுதல்தான் செய்ய முடிகிறது, நல்லதைச் செய்ய முடியவில்லையே என்ற குழப்பத்திற்குக் காரணம் நீ

---

* இதேபோல் மகாபாரதத்தில் துரியோதனனும் கூறுகிறான்: 'ஜானாமி தர்மம் நசமே ப்ரவ்ருத்தி:னு ஜானாமையா தர்மம் நசமே நிவ்ருத்தி:னுனு அறம் எது என்று நான் அறிவேன். ஆனால் அதை என்னால் பின்பற்ற முடியவில்லை. அதர்மம் எது என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் அதைப் புறக்கணித்து என்னால் தப்பிக்க முடியவில்லை.'

உன்னை செய்பவன் (கர்த்தா) என்று கருதுவதுதான். சாட்சியின் கண்ணோட்டம் 'நீ எதையும் விடாதே, எதையும் பிடித்துக் கொள்ளாதே; எல்லாவற்றையும் பார்த்தபடி அப்படியே இரு' என்று கூறுகிறது. காலப்போக்கில் தீயவை விலகி, அந்த வெற்றிடத்தை நல்லவை கைப்பற்றிக் கொள்ளும்.

சாட்சி மனப்பான்மையால் சுபமே விளையும் என்பது என் மதிப்பீடு. இதற்கு மாறாக, கர்த்தா கண்ணோட்டத்தால் துன்பம் விளையும். இருட்டு என்பது என்ன? விளக்கேற்றினால் மிஞ்சாமல் போவது இருட்டு. விளக்கு ஏற்றாவிடில் சூழ்ந்துகொள்வது இருட்டு. விளக்கேற்றியதும் இருட்டு காணாமல் போவதைப்போல, கர்த்தா உணர்வு நீங்கியதும் உன்னிடமுள்ள கெடுதலானவை தாமாகவே நீங்கிவிடும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**சிரத்தைக்கும் [மிகு கவனத்திற்கும்] சாட்சி மனப்பான்மைக்கும் உள்முக நோக்கில் சம்பந்தம் உண்டா? சாட்சிக் கண்ணோட்டம் ஆத்மாவின் சுபாவமானால், சிரத்தையும் ஆத்மாவின் இயல்பா? இவற்றில் ஒன்றை அடைய இன்னொன்றின் ஒத்துழைப்பு தேவையா?**

**சி**ரத்தை என்பது மனம் என்பதன் வீழ்ச்சியைக் காட்டுகிறது. மனம் வீழ்ந்துபடாமல் சாட்சி மனப்பான்மை அமையாது. சிரத்தை என்பது மனத்திலிருந்து சந்தேகம் வெளியேறிவிட்டதைக் காட்டுகிறது. சந்தேகம் வீழ்ந்துவிட்டால் மனத்தில் எண்ணங்களின் அலைகள் எழாமல் அமைதி நிலவும். எண்ண ஓட்டம் நீடிக்கும்வரைதான் சந்தேகமும் நிடிக்கிறது.

மக்கள் சந்தேகத்தை நீக்கிக்கொள்ள விரும்பவில்லை. எண்ணம் சலனமின்றி இருக்க விழைகிறார்கள். இது ஒரு கையால் நீர் பாய்ச்சியபடியே இன்னொரு கையால் இலைகளைப் பறித்துச் செடியைப் பிடுங்க முயல்வது போன்றதாகும். இது முரண்பாடான செயலாகும்.

சந்தேகம் உள்ள இடத்தில் சிந்தனைச் சலனமும் காணப் படும். சந்தேகம் எண்ணத்தைத் தூண்டிவிடுகிறது. உள்மனத்தில் அலைகளை எழுப்புகிறது. ஆகவேதான் விஞ்ஞானம் சந்தேகத்தை ஆதாரமாகக் கொண்டு செயல்படுகிறது. ஏனெனில் சிந்தனையின் தூண்டுதலின்றி விஞ்ஞானத்தில் தேடல்கள் நிகழா. ஆகவே விஞ்ஞானிகள் எப்பொருளையும் எந்த நிகழ்வையும் சந்தேகக் கண்கொண்டு பார்க்கச் சொல்கிறார்கள்.

ஆனால் அறநெறி சிரத்தையை வலியுறுத்துகிறது. சந்தேகமற்ற நிலைதான் சிரத்தை நிலை. சந்தேகம் போய்விட்டால் சிந்தனை சாந்தப்படும். சந்தேகம் இல்லாவிடில் யோசிப்பதற்கும் எதுவும் இல்லாமல் போகிறது.

சிலர் சிந்தனைகளை அமைதிப்படுத்திக் கொள்ளலாம், ஆனால் சிரத்தை நிலைக்கு போக வேண்டாம் என நினைத்தால் அது கைகூடாது. அவர்கள் வேரைப் பராமரித்த போதிலும் இலைகளைப் பறித்தெறிபவர்கள் போன்றவர்கள். வேர்கள் புதிய இலைகளை அனுப்பிவைக்கும். வேர்களின் வேலையே அதுதான். புதிய இலைகளை தமது கர்ப்பத்தில் வேர்கள் உருவாக்குகின்றன.

சிரத்தை நிலையை அடைந்தவனிடம் கேள்வி எதுவும் மிஞ்சியிருக்காது. கேள்வி எதுவும் இல்லை எனில் சிந்தனை அலையும் எழாது. நீ ஏரிக்கரையில் அமர்ந்துள்ளாய். நீர்ப்பரப்பு சலனமற்றதாய் உள்ளது. ஒரு சிறு கல்லை எறிகிறாய். வளையம் வளையமாக அலைகள்போல் எழுகின்றன. எறிந்தது ஒரு கல்தான். ஆனால் தோன்றியவையோ எண்ணற்ற வளையங்கள். மனத்தில் ஒரு சந்தேகம் பிறந்தாலும் சரி, அது சிறியதாயினும் சரி, அது எண்ண அலைகளைப் பன்மடங்காக வளர்த்துவிடும். கேள்வி உதித்ததும் சிந்தனையின் பயணம் தொடங்கி விடுகிறது.

சிரத்தை ஏற்பட கேள்வியை உதறித்தள்ளு. புதிய கேள்வி எழுப்பாதே. 'இருப்பது இருக்கிறது. இல்லாதது இல்லைதான்' — இந்த முடிவுடன் நீ சமரசம் செய்து கொள். இந்த சமரச உணர்விலிருந்து சாட்சி மனப்பான்மை உதயமாகிறது. இவ்வாறு சிரத்தையெனும் வானத்தில் சாட்சித் தன்மை என்னும் சூரியன் உதிக்கிறது.

நீ சந்தேகத்திற்கு மதிப்புக் கொடுத்தால் சிந்தனையாளன் ஆவாய். சாட்சித் தன்மைக்கு முதலிடம் தந்தால் மாமனிதன் அல்லது ஞானி ஆவாய். சந்தேக மனப்பான்மை உன்னை தர்க்க சாஸ்திரியாக ஆக்கும். சிரத்தை நிலை உன் மனத்தில் கேள்விகளே இல்லாமல் போகும்படி செய்துவிடும். சிந்தனைக்கு உபயோகம் உண்டு. அது இன்னொருவரைப் புரிந்துகொள்ள

உதவும் கருவி. அந்த இன்னொருவன் நம்மிடமிருந்து தள்ளி இருப்பதால் அவனை நெருங்க சிந்தனை அலைகளின் மீது பயணிக்க நேரிடும். நமக்கும் அவனுக்கும் இடையே ஒரு பாலம் கட்டத் தேவைப்படும். எண்ணங்கள் அந்தப் பாலத்தைக் கட்டும் பொருளாகின்றன.

ஆனால் நாம் நமக்குள்ளே யாத்திரை போக பாலம் எதுவும் கட்டத் தேவை எழாது. வழியும் தேட வேண்டியதில்லை. ஏனெனில் உனக்குள் நீதானே இருக்கிறாய். உன்னை நீ அடைவதற்கு இடைவெளி எதுவும் கிடையாது.

சாட்சி மனப்பான்மை என்பதன் இன்னொரு முகப்பு நாம் யார் என்பதை அறிந்துகொள்ள முயல்வதாகும். இந்த முயற்சிக்குச் சிந்தனை அலைகளின் உதவி தேவையில்லை. ஒரு விஷயம் நினைவில் வைத்துக்கொள். சிரத்தை என்பது சாதாரண நம்பிக்கையைவிட பல மடங்கு உயர்ந்ததும் வலுவானதும் ஆகும்.

ஒருவன் 'எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு' என்று சொல்கிறான். ஆனால் அவனது உள்மனத்தை ஆராய்ந்தால் அவன் கடவுள் இருப்பது பற்றி சந்தேகப்படுவது தெரியவரும். அதனால்தான் அவன் நம்பிக்கை உண்டு என்கிறான். நம்பிக்கை என்பது சந்தேகத்தை அழுத்தி அமுக்குவதற்கான அல்லது மறைப்பதற்கான முயற்சிதான்.

நம்பிக்கை என்பது நமது உடுப்பைப் போன்றது. நீ பிறந்தமேனியாக இருக்கிறாய். உடை உடுத்திக் கொண்டதும் அந்த நிலை நீங்குகிறது. ஆனாலும் உடைக்குள்ளே உடல் நிர்வாணமாகத்தானே இருக்கிறது. மற்றவர் கண்ணுக்குத் தெரிவதில்லை என்பது வேறு விஷயம். நம் பெரும்பான்மை நம்பிக்கைகளும் இப்படிப் போலியாக உள்ளன. வெளித் தோற்றமாகவும் மட்டும் உள்ளன.

நாத்திகனும் சிந்தனையை மேற்கொள்ளுகிறான். ஆத்திகனும் சிந்தனையில் ஈடுபடுகிறான். நாத்திகன் கடவுளுக்கு எதிராகச் சிந்திக்கிறான். ஆத்திகன் கடவுளுக்கு ஆதரவாகச் சிந்திக்கிறான். ஆனால் இருவரும் சிந்தனை என்னும் வலையி

லிருந்து விடுபடுவதில்லை. கடவுள் இல்லை என்பதை நிரூபிக்க நாத்திகன் சாட்சியங்கள் திரட்டுகிறான். ஆத்திகனோ கடவுள் உண்டென்பதற்கான சான்றுகள் சேகரிக்கிறான்.

கடவுளுக்குச் சான்று தேவையா? சான்று தேவைப்படுபவர் கடவுளாக இருக்க முடியாதே! கடவுள் இருப்பதோ, இல்லாமையோ, மனிதன் தரும் சான்றைப் பொறுத்திருந்தால், அந்தக் கடவுள் பைசா பிரயோஜனப்படாதவராக இருப்பார். கடவுள் இருக்கத்தான் செய்கிறார். நீ திரட்டும் ஆதரவான அல்லது எதிரான சாட்சியங்களைப் பொறுத்ததன்று அவரது உளதாம் தன்மை. உள்ளுணர்வை அடிப்படையாகக் கொண்டுதான் உள்ளேயும் வெளியேயும் அவர் பரவியிருப்பதை அறியலாம். இதற்குச் சான்று காட்ட முடியாது.

சிரத்தை என்பது சாதாரண நம்பிக்கையில்லை. நம்பிக் கைக்குச் சான்று தேவைப்படும். சிரத்தை என்பது நேரடியாகக் கண்களைத் திறந்து பார்ப்பதற்கு சமமாகும். சிரத்தையிருந்தால் அதன் விளைவு தரிசனம். ஆகவே சமணமத சாஸ்திரங்களில் தரிசனம், சிரத்தை இரண்டிற்கும் ஒரே அர்த்தம்தான் கொள்ளப் பட்டுள்ளது. மகாவீரரும் சிரத்தை என்றால் தரிசனம் என்கிறார்.

பார்வையிழந்தவர் தடுமாறியபடியே பாதையில் செல்கிறார். பலரைக் கேட்டு வழி தெரிந்து கொள்கிறார். கையில் கம்பு வைத்திருக்கிறார். எப்படியோ அவர் பார்வை பெற்றுவிட்டால், முதல் வேலையாகக் கம்பைத் தூக்கியெறிந்து விடுவார். அந்தக் கோல் நம்பிக்கை போன்றது. அதன் உதவியால் இதுவரை அவர் தரையைத் தட்டித் தட்டிப் பார்த்து நடந்தார். இப்போது பார்வை கிடைத்துவிட்டதால் இனி கம்பு தேவையில்லை.

சிரத்தை கைவரப்பெற்ற மனிதன் சாதாரண நம்பிக்கைகளை உதறிவிடலாம். பிறகு அவனை இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர் என்று குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவனாகக் கருத முடியாது. ஏனெனில் அவனுடைய கண்கள் திறந்துவிட்டன. மதம் என்னும் ஊன்றுகோல் இனித் தேவையில்லை. கண்களால் நேரடியாகப் பார்க்கக்கூடிய நிலையில் பிறிதொரு சாட்சியம் தேவையில்லை. நீயே கண்ணால் ஒன்றைப் பார்க்க முடியும்போது மற்றவர்கள் சரி

என்றாலும், தவறு என்றாலும் அவர்கள் கருத்து தேவைப்படுவதில்லை. நாம் கண்ணால் சூரியனைப் பார்க்க இயலுகையில், இன்னொருவர் 'அது சூரியனில்லை' என்று சொன்னால் நமக்கென்ன வந்தது?

இதேபோல் அகக் கண்கள் திறந்துகொள்வது சிரத்தை எனப்படுகிறது. சிரத்தை என்னும் உள்புறக் கண்கள் மூலம் கடவுளின் தரிசனம் கிடைக்கிறது. ஆகவே சிரத்தை என்பது அற்ப விஷயங்களில் நாம் கொள்ளும் நம்பிக்கையன்று. சிரத்தை என்பது ஆத்மாவில் நிகழும் புரட்சி. சிந்தனைக் குழப்பத்திலிருந்து விடுதலை, கேள்விகளிலிருந்து விடுதலை, சந்தேகங்களிலிருந்து விடுதலை. எது உள்ளதோ அதனுடன் சமரசம் செய்துகொள். அதன் இயக்கத்தில் நீயும் லயித்துவிடு. இதுவே சாட்சி மனப்பான்மை என்னும் உணர்வு.

செயல்புரிபவனாக (கர்த்தா) ஆவதற்குச் சிந்தனையின் தூண்டுதல் வேண்டும். தத்துவ அறிஞனாவதற்குச் சிந்தனையின் தூண்டுதல் தேவை. ஏனெனில் சிந்தனை செய்வதும் நுணுக்கமான விஷயம்தான். சாட்சி மனப்பான்மை நிலையில் உள்ளவன் கர்த்தாவாகத் தன்னை நினைப்பதில்லை. ஏனெனில் அவன் செய்ய வேண்டியது எதுவுமில்லை. என்ன உள்ளதோ அதனுடன் சேர்ந்து அதன் திசையிலேயே பிரவாகிப்பதுதான் அவன் வேலை. உள்ளவை எல்லாம் அவனிடமிருந்து அடிப்படையில் வெவ்வேறு அல்ல. அவற்றுடன் ஒன்றுவதுதான் அவன் வேலை. சுருக்கமாக-விழிப்புப் பெறுவதுதான் அவன் வேலை; விழித்தபின் பார்ப்பதுதான் அவன் வேலை.

சிரத்தையைக் கோயில் கதவுடன் ஒப்பிட்டால் சாட்சி மனப்பான்மையைக் கோயிலினுள் வீற்றிருக்கும் விக்கிரகம் எனலாம். சிரத்தையின் (உறுதியான ஈடுபாட்டின்) துணையின்றி யாரும் சாட்சியாக முடியாது; சத்தியத்தை அடைய முடியாது. சிரத்தையில்லாவிடிலும் பயிற்சியினால் நீ அறிஞனாகலாம்; ஆனால் நீ ஞானி ஆக முடியாது.

கடவுள் இல்லை என்பவனும் சிந்தனைக் குழப்பத்திலுள்ளான். 'கடவுள் இல்லை' என அவன் சுய அனுபவத்தால்

கூறவில்லை. ஆத்திகனும் சிந்தனைக் குழப்பத்தில் உள்ளான். 'கடவுள் உண்டு' என்பதற்கான ஆதாரத்தை அவனால் கண்ணெதிரே காட்ட முடிவதில்லை.

சாட்சி மனப்பக்குவம் உள்ளவன் இந்த இருவரிலிருந்தும் வேறுபடுகிறான். அவனை ஆத்திகன் என்றோ, நாத்திகன் என்றோ வரையறுத்துக் கூற முடியாது. அவன் முன்கூட்டியே ஆத்திகம், நாத்திகம் என்றெல்லாம் ஏதேனும் கொள்கையை முடிவுசெய்து வைத்திருக்கவில்லை. முன்கூட்டியே ஏதேனும் மதிப்பீடு செய்து வைத்திருந்தால் பிறகு பார்வை சுத்தமாக இருப்பதில்லை. உனக்கு சாதகமாகத்தான் எதற்கும் விளக்கம் சொல்வாய். முன்னதாகவே எதையும் ஒப்புக்கொண்டு விடாமல், கொள்கை ஏற்படுத்திக் கொண்டு விடாமல், வெற்றிடமாக உள்ள மனத்துடன் சாந்தமாக, மௌனமாகப் பார்த்தபடி இருத்தல் வேண்டும்.

என்னிடம் வருபவர்களில் சிலர் 'கடவுள் இருப்பதை எப்படி ஒப்புக்கொள்வது?' என்று கேட்கிறார்கள்.

'நீங்கள் ஒப்புக்கொண்டாக வேண்டும் என்று நான் சொல்ல வில்லையே.' என்று அவர்களுக்கு நான் நினைவூட்டுவேன். 'நீ என்பவன் இருக்கிறாய் என்பதை ஒப்புக்கொள்கிறாய் அல்லவா?' என்று அவர்கள் ஒவ்வொருவரிடமும் கேட்பேன்.

"இது ஒரு பெரிய விஷயமா? நான் இருக்கிறேன் என்பது எனக்குத் தெரிந்ததுதானே" என்று பதில் வரும்.

'நான் என்று ஒருவன் இல்லை' என்று அறிவிக்கும் யாரையாவது நீங்கள் கண்டதுண்டா? அப்படி ஒருவன் எப்படிக் கிடைப்பான்? ஏனெனில் 'நான் இல்லை' என்று அறிவிக்கக்கூட 'நான்' தேவைப்படுவேன் அல்லவா?

**மு**ல்லா நஸ்ருத்தீன் மளிகைக் கடையில் கடனுக்கு சாமான்கள் வாங்குவார். ஆனால் ஒழுங்காகப் பணம் தரமாட்டார். கடன் பாக்கிக்காகக் கடை முதலாளி ஒருமுறை தன் வீட்டிற்கே தேடி வருவதை நஸ்ருத்தீன் பார்த்துவிட்டார். உடனே வீட்டுக்

கதவைத் தாழ்ப்பாள் போட்டுவிட்டு உள்ளே போய் ஒளிந்து கொண்டார்.

கடைக்காரர் கதவைத்தட்டி "நஸ்ருத்தீன், வீட்டுக்குள்ளேயா இருக்கிறீர்?" என்று கூச்சல் போட்டார்.

"நான் வீட்டில் இல்லை." என்று உள்ளேயிருந்து பதில் வந்தது.

கடைக்காரர் சிரித்தார். "நான் வீட்டில் இல்லை என்று இப்போது பதில் சொன்னது யார்? உமக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

"ஏன், எனக்கா தெரியாது? நஸ்ருத்தீன்தான் பேசறேன். இப்போ நஸ்ருத்தீன் வீட்டில் இல்லை." என்று உள்ளேயிருந்து பதில் வந்தது.

ஆனால் அவர் அவ்வாறு சொன்னதே அவர் வீட்டில்தான் இருக்கிறார் என்பதன் ஒப்புதல்தானே. 'நான் இல்லை' என்று எவன் சொல்ல முடியும்? அப்படிச் சொல்வதே 'நான் இருக்கிறேன்' என்பதைத்தானே நிரூபிக்கிறது. உலகமே 'நீ இல்லை' என்று சொன்னாலும் நீ ஒப்புக்கொள்ள மாட்டாய். ஏனெனில் நீ இருக்கிறாய் என்னும் உணர்வு உன்னிடம் காணப்படுகிறது. 'நான் இல்லை என்று யாரிடம் சொல்கிறாய்?' அப்போது நீ இன்னொருவர் இருப்பதை ஒப்புக்கொள்கிறாய். அவ்வாறு ஒப்புக்கொள்ளவும் நீ என்று தனியாக ஒருவன் இருக்கும் நிலை எழுகிறதே.

நீ இருக்கிறாய். உன்னைப்போலவே கடவுளும் உனக்குள் உள்ளார். வெளியே தேடி எங்கே அலைகிறாய்? எங்கேயும் தேட வேண்டாம். எங்கேயும் போக வேண்டாம். உன் அகக் கண்களை அகல விரித்து உள்ளே இருப்பவரை தரிசனம் செய். கோவில் திறந்து சன்னிதி தெரிவதுபோல் உணர்வாய். இவ்வாறு சிரத்தையின் துணைகொண்டு சாட்சியாகப் பார்க்கும் அனுபவம் கிடைத்துவிடுகிறது.

சாட்சி என்பதன் அர்த்தம்: மனம் கொள்ளைபோக விடுதல், மனம் கரைந்து மறைய விடுதல்.

**பசுமையான தோட்டத்தில் இளமையான மொட்டுகள்**
**பரப்புகின்றன நறுமணம் புன்சிரிப்பின் மூலமாய்**
**அதைக் கண்டு மயங்கி நான்**
**மனத்தைக் கொள்ளை போகவிடுவதைக்**
**கற்றுக் கொண்டேன் பாடமாய்.**

வெளியுலகில் சௌந்தர்யம் உணரப்படும்போது சிறிது நேரத்திற்கு மனம் ஓய்வாக இருப்பதை நீ அனுபவித்திருப்பாய். உதாரணமாக, வானத்தில் பௌர்ணமியின் பூரண நிலவைப் பார்க்கிறாய். அதன் எழிலின் தாக்கத்தால் சிறிது நேரம் நீ மனத்தின் ஆரவாரம் அடங்கி சாந்தம் நிலவுவதை உணர்ந்திருப்பாய். சில நிமிட அனுபவம்தான் என வைத்துக் கொண்டாலும் அந்த இடைவெளியில் உன் மனம் காணாமல் போய்விடுகிறது. அந்த சூனியத்தில் தனித்தன்மை வாய்ந்த ஆனந்தம் அல்லது உல்லாசம் உன் மனத்தில் கொப்புளிக்கிறது.

மலர்களின் அழகை ரசிப்பது, இனிய சங்கீதம் கேட்பது, பிரியமான நபருடன் கைகோத்து உட்கார்ந்திருப்பது-இவ்வாறு சுகத்தை நீ உணரும் நேரத்தில் உன் மனம் எங்கே என்று யோசித்தால் அது காணாமல் போயிருக்கும். மனத்தின் பாதிப்பு நீங்கியதும் நீ சாட்சியாக மட்டுமே விளங்குவாய். வெளியுலக அழகால் அடைந்த இந்த மெய்மறந்த நிலையை வேறு வழியிலும் அடையலாம். அதற்கான உள்ளுலக முயற்சிதான் தியானம் என்பது. தியான நிலையில் அழகை உணர்கிறோம், அன்பை உணர்கிறோம், சத்தியத்தின் தோற்றத்தைக் காண்கிறோம், கடவுளை நோக்கி ஜன்னல்போல் ஏதோ திறப்பதும் தெரிகிறது. இந்த நிலையை வலுக்கட்டாயமான முயற்சிகள் செய்து பெறமுடியாது. தியானம் படிப்படியாக, இயற்கையாக நிகழ்கிறது. இதில் செய்தல் எதுவும் இல்லை; ஆகுதல்தான் உண்டு.

**தோட்டம் அமைக்கலாம் யாருமே**
**மூவுலகின் நிறங்களும்,**
**தேவர் விரும்பும் மணமுமுள்ள**
**அற்புதப் பூ எங்கு மலரும் யாரறிவார்?**

அதுதான் சாட்சிப் பூ. தோட்டம் எல்லோரும் போடு கிறார்கள். பணத்தோட்டமும் உண்டு; பதவிகளின் தோட்டமும்

உண்டு. ஆனால் சாட்சிப் பூ என்பது நீ மலர்ந்தால்தான் மலரும். இந்தப் பூ தம்மிடம் மலர தேவர்களும் ஆசைப்படுகின்றனர்.

நீ கர்த்தாவாக (செயல்புரிபவனாக) உன்னைக் கருதும்வரை உன் சக்தி வெளிப்புறமாகப் பாய்ந்தோடுகிறது. நீ சிந்தனையாளன் என்று உன்னைக் கருதினால் உன் சக்தி மனத்துக்குள் அலைகிறது. கர்த்தாவானால் உட்சக்தி வெளியேறுகிறது. சிந்தனையாளன் எனில் மனத்துக்குள் சக்தி வீணாகிறது. வாளியில் துளை இருந்து சொட்டுச் சொட்டாகத் தண்ணீர் வெளியேறுவதுபோல் உன் உடல் சக்தியோ, மன சக்தியோ சேகரிக்கப்படாமல் கொட்டிப் போய்விடுகிறது.

சாட்சி என்றால் நீ கர்த்தாவும் இல்லை, சிந்தனையாளனுமில்லை என்று பொருள்படும். சிறிது நேரத்திற்காக நீ இந்த இரண்டு நிலைகளிலிருந்தும் விலகி நின்றாய் என்று பொருள்படும். நீ கர்த்தா இல்லை எனில் அது உடலிலிருந்து விலகிய நிலையாகும். நீ சிந்தனையாளன் இல்லை எனில் அது மனத்திலிருந்து விலகி நிற்கும் நிலையாகும். உடல்-மனம் இந்த இரண்டிலிருந்தும் விலகிய சாட்சி நிலையில் உனது உயிர் சக்தி அல்லது வாழும் ஆற்றல் விரயமாகாமல் சேகரிக்கப்படுகிறது.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் அஷ்டாவக்ரரை விளக்கும் முயற்சியில் விண்ணைத் தொடுமளவு உயர்ந்த கருத்துகளை முன்வைக்கிறீர்கள். சீடர்களாகிய எங்களிடம் இரக்கம் காட்டுங்கள். எங்களால் தரையில் காலூன்றி நிற்கவும் முடியவில்லை. சிறகு விரித்து விண்ணில் பறக்கவும் முடியவில்லை. எங்களுக்குப் புரியும்படி எளிய விளக்கம் கொடுங்கள்.**

நல்ல கருத்து. உங்களை எல்லாம் மனத்தில் கொண்டுதான் விளக்கச் சொற்பொழிவு நிகழ்த்தி வருகிறேன். உங்களது அறிவாற்றலுக்கும் புரிந்து கொள்ளும் ஆற்றலுக்கும் சற்று கடினமாக உள்ளதையே கூறுகிறேன் என்பது உண்மை. ஆனால்

அவ்வாறு செய்யாமல் உங்கள் ஆற்றலை எப்படி விஸ்தரிக்க முடியும்? நீங்கள் புரிந்து கொள்ளக்கூடிய அளவுக்கே நான் விளக்குவதானால் அந்த விளக்கம் வீண்தான். விண்ணைத் தொடும் விளக்கம் நான் தந்தால்தான் நீங்கள் கண்களை விண்ணை நோக்கி உயர்த்துவீர்கள். வானம் முழுதும் உனக்குரியது. நீ வானத்தின் எஜமானன். ஆனால் நீயோ தரையில் பார்வை பதித்து நடக்கிறாய். ஆங்காங்கே உனக்குத் தடுக்குகிறது. ஆங்காங்கே நீ தவறி விழுகிறாய். பூமி உன்னுடையது என்பது உண்மையே. ஆகாயமும் உன்னுடையதுதானப்பா. உன் பார்வையின் சுற்றளவு நிலப் பரப்புடன் மட்டும் முடிந்து போகாமலிருக்கட்டும். ஆகாயத்தை அளக்கத் தொடங்குவதும் அவசியம். இதற்காகவே உனது புரிதலுக்கு அப்பாற்பட்ட விஷயங்களைக் கூறி உன் எல்லையை விரிவாக்குகிறேன். அப்பொழுதுதான் நான் உன் வளர்ச்சிக்கு உதவுவதாக ஆகும். உன் அறிவில் நான் புது விஷயங்களைச் சேர்த்தபடியே செல்ல வேண்டும்.

நான் சொல்வது முற்றிலுமாக உனக்குப் புரியாமல் போனாலும் என் முயற்சி வீண். முற்றிலும் ஏற்கெனவே உனக்குப் புரிந்துவிட்டாலும் என் முயற்சி வீண். கொஞ்சம் புரியுமாறும் கொஞ்சம் புரியாதபடியும் நான் உனக்கு உபதேசிப்பது பயன் தரும். உனக்குப் புரிவதை வைத்துக் கொண்டு அதன் மூலம் உனக்குப் புரியாததை விளங்கிக் கொள்ள முயற்சி செய். இதனால் உனது ஆத்ம அறிவு வளர்ச்சியுறும்.

உனக்குப் புரியும் அளவுதான் நான் பேச வேண்டுமென நீ எதிர்பார்ப்பது நியாயம்தான். ஆனால் பிறகு நீ அறிவுப் பாதையில் எப்படி முன்னேறுவாய்? கொஞ்சம் கொஞ்சமாக, அங்குலம் அங்குலமாக, உன்னை முன்னோக்கித் தள்ளுவது எனது கடமையாகிறது. அதேசமயம் உன் எல்லையை நான் மறந்துவிடாமலிருப்பதிலும் கவனம் காட்டுகிறேன். நீ தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள முடியாத அளவு எல்லையை நீட்டியும் நான் பேசவில்லை. நீ தொடர்பு கொள்வதுடன் நீ அந்த எல்லையைக் கடந்து செல்லவும் வேண்டும் என்ற அடிப்படையில் நான் பேசுகிறேன்.

சத்குருவின் கடமை உன்னிடம் சொல்வதேயன்றி உனக்கு ஏற்ற முறையில் சொல்வது அன்று. சத்குரு பேசுவது உன்னிடம்; ஆனால் பேசும் விஷயம் கடவுளைப் பற்றி. எனவே இந்த உரையாடலில் சில பிரச்சினைகள் எழத்தான் செய்யும். சத்குரு உன்னுடன் பேசுவது பொழுது போவதற்கான மேலோட்டமான பேச்சன்று. உன்னை குஷிப்படுத்துவது அவரது பேச்சின் நோக்கம் இல்லை. 'பொழுது தமாஷாகக் கழிந்தது' என்று நீ பாராட்டு வதற்காக அவர் பேசவில்லை. 'அவர் சொன்ன விஷயம் எனக்கு ஏற்கெனவே தெரியும்' என்று நீ மார் தட்டிக்கொள்ளும் வகையில் அவர் பேசுவதில்லை. இவ்வாறு உன் அகங்காரம் வளர்வதை அவர் விரும்புவதில்லை.

சத்குரு உனக்கு எதுவும் வேடிக்கை காட்டுவதில்லை. எதற்காக வேடிக்கையில் (ரஞ்சன்) நேரத்தை வீணாக்க வேண்டும்? மனத்தை உடைப்பதுதான் (பஞ்ஜன்) அவரது வேலை. நீ இதுவரையில் வீண் பொழுதுபோக்கியது போதும். வேடிக்கை களிலேயே நீ எத்தனை வாழ்க்கைகளை, எத்தனை பிறவிகளை வீணாக்கிவிட்டாயோ யாருக்குத் தெரியும்? நீ கனவுலகில் போதுமான அளவு உலாவி விட்டாய். அடுத்ததாக, கனவை உடைக்க வேண்டும். ஆனால் திடீரென பலமாக உடைத்து உன்னை என் எதிரியாக ஆக்கிக் கொண்டுவிடக் கூடாது. கொஞ்சம் கொஞ்சமாகச் செதுக்கி அகற்ற வேண்டும்.

உன்னை அஞ்ஞான உறக்கத்திலிருந்து எழுப்ப வேண்டும். அதேசமயம் நீ எந்த புனித உலகத்தில் விழிக்குமாறு எப்படி எழுப்ப வேண்டும் என்பதையும் குரு கவனத்தில் கொள்வார்.

நான் உன்னிடம் பேசும்போது அதேசமயம் உன்னைக் கடந்தும் பேசுகிறேன். என் பேச்சு உன் புரிதலின் எல்லையை அளவுக்கு மீறிக் கடந்துவிட்டது என்று நான் உணரும்போது முல்லா நஸ்ருத்தீனுக்கு அழைப்பு விடுகிறேன்! அவர் உன்னை உன் உலகத்திற்கு இழுத்துவருகிறார். நீ அவர் சம்பந்தப்பட்ட கதையைக் கேட்டுச் சற்று சிரிக்கிறாய். உனக்குச் சிறிதளவு பொழுதுபோக்குக் கிடைக்கிறது. நீ இயல்பு நிலைக்குத் திரும்பியதைப் பார்த்ததும் நான் உன்னைத் தட்டிக் கொடுத்து ஆன்மிகத்தில் மேல்நோக்கி அழைத்துச் செல்கிறேன்.

நான் பூமியின் (தரையின்) எதிரி இல்லை. இதை நினைவில் வை. பூமியும் வானத்தின் ஒரு பகுதிதான். அது வானத்தின் அங்கங்களில் ஓர் அங்கம். நான் உன்னை பூமியிலிருந்து பிடுங்கி எறிய விரும்பவில்லை. பூமியில் உன் வேர்கள் ஆழமாக இறங்க வேண்டுமென்றே விரும்புகிறேன். அப்போதுதான் நீ என்னும் மரம் வளர்ந்து ஆகாயத்துடன் அளவளாவ முடியும்.

உனக்கு எது நன்மை தருமோ அது உனக்குப் பிடித்தமாக இல்லை. உனக்கு எது பிடித்தமாக உள்ளதோ அது உனக்கு நன்மை தருவதாக இல்லை. உனக்கு விஷம் சாப்பிட்டுப் பழக்கமாகிவிட்டது. தவறானவற்றுடன் சேர்ந்து வாழ்வது உனக்குப் பழகிவிட்டது. அதுவே உனது வாழ்க்கை முறையாகிப் போனது. அதிலிருந்து உன்னைப் பிரிக்க நுணுக்கமான திறமை தேவை. எனது அறிவுரை உன்னை ஓடும்படி செய்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். என் அறிவுரை ஏற்கெனவே நீ அறிந்த ஒன்றாக இருக்கக்கூடாது. இலேசாக நெட்டி நெட்டித் தள்ளி ஆகாயத்தை நோக்கி உன்னை முன்னேறச் செய்ய வேண்டும்.

சந்நியாச நிலையை உலகியலுக்கு எதிரானது என்று நான் ஒருபோதும் கருதியதில்லை. இதனால்தான் நான் பூமியும் வேண்டும். வானமும் வேண்டும் என்கிறேன். நீ கடைத்தெருவில் வசிப்பவனாக இருக்கலாம். நீ எங்கிருந்தாலும், எப்படி இருந்தாலும் அதுவே உன் பூமி. அதிலேயே இரு. ஒன்றை மட்டும் நினைவில் வை. நீ பூமியில் வேர்களைப் பரவவிடுவது வானத்தில் உன் இறக்கைகளை விரிப்பதற்கே ஆகும். பூமியிலிருந்து ரசத்தை உறிஞ்சு. அது நீ ஆகாயத்தில் தலை உயர்த்த உதவட்டும். பூமியின் உதவியைப் பெறு. அதன் ஆதரவில் உறுதியாக நில். இது தப்பில்லை. தலை ஆகாயத்தைத் தொட வேண்டும் என்பதுதான் நிபந்தனை. மேகங்கள் உன் தலையைத் தொட்டுக்கொண்டு உலவாதவரை உன் வளர்ச்சி முழுமை பெறவில்லை என்று பொருள். உன்னை இந்தப் புதிய ரசத்தைப் பருக வைக்க வேண்டும் என்பதற்காகவே என் முயற்சிகளைச் சிறிது சிறிதாகக் கடுமையாக்கி வருகிறேன்.

சிறுவன் பள்ளியில் படிக்கத் தொடங்குகிறான். ஒன்றாம் வகுப்பிற்குரிய பாடம் படிக்கிறான். முதலாம் வகுப்பிற்குரிய பாடப்

பகுதியின் இறுதியில் சில சிரமமான பாடங்கள் இருக்கும். சிறுவனால் அவற்றை முழுமையாகப் புரிந்துகொள்ள முடிவதில்லை. ஆனாலும் அவை இரண்டாம் வகுப்பிற்கான பாடங்களின் தரத்தை அவனுக்கு அறிமுகப்படுத்துகின்றன. இப்படியே பல்கலைக்கழகக் கல்விவரை நடைபெறுகிறது.

மனித மனம் உயர்ந்த சிந்தனையைவிட தாழ்ந்த கற்பனைகளில் அதிகம் லயிக்கிறது. திரைப்படம் மனிதனைக் கவர்வதைப்போல் அஷ்டாவக்ரரின் கருத்துகள் அவன்மீது தாக்கம் ஏற்படுத்துவதில்லை. திரைப்படத்தை வைத்து மனிதனை உயர்த்துவதற்காக அதில் நற்சிந்தனைகளைப் புகுத்தி, ஒழுக்கமான படமாக எடுத்தால் அது தோல்வியுறுகிறது.

திரைப்பட இயக்குநர் விஜயானந்த் என்னைச் சந்திக்க வருவார். மக்களைச் சிறிதளவாவது உயர்த்தும் விதத்தில் படம் எடுக்குமாறு அவரிடம் சொன்னேன். அவரோ மக்கள் மேன்மேலும் கீழ்த்தரமான படங்களையே எதிர்பார்க்கின்றனர் என்று தெரிவித்தார். நான் அவரைத் துணிந்து உயர்ந்த சிந்தனையைத் தூண்டும் படம் தயாரிக்க முயலுமாறு கேட்டுக் கொண்டேன். அவர் அவ்வாறே 2-3 படங்கள் எடுத்தார். ஆனால் அவை ஓடவில்லை. மக்கள் அவற்றைப் பார்க்க முன்வரவில்லை. மக்கள் தங்களது (தாழ்ந்த) மனநிலைக்கு ஏற்ற படங்களே பார்க்க விரும்புகின்றனர். பாவம், விஜயானந்த் திவாலாகிவிட்டார்!

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருமுறை திரைப்படம் பார்க்கச் சென்றார். வழக்கம்போல் ஒரு குளியல் காட்சி. ஒரு குளத்தருகே கதாநாயகி கடைசி ஆடையைக் கழட்ட முயலும்போது நஸ்ருத்தீன் நாற்காலியின் விளிம்பிற்கே போய்விட்டார். அவருக்கு மூச்சிரைத்தது. கண்கள் விரிந்தன. சட்டென ஒரு ரயில் அந்தக் குளத்தை மறைத்துக்கொண்டு ஓடியது. ரயில் சென்றபின் பார்த்தால் கதாநாயகி அதற்குள் குளித்து, ஈரப்புடைவையால் போர்த்திக்கொண்டு கரையேறிவிட்டாள்!

நஸ்ருத்தீன் பார்த்தது மதியக் காட்சி. ஏமாற்றமடைந்த அவர் மாலைக் காட்சிக்குச் சென்றார். பிறகு இரவுக் காட்சிக்கும் போனார். இதைக் கவனித்த திரையரங்கு மேலாளர் அவரிடம் வந்து,

"வெளியூரா? இங்கேயே தங்கிவிடலாமென நினைக்கிறீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு நஸ்ருத்தீன், "இந்தக் காட்சியில் வருவது இந்திய ரயிலாயிற்றே. இந்திய ரயில் தாமதமாக வருவது வழக்கமானது. மதியக் காட்சியில் சரியாக வந்து கதாநாயகியை மறைத்துவிட்டது. அடுத்துவரும் காட்சிகளிலாவது அது தாமதமாக வந்து நான் கதாநாயகி குளிக்கையில் பார்க்க வாய்ப்புண்டா என்றறியவே தொடர்ந்து வந்தேன்," என்று விளக்கினார்.

திரைப்படம் மக்களின் இதயத்தைத் தொட்டுச் செல்கிறது. திரைப்படப் பாடல்களும் மக்களின் இதயத்தைத் தொடுகின்றன. ஆனால் இதற்காக அவற்றின் தரம் தாழ்ந்த நிலையில் வைக்கப்படுகிறது. இதேபோல் மதத்தின் கோட்பாடுகள் விண் முட்டும் அளவு உயர்ந்த தரமுள்ளவையாக இருக்கின்றன. ஆனால் மக்கள்வரை அவற்றைக் கொண்டுசெல்ல தரக்குறை வான புராணக் கதைகள் கையாளப்படுகின்றன. அப்போது மக்கள் கதையில் லயிப்பதுடன் நிறுத்திக் கொள்கிறார்களே தவிர, தங்கள் சிந்தனையை உயர்த்திக் கொள்வதில்லை.

இராமாயணத்தில் ஆழ்ந்துவிடும் மக்கள் அஷ்டாவக்ர கீதையைப் படிக்குமளவு பக்குவம் பெறவில்லை. இராமாயணம் ஒரு நீண்ட திரைப்படக் கதைபோல்தான் உள்ளது. பழைய பாணியிலான திரைக்கதை. ஆயினும் அதுவும் முக்கோணக் காதல் கதைதான். கதாநாயகன்-கதாநாயகி-வில்லன்! வில்லன் கதாநாயகியைக் கடத்துவதும் வழக்கம்தான்.

ராமன்-சீதை-ராவணன் கதையை மக்கள் பல நூறு ஆண்டுகளாகப் படித்தும் கேட்டும் வருகிறார்கள். ஆண்டுதோறும் ஆங்காங்கே ராம்லீலா கொண்டாட்டம் நடைபெறுகிறது. ஆனால் 'அஷ்டாவக்ர கீதை' என்னும் நூலின் பெயரைக் கேள்விப் பட்டுள்ளவர்களின் எண்ணிக்கைகூட மிகவும் குறைவு. அதில் காதல் முக்கோணம் என்ன, எந்த முக்கோணமும் கிடையாது!

கிருஷ்ணனின் கீதையிலும்கூட கதைச் சுவை உள்ளது. போர்க்களக் காட்சி-அர்ஜுனனின் தடுமாற்றம்-போர் நடக்குமா-

போர் நடைபெறாவிடில் என்ன ஆகும் என்னும் சஸ்பென்ஸ்-வழக்கறிஞர்போல் கிருஷ்ணனின் வாதம்-விஸ்வரூப தரிசனம் என்று திரைப்படம்போல் விரிகிறது. மகாபாரத நூலே ஒரு கதைக் களஞ்சியம்தான்.

உலகில் எங்காவது போர் நடைபெற்று வந்தால் நீ காலையில் எழுந்ததுமே செய்தித்தாளைத் தேடுகிறாய். இந்தியா-பாகிஸ்தானிடையே ஊடுருவல்-மோதல் உண்டா; இஸ்ரேலில் போர் எந்த நிலையில் இருக்கிறது என்றறியத் துடிக்கிறாய். மற்றவர்களும் இதேமாதிரிதான். போர் என்றால் பரபரக்கிறார்கள். நீ எங்காவது போகும் வழியில் யாரோ இரண்டு பேர் சண்டை போடுவதைப் பார்த்தால் நீ அங்கேயே நின்று அந்தக் கைகலப்பை ரசிக்கிறாய். அந்த சமயம் நீ உன் தாயாருக்கு மருந்து வாங்கப் போகின்றவனாகவும் இருக்கலாம். 'ஒரு அஞ்சு நிமிஷம் தாமதமா மருந்துக்கடைக்குப் போய்க்கலாம்.' என்று நீ தெருச் சண்டையைத் தொடர்ந்து பார்க்கிறாய்.

போர், வன்முறை, காமக் களியாட்டங்கள் ஆகியவற்றில் ஈடுபாடு கொள்கிறோம். இவற்றால் உனக்கு விழிப்பு ஏற்படாது. இவை மூலம் நீ உன் சிந்தனையின் தரத்தை உயர்த்திக் கொள்ள முடியாது. நீ மண்ணில் நெளிகின்ற, எலும்பில்லாத புழுவைப்போல் வாழ்க்கையை எப்படியோ நடத்திச் செல்கிறாய்.

நான் உன்னிடம் இரண்டு விதமாக எதையும் பேச முடியும். நீ எல்லா விஷயத்தையும் உன்னால் புரிந்து கொள்ள முடியும் விதத்தில் தெரிவிக்க முடியும். ஆனால் அந்த அளவிற்குத் தாழ்ந்த விதத்தில், தாழ்ந்த மொழியில் உன்னிடம் பேசுவதில் எனக்கு ஈடுபாடு இல்லை. இந்தப் பாணியில் திரைப்படங்களும், நாடகங்களும், ராம்லீலா விழாக்களும் உன்னுடன் ஏற்கெனவே பேசிவருகின்றன. அவையே உன்னைத் தேடிவந்து சொல்கின்றன. அவை சொல்பவற்றை எந்த மனிதனும் உன்னிடம் சொல்ல முடியும்.

நான் வேறு பாணியில் உன்னுடன் பேச முடியும். உன் தலை (தரம்) அளவிற்கு மீறித் தாழ்ந்துபோகவில்லை என்பதைச் சுட்டிக் காட்ட முடியும். கொஞ்சம் நேராக நில். தலை குனிவதைக்

கைவிடு. நான் கூறுபவை உன் தலைக்கு மேலே வீணாகப் போய்விடுவதாக நினைக்கிறாய். நீ நேராக நின்றால் உன் தலையை ஊடுருவி என் கருத்துகள் பரவத் தொடங்கும். பிறகு முன்பைவிட நேராக நிமிர்ந்து நில். உன் உயரத்திற்கு எல்லை கிடையாது. உனக்குள் கடவுள் மறைந்து உள்ளார். உன்னால் எவ்வளவு உயரமுடியுமோ அதுவே உன் தலைவிதி. மலையைக் கூட மறைக்கும் அளவு உன்னால் உயர முடியும் என்பதை நம்பு.

நீ சிறு விதையைப் பார்த்துச் சொல்கிறாய்: "அஞ்சாதே. நீ உண்மையில் சிறியவன் இல்லை. பிரம்மாண்டமான ஆலமரமாக ஒரு காலத்தில் நீ வளர்ந்து விடுவாய். உன் நிழலில் ஏராளமான மாட்டுவண்டிகள் கிடக்கும். ஆயிரக்கணக்கான பறவைகள் உன் கிளைகளில் வசிக்கும். களைத்துப்போன வழிப்போக்கர்கள் உன் நிழலில் தங்கி, ஓய்வாக உணர்ந்து, உனக்கு நன்றி கூறுவர்."

விதை மறுக்கும். "கடுகளவு இருக்கும் நானா அப்படி வளர்வேன். யாரிடம் கதைவிடுகிறாய்?" என்று கேட்கும்.

நீ சொல்வாய்: "நீ தற்சமயம் விதை வடிவில் உள்ளாய். உன்னுடைய வளர்ச்சியின் சாத்தியக்கூறுகள் உனக்கே தெரியாது. நீ ஆலமரமாக வளர்வாய்."

இதேபோல்தான் நானும் உபதேசம் செய்கிறேன். உனக்குக் காதில் விழாத அளவு தொலைவில் நின்றும் நான் பேசவில்லை. உனக்குக் காதில் விழவேண்டும். ஆனால் முழுமையாகப் புரிந்து கொள்ள முடியாதபடி சிறிது தெளிவின்மையும் தேவைப்படுகிறது. அப்போதுதான் நீ சரியாகப் புரிந்துகொள்ளத் தலையை நிமிர்த்துவாய். விலங்குகளுக்கு இரை போடுகையில் நீயே கவனித்திருப்பாய். ரொட்டியைக் கீழே காட்டவும் வேண்டும். அந்த விலங்கு (நாய்) உயர எழும்பவும் செய்ய வேண்டும். ஊட்டி விடுவது சரியன்று. அது உணவாயினும் சரி, உபதேசமாயினும் சரி. நீயும் உன் பங்குக்கு முயல வேண்டும்.

உயரப் பார்க்கப் பழகு. இயேசுநாதர் சிலுவையில் தொங்குவதைக் கண்களை உயர்த்திப் பார். உன்னால் உயரப் பார்க்க முடியும். உன் கழுத்து சுளுக்கு நோயால் பாதிக்கப்

பட்டிருக்கவில்லை. உன் பழக்கம்தான் தலையைத் தொங்க வைத்துள்ளது. உயரத் தொங்கும் இயேசுநாதரைப் பார்த்தபடியே அவர் அளவிற்கு உன் சிந்தனையின் தரத்தை உயர்த்து.

உனக்கு எதுவரை புரிகிறதோ அதை மீண்டும் நினைவு படுத்திக் கொள்ளாதே. உனக்கு எதிலிருந்து புரியவில்லையோ அதைப் புரிந்துகொள்ள சவால்விடு. சிறிது-சிறிதாகப் புரியத் தொடங்கிவிடும்.

அஷ்டாவக்ரருக்கு உடலின் எட்டு உறுப்புகள் கோணல். அவருக்குப் புரிந்ததை உன்னால் புரிந்துகொள்ள முடியாதா? உனக்கு உடம்பு நன்றாகத்தானே உள்ளது. எட்டு உறுப்புகள் வளைந்தவரால் உயரப் பார்க்க முடிந்தது. நீயோ ஏற்கெனவே நேராகத்தான் நிற்கிறாய். உன்னால் ஆகாயத்தைப் பார்க்க முடியாதா?

ஜனகரோ மகாராஜா. அவருக்குத்தான் எத்தனை கடமைகள், பொறுப்புகள், சிக்கல்கள், கொண்டாட்டங்கள். ஆரவாரத்தின் நடுவே அவரால் உயர் சிந்தனை செய்ய முடிந்ததே. உன்மீது கடவுள் கருணை காட்டியுள்ளார். உனக்கோ இத்தனை கடமைகள் முதலியவை இல்லை. அவரது அரண்மனை வாழ்க்கையுடன் ஒப்பிடுகையில் உனக்குக் கிடைத்துள்ள வாழ்க்கை அமைதி யானது. இந்த சூழ்நிலையில் உன்னால் உயர் சிந்தனை செய்ய முடியாதா?

ஒரு மனிதனுக்கு நேர்வது எல்லாருக்கும் நேரக்கூடும். ஒரு மனிதனுக்கு எந்தளவு சிந்தனை சக்தி உள்ளதோ அதே அளவு எல்லாருக்குமே உண்டுதான். எல்லாருடைய சுபாவமும் சமமானது. எல்லோருடைய சாத்தியக்கூறுகளும் ஒன்றே.

எனவே நீ புரிந்து கொள்வதற்குச் சற்று கடினமான விஷயம் நான் கூறினால் கோபப்படாதே. உன்னால் துளிக்கூட புரிந்து கொள்ள முடியாத அளவிற்கு மிகக் கடினமாக எதையும் கூறாமல் இருப்பதில் கவனம் வைக்கிறேன். ஒலி கேட்கும். ஆனால் சற்றுத் தொலைவிலிருந்து. அப்போதுதான் நீ அதை நோக்கி இழுக்கப் படுவாய். உன்னை இழுக்கும் கயிறு மெலிதாகத் தெரிந்தாலும், நீ

அதைப் பற்றிக்கொண்டால், நீ இழுக்கப்படுவது உறுதி. இவ்வாறு உயர்ந்த சிந்தனையை நோக்கி — ஆகாயத்தை நோக்கி-நீ இழுக்கப்படாத வரையிலும், நீ அரண்மனையில் வசித்தாலும், சிறையிலுள்ள கைதி என்றே உன்னை நான் மதிப்பிடுவேன்.

**இன்று வசிப்பது மாளிகையாயினும்**
**குழந்தைப் பருவ நாட்களைக் கழித்த**
**இயற்கையான மண்குடிசையை**
**என்றும் நான் மறக்கவில்லை.**

**பட்டாடை-நகைகளில் ஜொலித்தாலும்**
**இன்பங்கள்-வசதிகளில் திளைத்தாலும்**
**வனவாச நிலையிலுள்ள எனது மனம்**
**குடிசையின் எளிமையை மறக்கவில்லை.**

**ஆசைகள் என்னும் ஓயா அலைகள்**
**மனப் பாறையைத் தழுவி ஈரமாக்கி,**
**தண்ணீரின் வாழ்க்கைக் கதையை**
**நுரை மூலம் கூறுகின்றன விட்டுவிட்டு,**

**தண்ணீர் மாறிப் பெருமூச்சாய்**
**மேகங்கள் வழியே பரவுகின்றது;**
**எத்துணை மழை பொழிந்தாலும்**
**தணியவில்லை என் ஆசைத் தாகம்.**

உனது உண்மையான வீடு எது என்பது உன் நினைவிற்கு வந்தால் போதும். அதுதான் உனது சுபாவத்திற்கு ஏற்ற வீடுமாகும். அந்த சொந்த வீடு இப்போது கனவுபோல் தோன்றலாம். ஆனாலும் அதை மீண்டும் அடைய முயலு. இங்குதான் உனக்குப் போலித்தன்மையற்ற ஆனந்தம் கிடைக்கும். நீ வளர்ந்து குடியேறிய வீடு அயல்நாட்டில் வசிப்பது போன்றது. அல்லது நீ இப்போது ஒரு சத்திரத்தில் வசிப்பதாகவும் சொல்லலாம். ‘சத்திரத்தை விட்டு வெளியேறு’ என்றுகூட நான் சொல்லவில்லை. நீ தற்போது உள்ள இடம் ஒரு சத்திரம் என்பதைக் கவனித்தால் போதும். பிறகு தானாகவே உன் சிந்தனையில் மாற்றம் ஏற்படும்.

இதனால் நீ உன் வாழ்க்கையை மாற்றிக் கொள்ள முயலும்போது பல இடையூறுகள் தோன்றும். வாழும் முறையை

மாற்றி அமைத்து, வாழ்க்கையின் திசையையும் மாற்றுவது எளிதான காரியமில்லை. இது மலர்ப்பாதையில் இருந்து முட்பாதைக்கு மாறுவது போலாகும்.

**நா**ன் ஓர் ஊருக்குச் சென்றிருந்தேன். என் சொற்பொழிவை மிகவும் ரசித்துக் கேட்கும் ஒரு நண்பர் வீட்டில் தங்கினேன். ஆனால் அவர் மனைவி என் நிகழ்ச்சிகளுக்கு வராதது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் அந்த வீட்டிற்கு வந்தபோது அவள் எனக்கு மாலை அணிவித்து, ஆரத்தி எடுத்தாள். பிறகு கண்ணில் படாமல் மறைந்து போனாள். நான் அங்கு மூன்று நாள் தங்கினேன். என் சொற்பொழிவைக் கேட்கவோ, தனியாக உபதேசம் பெறவோ அவள் வரவேயில்லை. பெண்கள் உள்பட எத்தனையோ பேர் என்னைச் சந்திக்க வந்தார்கள். அவளை மட்டும் காணோம்.

நான் கிளம்பும் சமயம் அவள் ஒரு பூமாலை எடுத்து வந்தாள். இது கண்டு நான் அவளிடம், "நான் வந்த சமயம் உன்னைப் பார்க்க முடிந்தது. இப்போது திரும்பிப் போகும் சமயம் மீண்டும் உன்னைப் பார்க்கிறேன். நடுவில் நீ என் கண்ணில் படவேயில்லையே," என்றேன்.

அவள் விளக்கினாள்: "உங்களிடம் நான் என்ன சொல்வது? எதவும் சொன்னால் அவமரியாதையாகி விடுமோ என்று பயப்படுகிறேன். உங்கள் பேச்சைக் கேட்டால் பிறகு அதன்படி நடக்காமல் இருக்க முடியாது. என் குழந்தைகள் சிறியவர்கள். வளர்த்துப் பெரியவர்களாக்க வேண்டும். உங்கள் பேச்சைக் கேட்கப் போக வேண்டாம் என்று என் கணவரையும் தடுக்க முயன்று வருகிறேன். உங்கள் உபதேசத்தில் குறை எதுவும் கிடையாது. உங்கள் வாதங்கள் மிகச் சரியாக உள்ளன. அதுதான் பயத்தை ஏற்படுத்துகிறது. உங்கள் பேச்சில் ஆளை இழுக்கும் கவர்ச்சி இருக்கிறது; ஆசை மூட்டும் அழைப்பு இருக்கிறது. கணவர் குடும்பத்தைக் கைவிட்டு உங்கள் பக்கம் சாய்ந்து விடுவாரோ என்று பயப்படுகிறேன். ஆகவேதான் கணவரை உங்கள் நிகழ்ச்சிக்குப் போக வேண்டாமெனத் தடுக்கிறேன்."

"இந்தாம்மா, உன் கணவரைப் பற்றி கவலைப்பட வேண்டாம். அவர் பல ஆண்டுகளாக என் உபன்யாசம் கேட்டு

வருகிறார். பலன் என்னவோ பூஜ்யம்தான். பழகிப் போய் விட்டதால் என் பேச்சைக் கேட்க அவரால் வராமலிருக்க முடியவில்லை. அவரை ஒரு பானையாகக் கற்பனை செய்தால், என் பேச்சு மழையின் ஒரு துளிகூட அதில் இறங்கவில்லை. இதற்கொரு காரணமும் உண்டு. அவருக்கு ஆன்மிகத்தில் பற்று இல்லை. அவர் இலக்கிய ரசிகர் அல்லவா? என் பேச்சிலுள்ள இலக்கிய நயத்தை அனுபவிக்கவே அவர் வருகிறார்," என்று அவளைத் தேற்றினேன்.

இது எப்படி உள்ளது என்றால், ஓரிடத்தில் ஸ்வீட் ஸ்டால் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்பக்கமாக நகராட்சி சுகாதார ஆய்வாளர் வந்தால் அவர் இனிப்புகளைப் பார்த்து மயங்கமாட்டார். அவர் சுற்றுப்புறம் சுத்தமாக உள்ளதா; ஈ-எறும்பு-பூச்சிகள் அங்கே சூழ்ந்துள்ளனவா; இனிப்புகள் மூடிவைக்கப் பட்டுள்ளனவா; அவை விற்பனைக்குத் தகுதியானவையா என்றெல்லாம் மட்டும் ஆய்வு செய்துவிட்டுப் போய்விடுவார்.

தாவர இயல் அறிஞர் தோட்டத்தினுள் நுழைந்தால் எத்தனை அழகாகப் பல வண்ணங்களில் பூ மலர்ந்துள்ளது; மொட்டுகள் எந்த அளவுக்கு வெடிக்கும் நிலையில் உள்ளன; எத்தனை விதமான நறுமணம் காற்றில் பரவுகிறது என்றெல்லாம் ரசித்து மகிழும் நிலையில் இருக்க மாட்டார். மாறாக, இது எந்த வகைச் செடி; லத்தீன் மொழியில் இதன் பெயரென்ன; என்ன விசேஷ குணங்கள் கொண்டது என்று வகைப்படுத்துவதிலேயே ஈடுபடுவார்.

ஒவ்வொரு மனிதரும் ஒவ்வொரு விதம். ஒவ்வொரு வருக்கும் வெவ்வேறு விஷயங்களில் பிடிப்பு.

சக்கிலியர் தலை குனிந்தபடியே உட்கார்ந்துள்ளார். பாதையில் செல்லும் மனிதர்களை அவர் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. அவர்களின் காலிலுள்ள செருப்புகளை மட்டுமே கவனிக்கிறார். செருப்பை அணிந்துள்ளவர் பணக்காரரா-நடுத்தரமா-வறியவரா; கம்பீரமானவரா-ஷோக்குப் பேர்வழியா; செலவாளியா-சிக்கனக்காரரா; காலில் ஏதேனும் நோய் இருக்குமா என்பதையெல்லாம் ஊகித்துவிடுகிறார். தையற்காரரும் உன்

உடையைப் பார்க்கிறாரே தவிர, உன் உடலைப் பார்ப்பதில்லை. உடையை வைத்தே உன்னை எடைபோடுகிறார். துணியின் தரம்-தையலின் தரம்-பாணி-அணியும் விதம் கொண்டே ஒருவரை மதிப்பீடு செய்து விடுகிறார்.

இப்படி ஒவ்வொருவரும் பார்க்கும் விதமும் வெவ் வேறானது.

நான் நண்பரின் மனைவியிடம் மேலும் பேச்சைத் தொடர்ந்தேன். "உன் கணவர் என் பேச்சைக் கேட்க வருகிறார். அவ்வாறு வருவதற்கு ஆன்மிக ஆர்வமோ, தூண்டுதலோ அவருக்கில்லை. தனது வாழ்வில் ஆன்மிகப் புரட்சி ஏற்பட வேண்டும் என்பதற்காக அவர் வரவில்லை. நான் சொல்லும் விஷயத்தில் அவருக்கு ஈடுபாடு இல்லையாயினும் நான் சொல்லும் விதம் அவருக்குப் பிடித்திருக்கிறது. 'உங்கள் மொழிநடை சிறப்பாக உள்ளது. அதை அனுபவித்து மகிழவே நான் மீண்டும்-மீண்டும் வருகிறேன்' என்று அவர் என்னைப் பாராட்டுகிறார். பேச்சுநடை சிறப்பாக இருந்து என்ன லாபம்? அதனை ரசித்து நீ என்ன செய்ய முடியும்? சிறிது நேரம் மனத்தில் உல்லாசம் இருக்கும். பிறகு பேச்சு முடிந்தபின் மனம் முன்போலவே காலியாக நீடிக்கும். சத்யத்தை அறிந்துகொள்வதில் உன் புருஷனுக்கு நாட்டமில்லை. நான் பயன்படுத்தும் சொற்கள்-கதைகள்-கவிதைகள் ஆகியவற்றில்தான் அவரது கவனம் செல்கிறது. ஆகவே அவர் சாமியாராகிவிடமாட்டார். நீ பயப்பட வேண்டியதில்லை," என்று கூறி முடித்தேன்.

ஆம், அவர் என்றும் சாமியாராகவில்லை. ஆனால் மறுமுறை அவர் வீட்டிற்குச் சென்றபோது அவர் மனைவி சந்நியாசியாகிவிட்டாள்! கணவர் திகைத்துப் போனார். "நீ ஒருமுறைகூட சுவாமிஜியின் உரை நிகழ்ச்சிக்கு வந்ததில்லையே. உனக்குத் துறவறம் பற்றி என்ன தெரியும்?" என்று கேட்டார்.

அவள் விளக்கினாள். "நான் யாருக்கும் தெரியாமல் ஸ்வாமிஜியின் நூல்கள் உள்பட நிறைய ஆன்மிக நூல்கள் படித்திருக்கிறேன். அவற்றில் கூறப்பட்டுள்ளவை உண்மை யானவை என்பதையும் உணர்ந்தேன். சென்ற முறை சுவாமிஜி

வந்தபோது என்னை அழைத்து நான் ஏன் அவருடைய ஆன்மிக நிகழ்ச்சிகளுக்கு வருவதில்லை என்று கேட்டார். அது 'நீ சந்நியாசினியாகத் தயங்குகிறாயா?' என்று கேட்பது போலிருந்தது. இதுதான் நான் துறவு பூண்டதன் காரணம்,'' என்று சொல்லி முடித்தாள்.

நீ பல விஷயங்களைக் கேட்டுக் கொள்ள விரும்புவதில்லை. அதற்கு வசதியாக உன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டுள்ளாய். நான் சொல்பவை உன்னைத் தொடாமல் தலைக்கு மேலாகப் போய்விடுகின்றன. நீ என் கருத்துகளைக் கேட்க விரும்பினால் தலையை உயர்த்து. அவை உன் தலையை (அறிவை) ஸ்பரிசித்து, உன் சிந்தனையில் மாற்றம் விளைவிக்கட்டும். பிறகுதான் உனக்குள் ஆன்மிகப் புரட்சி உதிக்கும். அதன் உஷ்ணம் பரவும்.

**ஆம், உன்னை நான் அழைத்தேன்தான்;**
**ஆனால் உள்ளத்தில் பிரவேசித்துப் புரட்சி நெருப்பை**
**மூட்டிடுமாறு சொன்னேனா?**
**என் செயல்களிலுள்ள கபடத்தை**
**வெளிப்படுத்து என்று சொன்னேனா?**
**போதும் கிடைத்த பதிலென்று**
**திருப்தி நான் கண்டபோது**
**மேலும் புதிதாய் நூறு கேள்விகள்**
**கேட்குமாறு சொன்னேனா?**
**நீ உள்ளே வந்து உள்ளத்து வீட்டினை**
**உண்டு இல்லையென ஆக்கிவிட்டாய்.**
**இதயத்தில் ஆரவாரம் எழுப்பினாய் பெரிதாய்.**

ஒளிக்கு இரண்டு விதமான வேலைகளுண்டு-எரியச் செய்தல், வெளிச்சம் கொடுத்தல். ஒளி உனக்குள் பிரவேசிக்கும் போது நீ முதலில் வெம்மையை உணர்வாய். நீ எரிவதாக நினைப்பாய். அதனுடன் பழக்கமேற்பட்ட பிறகு வெளிச்சம் பரவத் தொடங்கும். தணல்போல் வரும் கிரணம் பிறகு சுடராகிறது. மின்விளக்கின் தத்துவமும் இதுவே.

உயர் சிந்தனை என்னும் வம்பெல்லாம் வேண்டாம் என்று நீ தலைதாழ்த்தி நிற்கிறாய். இப்போது நீ இருக்கும் இடமே

சௌகரியமானது என நினைக்கிறாய். தைரியமாக அதை உதறித் தள்ளிவிட்டுப் புதிய சிந்தனையை ஏற்கும்போது உனக்குள்ளே புரட்சி நிகழும்.

உயர்ந்த ஆன்மிகச் சிந்தனையைத் தற்பொழுது நீ அடைய முடியாவிடிலும் தொடரவாவது முடியும். பரணில் உள்ள ஒன்றை எடுக்க முடியாவிடிலும் சில சமயம் அதைத் தொட முடிகிறது. ஏன் உயர்நிலையை அடைய முடியவில்லை எனில் நீ போதிய முயற்சி செய்திருக்கமாட்டாய்.

மனிதனால் அடைய முடியாத சத்தியம் எதுவும் இவ்வுலகில் இதுவரை கூறப்படவில்லை. அப்படி மனிதனின் பிடிக்கு அப்பாற்பட்ட சத்தியமும் இருக்க முடியாது.

**ஒருவன் பாவம் செய்வதன் காரணம்**
**எல்லார் மனத்திலும் பாவம் இருப்பதே!**
**பாவம் செய்து திரும்பும் ஒருவனின்**
**பாவத்தில் நானும் பங்காளிதான்.**

**கொன்றவன் ஒருவன் உள்ளான் எனில்,**
**நாம் எல்லாரும் கொலையாளிகளே,**
**கொல்லப்பட்டான் ஒருவன் எனில்,**
**நாம் அனைவருமே பலியானவர்களே.**

**மாபலியைவிட நான் பெரியவனில்லை,**
**வாமனனைவிடச் சிறியவனுமில்லை.**
**எல்லா வகை மனிதர்களும் சேர்ந்து**
**இருப்பவன் ஒரே மனிதனே.**

**எல்லோரையும் தழுவி நான் நிற்பதால்**
**தோல்வி கண்டவனின் தோல்வியில்**
**எனக்கும் பங்கு உண்டு தான்;**
**வென்று வருபவனின் வெற்றியொலியில்**
**எனது குரலும் சேர்ந்தே ஒலிக்கும்.**

'நீயும் புத்தர், ஆகவே அனைவரும் புத்தர்' என்று கேள்விப்படும்போது சந்தோஷமாக உள்ளது. ஆனால் இதன் பின்னணியில் வருத்தம் தரும் விஷயமும் ஒன்றுள்ளது.

ஏனெனில், மேலேயுள்ள அறிவிப்பின்படி, ஒருவர் பாவி என்றால் நீயும் மற்ற அனைவரும் பாவிகள் என்னும் அர்த்தமும் கிடைக்கும்.

மகாத்மா புத்தருக்கு ஞானம் பிறந்தபின் பிரம்மா அவரைச் சந்திக்க வந்தார். "உமக்கு ஞானம் கிடைத்துவிட்டது உண்மையா?" என்று பிரம்மா கேட்டார்.

"ஆம், எனக்கு மட்டுமில்லாமல் உலகம் முழுவதற்கும் ஞானம் கிடைத்துவிட்டது. மரங்களின் இலைகள், மலைகளின் பாறைகள், நதிகள், நீர்வீழ்ச்சிகள், மனிதர்கள், மிருகங்கள், பறவைகள் ஆகிய எல்லாவற்றிற்கும் முக்தி கிடைத்துவிட்டது. ஏனெனில் படைப்பில் உள்ள ஒவ்வொன்றுடனும் நான் சம்பந்தப்பட்டுள்ளேன்," என்று புத்தர் பதிலளித்தார்.

புத்தரின் பதில் பிரம்மாவுக்குப் புரியவில்லை. புத்தருக்கு ஞானம் கிடைத்த பிறகு இந்தச் சந்திப்பு நடந்தது. அவர்கள் மீண்டும் ஒருமுறை சந்தித்தார்கள். புத்தர் உலக வாழ்க்கை முடிந்து சுவர்க்கம் சென்றார். சுவர்க்க வாசல் திறந்தது: அவரை வரவேற்க பிரம்மாவே வந்திருந்தார். ஆனால் புத்தர் உள்ளே நுழைய மறுத்தார்.

"புத்த தேவரே! உள்ளே வாருங்கள். வானவர்கள் உங்களைப் பார்க்க ஆவலுடன் காத்திருக்கிறார்கள்," என்று அழைப்புவிடுத்தார் பிரம்மா.

"நான் மட்டும் ஒருவனாக உள்ளே எப்படி வருவது? வெளியே ஒருவன் மிஞ்சியிருக்கும்வரை நான் உள்ளே காலடி எடுத்துவைக்க இயலாது. நான் உலகிலுள்ள எல்லாவற்றுடனும் சம்பந்தப்பட்டிருக்கிறேன். ஆகவே மொத்த உலகமும் உள்ளே வரும்போது நானும் சேர்ந்து வருகிறேன்," என்று புத்தர் பதிலளித்தார்.

மேற்கண்ட இரண்டு சம்பவங்களும் தனித்தனிக் கதைகள் அல்ல. அவை ஒரே நாணயத்தின் தலை-பூ என்னும் இரண்டு பக்கங்கள் போன்றவை.

'உனக்குள் கடவுள் வீற்றிருக்கிறார்' என்று யாராவது உன்னிடம் சொன்னால் உனக்குப் பெருமையாக இருக்கிறது. இந்த அறிவிப்பை நீ ஏற்கவும் செய்கிறாய். ஆனால் முரணான விஷயம் சொன்னால் உன்னால் ஏற்க முடிவதில்லை. உனக்குள்ளே ஒரு மகாபாவி இருக்கிறான் என்று சொன்னால் நீ வெகுண்டெழுவாய்; கலக்கமடைவாய். நாம் எல்லாரும் ஒருவரே என்று சொன்னால், உனக்கு ஒரு சந்தேகம் எழும். 'நானும் ராமனும் ஒன்று. சரி, அய்யா. ஆனால் நானும் ராவணனும் கூடவா ஒன்று?' என்று கேட்பாய். ஆம், நீயே ராமன், நீயே ராவணன்!

மனித வாழ்க்கையை ஒரு படிக்கட்டாகக் கருதினால் படியில் ஏறி மேலேயும் போகலாம். படியின் மூலம் கீழேயும் இறங்கலாம். மேலே போக வாய்ப்புள்ள அளவுக்குக் கீழே விழவும் வாய்ப்புண்டு. படி நடுநிலை வகிக்கிறது. அது எப்பக்கமும் சாயவில்லை. அது 'மேலே போகாதே' என்றோ, 'கீழே இறங்காதே' என்றோ உனக்குத் தெரிவிப்பதில்லை. கீழே சரிய விருப்பமில்லாமல் போவது நியாயம்தான். ஆனால் மேலே போகவும் நீ பயப்படுகிறாய். இங்கேயே, இப்போதுள்ள நிலைமையிலேயே நீடிக்க விரும்புகிறேன் என்கிறாய். இங்கேதான் மனைவி-குழந்தைகள்-வீடு-நிலம்-வங்கியில் பணம் ஆகியவை உள்ளன என்பதைச் சுட்டிக்காட்டுகிறாய்.

கீழே அச்சமூட்டும் அடர்ந்த இருட்டு. பார்த்தால் உடல் நடுங்குகிறது. மேலே பேரொளி. கண்ணைக் கூசச் செய்கிறது. ஆகவே நீ இருக்கும் நிலையையே கெட்டியாகப் பிடித்து நிற்க விரும்புகிறாய்.

உன் மனம் ஓரளவு திருப்தி பெறட்டும் என்றும், நீ ஆன்மிகம் என்றால் ஓடிப்போய் விடாதபடியும் பக்குவமாக நான் உபதேசிக்கிறேன். ஆனால் உன்னை முழுமையாக திருப்தி செய்தால் போதும் என்று நான் நிறுத்திக் கொண்டால் நான் சத்குரு ஆகமாட்டேன். அது வெறும் பொழுதுபோக்காகிவிடும். அப்படிப்பட்ட கேளிக்கைகள்தாம் உலகில் நடைபெற்று வருகின்றன. கதாகாலட்சேபம் கேட்கப் போகிறாய். ரசிக்கிறாய். திரும்புகையில் பழைய ஆளாகவே உள்ளாய். உன்னிடம் எந்த நல்ல மாறுதலும் தென்படவில்லை. ஏனெனில் நீ கதைச்

சுவைக்காகப் போனாயே தவிர, எதையும் கற்றுக்கொள்ளப் போகவில்லை.

ஒரு பெண்மணி. மீன் விற்பவள். ஒருநாள் மீன் விற்று முடித்து ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். கடுமையான வெயில். களைப்பால் கீழே விழுந்து மயக்கமாகி விட்டாள். கூட்டம் கூடிவிட்டது. அவள் விழுந்த இடம் அருகே அத்தர் வியாபாரிகளின் கடைகள் இருந்தன. ஒரு வியாபாரி இரக்கப்பட்டு ஒரு சென்ட் குப்பியை எடுத்து வந்தார். மிக விலை உயர்ந்த சென்ட். செல்வந்தர்களால்தான் வாங்க முடியும். ஓர் உயிரைக் காப்பாற்றும் அக்கறையுடன் வியாபாரி சென்ட்டைப் பெண்ணின் மூக்கருகே கொண்டுபோய் முகரவைத்தார். அவ்வளவுதான், அவள் துடிதுடித்தாள், கை-கால்களை உதறினாள். அவளது நிலைமை மேலும் மோசமானது.

கூட்டத்தில் ஒரு மீனவர் இருந்தார். அவருக்கு அவளைத் தெரியும். அவர் வியாபாரியை விலக்கி, "ஐயா, நீங்கள் அவளைக் கொன்றுவிடுவீர்கள் போலிருக்கிறது. தள்ளிப்போங்கள். இவளுக்கு எந்த வாசனை பழக்கமானது, பொருத்தமானது என்று எனக்குத் தெரியும்," என்றார்.

மீனவரும் விற்பனை முடிந்து திரும்புகின்றவர். தனது அழுக்குக் கூடையில் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்து அவள் தலையை அதனால் மூடினார். எங்கும் 'குப்' என்று மீன்வாடை. உடனே அப்பெண்ணிற்கு மயக்கம் தெளிந்தது. அவள் மீனவரைப் பார்த்து, "நன்றி ஐயா, என்னைக் காப்பாற்றி விட்டீர்கள். சற்று முன்னால் வேறு வாசனை வந்தது. மூச்சுத் திணறிப் போகும் அளவிற்குக் கெட்ட வாசனையாக இருந்தது."

பழக்கம் இல்லாவிடில் நறுமணமும் கெட்ட வாசனையாகி விடுகிறது. மீன் கூடை நாற்றம் மீன்காரிக்கு நறுமணமாகத் தோன்றுகிறது.

ஆகவே உனக்குக் கடவுளின் ஆன்மிக மணத்தையும் முழுக்க-முழுக்க நான் காட்டமாட்டேன். மீன் கூடை போன்ற உலகத்தையும் உன்மீது கவிழ்க்கமாட்டேன். உன்னைச் சிறிது

சிறிதாக மீன் நாற்றத்திலிருந்து கடவுளின் வாசனைக்கு இட்டுச்செல்வேன்.

உனக்கு எதெல்லாம் பழக்கம் என்று எனக்கும் தெரியும் தான். ஏனெனில் அவையெல்லாம் ஒருகாலத்தில் எனக்கும் பழக்கமாக இருந்தன. நீ எனக்கு முழுமையாக அறிமுகமானவன். நான் ஒருசமயம் எங்கு இருந்தேனோ அங்குதான் நீ இப்பொழுது உள்ளாய். உன்னிடம் உள்ள ஆசைகள், ரசனைகள் என்னிடமும் முன்பு இருந்தன. நான் இப்போது எங்கே உள்ளேனோ அங்கு நீயும் வந்து சேரவேண்டுமென விரும்புகிறேன். நீ எப்படி இருக்கிறாய் என்பதற்கும், நீ எப்படி இருக்க வேண்டும் என்பதற்கும் நடுவில் இடைவெளி உள்ளது. அதைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடக்க வேண்டும்.

### மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒவ்வொரு மனிதனும் தனியான அபூர்வப் படைப்பு என்று நீங்கள் அடிக்கடிச் சொல்கிறீர்கள். ஒவ்வொருவனின் வாழ்க்கைப் பயணமும் தலைவிதியும் மற்றவர்களிடமிருந்து மாறுபடுவதாகவும் சொல்கிறீர்கள். ஆரம்பத்தில், நான் குடும்பஸ்தனாக, சுகங்கள் நிறைந்த வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற கனவுகள் கண்டேன். பிறகு எழுத்தாளர், அரசியல்வாதி என்றெல்லாம் வளர்ச்சி பெற விரும்பினேன். எந்தத் துறையிலும் எனக்கு வெற்றி குறைவாகவும் தோல்வியே அதிகமாகவும் கிடைத்தது. இப்போது என் வாழ்வின் மாலைப் பருவம். கையில் சாம்பல்தான் மிஞ்சியுள்ளது. ஒரு நல்ல திருப்பம் என்னவெனில், எங்கெங்கோ அலைந்து—அலைந்து தாமதமானாலும் கடைசியில் உங்களிடம் வந்துசேர்ந்து விட்டேன். படபடப்புக் குறைந்து சற்று அமைதியாக உணர்கிறேன். என்னைப் பற்றிய மதிப்பீடு என்ன? நான் சேரவேண்டிய இடம் எது?**

உன் கனவுகள் எதுவும் பலிக்கவில்லை என்பது கடவுளின் அருள்தான்! அவை பலித்திருந்தால் நீ கடவுளை என்றுமே நினைத்திருக்க மாட்டாய். உலக வாழ்வில் உண்மையான வெற்றி கிடைப்பதில்லை. வெற்றி கிடைத்தது போன்ற பிரமைதான் உண்டாகிறது. தொலைவில் வைரம் போல் மினுமினுப்பதை அருகில் சென்று பார்த்தால் கூழாங்கல்லெனத் தெரிகிறது. வாழ்க்கையில் தோல்விகள் தொடரும்போது, மனத்தில் பற்றற்ற நிலை உருவாகி, கடவுள் சிந்தனை தோன்றும். தோல்வியின் வேதனை தூண்டுகோலாக அமைந்து மனிதனை சத்தியப் பாதையில் இட்டுச்செல்லும்.

கனவுகள் பலித்தால் மனிதன் உலக வாழ்க்கையில் அழுந்திப் போகிறான். பிறகு அவன் சத்தியத்தை ஏன் தேடிப்போவான்? கனவுகள் உண்மையாவதில்லை என்பதுடன் அப்படியே நீடிப்பதும் இல்லை. அவை சட்டென்று சிதறியும் போகின்றன.*

நீ குடும்ப வாழ்க்கையில் வெற்றி பெற்றவனாக விளங்க விரும்பினாய். நல்லவேளையாக அப்படி நிகழவில்லை. குடும்ப வாழ்வில் வெற்றி கிடைத்தால், வீடு வலிமை பெற்று, கோயில் பக்கம் நீ திரும்பியிருக்க மாட்டாய். குடும்ப வாழ்வில் ஏற்பட்ட அதிருப்தியால்தானே புத்தர் வீட்டைத் துறந்தார். மகாவீரரும் இதனால்தானே வீட்டைவிட்டு வெளியேறினார். குடும்ப வாழ்வில் வெற்றி இணையர் என்று எந்த ஜோடியையாவது பார்த்திருக் கிறாயா? இது வெறும் எதிர்பார்ப்புதான். ஆண்-பெண் திருமணம் நடைபெறும்போது புரோகிதர் 'நீங்கள் குடும்ப வாழ்வில் வெற்றி பெறுவீராக!' என்று மந்திரம் சொல்கிறார். அப்படி வெற்றி பெற்றவர்கள் உண்டா? ஆசி கூறிய புரோகிதரே குடும்ப வாழ்க்கையில் வெற்றி கண்டிருக்கமாட்டார். பெரியவர்கள் நம்மை வாழ்த்தும்போது நாம் அவர்களைப் பார்த்து, "நீங்கள் குடும்ப வாழ்வில் வெற்றி பெற்றவரா என்பதை முதலில் சொல்லுங்கள்" என்றால் எப்படி இருக்கும். அலெக்சாந்தரும் வெறும்

* மனிதன் எட்டு மணி நேரத்தில் சராசரியாக ஏழு கனவுகள் காண்கிறான். ஒவ்வொன்றும் சில வினாடிகளே நீடிக்கின்றன. சில கனவுகள் 2-3 வினாடியிலும் முடிந்துவிடும்.

கையுடன்தான் திரும்பினார். நாடுகளை வென்றும் வாழ்வில் தோல்வி. அவர் 33 வயதிலேயே இறந்துவிட்டார்.

புகழ் கிடைக்காமல் போனதும் நல்லதே. நீ எழுத்தாளர் அல்லது செய்தியாளராகப் புகழ் பெற்றிருந்தால் உனக்குத் தலைக்கனம் ஏறியிருக்கும். அகங்காரம் அதிகரித்தால் கடவுளை நோக்கிப் பயணிப்பது கடினமாகிவிடும். பாவி கடவுளை அடைய முடியும். திமிர் பிடித்தவனால் அடைய முடியாது. பாவி தான் செய்த பாவச் செயலை நினைவில் கொண்டு சற்றுப் பணிவாக இருப்பான். ஆனால் நாலைந்து நூல்கள் எழுதியவன் அல்லது கவிஞன், ஓவியன், சில்பி என்று செய்தித்தாள்களில் பெயர் வரப்பெற்றவன் கர்வத்தால் நிறைந்து வழிகிறான்.

எழுத்தாளர்கள், செய்தியாளர்கள், கலைஞர்கள் போன்றோர் குறுகிய அறிவே பெற்றுள்ளவர்களாக இருப்பார்கள். தங்களுக்குத் தெரிந்த விஷயம் தவிர, ஆன்மிகப் புரட்சி போன்ற மகத்தான விஷயங்களை அறிந்திராதவர்களாகவே இருப்பார்கள்.

நீ தோற்றது நல்லதே. உன் தோல்வியில் கடவுளின் வெற்றி அடங்கியுள்ளது. நீ அழிவதால் அவர் தோன்ற வாய்ப்பு உண்டாகிறது. நீ அரசியல்வாதியாக ஆக முடியவில்லை என்பதற்கு காரணம் கடவுளுக்கு உன் மீது மிகுந்த கருணை இருப்பதுதான். எந்த அரசியல்வாதியும் சுவர்க்கத்திற்குப் போக முடிந்ததாக நான் கேள்விப்பட்டதில்லை. அரசியல் சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் பாதையுமன்று. அரசியலில் நடக்கும் அக்கிரமங்கள், ஏமாற்று வேலைகள், சதிகள், கபடங்கள் முதலியவை நரகத்துக்கே பொருத்தமானவை. நீயும் அரசியலில் சேர்ந்து, பாவச் செயல்கள் காரணமாக நரகம் செல்ல நேர்ந்தால் ஒரு பிரச்சினை. அங்கு உன் முன் சென்றுள்ள ஏராளமான அரசியல்வாதிகளால் அடைசலாக இருக்கும். அங்கும் அவர்கள் பலவிதமான மோசடிகளிலும் சதிகளிலும் ஈடுபட்டிருப்பார்கள். உன்னையும் அவர்களுடன் சேர்ந்துகொள்ளச் சொல்வார்கள். நரகத்தின் ஆட்சியைக் கைப்பற்றவும் முயல்வார்கள். அவர்களின் பதவி ஆசை நரகத்துக்கும் அவர்களுடன் வருகிறது.

ஒருமுறை சித்திரகுப்தனின் தப்புக் கணக்கால் ஓர் அரசியல்வாதி சுவர்க்க வாசலுக்கு வந்துவிட்டார். அல்லது அந்த அரசியல்வாதியே ஏதோ தந்திரம், உபாயம் செய்து அங்கு வந்துவிட்டதாகவும் கொள்ளலாம். அதேசமயம் இரண்டு சாதுக்களும் இறந்து சுவர்க்கத்தை வந்தடைந்தனர். சுவர்க்கக் காவலர்கள் அவர்களை ஓரமாக ஒதுங்கிக் காத்திருக்கச் சொல்லிவிட்டு, அரசியல்வாதியை வரவேற்கச் சென்றனர். சிவப்புக் கம்பளம் விரிக்கப்பட்டது. சாரங்கி, தபேலா முதலிய இசைக்கருவிகள் முழங்கின. தேவகன்னியர் நடனமாடினர். மலர்மாரி பொழியப்பட்டது.

சாதுக்கள் வருத்தப்பட்டனர். பாவியான இவன் மண்ணுலகில் ஆரவாரமாக வாழ்ந்ததுபோலவே இங்கும் கோலா கலமாக இப்படி வரவேற்கப்படுகிறானே என்று வேதனையடைந் தனர். சுவர்க்கத்தை லட்சியமாகக் கொண்டே தூய வாழ்க்கை நடத்திய நம்மை சுவர்க்க அலுவலர்கள் காத்திருக்கும்படி சொல்கிறார்களே என்று திகைத்தனர். உலகில்தான் தங்களுக்கு மரியாதை கிடைக்கவில்லையெனில் இங்கும் யாரும் மதிக்கவில்லையே என அவர்கள் யோசித்தனர். 'மண்ணுலகில் அரசியல்வாதிக்கு முதலிடமும் ஆன்மிகவாதிக்குக் கடைசி இடம் கிடைப்பதையும் புரிந்துகொண்டோம். சுவர்க்கத்தில் நமக்குத் தான் முதல் மரியாதை கிடைக்கும் என நினைத்தோம். இங்கும் அரசியல்வாதி நம்மை முந்துகிறானே' என சாதுக்கள் ஏங்கினர்.

அரசியல்வாதியை வரவேற்ற தேவர்களின் கூட்டம் அப்படியே முன்னேறிவிட்டது. அவர்கள் சாதுக்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. சாதுக்கள் வாயில்காப்பவரை அணுகி, "இது என்ன அய்யா, தலைகீழாக இருக்கிறதே. ஏதாவது தப்புக் கணக்கா? எங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்ட வரவேற்புக் கொண்டாட்டம் கவனக்குறைவால் அந்த ஆளுக்கு அளிக்கப் பட்டுவிட்டதா? எல்லாம் சரியாகத்தான் நடந்தது எனில் ஏனிப்படி என்ற ரகசியத்தை எங்களுக்குத் தெரிவி," என்று கேட்டுக் கொண்டனர்.

வாயில் காப்பவர் ஆறுதல் கூறினார். "சாதுக்களே, பதற்றப்படாதீர்கள். உங்களைப் போன்றவர்கள் எப்பொழுதும் சுவர்க்கத்திற்கு வந்தபடிதான் உள்ளனர். ஓர் அரசியல்வாதி இங்கு வருவதோ இதுதான் முதல் தடவை. எனவேதான் இத்தனை கொண்டாட்டம். எங்கோ, ஏதோ தவறு நடந்துவிட்டது. இதை இனி மாற்ற முடியாது. சாதுக்கள் இங்கு வருவது வாடிக்கை. இதில் விசேஷமில்லாததால் வரவேற்பில்லை.'

ஆரம்பத்தில் கேள்வி கேட்டவர் அரசியலில் சேராமல் தப்பிவிட்டது சுபமான நிகழ்ச்சி. உலக முயற்சிகளில் தோல்வியை ஒரு வரமெனலாம். தோற்றவனுக்கு தெய்வம் துணை. வென்றவன் திமிர் பிடித்து யாரிடமும் ஆலோசனை கேட்கமாட்டான். அதிர்ஷ்டவசமாக நீ தோற்றாய். அதனால்தான் என்னைத் தேடி வந்தாய்.

இப்போது இங்கே நீ வந்துவிட்டதால் 'நான்' என்னும் உணர்வை உதறிவிடு. 'நான்' என்பதைக் கைவிட்டதும் நீ போய்ச் சேரவேண்டிய இடம் தெளிவாகிவிடும். குடும்ப வாழ்க்கையில் நாட்டம், அரசியல் ஆர்வம், எழுத்து மூலம் புகழ் ஆசை ஆகியவை மிகச் சிறு அளவிலாவது உன் மனத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும். 'நான்' என்னும் உணர்வு நீங்கினால் அந்தக் கறைகளும் மறைந்துவிடும்.

'நான்' என்பது விலகியதும் உள்ளே பிரகாசம் தோன்றும். நீ போய்ச் சேரவேண்டிய இடம் எது என்னும் கேள்வி எழாது. அது தானாகவே உனக்குத் தெரிந்துவிடும். உன் கண்கள் திறந்துவிடும். நீ போகவேண்டிய இடம் வெளியில் இல்லை. 'போவது' என்னும் செயல் தேவைப்படாது.

ஆத்மா எங்கும் போவதில்லை. எங்கிருந்தும் வருவதில்லை. எங்கிருக்க வேண்டுமோ அங்கேயேதான் அது இருக்கிறது. உன்னிடமுள்ள புதையல் புதைக்கப்பட்டுள்ள இடத்தின் மேல்தான் நீ உட்கார்ந்திருக்கிறாய். உனது சுயமான இயல்பில் உனது சாம்ராஜ்ஜியம் அமைந்துள்ளது.

இங்கே வந்துவிட்டதால் உன் கடந்த காலத்தை மறந்துவிடு. பழைய நினைவுகளைத் துடைத்தழித்துவிடு. கடந்த காலத்தில்

நடைபெறாதவை குறித்து இனி ஒன்றும் செய்வதற்கில்லை. கால ஓட்டத்தில் நீ இங்கு வந்து சேர்ந்தாய். இனி இங்கேயே இரு. முன்னும் பின்னும் பார்க்காதே. கையிலுள்ளதே பொற்காலம். இதுவே உனது எல்லாமும். இதை உணர்ந்தால் நீ பேரமைதி பெறுவாய். அந்த அமைதியில் உனக்கு முழு சத்தியமும் விளங்கிவிடும்.

**சுவையோ இனிமையிலும் இனிமை**
**பருக முடிந்தது உள்ளங்கை அளவே!**
**இது பூரண வசந்த காலம்தான்**
**கிடைத்தது என்னவோ ஒற்றைப் பூவே!**
**கால அளவில் மாபெரும் யுகம் இது**
**அதில் வீணே கழிந்தது என் அற்ப வாழ்க்கை.**

இங்கே வந்துவிட்டாயல்லவா? உன் வாழ்க்கை இனி பூரண வசந்த காலமாக மலரட்டும் என நான் விரும்புகிறேன். நீ ஒன்றிரண்டு பூக்கள் கிடைத்தால் போதுமென்று சொல்லாதே. அற்ப ஆசைகள் கொண்டால் பின்னால் நீ வருந்துவாய். மலர்த் தோட்டம் முழுவதுமே உனதுதான்.

பழைய விருப்பங்களை, பழைய வாழ்க்கையை முற்றிலுமாக மறந்துவிடுவது என்பது உனக்கு சங்கடமாகத் தோன்றலாம்.

**ஒ**ரு நண்பர் என்னிடம் வந்து சந்நியாசம் பெற்றார்.* அவரது ஆர்வத்தில் ஏதோ குறைபாடு உள்ளதாகத் தோன்றியது. அவரது முகத்தில் சந்நியாசம் ஏற்றதன் பரவசமோ, திருப்தியோ தென்படவில்லை. என் கால்களைத் தொட்டு வணங்கினார். அது பழக்கத்தின் காரணமாகவேயன்றி பக்தியினால் அல்ல என்பதை நான் உணர்ந்தேன்.

சந்நியாசச் சடங்கு முடிந்ததும் அவர் சொன்னார், "சுவாமிஜி, நான் ஒரு பிரச்சினையில் சிக்கி உள்ளேன். அதனால்தான் உங்கள் திருவடிகளை வந்தடைந்தேன். உங்களால் முடியாதது எதுவுமில்லை என்று எனக்குத் தெரியும்."

---

* ஓஷோ சம்பிரதாயத்தில் சந்நியாசம் பெறுபவர் வழக்கமான உலகக் கடமைகளைக் கைவிட வேண்டியதில்லை. மனப்பக்குவமே முக்கியம்.

நான் அதட்டினேன்: “உண்மையைச் சொல்லு. என்னிடம் வந்து சந்நியாசம் பெற்றது சுயநலத்திற்காகத்தானா? எனக்கு லஞ்சம் கொடுப்பதுபோல் சந்நியாசம் ஏற்றுக்கொண்டாயா? சந்நியாசம் பெற்றுவிட்டதால் உனக்கு என்மீது ஏதோ உரிமை இருப்பதுபோல் தோன்றுகிறதா?”

“ஆம், சுவாமிஜி, நான் உங்களிடம் சந்நியாசம் பெற்று விட்டதால் என்னைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை என்றே கருதுகிறேன். என் கவலையை உங்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். நான் படான்கோட்டில் (பஞ்சாப்) வேலை பார்க்கிறேன். நான் ராஞ்சிக்கு (மத்தியபிரதேசம்) மாறுதல் பெற விரும்புகிறேன். உங்களுக்குள்ள செல்வாக்கிற்கு இந்த விஷயம் சாதாரணமான ஒன்றுதானே? உங்களிடம் சந்நியாசம் பெற்றுவிட்டேன். மேற்கொண்டு சீடனைக் காப்பாற்றுவது குருவின் கடமையாகிறது” என்று உண்மையை ஒப்புக்கொண்டார்.

இப்படிச் சிலர் சந்நியாசம் ஏற்பதிலும்கூட சுயநலத்தைக் கலக்கிறார்கள். உலக வாழ்க்கை சம்பந்தமான கோரிக்கைகளை முன்வைக்கிறார்கள். இந்த நபர்போல் இத்துணை வெளிப் படையாக சந்நியாசம் ஏற்கும் மற்றவர்கள் தங்கள் கோரிக் கையைச் சொல்வதில்லை. ஆனால் அவர்களின் அடிமனத்தை ஆராய்ந்தால் அங்கே ஏதாவது கோரிக்கை மறைந்திருக்கும்.

மாணவர்கள் இங்கு வருகின்றனர். தியானம் பழக விரும்புவதாகக் கூறுகின்றனர். காரணம் கேட்டால், தங்கள் ஞாபகசக்தியைக் கூர்மைப்படுத்திக் கொள்ள தியானம் உதவும் என்கின்றனர். ஞாபகசக்தி பெருகினால் என்ன பலன் கிடைக்கும் என்று கேட்கிறேன், இதனால் தேர்வில் முதல் வகுப்புப் பெறலாம், தங்கப் பதக்கம் வாங்கலாம் என்றெல்லாம் கூறுகின்றனர்.

சிலர் வேறு வகையினர். அவர்கள் நோயாளிகள். அவர்கள் மன அழுத்தம் அல்லது மனக் கோளாறுகள் காரணமாக நோயுற்றதாகக் கருதும் மருத்துவர்கள் அவர்களை தியானம் பழகச் சொல்கிறார்கள். இந்த மனநோயாளிகள் தியானம் சொல்லித் தருமாறு இங்கு வந்து கேட்கிறார்கள்.

பிரம்மாண்டமான ஒன்றிடம் அற்பமான வேண்டுகோள் வைக்கிறார்கள். இதனால் அவர்களுக்கு பிரம்மாண்டம் தேவையில்லை என்று பொருள்படுகிறது. ஆனால் அற்பமான கோரிக்கையும் பலிக்காது போய்விடுகிறது. 'நான்' என்பதுடன் சம்பந்தப்பட்ட எந்த வேண்டுகோளையும் ஆன்மிக உலகில் முன்வைக்காதே. இதனால் பின்னால் வருத்தப்படுவாய். ஆன்மிக உலகில் 'நான்' என்பதற்கு அப்பாற்பட்டதான கோரிக்கையே கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படும்.

**இன்னொரு முறை இன்று**
**அன்பே, உன்னை எழுப்புகின்றேன்.**
**மூடிய கதவைத் திறந்துவிடு,**
**சாம்பிராணி மணம் பரவட்டும்**

**வீட்டின் ஒவ்வொரு மூலையையும்**
**தங்க வெயில் குளிப்பாட்டட்டும்**
**இன்னொரு முறை இன்று**
**அன்பே, உன்னை எழுப்புகின்றேன்.**

**நான் எத்தகையவன் என்று**
**என்னை நான் அறிந்துள்ளேனோ,**
**எந்த விஷயமெலாம் தெரிந்தவனோ**
**எப்படியெல்லாம் வாழ்ந்தேனோ**
**எதையெல்லாம் ஏற்றேனோ**
**எதுவெல்லாம் என்னுடையதோ**
**எனது செல்வம், எனது சேமிப்பு**
**எனது ஒவ்வொரு துளியையும்**
**உனக்கே நான் அர்ப்பணிக்கிறேன்.**

ஆம், உன் எல்லாவற்றையும் தியாகம் செய். எல்லா வற்றையும் மறந்துவிடு. கடந்த காலம் தொலைந்து போகட்டும். அப்போது நிகழாதவை இனி என்றும் நிகழாதவைதான். பாதை காலியாகட்டும். அப்போதுதான் இனி நடைபெற வேண்டிய வற்றிற்கு இடவசதி கிடைக்கும். இப்போது உன்னைச் சுற்றிலுமுள்ள குப்பை கூளத்தை அகற்று.

இறைவனின் சந்நிதி வாயிலில் நில்-எதுவுமற்றவனாக, வெறுங்கையனாக. நீ என்பவனேகூட இல்லாமல் சூன்யமாகிப்

போய் சந்நிதியில் நில். அப்போது உன் கை நிரப்பப்படும்; பை நிரப்பப்படும்; நீயும் நிரப்பப்படுவாய் — இறைவன் அருளால்.

நிரம்பிவழிய வேண்டுமானால், முற்றிலும் காலியாகு. ஆக வேண்டுமானால், அழிந்துபோ. வரவேற்புப் பெற சூன்யமாகு.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே, இப்போதெல்லாம் தங்கள் நூல்களைப் படிக்கும்போது சலிப்பு ஏற்படுகிறது. தியானம் செய்யும் ஆர்வமும் உண்டாவதில்லை. நாடாவில் பதிவாகிய உங்கள் உரைகளைக் கேட்கவும் ஆசை எழுவதில்லை. நேரில் பேச்சைக் கேட்கும் போது நீங்கள் மேற்கொண்டு சொல்லப் போவதை என்னால் ஊகித்துவிட முடிகிறது. ஆகவே எனக்கு மனமாற்றம் விளைவ தில்லை. நீங்கள் தினமும் ஒரே விஷயத் தையே சொல்லிச் சொல்லி சலிப்படைய வில்லையா?**

**மு**தலில், சலிப்பு என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். சலிப்பு ஏற்படப் பல காரணங்கள் கூறலாம். உனக்குப் புரியாத விஷயம் ஒன்றை மீண்டும்-மீண்டும் கேட்க நேர்ந்தால் சலிப்பு ஏற்படுவது இயற்கைதான். இப்படி அடிக்கடி கேட்பதால் விஷயம் புரியவந்தாலும் சலிப்பு உண்டாகக்கூடும். ஏனெனில் தெரிந்த விஷயம், ஒரேமாதிரியான சொற்கள் என்று எரிச்சல் மூளக்கூடும். நான் பயன்படுத்தும் சொற்களின் எண்ணிக்கை எல்லைக்குட்பட்டது. சுமார் 400 சொற்களுக்குள்ளேயே என் மொழியறிவு அடங்கிவிடும். நான் மொழி அறிஞன் இல்லை. ஆகவே நான் அறிந்துள்ள குறைந்த எண்ணிக்கையிலான சொற்களையே நான் மீண்டும்-மீண்டும் பயன்படுத்த நேரிடுகிறது.

இந்த நிலையில், அடிமேல் அடிபட்டு, உனக்கு விஷயம் வசப்பட்டிருக்க வேண்டும். உனக்கு மனமாற்றம் ஏற்படவில்லை எனில் அதற்கு எனது 'கூறியது கூறல்' காரணமில்லை. நீதான் விஷயத்தைப் புரிந்துகொள்ளவில்லை என்று அர்த்தமாகிறது. புரிந்தால்தான் உனக்குள் புரட்சி ஏற்படுவது சாத்தியமாகும்.

நீ புரிந்துகொள்ளும் வரையிலும் நான் என் அறிவுரையை மீண்டும்-மீண்டும் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை. நீ முதல் பாடத்தைப் புரிந்துகொள்ளாத நிலையில் நான் அடுத்த பாடத்திற்குத் தாவிவிட்டால் குழப்பமே மிஞ்சும். பிறகு எதையுமே நீ புரிந்துகொள்ள முடியாது.

மகாபாரதத்தில் துரோணர் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் தர்மசாஸ்திரம் கற்பிக்கிறார். துரியோதனன் உள்பட எல்லோரும் பாடம் புரிந்தது என்றனர். தருமர் மட்டும் பாடத்தைப் புரிந்துகொள்ள அவகாசம் கேட்டார். பல நாட்கள் கழிந்தும் தருமர் எதுவும் சொல்லவில்லை. துரோணர் திகைத்தார். அவரது பார்வையில் தருமர்தான் அறிவாளி, அமைதியானவர், கனிவானவர், பணிவானவர். ஆனால் புரிந்துகொள்ளத் தாமதிப்பதால் துரோணர் மேற்கொண்டு கற்பிக்காமல் இருக்க முடியாதே. மற்றவர்கள் பத்து பாடம் முடித்துவிட்டாகள்.

தருமரைக் கூப்பிட்டு துரோணர், "உனக்கு என்ன பிரச்சினை? ஏன் முதல் பாடத்திலேயே தேங்கிவிட்டாய்?" என்று விசாரித்தார்.

"குருதேவ்! எப்போதும் உண்மையே பேசு என்பது முதல் பாடமான சுலோகத்தின் சாரமாகும் சுலோகத்தை மற்றவர்கள் மனப்பாடம் செய்து விட்டார்கள் என்பது உண்மையே. ஆனால் அந்த சுலோகத்தின் அர்த்தத்தைக் கடைப்பிடித்துப் பார்த்து விளங்கிக்கொள்ள முயன்றுவருகிறேன். அவ்வப்பொழுது பொய் பேசி விடுகிறேன். எப்போதும் உண்மையே பேசுவதை நடைமுறைப்படுத்த முடியாதபோது, இரண்டாம் பாடத்திற்கு எப்படிச் செல்வது என்று நான் தயங்குகிறேன்," என்று தருமர் தனது பிரச்சினையை வெளிப்படுத்தினார்.

துரோணர் விஷயத்தைப் புரிந்து கொண்டார். தருமரைத் தவிர மற்றவர்கள் பாடத்தின் சொற்களை மட்டும் மனப்பாடம் செய்து கிளிப்பிள்ளைபோல் திருப்பிக் கூறுவதுடன் நின்றுவிட்டனர். தருமரோ அர்த்தத்தையும் உள்ளிழுத்துத் தமது ஆளுமையின் அங்கமாக்க முயன்று கொண்டிருந்தார். கற்றதற்குத் தக்கபடி நிற்பதுதான் உண்மையில் கற்றுக்கொண்டதன் அடையாளம் என மற்றவர்கள் அறிந்திருக்கவில்லை.

தருமர் மேற்கொண்டு சொன்னார்: "குருதேவ், உண்மையே பேசு என்னும் இந்த முதல் பாடத்தையே நான் வாழ்க்கை முழுதும் கடைப்பிடிக்க முடிந்தாலும் போதும். அதுவே மாபெரும் சாதனையாகும். மற்ற பாடங்களைப் படிக்க முடியாமல் போனால் நஷ்டமில்லை. உண்மையே பேசு என்பதே போதும். என்னை இந்த முதல் பாடத்திலேயே தோய்ந்திருக்க விடுங்கள்."

ஒரே உபதேசத்தையே எத்தனையோ முறை கேட்டால், சிந்தித்தால் நீயும் தர்மபுத்திரர்போல் ஆகிவிட முடியும். அது வாழ்க்கையில் பிரதிபலித்தால்தான் அதை உண்மையில் நீ புரிந்துகொண்டதாக அர்த்தமாகும். அவ்வாறு முதல் உபதேசம் வாழ்க்கையின் அங்கமாக ஆகாதவரையிலும் நான் அடுத்தடுத்த பாடங்களுக்குச் சென்றுவிட்டால் எனக்கும் உனக்குமான தொடர்பு அறுந்துவிடும்.

இன்னும் ஆழமாக ஆராய்ந்தால், வாழ்க்கையில் இரண்டாவது பாடம் என்றெல்லாம் கிடையாது. வாழ்க்கை நூலில் இருப்பது மொத்தமே ஒரு பாடம்தான். அதை எந்த விதமாகவும் என்னைச் சொல்லும்படி செய்விக்கலாம். அஷ்டாவக்ரர், மகாவீரர், புத்தர், பதஞ்சலி, கபீர்தாசர், இயேசுநாதர் முதலியோரில் யாருடைய பாணியில் வேண்டுமோ அந்தப் பாணியில் உபதேசிக்க நான் தயாராக இருக்கிறேன். பாடம் ஒன்றேதான். உனக்குப் புரிவதற்காக இங்குமங்கும் நான் சற்று மாற்றிச் சொல்லக்கூடும். ஆகாயத்திலுள்ள சந்திரனை என் பத்து விரல்களில் எந்த விரலால் காட்டச் சொன்னாலும், பத்து விதமாகக் காட்டினாலும், இருக்கும் சந்திரன் ஒன்றே ஒன்றுதான்.

எதையும் கிரகிக்கும் (உள்ளிழுக்கும்) புத்தி உள்ளவர்கள், கிரகித்ததை முடிந்தவரையிலும் தங்கள் வாழ்க்கையில் செயல்படுத்துபவர்கள், நான் ஒரே விஷயத்தையே வெவ்வேறு விதமாக, வெவ்வேறு வடிவங்களில் சொல்கிறேன் என்பதை உணர்ந்து கொள்வார்கள். நான் பதிக்க வேண்டியது ஓர் ஆணியைத்தான். அதை வெவ்வேறு கோணங்களிலிருந்து தட்டித்தட்டி உள்ளிறக்குகிறேன்.

அறிவின் துணையால் மட்டுமே என் பேச்சைச் செவிமடுப்பவர்கள், அவ்வாறு கேட்டு விஷயம் புரிந்துவிட்டதாக நினைப்பவர்கள் சொற்களுடன் நின்று விடுகிறார்கள். அவர்களுக்கு அந்தச் சொற்கள் தெரியும். அவற்றின் பொருள் தெரியும். ஆகவே ஏற்கெனவே தெரிந்ததை மீண்டும் கேட்பது சலிப்பூட்டுகிறது.

சலிப்பிற்கு இன்னொரு காரணமும் கூறலாம். நீ முதல் முறையாக என் பேச்சைக் கேட்க வரும்போது, நான் சொல்லும் கருத்துகளில் உனக்கு ஆர்வம் குறைவாக இருக்கிறது. நான் அவற்றைச் சொல்லும் விதம் அல்லது என் பாணிதான் உன்னை அதிகம் கவர்கிறது. என் பேச்சு முடிந்து வெளியே செல்பவர்கள், 'பேஷ்! பிரமாதமாகப் பேசினார்' என்று பாராட்டுகிறார்கள். 'என்ன பேசினார்?' என்று விசாரித்தால் திருதிருவென்று விழிப்பார்கள். என் பாணி எனது தனித்தன்மையாகும். நான் வேறு விதமாகப் பேச முடியாது. அந்த ஒரே பாணியே தொடர்ந்து கேட்பவர்களைச் சலிப்படையச் செய்யும். இதுவும் இயற்கைதான். பாணிதான் முக்கியமெனில் பழகிப்போனதும் பழைய சோறாகிவிடும்.

வேறு சிலர் நான் சொற்பொழிவுகளின் ஊடே கூறும் குட்டிக் கதைகளைக் கேட்பதற்காகவே காத்திருக்கின்றனர். நான் முல்லா நஸ்ருத்தீனை வைத்துக் கதை கூறாவிடில், சிலர் எனக்கு 'நீங்கள் இரண்டு-மூன்று நாளாக முல்லா நஸ்ருத்தீனை மறந்துவிட்டீர்களே' என்று புகார்க் கடிதம் எழுதுகிறார்கள். நான் மகாவீரர், மோஸஸ், மனு முதலிய மாமனிதர் யாரைப் பற்றி பேசிக்கொண்டிருந்தாலும் சரி. சிலர் என் பேச்சில் முல்லா நஸ்ருத்தீனின் வருகையை எதிர்பார்த்தபடி உள்ளனர்.

இது எப்படி இருக்கிறது என்றால், நான் உனக்கு அறுசுவை உணவு அளிக்கும்போது நீ சட்னியை மட்டும் சாப்பிடுவது போலுள்ளது. சட்னிக்கும் ருசி உண்டென்பதை ஏற்கிறேன். ஆனால் சட்னியால் மட்டும் ஆரோக்கியம் கிடைத்துவிடாது. அதை சப்பாத்தியோடு சேர்த்துச் சாப்பிட வேண்டும். சப்பாத்தி உன் தொண்டைக்குள் இறங்குவதற்குத் துணை புரியத்தான் சட்னி தரப்படுகிறது. ஆகவே சட்னி ஒரு சாக்கு மட்டுமே. சப்பாத்தியே

முக்கியம். சட்னி இல்லாமலும் சப்பாத்தி சாப்பிட முடியும். ஆனால் சப்பாத்தி இல்லாமல் யாராவது வெறும் சட்னி மட்டும் சாப்பிடுவார்களா?

இந்நிலையில் உள்ளவனும் சீக்கிரம் சலித்துப்போவான். நான் சப்பாத்தி வழங்குவதற்குத்தான் அழுத்தம் தருவதை அவன் கவனிக்கிறான். அவன் வந்ததோ சட்னிக்காக. நானோ சப்பாத்தியைத் திணிக்கிறேன். நான் சட்னி தராமல் இல்லை. சப்பாத்தி தொண்டையில் இறங்குவதற்குத் தேவையான அளவு மட்டுமே சட்னி தருகிறேன்.

சத்தியத்தை உனக்குள் பிரவேசிக்க வைக்க குட்டிக் கதைகள் போன்றவற்றையும் கூறவேண்டியுள்ளது. தொட்டுக்க எதுவும் தேவையின்றி உன்னால் சப்பாத்தியை விழுங்க முடியு மானால், வேலை சுலபமாக முடிந்துவிடும். அதேபோல் வெளித் தூண்டுதல் தேவைப்படாமல் சத்தியத்தை உணர முடியுமானால் நல்லதாயிற்று. ஆனால் பலரால் வெறும் சப்பாத்தியை விழுங்க முடியாமல் போவதைப்போல், சத்தியத்தையும் அப்படியே ஏற்க முயலும்போது அது ருசிக்காமல் பலருக்குச் சலிப்புண்டாக்குகிறது.

ஒரு காலத்தில் நான் நாடெங்கும் சென்று சொற்பொழிவு செய்து வந்தேன். அப்போது நான் பேசிய முறை வேறு விதமானது. ஏனெனில் கூட்டத்தினர் நடுவில் பேசினேன். சில சமயம் ஆயிரக் கணக்கானவர் திரண்டனர். அவர்களுக்கு ஏற்ற முறையில் நான் பேச வேண்டியிருந்தது. ஓரிரு ஆண்டுகளுக்குப் பின் முன்பு போயிருந்த ஊருக்கு மீண்டும் போய்ப்பேசினால், மக்கள் முன்பைவிட நன்றாக என்னைப் புரிந்து கொண்டதை ஊகித்தேன்.

இரண்டாவது முறையாக நான் நாடு தழுவிய பயணம் மேற்கொண்டபோது என் பேச்சால் மக்களுக்குக் களிப்பூட்டுவதை நோக்கமாகக் கொள்ளவில்லை. என்னைப் பின்பற்றுபவர்கள் உள்ளனரா என்று கண்டுபிடிக்கவே பயணம் மேற்கொண்டேன். இப்போதெல்லாம் நான் யாரையும் தேடிச் செல்வதில்லை. உங்களைப் போலவே சிலர் தாமாகவே என்னை நாடி வந்துள்ளனர்.

ஆகவே முதல் பயணத்தில் திரண்ட கும்பல் இரண்டாம் பயணத்தில் காணப்படவில்லை. பலர் போய்விடத்தான் செய்வார்கள். முதல் தடவையிலேயே அவர்கள் எதிர்பார்த்த பொழுதுபோக்கு அம்சங்களைக் கூறியாகிவிட்டது. இப்போது நான் பேசுவதோ கம்பீரமான விஷயம். முதல் சுற்றில் கூட்டத்தை வசப்படுத்தும் வகையில் பேசினேன். இப்போது ஒரு வகுப்பறை அளவிற்கேற்ற எண்ணிக்கையில்தான் கேட்போர் மிஞ்சியுள்ளனர். அவர்கள் ஆன்மிகத் தேடலில் ஆர்வம் காட்டுபவர்களாக இருப்பார்கள். ஆகவே அவர்களின் தரத்திற்கேற்றபடி இப்போது சொற்பொழிவு செய்கிறேன்.

முதல் கட்டத்தில் என் பேச்சைக் கேட்க வந்தவர்களில் 99 சதவிகிதத்தினர் பிறகு வரவில்லை. அவர்கள் அப்படி நிரந்தரமாகச் சென்றுவிடுவார்கள் என்று எனக்குத் தெரியும்தான். உண்மையில் நான் அவர்களை முன்னிட்டுச் சொற்பொழிவு நிகழ்த்தவில்லை. மிஞ்சிய ஒரு சதவிகிதத்தினருக்காகத்தான் மற்ற 99 சதவிகிதத்தினரின் முன்னிலையில் நான் பேச நேர்ந்தது. அந்த ஒரு சதவிகிதத்தினரை எனக்குரியவர்களாக நான் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்.

இப்போது இந்த இடத்தில் கூட்டம் கிடையாது. ஆகவே யாரையும் வசப்படுத்தியும் இப்போது நான் பேசவில்லை. என் பேச்சு மிஞ்சியுள்ள உங்களுக்கு சுவாரசியமாக உள்ளதா, நீங்கள் ஏற்கும்படியாக உள்ளதா என்பதிலும் நான் கவலைகொள்வதில்லை. உங்களைக் கவனத்தில் கொண்டு இப்போது நான் பேசவில்லை. நான் பேசும் விஷயத்தில்தான் முழுக்கவனத்தையும் செலுத்துகிறேன்.

மிஞ்சியுள்ளவர்களிலும் யாருக்கு என் பேச்சு சுவையாக இல்லையோ, யாருக்குச் சலிப்புத் தோன்றுகிறதோ, அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக விலகிச் சென்றுவிடலாம். ஏனெனில் நான் ஆன்மிகச் சிந்தனையில் மேன்மேலும் ஆழமாக இறங்கிப் பயிற்சி தரப்போகிறேன். இதன் விளைவாக, காலப்போக்கில் இங்கே சில பட்சிகளே நிலைபெறப் போகின்றன. இவ்வாறு மிகச் சிலரே மிஞ்சியபின் நான் இறுதியாக, சாரமாக உள்ள கனமான பாடத்தைச் சொல்லித்தரப் போகிறேன்.

தொடக்கப் பள்ளியில் வகுப்புகளில் உட்கார இடம் இல்லாத அளவிற்கு மாணவர்கள் சேர்கின்றனர். உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் என்று கல்வித் தளம் உயரும்போது மாணவர்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போகிறது. இறுதிக் கட்டத்தில், ஆராய்ச்சி வகுப்பில், விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிலேயே மாணவர்களே மிஞ்சுகின்றனர்.

எனது சொற்பொழிவின் கனமும் இப்படிப் படிப்படியாக உயர்ந்து கொண்டே செல்கிறது. ஆனால் என்னிடம் மிஞ்சியுள்ளவர்களில் தொடக்கப்பள்ளி நிலையிலுள்ள சிலரும், உயர்நிலைப்பள்ளி, நிலையிலுள்ள வேறு சிலரும் ஒட்டிக் கொண்டுள்ளனர். இவர்களுக்கு என் மீதுள்ள தனிப்பிரியம் காரணமாக இவர்களால் என்னைவிட்டுச் செல்ல முடியவில்லை. அதே சமயம் அவர்களுக்கு இங்கு இப்போது உயர்ந்துள்ள ஆன்மிக சூழ்நிலை புரிபடவில்லை. இப்போது நான் பேசும் பாணி அவர்கள் புரிந்து கொள்வதற்கு அப்பாற்பட்டதாக உள்ளது.

என் பேச்சு யாருக்கெல்லாம் சலிப்பூட்டுகிறதோ, அவர்கள் தங்களை மாற்றிக்கொள்ள முயல வேண்டும் அல்லது என்னை விட்டு நீங்கிவிட வேண்டும். நான் என்னையோ, நான் பேசும் விதத்தையோ மாற்றிக் கொள்ளப் போவதில்லை. உன் சலிப்பைக் குறைக்க வேண்டுமென்பதற்காக நகைச்சுவைத் துணுக்குகளைக் கலந்து பேசப்போவதில்லை. உண்மையில் நடக்கப்போவது என்னவென்றால், நான் கடைசியில் மிஞ்சியிருப்பவர்களிடம் (மற்றவர்களின் பார்வையில்) மிகவும் சலிப்பூட்டும் முறையிலேயே பேசப்போகிறேன்.

சலிப்புண்டாக்கும் ஒரே சூழ்நிலையும் தியானப் பயிற்சியில் ஒரு கட்டமாகும் என்பதை நீ அறிந்திருக்க மாட்டாய். அடிக்கடி புது பொம்மை, புதிய பொருள், புது மனைவி, புது வீடு என்று மாற்றிக் கொண்டே செல்ல விரும்புவது சிறுபிள்ளைத்தனமாகும். தியானத்தைத் தொடங்கும்முன் மனம் பக்குவப்பட்டிருக்க வேண்டும்.

பல நூற்றாண்டுகளாக சத்குருமார்கள் சலிப்புணர்ச்சியையும் ஆன்மிகப் பயிற்சியில் பிரயோகித்து வருகின்றனர். ஜப்பானில்

ஜென் சம்பிரதாய ஆசிரமங்களில் சாதகர்களுக்குச் சலிப்பூட்டு வதற்கான எல்லா அம்சங்களுக்கும் ஏற்பாடாகியுள்ளது! அதிகாலை மூன்று மணிக்கு எழுதல், நீராடல், தேநீர், தியானம், ஆசனம் என்று எல்லா நாட்களிலும் ஒரேமாதிரி நடவடிக்கைகள். சாதுக்கள் அனைவரும் மொட்டையடித்துக் கொள்ள வேண்டும். அப்போது ஏறத்தாழ ஒரேமாதிரித் தெரிவார்கள். ஏனெனில் முகங்கள் வேறுபடுவதில் கேசத்திற்கு முக்கியப் பங்கு உள்ளது. மொட்டை போட்டுவிட்டால் உன் நண்பனைக்கூட சட்டென்று அடையாளம் தெரியாது. சிப்பாய்களும் ஒரேமாதிரிச் சீருடை காரணமாக ஒன்றுபோல் தெரிகின்றனர்.

சாதுக்களும் காஷாயம் அணிந்து ஒரேமாதிரித் தெரிகின்றனர். என்னிடம் வந்து துறவியாகுபவர்களும் காஷாயம் அணிய வேண்டும். ஒரேமாதிரியான காவி உடை சந்நியாசிகளின் தனித்தன்மையைக் குறைக்க உதவுகிறது. பௌத்த பிட்சுகள் ஒரேமாதிரி மஞ்சள் ஆடை அணிகிறார்கள். அவர்கள் எல்லாரும் மொட்டைத் தலையர்கள். தினமும் ஒரேமாதிரியான கடமைகளைச் செய்து வருகிறார்கள். அவர்கள் நடந்து தியானம் செய்ய வேண்டும். பிறகு உட்கார்ந்து தியானம். மறுபடியும் நடந்து தியானம். நாள் முழுதும் தியானம் அதே குரு. அதே கேள்விகள், பழைய பதில்கள், ஒரேமாதிரிச் சொற்பொழிவு. புத்தர் கூறிய அதே சூத்திரங்களை மனனம் செய்தல். இரவுகளில் ஒரே மாதிரி உணவு. கடைசியில், குறிப்பிட்ட நேரத்தில் படுத்துவிட வேண்டும்.

ஜென் சம்பிரதாய ஆசிரமங்களில் மரங்களை வெட்டி அகற்றிவிடுவார்கள் என்பது உனக்கு அதிசயமாகத் தெரியும். ஏனெனில் வளர்ச்சி காரணமாக மரங்களின் தோற்றம் மாறிக் கொண்டே இருந்து பார்ப்பவர்களின் கவனத்தை இழுக்கும். பச்சை இல்லைகள் துளிர்க்கும். மஞ்சள் இலைகள் உதிரும். பருவகாலத்தில் பூக்கும். இவை துறவிகளின் கவனத்தைக் கவரக்கூடாது என்றே மரங்கள் வெட்டப்பட்டன. எங்கும் கல்லும் மணலும் பாறைகளுமே தெரியும். எத்தனை ஆண்டுகள் கழித்து வந்து பார்த்தாலும் அதே சூழ்நிலைதான். சலிப்பேற்படுத்தும் இந்த ஒரேமாதிரி சூழ்நிலையின் பின்னணியில் காரணமுண்டு.

தினமும் ஒரேமாதிரி உபதேசம் கேட்டு, தினமும் ஒரேமாதிரி நடவடிக்கைகளை மேற்கொண்டு, ஒருபோதும் மாறாத சூழ்நிலையில் வசித்தால், புதியதற்கெல்லாம் ஆசைப்படும் சிறுபிள்ளைத்தனம் விடைபெற்றுக் கொண்டு விடும். ஒரே மாதிரியான வாழ்க்கையுடன் சமரசம் செய்து கொண்டு விட்டால், மனத்தின் குறுகுறுப்பு அடங்கிவிடும். தினமும் பரபரப்பாக ஏதேனும் செய்ய வேண்டுமென்ற அரிப்பு நீங்கிவிடும்.

இப்படி சலிப்புடன் ஒத்துழைத்தால் நீ அதற்கு அடுத்த கட்டமான சாந்த நிலைக்குப் போய்ச் சேருவாய். தினமும் புதியதை நாடுபவன் மன அமைதியுடன் விளங்க முடியாது. ஏனெனில் ஒவ்வொரு புதிய பொருளும் நாளடைவில் சலிப்பூட்டத் தொடங்கும். அப்போது மனம் வேறொரு புதிய பொருளை நாடும். இந்தத் தேடல் முடியாது. இந்தத் தாகம் அடங்காது.

புதிதாக வீடு கட்டி வசித்தாலும் சில ஆண்டுகளில் சலித்து அதில் மாற்றங்கள் செய்கிறோம் அல்லது அதை விற்று விடுகிறோம். துணிகளில் எத்தனையோ நிறங்கள், எத்தனையோ வகைகள், வடிவமைப்பில் புதுப்புதுக் கற்பனைகள். இதெல்லாம் எத்தனை புதுமை வந்தாலும் மக்கள் திருப்தியடைவதில்லை என்பதையே காட்டுகிறது.

பெண்களிடம் ஏராளமான புடைவைகள் இருந்தும் மன அமைதி இல்லை. ஒரு நிகழ்ச்சிக்குச் செல்ல புடைவைகளை மாற்றி-மாற்றித் தோளில் போட்டுப் பார்த்துக் குழம்புகின்றனர். வெவ்வேறு விதமான கூந்தல் அலங்காரம் செய்து கொள் கின்றனர். அடிக்கடி நகைகள் வாங்குவதிலும் 'டிசைன்' மாற்றுவதிலும் ஈடுபடுகின்றனர். ஒரேமாதிரி வாழ்க்கை மனத்தை அமைதியாக வைத்துக்கொள்ள உதவும் என்றும், அத்தகைய மனம்தான் ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையைத் தொட முடியும் என்பதையும் மக்கள் புரிந்து கொள்ளவில்லை.

இதேபோல் நான் தினமும் புதிய விஷயங்கள் சொல்வேன் என்றும், ஒவ்வொரு முறையும் புதுமையாகச் சொல்வேன் என்றும்

எதிர்பார்த்து நீ வந்திருந்தால் நீ தவறான இடத்திற்கு வந்துவிட்டாய் என்றே நான் கூறுவேன். நான் ஏற்கெனவே சொன்னதையேதான் சொல்வேன். என் குரலிலும் மாறுபாடு இருக்காது. அதையே பலமுறை கேட்டுச் சிறிது சிறிதாக உன் சஞ்சலம் நீங்கும். சஞ்சலம் நீங்கியபின் உன் மனத்தில் அமைதி மிஞ்சியிருக்கும். ஆம், சலிப்புக்கு அடுத்த கட்டம் சாந்தம்.

என் சொற்பொழிவு வெறும் ஒலியில்லை. இதுவும் தியானத்தில் ஒருவகைப் பயிற்சி. ஆகவே நான் தினமும் பேசுகிறேன். மூன்றாண்டுகளாகப் பேசி வருகிறேன். உயிருட னிருந்தால் மேலும் 30 ஆண்டுகள் பேசுவதைத் தொடர்வேன். ஆகவே சொல்வதற்குப் புதிதாக என்ன இருக்கப்போகிறது? இங்கே அமர்ந்து என்னை உண்மையாகப் புரிந்துகொண்டவர்கள் நான் என்ன பேசுகிறேன் என்பது குறித்துக் கவலைப்படுவ தில்லை. என் சொற்களையும் கவனிப்பதில்லை. இங்கே உட்கார்ந் திருப்பதேகூட அவர்களுக்கு தியானநிலை கிடைத்துவிட்டது போலிருக்கிறது.

நான் என்ன பேசப்போகிறேன் அல்லது என்ன பேசவேண்டும் என்று நீ முன்கூட்டியே முடிவெடுத்து இங்கு வந்திருப்பவனாயின் நீ திருப்தி பெறுவது சிரமம்தான். என் பேச்சில் பாட்டிருக்கும், குட்டிக் கதை இருக்கும், பொழுதுபோக்கு அம்சமிருக்கும் என நினைத்து நீ இங்கு வந்திருப்பவனாயின், அவையில்லாமல்போய் நீ சங்கடப்படுவாய். நீ வெறுங்கையுடன் வந்து இங்கு என்ன நடக்கிறது என்பதைக் காண முயன்றால், ஒரு பிரச்சினையும் இருக்காது.

**ஒ**ருநாள் முல்லா நஸ்ருத்தீன் தன் மனைவியுடன் சண்டை போட்டு அலுவலகம் சென்றார். அவரது உடலும் மனமும் கோபத்தால் கொதித்துக் கொண்டிருந்தது. வழியில் ஒருவர் முல்லாவைத் தடுத்து, “பெரியவரே, உங்க கடிகாரத்தில இப்ப மணி என்ன ஆகுது?” என்று கேட்டார். முல்லா வெடித்துவிட்டார் “போய்யா போ, என் கடிகாரத்தில எத்தனை மணி ஆனா உமக்கு என்ன வந்தது?” என்று கர்ஜித்தார்.

முல்லாவின் சிந்தனையை அந்த சமயம் கோபம் என்னும் புகைப்படலம் மூடியிருந்தது. அதன் விளைவாக அவர் தான் என்ன பேசுகிறோம் என்று உணரவில்லை.

நீயும் அப்படிப் புகை மண்டிய சிந்தனையுடன் இங்கு வந்திருந்தால் சிக்கல்தான் ஏற்படும். அந்தச் சிந்தனை என்மீது பிரியத்தின் வெளிப்பாடாகவோ, எதிர்மறைக் கண்ணோட்டத்தின் வெளிப்பாடாகவோ எப்படியிருப்பினும் உனக்கு என் பேச்சில் திருப்தி எழாது. நான் புதிதாக ஏதோ சொல்லப் போகிறேன் என்று நீ நினைத்து வந்திருந்தாலும் உனக்கு ஏமாற்றமே விளையும். நான் புதிதாக எதுவும் சொல்வேன் என்று ஒருபோதும் வாக்குறுதி தரவில்லை. நீ மனத்தை வெற்றிடமாக வைத்துக்கொண்டு வந்திருந்தால் இங்கே என் அருகில் அமரலாம். ஒரு மணிநேரம் உட்கார்ந்திருந்தால் போதும். நான் பேசுவதும் நீ கேட்பதும் வெறும் சாக்குதான். சத்சங்கமே பிரதானம். இருவரும் உட்காருவோம்; ஒரே சிந்தனை பிரவாகத்தில் மிதந்து செல்வோம். பிறகு உன் காதில் விழுவதெல்லாம் உன்னைச் சலிப்படைய வைக்காமல் அர்த்தமுள்ளதாகத் தோன்றும்; அது சுவை நிறைந்ததாக இருக்கும்.

சாஸ்திரம் படித்தும், சொற்பொழிவு கேட்டும், தியானம் செய்தும் சிலர் ஏன் சலிப்படைகிறார்கள்? காரணம், தங்கள் ஆளுமையில் மாற்றம் ஏற்படுவதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் விரும்புவது வேறு ஏதோ ஒன்றாக இருக்கும். ஒருவனுக்குப் பண ஆசை. எதிர்பார்த்த அளவு பணம் திரளவில்லை. ஒருவன் அன்பை எதிர்பார்க்கிறான். போதுமான அளவு அன்பு கிடைக்கவில்லை. இத்தகையோர் ஆன்மிகத்தின் மூலம் தங்களுக்கு திருப்தி கிடைக்குமோ என யோசிக்கின்றனர்.

ஆனால் முதலிலிருந்தே ஆன்மிக விருப்பத்துடனேயே முயல்கின்றவனுக்கு அந்த மாற்றம் கிடைத்துவிடும். நாம் உடலின் மேல் நகையணிவதுபோல், ஆன்மிகத்தைப் போர்வைபோல் போர்த்திக்கொண்டால் நமக்கும் திருப்தி ஏற்படாது. மற்றவர்களும் எதையோ மறைக்கவே இந்த ஆன்மிகப் போர்வை என நினைப்பார்கள்.

சிறிது காலம் முன் நான் புத்தரின் உபதேசங்கள் பற்றி பேசினேன். பேச்சுக் கேட்க வந்திருந்த ஐரோப்பியர்களுக்கு புத்தர் கூறியது சரியெனத் தோன்றவில்லை.

அதற்குமுன் ஹஸீத் ஃபக்கீர் சம்பிரதாயத்தினர் பற்றி பேசினேன். இவர்களின் கருத்துகள் சரியானவை என்று ஐரோப்பியர்களுக்குத் தோன்றியிருக்கும். இந்தக் கருத்துகளில் சில பின்வருமாறு. இந்த உலகம் கடவுளுக்குச் சொந்தமானது. எல்லா ஆனந்தமும் அவர் தந்தது. மனைவி — குழந்தைகள் இருப்பது தப்பில்லை. போகத்திலிருந்து பிரார்த்தனை நிலையை அடைய வேண்டும். போகமும் ஒருவகையான வழிபாடுதான். இதெல்லாம் சராசரி மனிதர்களின் கண்ணோட்டத்துடன் ஒத்துப்போகிறது.

புத்தரோ பெண்ணாசையைக் கண்டிக்கிறார். பெண் என்பவள் யார்? வெறும் தோல்பை. எலும்பு-மாமிசம்-சதைக் குவியல். அழுக்கும் அசுத்தமும் நிறைந்தவள். ஐரோப்பியர்கள் பலர் இக்கருத்துகளைக் கேட்டு ஆவேசமடைந்தார்கள். இவை வாழ்க்கைக்குப் பொருந்திவராதென எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

ஐரோப்பிய சிஷ்யை என் வளாகத்தை விட்டுக் கிளம்பி விட்டாள். தன்னிடம் மலர்ந்த அன்பு உணர்வை அவள் மேலும் ஆழமாக்கிக்கொள்ளவே இங்கு வந்தாளாம். இங்கோ விரக்தி, வைராக்கியம் என்றெல்லாம் பேச்சு நடக்கிறதே என்று திகைத்துப் போயிருக்கிறாள். ஆம், அன்பை ஆராய வந்தவளுக்கு புத்தரின் கருத்துகள் அச்சமூட்டியிருக்கும். உடல் என்பது எத்துணை அழகான படைப்பு என்பது இந்த புத்தருக்குத் தெரிந்திருக்க வில்லையே என்று அவள் பரிதாபப்பட்டாள். ஆம், உடல்மீது பற்றும் புத்த மார்க்கமும் ஒத்துப்போக வாய்ப்பில்லைதான்.

என்னைச் சந்திக்க இளைஞர்கள் பலர் வருகின்றனர். 'காம விருப்பத்திலிருந்து விடுதலைபெற உதவுங்கள்' என்று என்னிடம் இறைஞ்சுகின்றனர். ஆனால் அவர்களோ இளவயதினராயிற்றே. காமத்தால் விளையும் துன்பத்தை அவர்கள் அனுபவித்தது இல்லையே. பிறகு விடுதலை எதிலிருந்து பெறுவது? அதே சமயம் அவர்கள் காமத்தினுள் பிரவேசிக்கவும் துணியவில்லை.

காமம் கல்யாணத்திற்கு இட்டுச் சென்று வாழ்க்கை பாரமாகிவிடும் என்று அஞ்சுகின்றனர். குழந்தைகள் பிறப்பர். பொறுப்புகள் அதிகரிக்கும். துறவறம் மேற்கொள்ள வாய்ப்பே இல்லாமல் போய்விடும். வாழ்க்கை சிக்கலாகிவிடுமோ என்று பயம். அதேசமயம் அவர்கள் வாழ்க்கையின் சிக்கல்களை இன்னும் அனுபவித்ததுமில்லை.

நான் அவர்களை வாழ்க்கையின் சிக்கல்களில் துணிந்து பிரவேசிக்கச் சொல்கிறேன். ஆன்மிகம் என்பது மலிவான விஷயமில்லை. வாழ்க்கையின் அனுபவங்களில் பக்குவப்பட்டு ஏற்படும் ஆன்மிகமே உண்மையானது.

நீ குறிப்பிட்ட விதமான பேச்சைக் கேட்கவே இங்கு வந்திருந்தால், உன் மனத்தில் ஏற்கெனவே சில கருத்துகள் வேரூன்றியிருந்தால், உனக்கென ஒரு . கண்ணோட்டம் ஏற்கெனவே அமைந்துவிட்டிருந்தால், என் பேச்சு உனக்கு ஒத்துவராது. நீ சலிப்படைவாய், சங்கடப்படுவாய். என் சொற்பொழிவை சாதாரண வம்பளப்பென நினைப்பாய். நீ வெறுமையான, காலியான, திறந்த மனத்துடன் இங்கே வந்திருப்பவனாயின், உன் தேடல் முடிகின்ற நேரம் நெருங்கி விட்டது. ஞானப்பழம் கனிந்துவிட்டது. காற்று இலேசாக வீசினாலும் போதும். பழம் உதிர்ந்துவிடும். அந்தக் காற்றுதான் என் சொற்பொழிவு. காற்று வீசியும் கனி விழவில்லை என்றால் அது இன்னும் பழுக்கவில்லை என்று பொருள். அது விழுவதற்கான காலம் இன்னும் வரவில்லை.

பழு. பக்குவப்படு. அவசரம் ஏதுமில்லை. இங்கிருந்து எழுந்து செல். சலிப்பான சொற்பொழிவைக் கேட்க வேண்டும் என்று உனக்குத் தலைவிதி இல்லையே எங்கே இன்பம் சுரக்கிறதோ அங்கே போ. குடும்ப வாழ்வில் சுவை கண்டால் அதற்காக பயப்படாதே. முனிவர்களின் பேச்சைக் கேட்காதே! வாழ்க்கையில் துணிந்து இறங்கு. நரகத்தை அனுபவித்தால்தானே நரகத்திலிருந்து விடுபட வேண்டும் என்று தோன்றும். துன்பம் என்பதை அனுபவ பூர்வமாக உணர்ந்து கொண்டால் உன் ஆளுமையிலும் மாற்றம் தெரியும்.

இது சாதாரணமான புரட்சியில்லை. சுய அனுபவத்தின் தூண்டுதலால் தான் மாறவேண்டும் என ஒருவர் தீவிரமாக உணர்ந்தால்தான் இந்த ஆன்மிகப் புரட்சி நிகழும். யாரோ சாது மகாத்மா சொன்னார் என்பதால் உனக்குள் ஆன்மிகப் புரட்சி மூளாது. இனி உன் ஆளுமை மாறித்தான் ஆக வேண்டும் என்று உன் உயிரே கட்டளையிடும் வேளை வந்ததும் நீ மாறாமல் இருக்க முடியாது.

என் சொற்பொழிவால் மட்டும் உனக்குள் ஆன்மிகப் புரட்சியை மூட்டிவிட முடியுமென நான் நினைக்கவில்லை. சுய அனுபவத்தால் பக்குவப்பட்டு நீ மாறும் வேளை வந்ததும் என் பேச்சு தீக்குச்சிபோல் உரசிப் பெரும் நெருப்பைத் தூண்டிவிடும்.

ஒரு சந்நியாசி இறந்து விண்ணுலகை அடைந்தார். கடவுள் அவரை வரவேற்று, "உன்னிடம் ஒரு கேள்வி கேட்கட்டுமா?" என்றார்.

அதற்கு சந்நியாசி, "எந்த சாஸ்திரத்திலிருந்தும் கேள்வி கேளுங்கள். ராமாயணமும் பகவத்கீதையும் எனக்கு மனப்பாடம்," என்று கர்வமாகப் பதிலளித்தார்.

"வாழ்க்கையை அனுபவித்து, பிறகு விரக்தி நிலைக்கு உயராமல், நீ நூல்களைப் படித்து சந்நியாசி ஆனாய். நீ ஒரு கோழை. நீ மீண்டும் உலகிற்குச் செல். வாழ்க்கையில் போராடு. பிறகு மாவீரனாக சந்நியாசத்தில் பிரவேசி" என்று கடவுள் அவரைத் திருப்பியனுப்பி விட்டார்.

வாழ்க்கையின் வளர்ச்சியின் பூரணத்துவமே சந்நியாசம். வாழ்க்கையின் எல்லா வலிகளையும், சங்கடங்களையும், போராட்டங்களையும் சமாளித்துக் கடந்தபின் சந்நியாசம் பழுக்கிறது.

எனது பேச்சு உன்னை எப்பொழுது கவரும் தெரியுமா? நீ வாழ்க்கையை விழித்து அனுபவித்திருந்தால், துன்பங்களால் தவித்திருந்தால், இங்குமங்குமாகப் பந்தாடப்பட்டிருந்தால், ஆங்காங்கே தடுக்கி விழுந்திருந்தால் அப்போதுதான் என் பேச்சு உன் உள்ளத்தைத் தொடும். ஆயிரம் முறை வாழ்க்கையில்

தடுக்கிவிழுந்த பிறகுதான் ஆலய பிரவேசம் சாத்தியப்படும். பிறகு நீ எங்கிருந்தாலும் உன் செவியில் கடவுளின் ஒலி கேட்கும்.

சந்நியாசம் என்பதை உடம்புவழி வாழ்க்கையால்தான் பெற முடியும். வேறு உபாயம் கிடையாது. புரட்சி ஏற்படும், நிச்சயம் ஏற்படும். ஆனால் மலிவாக ஏற்படாது. தானாக ஏற்படாது. சம்பாதித்துப் பெற வேண்டும்.

இந்த வளாகத்தில் வேறு சில சந்நியாசிகளும் உள்ளனர். பக்குவப்பட்டவர்கள் அவர்களுக்கு என் பேச்சு வேறு விதமாக ஒலிக்கிறது. அவர்களில் ஒருவர் எனக்கு எழுதுகிறார்.

**உங்கள் தொடர்பு தந்தது போதை**
**மதுவைப் பருகியது போலவே**
**பருகி நான் நினைவை இழந்தேன்**
**நினைவிழந்தமைக்குப் பெருமைப்படுகிறேன்**

உரைநடையில் எழுதுகிறார் இன்னொருவர்: "ஆனந்தக் கண்ணீரில் ஆழ்ந்திருக்கும் என் வணக்கங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். வழிகாட்டுங்கள். ஆசி கூறுங்கள். என் ஆழ்மனத்தில் புதைந்து கிடக்கும் கீழ்த்தரமான ஆசைகள் சாம்பலாகிப் போகட்டும் என்று கட்டளையிடுங்கள்."

மேலும் ஒருவர் பாட்டெழுதியனுப்புகிறார்:

**நான் ஒரு முட்டாள், மடையன்**
**பிறவிதோறும் அப்படித்தான்**
**யார் எனக்கு வேண்டியவர்**
**யார் எனக்குப் பொல்லாதவர்**
**என்று பிரிக்கவும் தெரியாதவன்**
**சுருதி சேரா இசைபோன்றது உலக வாழ்க்கை**
**என் ஒலி இதனுடன் இணையவில்லை**
**எனது உதட்டில் புன்னகை இல்லை**
**என் கண்ணிலும் இல்லை எவ்வொளியும்**
**இன்று தங்களை தரிசித்தபின்**
**எல்லாம் நிறைந்திடப் பெற்றேன் நான்**

நான் இதற்கெல்லாம் பொறுப்பில்லை. இதெல்லாம் அவரவர் மனத்தைப் பொறுத்த விஷயம். எனது தொடர்பால் சிலர் சலிப்படைகிறார்கள். சிலர் என்னைக் காண்பதையே 'தரிசனம்' என்ற சொல்லால் கௌரவிக்கிறார்கள். நான் உள்ள இந்த இடம் எங்கும் உள்ள வழக்கமான வீடா அல்லது எங்காவதுதான் உள்ள ஆண்டவன் சந்நிதியா என்பது அவரவர் கண்ணோட்டத்தைப் பொறுத்தது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்.

யத்த்வம் பஷ்யஸி தத்ரைக ஸ்த்வமேவ ப்ரதிபாஸஸே|
கிம் ப்ருதக் பாஸதே ஸ்வர்ணாத்கட காங்கதநூபுரம்|| 139

அயம் ஸோஅஹமயம் நாஹம் விபாகமிதி ஸந்த்யஜ|
ஸர்வமாத்மேதி நிஸ்சித்ய நிஹ்ஸங்கல்ப: ஸுகீ பவா|| 140

தவைவாஞானதோ விஸ்வம் த்வமேக: பரமார்த்தத:|
த்வத்தோஅன்யோ நாஸ்தி ஸன்ஸாரி நாஸன்ஸாரி ச
கஷ்சன|| 141

ப்ராந்திமாத்ரமிதம் விஸ்வம் ந கிஞ்சிதிதி நிஸ்சயீ|
நிர்வாஸன: ஸ்பூர்த்திமாத்ரோ ந கிஞ்சிதிவி ஷாம்யதி|| 142

ஏக ஏவ பவாம் போதாவாஸீதஸ்தி பவிஷ்யதி|
ந தே பந்தோ அஸ்தி மோக்ஷோ வா க்ருதக்ருத்ய: ஸுபம்
சர|| 143

மா ஸங்கல்ப விகல்பாப்யாம் சித்தம் க்ஷோபய சின்மய|
உபஷாம்ய ஸுகம் திஷ்ட்ட ஸ்வாத்மயாநந்தவிக்ரஹே|| 144

த்யஜைவ த்யானம் ஸர்வத்ர மா கிஞ்சித்ருதி தாரய|
ஆத்மா த்வம் முக்த ஏவாஸி கிம்விம்ருஷ்ய கரிஷ்யஸி|| 145

**அ**ஷ்டாவக்ரர் சொல்வது: ‘நீ எதை, யாரைப் பார்க்கிறாயோ அதில் நீயேதான் பிரதிபலிப்பாகிறாய். கங்கணமும் தோள்வடமும், சிலம்பும் தங்கத்திலிருந்து வித்தியாசப்படுகின்றனவா?’ **(சுலோகம் 139)**

**உ**லகம் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றது. அதில் நாம் அடிக்கடி நம்மைப் பார்த்துக் கொள்கிறோம். நாம் எப்படி

இருக்கிறோமோ அப்படித்தான் அதில் தெரிகிறோம். நாம் பார்க்கும் பிரதிபிம்பம் நமக்கு வெளியே தனியாக இருப்பதுபோல் தோன்றுகிறது. நாம் பூவைப் பார்த்து அது எவ்வளவு அழகாக உள்ளதென நினைக்கிறோம். உண்மையில் உன் கண்ணுக்குத்தான் அந்த அழகு தெரிகிறது. இன்னொருவர் அந்தப் பூவை அழகற்றதென நினைக்கலாம். மூன்றாம் ஆள் ஒருவன் 'அந்தப் பூ அழகானதும் இல்லை, அழகற்றதும் இல்லை' என நடுநிலை வகிக்கக்கூடும். நான்காம் ஆள் அந்தப் பூவை முழுமையாக அலட்சியம் செய்துவிடக்கூடும். உனக்குள்ளே என்ன இருக்கிறதோ அதுதான் அந்தப் பூவில் பிரதிபலிப்பாகிறது.

உனக்கு ஒரு விஷயம் கேட்பதும் சொல்வதும் பிடித்திருக்கலாம். இன்னொருவனுக்கு அது பிடிக்காத விஷயமாக இருக்கும். ஒரு பாட்டைக் கேட்டு உன் உடல் உன்னையறியாமலே அசைந்து ஆடக்கூடும். இன்னொருவன் அதே பாட்டால் பாதிக்கப்படாமல் கற்சிலைபோல் நிற்கக்கூடும்.

உளவியல் வல்லுநர்களும் தத்துவ அறிஞர்களும் பல நூற்றாண்டுகளாகவே சத்யம்-சிவம்-சுந்தரம் என்பதை வரையறுக்க முயன்று தோல்வியே கண்டுள்ளனர். பிரபல ஐரோப்பியச் சிந்தனையாளர் ஜீ.இ.மூர்.* என்பவர் 'பிரின்ஸிபியா இதிகா' என்னும் அபூர்வமான நூல் எழுதியுள்ளார். அதை எழுத அவர் கடுமையாக உழைத்திருக்கிறார். அதற்கு முந்திய நூற்றாண்டுகளில் அப்படிப்பட்ட நூல் எழுதப்பட்டதில்லை.

இந்நூலில் ஆசிரியர் 'சுபம்' (சிவம்) என்றால் என்பதை வரையறுக்க முயன்றிருக்கிறார். What is Good என்பதை மிகுந்த மேதைத்தனத்துடன் 200-250 பக்கங்களில் விளக்க முயன்றிருக்கிறார். அவரது விளக்கம் என்ன தெரியுமா? சுபம் என்பது விளக்க முடியாதது- The good is indefinable ஆஹா. எத்தகைய வேடிக்கையான முடிவு இது!

* G.E.Moore (1873-1958) ஆங்கில தத்துவ அறிஞர். பகுப்பாய்வுத் தத்துவக் கோட்பாட்டை நிறுவியவர்களில் ஒருவர். முக்கிய நூலும் அதன் சாரமும்: Principia Ethica (1903) 'Good' is a simple and unanalyzable quality that is knowable by direct application.

அழகியலார்கள் பல நூற்றாண்டுகளாக அழகு என்றால் என்ன என்பதை வரையறுக்க முயன்றிருக்கின்றனர். ஏனெனில் அழகை வரையறுத்தால்தானே மேற்கொண்டு அழகியல் சாஸ்திரம் எழுத முடியும். ஆனால் இதுவரை யாராலும் அழகை வரையறுத்துக் கூற முடியவில்லை. கீழ்த்திசை நாடுகளின் பார்வை கொண்டு முயன்று பார். அப்படி அழகை வரையறுக்க முடியாது என்பதே கிழக்கத்திய முடிவு. ஏனெனில் ஒவ்வொருவனும் வெவ்வேறானவற்றில் சிவத்தையும் சுந்தரத்தையும் பார்க்கிறான். ஒருவன் தன்னால் எப்படிப் பார்க்க முடியுமோ அந்தக் கண்ணோட்டத்துடன்தான் எதையும் வரையறுக்க முடியும். வேறு விதமாகச் சொல்வதானால் ஒவ்வொருவனும் எதிலும் தன்னைத்தான் பார்க்கிறான்.

ஜே.கிருஷ்ணமூர்த்தியின் அடிப்படைக் கொள்கை 'பார்க்கிறவன்தான் பார்க்கப்படுகிறான்'* என்பதே. 'நீ பார்க்கும் காட்சி நீயேதான்!' என்கிறார். என்னுடைய முந்திய உரைகளில், 'காட்சியும் காண்பவனும் ஒன்றல்ல' என்று அஷ்டாவக்ரரின் அடியொற்றிக் கூறியிருக்கிறேன். அவர் கருத்துடன் என் கருத்து முரண்டுபடுவதுபோல் தோன்றுகிறது. அப்படியல்ல.

இந்த இரண்டு கருத்துகளும் வெவ்வேறு தளங்களைச் சார்ந்தவை. முதல் தளம் ஞானக் கிரணம் உதிக்கும் இடம். இந்தக் கட்டத்தில் காட்சியும் காண்பவனும் வெவ்வேறென நிலைநாட்டப் படுகிறது. நீ ஒன்றைப் பார்க்கிறாய் எனில் பார்ப்பவனாகிய நீ நிச்சயமாக பார்க்கும் பொருளிலிருந்து விலகி நிற்கிறாய்; அதைக் கடந்து நிற்கிறாய். பார்க்கும் பொருள் நீ அல்லன் என்பதும் தெளிவு. பொருள் உன்னிடமிருந்து பிரிந்து நிற்கிறது. நீ விலகிநின்று காண்பவனாக உள்ளாய்.

நீ என்னை இங்கே பார்க்கிறாய். என் குரலைக் கேட்கிறாய். ஆகவே நிச்சயமாக நீ என்னிலிருந்து பிரிந்து நிற்கிறாய். நீ எதைப் பார்க்க முடிகிறதோ, கேட்கிறாயோ, தொடுகிறாயோ, எதன் ருசி அறிகிறாயோ, எதை அனுபவிக்கிறாயோ, அது உன்னிட மிருந்து விலகி நிற்கிறது. இது ஞானத்தின் முதற்படி எனினும் சாதாரணமான படி.

* The observer is the observed.

இதற்கு அடுத்த கட்டம்தான் மிகவும் சிரமமானது. இந்தக் கட்டத்தில் காட்சியிலிருந்து காண்பவன் வேறுபடுவதில்லை. முதல் கட்டத்தில் நீ முயல வேண்டியிருக்கிறது. இரண்டாவது நிலை தானாகவே நிகழ்கிறது. இந்த நிலையை அபூர்வமாகத்தான் அடைய முடியும். காட்சியிலிருந்து காண்பவனைப் பிரித்து விட்டால், காண்பவன் என்பவன் காணாமல் போய்விடுவான். ஏனெனில் காண்பவனின்றிக் காட்சி இல்லை. அவன் காட்சியுடன் ஒன்றியவன். காட்சி இல்லாத நிலையில் காண்பவனும் இல்லை.

நீ காண்பவனை எப்படி வரையறுக்கிறாய்? காட்சி இல்லாமல் அவனை வரையறுக்க முடியாது. அதற்குக் காட்சியை முன்னிலைப்படுத்த வேண்டும். காண்பவனை வரையறுப்பதில் காட்சியைக் கொண்டுவர நேரிடுவதால் அவன் காட்சியிலிருந்து பிரிந்து நிற்கவில்லை. அவன் அதனுடன் ஒன்றிவிடுகிறான். காட்சி இல்லையேல் காண்பவனும் இல்லை. முதலில் காட்சி விலகட்டும். இரண்டாவது நிகழ்ச்சி சுயமாகவே நடைபெறும். காட்சி மறைந்ததும் திடீரென காண்பவனும் இல்லாமல் போய்விடுகிறான். அல்லது கிருஷ்ணமூர்த்தியின் கூற்றுப்படி, காட்சிதான் காண்பவனும் என்னும் நிலை உருவாகிறது.

அஷ்டாவக்ரரின் சூத்திரமும் (139) இதையே கூறுகிறது. அவர் தமது கருத்தை மெதுவாகவே முன்னோக்கி நகர்த்துகிறார். அவர் 'முதலில் காட்சியிலிருந்து உன்னை விடுவித்துக்கொள்' என்கிறார். பிறகு பார்ப்பவன் என்பவனாகிய நிலையிலிருந்தும் நீ விடுபடுவாய். ஏனெனில் காட்சி இல்லாதபோது நீ காண்பவனாகவும் இருக்க முடியாது. காட்சியும் காண்பவனும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள், எதை நீ பார்க்கிறாயோ அதில் நீதான் பிரதிபலிப்பாகிறாய்; நீதான் உள்ளாய்.

பௌர்ணமியின் முழுநிலவு ஏரியில், கடலின் உப்புநீரில், குளத்தில், ஆறு-ஓடைகளில், குட்டைகளில், தட்டில் நிரப்பியிருக்கும் தண்ணீரில் என்றெல்லாம் எத்தனையோ சூழ்நிலைகளில் பிரதிபலிப்பாகிறது. ஒரு நிலவு, எத்தனையோ பிம்பங்கள், தூய நீர்நிலையில் தெரியும் நிலவும், சாக்கடைத் தண்ணீரில் தெரியும் நிலவும் வெவ்வேறு என்று நீ கூறுவாயா?

அழுக்குத் தண்ணீரில் தெரியும் நிலவை அழுக்கு நிலவு என்பாயா? தண்ணீரின் அழுக்கு பிரதிபிம்பத்தையும் அழுக்காக்கிவிடுமா? பிரதிபிம்பம் என்றும் கறைபடாது.

**ர**வீந்திரநாத் தாகூர் தனது வாழ்வில் நிகழ்ந்த சம்பவம் ஒன்றைக் குறிப்பிடுகிறார். நோபல் பரிசு பெற்ற சமயம்.* பரிசுடன் ஐரோப்பிய நாடுகளின் புகழ்மாலைகளையும் சுமந்து தாயகம் திரும்புகிறார். வழியெங்கும் வரவேற்பு. ஆங்காங்கே மக்கள் திரண்டு அவரை கௌரவிக்கின்றனர். வீட்டை வந்தடைந்தபின் அவரைச் சந்திக்கப் பக்கத்து வீட்டுக்காரர் வந்தார். ரவீந்திரர் சங்கடப்பட்டார். அந்த மனிதர் இதுவரை சந்திக்க வந்ததில்லை. அவரது பார்வையேகூட போதும் ரவீந்திரரை சங்கடப்படுத்த. கத்திபோல் கூர்மையான அவருடைய கண்பார்வை நேரடியாக இதயத்தில் பாய்வதுபோலிருக்கும்.

ரவீந்திரரைச் சந்தித்ததும் அவருடைய கண்களை ஊடுருவிப் பார்த்த அவர், பிறகு தோளை உலுக்கியபடி, "உங்களுக்கு உண்மையிலேயே இறை அனுபவம் ஏற்பட்டிருக் கிறதா?" என்று மடக்கினார். ஏனெனில் 'கீதாஞ்சலி'யில் உருவமற்ற இறைவனைக் குறித்த உருக்கமான பாடல்கள் உள்ளன. உபநிடதங்களின் பாணியில் அவை அமைந்துள்ளன.

ரவீந்திரர் அவர் தன்னை அவமானப்படுத்தியதாக நினைத்துக் கோபமடைந்தார். ஆனால் வந்தவரின் கண்களின் தீட்சண்யத்தின் முன்னால் அவரால் பொய் பேச முடியவில்லை. அவரது தடுமாற்றத்தைப் பார்த்து வந்தவர் நகைத்தார். அவரது சிரிப்பு ரவீந்திரரின் உள்ளத்தை மேலும் காயப்படுத்தியது.

அந்த மனிதர் விடவில்லை. "என்னில் உனக்குக் கடவுள் காட்சி தருகிறாரா, இல்லையா என்பதையாவது சொல்," என்று மேற்கொண்டு கேட்டார்.

ரவீந்திரருக்கு இது முதல் கேள்வியைவிட கஷ்டமானதாகத் தோன்றியது. ஏனெனில் அவருக்கு மற்றவர்களின் கண்களில்

---

* ரவீந்திரநாத் தாகூர் (1861-1941). இவரது ஆன்மிகப் பாடல்களின் தொகுப்பாகிய 'கீதாஞ்சலி' 1913இல் நோபல் பரிசு பெற்றது.

கடவுள் தெரிந்தபோதிலும் இந்த மனிதரின் கண்களில் ஒருபொழுதும் கடவுளை உணர முடிந்ததில்லை. தனக்கு மாலை அணிவித்தவர்கள், வரவேற்புத் தந்தவர்கள், பாராட்டு மடல் வாசித்தவர்கள் முதலியவர்களின் கண்களில் ரவீந்திரருக்கு தெய்வ தரிசனம் கிடைத்தது. இனிமையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போன்றவர்களாக அவர்களை நினைக்கத் தோன்றியது. அந்த மனிதர் சிரித்தபடியே ரவீந்திரரை விட்டு அகன்றார்.

ரவீந்திரர் இது குறித்து மேற்கொண்டு பின்வருமாறு எழுதுகிறார்:

'அன்றிரவு என்னால் தூங்க முடியவில்லை. நான் இயற்றிய பாடல்கள் என்னைப் பார்த்து பரிகசிப்பதுபோல், அவை பொய் என்பதுபோல் எனக்குத் தோன்றியது. கனவிலும் பக்கத்து வீட்டுக்காரரின் கண்கள் எனக்குள் ஊடுருவிப் பாய்வது போலிருந்தன. சரியாகத் தூங்க முடியாமல் மறுநாள் மிகவும் அதிகாலையில் எழுந்துவிட்டேன். கடற்கரையை நோக்கி நடந்தேன்.

'ஆகாயத்தில் மேகங்கள் பரவியிருந்தன. இரவு நல்ல மழை பெய்திருந்தது. சாலை ஓரப் பள்ளங்களில் ஆங்காங்கே குட்டைபோல் தண்ணீர் தேங்கியிருந்தது. நான் கடற்கரையிலிருந்து திரும்புகையில் சூரியன் உதயமாகியிருந்தது. கடலின் விசாலமான பரப்பில் அதன் பிரதிபிம்பம் தகதகத்தது.

'போகும்போது நான் பார்த்த குட்டைகளைத் திரும்பும்போது பார்த்தேன். சிலவற்றில் எருமைகள் படுத்திருந்தன. சில பள்ளங்களின் தண்ணீரில் சிலர் தூங்கி எழுந்த நிலையில் சிறுநீர் கழித்தபடி நின்றனர். அங்கெல்லாமும் சூரியனின் பிரதிபிம்பம் தெரிவதைக் கண்டேன். ஒரு கணம் திகைத்துப்போனேன். இந்தப் பள்ளங்களின் அழுக்குத் தண்ணீரில் பிரதிபலிப்பாகும் சூரியனும் அழுக்காகிவிட்டதா என்ன? அப்படி இல்லையே. என் கண்கள் திறந்தன. மேலும், விசாலமான கடலில் சூரியன் பெரிய அளவிலும், குட்டைகளில் சிறிய அளவிலுமா பிரதிபலிப்பாகிறது? அப்படியும் இல்லையே. எங்கும் ஒரேமாதிரி பிரதிபிம்பம்தானே காணப்படுகிறது.

"திடீரென உறக்கத்திலிருந்து விழித்தவனைப் போல் ஆனேன். இருட்டில் பளிச்சிட்ட மின்னல்போல் என் சிந்தனையில் ஞான மின்னல்! களிப்புணர்வுடன் ஆடிக்கொண்டே நான் நேரடியாகப் பக்கத்து வீட்டிற்குப் போனேன். அவ்வீட்டுக்காரரைப் பார்த்ததுமே தழுவிக் கொண்டேன். இப்போது அவரிடமும் எனக்குக் கடவுள் தெரிந்தார்! அவரது முகத்தில் கடுமை இருக்கலாம். கண்கள் கத்திபோல் அச்சுறுத்தலாம். ஆனால் அதுவும் பிரபுவின் (கடவுளின்) பிரதிபிம்பமே என்று தெரிந்து கொண்டேன்.

இன்றும் அவர் என்னை உற்றுப் பார்த்தார். ஆனால் அவருடைய கண்கள் என்னைக் காயப்படுத்தவில்லை. ஏனெனில் நான் இன்று மாறிப்போயிருந்தேன். அவர் தானாகவே சொன்னார், "ரவிபாபு, புரிந்துகொண்டேன். உங்களுக்குக் கடவுள் அனுபவம் கிடைத்துவிட்டது. அதுவும் சற்று முன்தான் கிடைத்திருக்கும். நேற்றுவரை உமது நிலை வேறாக இருந்தது. இன்று விழித்துக்கொண்டீர், தெரிந்துகொண்டீர். நான் உங்களை இங்கு வரவேற்கிறேன். நோபல் பரிசு கிடைத்ததற்காக அல்ல. உங்கள் பாடல்கள் புகழ்க்கொடி நாட்டியதற்காகவும் அல்ல. இரவு முடிந்து எங்கோ சென்ற நீங்கள் ஞானியாகத் திரும்பியிருக்கிறீர்கள். ஆன்மிகத்தின் சுவை இன்பத்தை நீங்கள் உணர்ந்துவிட்டதை என்னால் ஊகிக்க முடிகிறது."

தங்கத்தால் விதம் விதமான நகைகள் தயாரிக்கப்படு கின்றன. அதேபோல் கடவுள் எடுக்கும் உருவங்களும் கணக்கில் அடங்காதவை. ராவணனும் கடவுள் எடுத்த உருவம்தான். ராமாயணம் படிக்கும்போது ராவணனிலும் கடவுள் பிரதிபலிப்பதை நீ காணவில்லையாயின் உன் படிப்பு வீண். உன் ஆன்மிகக் கதவு திறக்கவில்லையென்று அர்த்தம். மக்கள் ராமாயணம் ஓதுகிறார்கள்; ராம்லீலா நிகழ்ச்சி நடத்துகிறார்கள். ராவணனின் பெரிய பொம்மையை எரிக்கிறார்கள். அவர்கள் விஷயத்தைப் புரிந்துகொள்ளவில்லை. அவர்களுக்கு உண்மை பிடிபடவில்லை. ராமனில் கடவுள் தெரிந்தால் உன் கண்கள் சாதாரணமானவைதாம். ராவணனிலும் உனக்குக் கடவுள் தெரிந்தால் உன் கண்களை ஞானக் கண்கள் எனலாம். நல்லதில்

நல்லது பிரதிபலித்தால் அதில் ஆச்சரியமில்லை. ஆனால் தீயதிலும் நீ நல்லதையே காணமுடிந்தால் உன் அகக்கண்கள் திறந்துவிட்டன எனலாம்.

எல்லா நகைகளும் ஒரே தங்கம். ராமன்-ராவணன், கிருஷ்ணன்-கம்சன், இயேசு-யூதாஸ், பூ-முள் எல்லாம் ஒரே கடவுளின் உருவங்களே. பூவைப் பார்த்தால் கடவுள் நினைவு வரலாம். முள் குத்திவிட்டாலும் வலியில் கவனம் செல்லாமல் கடவுளின் நினைவு எழ வேண்டும். இந்தப் பழக்கம் வளர்ந்து எல்லாவற்றையும் ஒரே ரசமாக, சமரசமாக, சமச்சுவை உடையதாகக் காணும் பக்குவம் மலர வேண்டும். காணும் பலவும் ஒன்றே என்னும் கண்ணோட்டம் உனது சுபாவமாகிவிட வேண்டும்.

**அமைதியான இருட்டின் அக்கரையிலிருந்து**
**என்னருகே வந்து நிற்பவன் யார்?**
**எனது மனத்தின் தந்திகளை வருடி**
**வீணையை ஒலிக்கச் செய்தவன் யார்?**
**அற்ப ஆயுள் எடுத்து வந்துள்ளோம்**
**வாழ்க்கைக் கோப்பை உடைவது இயற்கை**
**கடந்து போனதெல்லாம் முடிந்துபோனவையே***

உருவத்திலேயே சிக்கிக்கொண்டவன், உருவமற்றதை அடையாளம் காணாதவன், ராமனில் மட்டுமே சுபத்தைப் பார்த்து, ராவணனில் நல்லதைப் பார்க்காதவன் பாரபட்சமானவன். அவன் ஒரு தரப்பையே பார்ப்பதால் வாழ்க்கையை முழுமையாகப் பார்க்காதவன் ஆகிறான்.

1857இல் மூண்ட சுதந்திரப் போர் சமயம் ஆடையற்ற ஒரு சந்நியாசியை ஆங்கிலேய சிப்பாய் ஒருவன் ஈட்டியை மார்பில் செலுத்திக் கொன்றுவிட்டான். இரவு நேரம். ஆங்கில ராணுவக் கூடாரங்கள் இருந்த பாதையில் அந்த சந்நியாசி போய்க் கொண்டிருந்தார். அவர் 15 ஆண்டுகளுக்கு மௌன விரதம் ஏற்றிருந்தார். போர் சூழ்நிலை-ராணுவப் பாசறை-இரவு நேரம்-ஆடையின்மை-மௌனம்-புன்சிரிப்பு ஆகியவற்றால் அவரைப் புரட்சியாளர்களின் ஒற்றன் என நினைத்து ஒரு சிப்பாய் அவர்

* Jo beeth gayee so baath gayee-The past is past

நெஞ்சில் ஈட்டியைச் செலுத்திவிட்டான். மௌன விரதம் பூண்டிருந்தாலும் சாகும் சூழ்நிலை வந்தால் ஒருமுறை பேசிவிடலாம் என்று சந்நியாசி விதிவிலக்கு வைத்திருந்தார்.

சிப்பாயின் ஈட்டி நெஞ்சைத் துளைத்ததும் சந்நியாசி சொன்னார்: "நீ என்னை ஏமாற்ற முடியாது. நிஜமான உன்னை நான் இன்னமும் பார்க்கிறேன்-தத் த்வம் அஸி-நீயே அது. நீ கொலைக்காரன் வடிவில் வந்தாய். உன்னை ஏற்கெனவே எனக்கு அடையாளம் தெரியும். நீ எந்த உருவமெடுத்தாலும் என்னிடமிருந்து தப்ப முடியாது."

சந்நியாசி தன்னைக் கொன்றவனிலும் கடவுளையே தரிசித்தார். அவர் உடனடியாக முக்தி பெற்றார். அவருக்குக் கிடைத்தது சாவில்லை, மோட்சம். ஈட்டி அவரைக் கொல்ல வில்லை, அவருக்குப் புத்துயிர் தந்தது; அமர வாழ்க்கை அளித்தது.

வெவ்வேறு வடிவில் காட்சி தரும் நகைகள் அடிப்படையில் ஒரே தங்கத்தினால் ஆனவை. வடிவ வேறுபாடு முக்கியமில்லை.

இந்த சுலோகத்தில் (139) இரண்டு விஷயங்கள் கூறப்படு கின்றன:

1) நீ பார்க்கும் காட்சி எல்லாம் நீயேதான். இந்த உலகம் ஒரு மாபெரும் கண்ணாடி. எல்லா உறவுகளிலும், சம்பந்தங்களிலும், சூழ்நிலைகளிலும் நீ உன்னைத்தான் வெவ்வேறு உருவங்களில் காண்கிறாய்.

2) உலகில் பலவாகத் தெரியும் அனைத்தின் உள்ளேயும் பரவி நிற்பது இருப்பது ஒரே தத்துவம்தான். ஒன்றின் அடுக்குகள்தான் இந்த அநேக வடிவங்கள். இவை கடலின் அலைகள் போன்றவை. சில சிற்றலைகள், சில பேரலைகள். அலைகள் அனைத்திலும் ஒரே கடலின் தண்ணீரே இருக்கிறது. கடலென்னும் போர்வையின் மடிப்புகளே இந்த அலைகள்.

நீ சிறு-சிறு உருவங்களிலிருந்து அவற்றை கடக்க முயலு. அடுத்ததாக, நீ உருவமற்றதைத் தேடத் தொடங்கு, முக

அமைப்பை அதிகம் ஆராயாதே. உடலழகை மதிப்பிடுவதில் கவனம் செலுத்தாதே. உள்ளே என்ன இருக்கிறது, எப்படி இருக்கிறது என்று பார். சொற்களின் வெளியொலியில் மயங்கி விடாதே. உள்ளே ஒலிக்கும் அர்த்தமெனும் வீணையின் ஒலியைக் கேள். இதனால் உன் உள்ளத்தில் சாந்தம் பரவும்.

அசாந்தி அல்லது அமைதியின்மை 'அநேகம்' என்னும் கண்ணோட்டத்தின்போதுதான் இருக்கிறது. அநேகத்தின் நிழல்தான் அமைதியின்மை. இருப்பதே ஒன்றுதான் எனில் அமைதியை இழக்கும் சந்தர்ப்பம் இருக்க முடியாது. மோதுவதற்குப் பிறிதொன்றும் இல்லையே. நீதான் எங்கும் காட்சி தருகிறாய். ஆகவே பய உணர்வு ஏற்படுவதற்கும் வழி இல்லாது போய்விடுகிறது. பிறகு சாந்தி என்னும் பூ மலர்வது சகஜம்தானே. இந்தப் பூ பாரிஜாதம்போல் தூய்மையானது, தெய்வீகமானது.

இரண்டு பூஜ்ஜியங்களைக் கூட்டினால் விடை இரண்டு பூஜ்ஜியங்கள் என ஆகாது. ஒரு பூஜ்ஜியம்தான் கிடைக்கும். இந்த 'ஒரு' என்பதுகூட பேச்சு வசதிக்காகத்தான். உண்மையில், ஒரு என்று சொல்வதற்குக் கூட ஒன்றும் மிஞ்சியிருக்காது. அத்து வைதத்தின் (இரண்டல்ல என்பதன்) அடிப்படையும் இதுதான். 'ஒன்று' என்று சொன்னால் உடனே அதற்கு ஓர் எல்லையும் அமைந்து விடுகிறது.

**பு**த்தரின் சமகாலத்தில்[1] அஜாதசத்ரு[2] மகத சாம்ராஜ்யத்தின் பேரரசராக விளங்கினார். அவர் தந்தை[3] புத்தரின் பக்தர். தந்தையைச் சிறையில் தள்ளிவிட்டு அஜாதசத்ரு அரியணை ஏறினார். அவர் முதலில் ஜைன மதத்தில் ஈடுபாடு கொண் டிருந்ததால் புத்தரை அவர் எதிர்த்து வந்தார்.

ஒருமுறை புத்தர் தலைநகரின்[4] வழியாக யாத்திரை சென்றுகொண்டிருந்தார். அமைச்சர்கள் அஜாதசத்ருவிடம் சென்று,

1. கி.மு.563-கி.மு.487.
2. ஆட்சிக்காலம் கி.மு.492-கி.மு.460.
3. பிம்பிசாரர்
4. கிரிவ்ரஜம் (ராஜகிருகம்) தற்கால ராஜ்கீர் (பிகார்) நாலந்தாவிலிருந்து 8 மைல். அல்லது அஜாதசத்ரு உருவாக்கிய பாடலிபுத்திரம் (பட்னா).

"தாங்கள் புத்தரைச் சந்திக்கப் போகாவிடில் அநாகரிகமாகத் தெரியும்; உசிதமற்றதாகத் தோன்றும்; கெடுதல் விளையும். மரியாதை நிமித்தம் புத்தரை நீங்கள் மேலோட்டமாகச் சந்தித்து வந்தால் போதும். புத்தரே இங்கு வந்தும் மன்னர் அவரைச் சந்திக்கப் போகவில்லை என்றால் நாட்டு மக்களுக்கு உங்களைப் பிடிக்காமல் போய்விடுகின்ற விபரீதம் நிகழும். உங்கள் தந்தையைச் சிறையிலிட்டதால் ஏற்பட்ட அவமானத்தைவிட கூடுதலான கெட்ட பெயர் புத்தரைச் சந்திக்காவிடில் உண்டாகும். நம் நாட்டில் ஆண்டியின் முன்னால் அரசன் பணிந்து வணங்குவது வேரூன்றிவிட்ட பண்பாடாகும்." என்றெல்லாம் விளக்கிக் கூறினார்கள்.

அமைச்சர்களின் பேச்சிலிருந்த நியாயத்தை அஜாதசத்ரு ஊகித்துக் கொண்டார். புத்தரைச் சந்திப்பதால் அரசியல் லாபம் ஏற்படும் என்பதுடன், தந்தைக்கு அவர் இழைத்த அநீதியை மக்கள் மன்னிக்கத் தொடங்குவார்கள். "இந்த அஜாதசத்ரு அவ்வளவு மோசமில்லை. புத்தரின் உபதேசத்தைக் கேட்கப் போனார். புத்தரின் திருவடிகளைத் தொட்டு வணங்கினார்." என்றெல்லாம் மக்கள் நெகிழ்ந்து கொடுக்க வாய்ப்புள்ளதையும் அஜாதசத்ரு ஊகித்தார். அவர் புத்தரை தரிசிக்கப் புறப்பட்டார்.

ஆனால் பாவம் செய்தவன் பயப்படுகின்றவனாக இருப்பான். அஜாதசத்ரு மனத்தளவில் தன் அமைச்சர்களிடமும் பயப்பட்டார். மற்றவர்களை மிரட்டுபவன் தனக்குள் நடுங்கிய படிதான் இருப்பான். கொலைகாரன் தன்னை யாராவது கொன்று விடுவார்களோ என்று எல்லாரையும் சந்தேகப்படுவான். பிறரை அடித்து உதைத்தவன் தனக்கு அடி, உதை விழாமலிருக்க முன்னேற்பாடுகள் செய்வான்.

புத்தர் அடர்த்தியான மரங்களால் சூழப்பட்ட ஓரிடத்தில் முகாமிட்டுத் தங்கியிருந்தார். அந்த இடத்தை நெருங்கியதும் அஜாதசத்ரு அமைச்சர்களை அழைத்தார். "நீங்கள் அங்கே பத்தாயிரம் பிட்சுகள் குழுமியிருப்பதாகச் சொன்னீர்களே. ஆனால் ஒரு சப்தமும் கேட்கவில்லையே! ஏதோ மோசடி, ஏதோ சதி நடக்கும்போல் தோன்றுகிறதே." என்று அவர்களிடம்

சந்தேகம் கூறினார். எதற்கும் தயாராக வாளை எடுத்துக் கையில் பிடித்துக் கொண்டார்.

அமைச்சர்கள் கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டனர் "அரசே, தாங்கள் சூழ்நிலையைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். உங்களுக்கு புத்தரைப் பற்றி சரிவரத் தெரியாது. அவரைச் சூழ்ந்துள்ள பத்தாயிரம் பேரின் மனநிலையையும் நீங்கள் அறிந்திருக்கவில்லை. சற்றுப் பொறுமையாக இருங்கள். இங்கே யாரும் சதி செய்யமாட்டார்கள்," என்று எடுத்துக்கூறினர்.

ஆனாலும் அஜாதசத்ரு கையில் உருவிய வாளுடன்தான் புத்தரை அணுகினார். சுற்றிலுமிருப்பவர்கள் பிட்சுகள்தான் என்று உறுதியானதும் அவர் வாளை இடையில் செருகிக்கொண்டார். அவர் புத்தரைப் பார்த்ததுமே பின்வருமாறு சொன்னார்: "இந்தக் காட்சியைக் கண்டு எனக்கு மிகுந்த திகைப்பு உண்டாகிறது. பத்தாயிரம் பேர் ஓரிடத்தில் திரண்டால் கடைத்தெரு போலல்லவா பலத்த ஆரவாரமாக இருக்க வேண்டும். ஆனால் ஓர் ஓசை எழாதபடி எல்லாரும் இப்படி மௌனமாக உட்கார்ந்திருப்பது அதிசயமாக உள்ளதே!"

புத்தர் தெளிவுபடுத்தினார்: "இங்கே ஒருவர்தான் இருந்தாலும் பத்தாயிரம் பேர் இருந்தாலும் வித்தியாசம் எதுவும் கிடையாது. சூன்யங்கள் (பூஜ்யங்கள்) சேரா. இவர்கள் அனைவரும் தியானத்தில் ஈடுபட்டுள்ளனர். தற்சமயம் அவர்கள் சூன்ய நிலையில் உள்ளனர். அவர்களை இருந்தும் இல்லாதவர்கள் என்றும் கூறலாம்."

'நீ' என்பவன் எப்பொழுது இல்லாமல் போகிறானோ, அந்த சமயம் உனக்கு எதுவுமே கண்ணில் படாது. பார்ப்பவனும் எவனுமில்லை, பார்க்கப்படுவதும் எதுவுமில்லை என்னும் விசித்திரமான நிலை இது. காட்சியும் காண்பவனும் காணாமல் போகின்றனர். அறிபவனும் அறியப்படுவதும் காணாமல் போகின்றனர். மிஞ்சியிருப்பதுதான் தரிசனம் என்பது.

உலகப் பேச்சு வழக்கில் 'தரிசனம்' என்பது காண்பவனுக்கும் காட்சிக்கும் இடையே நிகழும் அனுபவத்தைத்

தெரிவிக்கிறது. அறிபவனுக்கும் அறியப்படுவதற்கும் இடையில் தோன்றும் அனுபவம் ஞானம் எனப்படுகிறது. இதெல்லாம் நடைமுறை வாழ்க்கையில் பெறப்படும் அர்த்தங்கள்.

ஆன்மிக மொழிநடையில் இவை வேறு பொருள் தருகின்றன. காண்பவனும் காட்சியும் இல்லாமல் போன சூழ்நிலையில் 'தரிசனம்' (காணுதல்) மட்டும் மிஞ்சி நிற்கிறது. இது சுத்தமான தரிசனம். அறிபவனும் அறியப்படுவதும் இல்லாமல் போகும் சூழ்நிலையில் ஞானம் (அறிதல்) மட்டுமே மிஞ்சுகிறது. இவ்வகை தரிசனம், இவ்வகை ஞானம் முக்தி நல்குகிறது. ஆகவே அஷ்டாவக்ரர், 'நீ எதைப் பார்க்கிறாயோ அதில் நீதான் உள்ளாய்' என்கிறார்.

இக்கருத்து ஒரு பெரியவர் கூறுகிறார் என்பதற்காக ஒப்புக்கொள்ள வேண்டிய கொள்கையன்று. இதை கணித இயலின் சூத்திரம் போல எதிர்ப்புத் தெரிவிக்காமல் பின்பற்ற வேண்டியதும் இல்லை. உயிரோட்டமுள்ள பரிசோதனைகள் மூலம் இக்கருத்து சரியென நீ தெரிந்து கொள்வாய். நீ புதிய கோணத்திலிருந்து வாழ்க்கைக்குள் எட்டிப் பார்.

ஒருவன் உன்னைப் பார்த்து வசவு வார்த்தைகள் கூறுகிறான். அவனைப் போக்கிரி, துஷ்டன் என நீ நினைக்கிறாய். இன்னும் ஆழமாக யோசி. அவனது துஷ்டத்தனத்தில் உனது சுபாவமும் கலந்திருப்பது உனக்குப் பிடிபடவில்லையா? முதலில் உனது திமிரான போக்கு அவனைக் காயப்படுத்தியிருக்கலாம் அல்லவா? அவன் திட்டியது உனது திமிர் நடந்தையின் எதிரொலியாகவும் இருக்கக்கூடும்.

உன்னிடம் அகங்காரம் இல்லாது போனால் உன்னை யாரும் அவமதிக்க முடியாது. அவமதிக்க காரணமும் இருக்க முடியாது. நீ வாழ்க்கையில் ஒரு சம்பவம் சாதாரணமாகவே கவனித் திருப்பாய். ஒருமுறை கால் தடுக்கி அடிபட்டுவிட்டால் பிறகு, பட்ட காலிலேயே படும் என்றபடி, அன்று முழுதும் அங்கே மீண்டும்-மீண்டும் அடிபடும். வாசல்படி தடுக்கும். கதவைத் திறந்தால் இடிக்கும். செருப்பு அணிந்தால் உறுத்தும். எதிரே வருபவர் தவறுதலாக அந்த இடத்தில் மிதிப்பார். இதென்ன

இன்றைக்குத் தொடர்ந்து என்னைக் கஷ்டப்படுத்த வேண்டும் என்று பொருட்களும், ஜனங்களும் சபதமா செய்திருக்கிறார்களென்று நீ திகைப்பாய்.

உண்மையில் யாரும், எதுவும் அப்படி சபதம் செய்திருக்கவில்லை. இன்று முதல் முறை உனக்குத் தடுக்கியது யாருக்குத் தான் தெரியும்? நேற்று யாராவது அந்த இடத்தில் மிதித்திருந்தால் அவ்வளவாக உணர்ந்திருக்க மாட்டாய். இன்றே எதிரொலிபோல் வலி தோன்றியது. ஏனெனில் ஒருமுறை ஏற்கெனவே அடி பட்டிருந்தது.

அகங்காரம் (திமிர்) காயம் போன்றது. நீதான் காயத்துடன் அங்குமிங்கும் செல்கிறாய். ஒருவர் சற்று உரசினாலும் உனக்கு வலி உண்டாகிறது. யாரும் உனக்கு வலி விளைவிக்க வேண்டும் என்று விரும்பி இடிக்கவில்லை. யாருக்கு அதற்கெல்லாம் நேரம் இருக்கிறது. ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையின் சிக்கல்களில் திணறிக் கொண்டிருக்கும்போது, உன்னை அவமதிக்க அவர்களுக்கு நேரமோ, வசதியோ எங்கே இருக்கிறது?

இதனால்தான் நீ ஒருவனிடம் கோபமாக, "நீ என்னைக் கேவலப்படுத்திவிட்டாய்," என்று கூறும்போது அவன் திடுக்கிடுகிறான். "நான் அப்படி ஒன்றும் சொல்லவில்லையே," என்று அவன் உன்னை சமாதானப்படுத்துகிறான். உன் விரோதிகள்தான் அப்படி நடந்து கொள்வார்கள் என்றில்லை. நமக்கு பிரியமானவர்களுடன் கூட தினமும் இப்படி மோதல் நிகழ்கிறது.

கணவன் ஒன்று சொல்லுவான். மனைவி காதில் அது விழுகிறது. ஆனால் அவள் தப்பர்த்தம் செய்துகொள்கிறாள். கணவன் விளக்கம் தருகிறான். "முதல்ல தப்பா சொல்லிட்டு இப்போ ஏன் மாற்றிப் பேசறீங்க?" என்று அவள் கொதிப்பாள். இதேபோல் மனைவி ஒன்று சொல்கிறாள். கணவன் தப்பர்த்தம் எடுத்துக் கொள்கிறான். காரணம் — சொல்லுக்கான அர்த்தத்தை நீ உனக்குள்ளேயிருந்து பெறுகிறாய். காதில் விழுவது ஒன்று, மூளை கிரகிப்பது வேறு. அடிபட்ட இடத்தில்தான் மீண்டும் இடிக்கிறது. எனினும் முதலில் உனக்குத்தானே அடிபட்டது.

மற்றவை பின்விளைவுகள். தம்மை அறியாமல் ஏற்பட்டவை. ஆனால் அவற்றின் மீது சினம் கொள்கிறாய்.

ஒரு சிறுவனுக்கு இடது கையில் கட்டி. ஆபரேஷன் நடந்தது. டாக்டர் கட்டுப்போட ஆரம்பித்தபோது சிறுவன் இடக்கையை முதுகுப் பக்கமாக மறைத்துக்கொண்டு வலக்கையை முன்னால் நீட்டினான் டாக்டர் கோபித்தார். "ஏண்டா, உனக்கென்ன பைத்தியமா? இடக்கை காயத்தை அப்படியே திறந்துவிடலாமா? மறுபடியும் இடிக்காமலிருக்க இடக்கையில்தான் கட்டுப்போட வேண்டும்," என்றார்.

"சார்! உங்களுக்குப் பள்ளிக்கூடப் பசங்க விஷயம் தெரியாது. எங்கே கட்டுப்போட்டிருக்கோ அங்கேயே வேணுமினு வந்து இடிப்பானுங்க. வலக்கையில கட்டுப் போட்டுட் டீங்கன்னா அவங்க என் இடக்கையை பாக்கவே மாட்டானுங்க," என்று சிறுவன் விளக்கினான்.

சிறுவன் சொன்னது சரி. அனுபவ அடிப்படையில்தான் அப்படிக் கூறுகிறான்.

**எ**ப்பொருளிலும் நீ காண்பது உனது பிரதிபிம்பம்தான். நீ உன்னையே பார்த்துக் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கிறாய். நீ எது செய்தாலும், என்ன பேசினாலும், உன்னிடம் திரும்பிவருவது நீதான். உன்னால் ஏற்பட்ட முன்விளைவுதான் பிறகு நேர்ந்த பின்விளைவுகளுக்கு காரணம்.

வெளியுலகில் நீ எண்ண முடியாத அளவிற்கு உருவங்கள் காண்கிறாய். அவை அடிப்படையில் ஒரே கடலிலிருந்து எழும் அலைகள் போன்றவையே ஆகும். அந்த அலைகளில் நீயும் ஒருவன். இந்த எல்லா அலைகளையும் அலைக்கழிக்கின்றதே ஒரு சக்தி அது அலைகளின் உள்ளேயே ஒளிந்துள்ளது. எல்லாவற்றிற்கும் ஆதாரம் அந்த சக்தியே.

'இது நான், அது நான்; இது நானல்லன், அது நானல்லன்' என்று பிரிப்பதைக் கைவிடு. எல்லாமும் ஆத்மா என்று நிச்சயமாக அறி. எந்த தீவிர விருப்பமும் எதிர்பார்ப்பும் இல்லாதுபோய் சுகமாக இரு.' **(சுலோகம் 140)**

**எ**ன்னிடம் வரும் சிலர் அடிப்படையில் தாங்கள் யார் எனத் தெரியவில்லை என்கின்றனர். இதை அறிந்துகொள்ள வழி கூறுமாறு என்னிடம் வேண்டுகின்றனர்.

நீ உன்னைப் பற்றி ஒரு வரையறை அறிய விரும்புவதாகத் தெரிகிறது. நீ ஓர் எல்லைக்குள் கட்டுப்பட விரும்புகிறாய். பிறகு 'இதுதான் நான்' என அறிவிக்க நினைக்கிறாய். சமூகத்திலும் சரி, ஆன்மிகத்திலும் சரி, 'நான் யார்? எனது நிலை என்ன?' என்றறிய முயலுகிறோம்.

கூட்டத்தில் நீ ஒருவனை பலமாக இடித்துவிட்டால், "ஏன் இப்படி இடிக்கிறே? நான் யார் தெரியுமா? மன்னிப்புக் கேள். இல்லாட்டா சரியான பதிலடி கிடைக்கும்." என்று அவன் உன்னைப் பார்த்துச் சீறுகிறான்.

ஆனால் உண்மையில் அவனுக்கும் தான் யார் என்று தெரியாது! யாருக்குத்தான் தெரியும் தான் யார் என்று? 'நான் இந்து' என்கிறான் ஒருவன். ஆனால் அவன் பிறக்கும்போதே இந்துவாக இல்லையே. கையில் கீதையை வைத்துக்கொண்டு பிறக்கவில்லையே. வெறும் கையுடன்தானே வந்தாய். கண்ணில் தெரியும்படி உன் மொட்டைத் தலையில் இந்து-முஸ்லிம்-கிறிஸ்தவர் என்று எழுதப்பட்டிருக்கவில்லை. நீ எதுவும் எழுதப்படாத வெள்ளைக் காகிதம் போல் இவ்வுலகிற்கு வந்தாய். வேறு யாரோதான் உன் மேல் இந்து, முஸ்லிம் என்றெல்லாம் லேபில் ஒட்டினார்கள். இப்படி மற்றவர் எழுதியதை நீ உனது ஆளுமையாக எடுத்துக்கொண்டு விட்டாயே. ஆனால் உன்மேல் அடையாளம் பொறித்தவனும் தான் என்ன செய்கிறோம் என்பதை அறிந்திருக்கவில்லை. அவனுடைய முன்னோர்கள் தலைமுறைகளாக இந்து எனப்பட்டதால் நீ பிறந்ததும் உன்மேலும் அதே முத்திரை குத்தப்பட்டது. மற்றவர்கள் சொல்வதால் நீயும் திருப்பி உன்னை இந்து என்கிறாய். இது நீ சுயமாக யோசித்து வைத்துக்கொண்ட அடையாளம் இல்லையே.

ஒருவன் உன்னை அழகானவன் என்று சொல்லிக் கொள்கிறான். இதுவும் உன்னைப் பற்றி இன்னொருவன் சொன்னதுதான். உடனே அந்தச் சொல்லை நீ பிடித்துக்

கொண்டாய். உன்னை அழகானவன் என்று கூறியது அந்த மனிதனின் கருத்தாக இருக்கலாம் அல்லது அந்தப் புகழ்ச்சியின் பின்னணியில் வேறு காரணங்கள் இருக்கலாம்.

அழகு குறித்து உலகில் வெவ்வேறு மதிப்பீடுகள் நிலவுகின்றன. சீனாவில் புகழப்படும் முக அழகை இந்தியாவில் யாரும் அழகென நினைக்க மாட்டார்கள். ஆப்பிரிக்க அழகியை அமெரிக்காவில் அழகியெனக் கருதமாட்டார்கள். இங்கிலாந்தில் வெளிறிப்போன, மங்கலான முகத்தை அழகென்பார்கள். ஆப்பிரிக்காவில் அதை நோயாளியின் முகமென நினைப்பார்கள்.

அழகானவன் யார்? விகாரமானவன் யார்? இதை யார் முடிவு செய்கிறார்கள்? யார் சொல்வது சரி? உன் நண்பன் ஒரு பெண்ணைப் பேரழகி என்று காதலிக்கிறான். நீ அவளைப் பார்க்க நேரிடுகிறது. அவளிடம் அழகம்சம் ஒன்றுமே காணப்பட வில்லையே என்று நீ நெற்றியில் தட்டிக்கொள்கிறாய்.

மோக வசப்பட்டுள்ள அவனோ, "நண்பா, என் இதய சுந்தரி எனக்குக் கிடைத்துவிட்டாளப்பா. பல பிறவிகளாக இவளைத் தேடியபடி இருந்தேன். இப்பிறவியில்தான் இவளைச் சந்திக்க முடிந்தது. நாங்கள் ஒருவர் மற்றொருவருக்காகவே படைக்கப் பட்டவர்கள். நாங்கள் பொருத்தமான ஜோடி. இனி நான் எனக்கேற்ற ஜோடியைத் தேடவேண்டியதில்லை. இவள்தான் என் கடைசி முகாம்," என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறுகிறான்.

நீ திகைப்படைகிறாய். 'நண்பனுக்கு புத்தி மாறாட்டமா? சாதாரண, சராசரிப் பெண்ணைப் பேரழகி என்கிறானே!' என்று நீ யோசிக்கிறாய். ஆனால் அழகற்றவள் என நீ நினைப்பது உனது அபிப்பிராயம் மாத்திரமே. இன்னொருவரின் கண்ணோட்டம் வேறுவிதமாக இருக்கலாம்.

இதேபோல் உன்னை ஒருவன் அறிவாளியெனப் புகழலாம். ஒவ்வொரு ஜோடி பெற்றோரும் தங்கள் மகன்-மகளைப் பற்றி அப்படித்தான் நினைக்கிறார்கள். வையகத்தில் இப்படி ஒரு பிள்ளையைக் கண்டதில்லை என்று நெகிழ்கிறார்கள். அந்த மகனுக்கும் தான் ஓர் அறிவாளி என்னும் பிரமை ஏற்படுகிறது.

அந்த கர்வத்துடன் அவன் தெருவில் இறங்குகிறான். பாவம்! யாரும் அவனைப் பொருட்படுத்துவதில்லை. அப்போது அவன் வேதனைப்படுகிறான். கடவுள் கொடுத்த அந்த மகன் இணையற்றவன் எனப் பெற்றோர் நினைத்தாலும் உலகம் உதாசீனப்படுத்தி விடுகிறது.

பெற்றோர்கள் எப்போதும் தங்கள் மகன்-மகள்கள் பற்றிய பேச்சிலேயே ஈடுபடுகிறார்கள். அவர்களைப் புகழ்ந்தபடி இருக்கிறார்கள். சில சமயம் குழந்தைகளைக் குறை கூறுவதுபோல் பேசினாலும் அதில் மறைமுகமான புகழ்ச்சி இருக்கும். 'என் குழந்தை வாலு, போக்கிரி, பொல்லாது, குட்டிப் பிசாசு' என்று அவர்கள் கூறும்போது அதில் பெருமிதம் மறைந்திருக்கிறது.

உன்னைப் பற்றி உன் பெற்றோர் சில மதிப்பீடுகளை முன்வைக்கின்றனர். நீ படித்த கல்விநிலையங்கள், அவை தந்த சான்றிதழ்கள், சமூகம் உன்னைப் பற்றிக் கூறியவை, வாழ்க்கையில் பெற்ற அனுபவங்கள் முதலியவற்றின் அடிப்படையில் நீ யார் என்று உன்னை வரையறைப்படுத்துகிறாய்.

நாம் உடலுடன் சேர்ந்தே பிறந்தோம். நாம் உலகில் முதல்முறையாகக் கண் திறந்தபோது உடலுடனேயே நம்மைக் கண்டோம். ஆகவே நாம் என்பது உடல் என நினைப்பது இயற்கைதான். சற்று வளர்ந்தபின், உடலை இயக்குவது மனம் என்பது தெரியவருகிறது. இதனால் நாம் என்பது மனம் என்றும், மனம் சேர்ந்த உடல் என்றும் நினைக்கிறோம்.

ஆனால் இந்த இரண்டும் நாமல்ல. நாம் என்பது எந்த வரையறைக்குள்ளும் அடங்காதது. நாம் எல்லைகளற்ற திறந்த வானம் போன்றவர்கள். ஆகவே, இதுவோ-அதுவோ நான், இதுவோ-அதுவோ நானல்லன் என்று பிரித்துப் பார்ப்பதைக் கைவிட வேண்டும். இப்படிப் பிரிப்பதுதான் நம்மை மையத்தை விட்டு அலையச் செய்கிறது.

இந்த சுலோகத்தில் கைவிடுதல் என்பதற்கு 'த்யஜ' என்று நிறுத்திக்கொள்ளாமல் 'ஸந்த்யஜ' என்று கூறப்படுகிறது. ஆகவே இதன் பொருள் தியாகம் மட்டுமல்ல, முழுமையான தியாகம்

என்பதாகும். முழுமை என்பதையும் சேர்க்க வேண்டியுள்ளது. ஏனெனில் சில சமயம் பிடிவாதமான மனநிலையில் தியாகம் செய்கிறோம். சில சமயம் அகங்காரம் மேலிட்டு தியாகம் செய்கிறோம்.

உதாரணமாக, நீ ஒருவரிடம் தானம் (நிதியுதவி) கேட்டுச் செல்கிறாய். எடுத்த எடுப்பிலேயே நீ பணம் கேட்டுவிடுவதில்லை. ஏனெனில் உடனே கேட்டால் அவர் மறுக்கலாம் அல்லது சிறிய தொகையொன்றைத் தூக்கி எறியலாம். ஆகவே முதலில் நீ அவரைப் புகழ்கிறாய். வள்ளல் என்று உயர்த்திப் பேசி அவரது அகங்காரத்திற்குத் தீனி இடுகிறாய். "நீங்கள் இல்லாமல் உலகில் அறம் பிழைக்காது" என்கிறாய். இவ்வாறெல்லாம் அவரது மனத்தை இளக்கியபின் விஷயத்துக்கு வருகிறாய். கோயிலில் கும்பாபிஷேகத்திற்கு அவரது உதவி அவசியம் தேவை என்பதைச் சுட்டிக்காட்டுகிறாய். இந்த மிகைப் புகழ்ச்சிக்கு அந்த ஆள் மயங்குகிறார். தானம் கேட்டால் ஒரு ரூபாய்தான் தருகின்ற அவர் இப்போது நூறு ரூபாய் தருகிறார். தானம் என்பது தியாகம் தான். இவர் நூறு ரூபாய் கொடுத்தபோதிலும் முழுமையான தியாகம் இல்லை. அவர் கூடுதலாகத் தந்தமை அவரது அகங்காரத்தின் வெளிப்பாடேயாகும்.

ஓர் அரசியல்வாதி ஆப்பிரிக்காவில் ஒரு காட்டில் வேட்டையாடச் சென்றார். காட்டுவாசிகள் அவரைப் பிடித்துக் கொண்டுவிட்டனர். அவர்கள் மனிதர்களைச் சாப்பிடுபவர்கள்! அந்த அரசியல்வாதியை சீக்கிரம் சாப்பிட வேண்டுமென அவர்கள் துடித்தார்கள். அடுப்பு மூட்டப்பட்டது. அண்டா கொண்டு வரப்பட்டது. காட்டுவாசிகளின் தலைவன் அவசரப்படாமல் அரசியல்வாதியைப் புகழ்ந்துதள்ளினான். நேரம் ஓடிக்கொண்டே இருந்தது. பறை-தமுக்கு முழங்கின. சாப்பிடும் வேளை நெருங்கிவிட்டது. பல நாளாக நரமாமிசம் கிடைக்காததால் இப்போது காட்டுவாசிகள் பரபரப்பாயிருந்தார்கள்.

அவர்கள் தலைவனிடம், "ஏன் தாமதிக்கிறீங்க? இந்த ஆளைத் தூக்கி அண்டாவில போட வேண்டியதுதானே," என்று குறைப்பட்டனர்.

“கொஞ்சம் பொறுங்கள். இந்த ஆளு அரசியல்வாதி. புகழாசை மிகுந்தவன். இவனைப் புகழப் புகழ ஊதிப் போவான். இப்போது கொஞ்சம் ஒல்லியாகத் தெரிகிறான். இவனைப் புகழ்ந்தால் இவன் மனம் மட்டும் இல்லை, உடலும் விரிந்து பூரிக்கும். பிறகு இவனை நிறையப் பேர் சாப்பிடலாம்; நிறையவும் சாப்பிடலாம்,” என்று தலைவன் அவர்களை சமாதானப் படுத்தினான்.

உனது அகங்கார புத்தியும் புகழ்ச்சிக்கு மயங்கி தியாகம் செய்ய தயாராகலாம். சந்நியாசிகளின் ஊர்வலம் (பட்டின பிரவேசம்) பார்த்திருப்பாய். அந்த ஆடம்பரத்தையும் கோலா கலத்தையும் கண்டு வியந்திருப்பாய். இம்மாதிரி ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படும் அதிர்ஷ்டம் உனக்குக் கிடைக்குமா என்று நீயும் சிறிது நேரம் ஏங்குவாய். உலகப் பொருட்களில் அப்படி என்னதான் இருக்கிறது? எல்லாவற்றையும் உதறித்தள்ளி சாமியாராகி விட்டால் உனக்கும் இத்தகைய வரவேற்பு கிடைக்குமென நினைப்பாய்.

இதேபோல்தான் உண்ணாநோன்பும் (உபவாசமும்). சிலர் தொடர்ந்து பல நாட்கள் சாப்பிடாமல் விரதம் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பாராட்டுக் கிடைக்கிறது. அவர்களை பலர் வணங்கிச் செல்கிறார்கள். அவர்களுக்கு சேவை செய்ய முன் வருகிறார்கள். அவர்களைப் பார்த்துச் சிறுவயதினரும் அவர்கள் அருகில் அமர்ந்து சிறிது நேரம் உபவாசம் இருக்கிறார்கள்.

உன் அகங்காரம் புகழால் மயங்கி ஏதேனும் தியாகம் மேற்கொள்ளப்பட்டால் அது முழுமையான அல்லது பூர்ண தியாகம் ஆகாது. உள்ளே ஆன்மப் புரட்சி நிகழாது. ஏதேனும் காரணமின்றி தியாகம் நிகழ வேண்டும். சாரமற்றது என உணர்ந்து ஒன்றைத் தியாகம் செய்ய வேண்டும். செல்வத்தைத் துறந்தால் கௌரவம் கிடைக்கும், சுவர்க்கம் கிடைக்கும், புண்ணியம் சேரும் என்றெல்லாம் நினைத்தால் அந்த தியாகம் முழுமையானது அன்று. செல்வத்தில் சாரம் இல்லை என்பதற்காக விடுதல்தான் தியாகம். மற்ற காரணங்களில் செல்வத்தின்மீது பற்று நீடிக்கிறது.

உனக்கு ஒரு வைரம் கிடைக்கிறது. ஞானி அதைப் பார்த்து அது ஒருவகைக் கல் மட்டுமே என்கிறார். நீ அவர் சொன்னதன் உண்மையை உணர்ந்து வைரத்தை எறிந்துவிடுகிறாய். இது உண்மையான தியாகம்.

**பொ**ற்கொல்லர் ஒருவர் இறந்துபோனார். அவர் மனைவி தன் மகனை இன்னொரு பொற்கொல்லரிடம் அனுப்பினாள். மகன் வயதில் சிறியவன். தொழில் அறியாதவன். வீட்டில் பெட்டியில் வைத்திருந்த வைரம்-ரத்தினங்களை இன்னொரு பொற்கொல்லர் மூலம் தரம் மதிப்பிட்டு விற்றுவிடலாம் என்று இறந்தவர் மனைவி நினைத்தாள்.

அவளது அழைப்பின் பேரில் வந்த பொற்கொல்லர் கற்களை பரீட்சித்தபின், "இப்போது மார்க்கெட் மந்தமாக உள்ளது. விலை உயரட்டும். அப்போது விற்றுவிடலாம். மகனை என்னிடம் அனுப்புங்கள். அவன் பொற்கொல்லர் தொழில் கற்றுக் கொள்ளட்டும்," என்றார்.

இரண்டு-மூன்று ஆண்டுகள் ஆன பின்னரும் அவர் வைரங்களை விற்றுத் தர ஒப்புக்கொள்ளவில்லை. இப்போது நல்ல விலைக்குப் போகாது என்று கூறி விற்பனையைத் தள்ளிப் போட்டார். மூன்று ஆண்டுகள் முடிந்தன. சிறுவன் பொற்கொல்லர் தொழிலில் முழுப் பயிற்சி பெற்றுவிட்டான்.

பொற்கொல்லரும் அவனும் வீடு திரும்பியதும் அவர் பொக்கிஷப் பெட்டியைத் திறந்து பார்க்கச் சொன்னார். உள்ளேயிருந்தவற்றை பரிசோதித்த மகன் சிரித்தான். அவற்றை எடுத்து வெளியே குப்பையில் எறிந்தான். "ஏண்டா, உனக்கு பைத்தியமா பிடித்துவிட்டது? நீ என்ன காரியம் செய்தாய்? சுயநினைவோடுதான் அவற்றை எறிந்தாயா?" என்று தாயார் அவனைப் பார்த்துக் கூச்சலிட்டாள்.

மகன் மறுத்தான். "இல்லைம்மா. இப்போது முழு சுயநினைவோடுதான் இருக்கேன். அப்பாவின் சிநேகிதரான இவர் விற்பனையை ஏன் தள்ளிப்போட்டபடியே சென்றார் என்பது இப்போது புரிந்தது. இவை வைரமோ, ரத்தினங்களோ இல்லை.

பலவகை நிறமான சாதாரண கூழாங்கற்கள். திருடர்களை ஏமாற்ற அப்பா இப்படிச் செய்திருப்பார். ஆனால் இந்த பொற்கொல்லர் சித்தப்பா முதல் முறை வந்தபோதே அதைச் சொல்லியிருந்தால் நாம் நம்பியிருக்கமாட்டோம். அப்போது எனக்குக் கற்களைப் பற்றி தொழிலறிவு இருக்கவில்லை. இவர் இன்னும் விலை குறையு மென எதிர்பார்த்து நம்மை ஏமாற்றுவதாக நினைத்திருப்போம். இந்த மூன்றாண்டு பயிற்சியினால் இவை சாதாரணக் கற்கள்தாம் என்பதை நானே கண்டுபிடித்துவிட முடிந்தது. இவை வைரங் களில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது." என்று நிலைமையை விளக்கினான். இவன் தூக்கி எறிந்த செயல் அனுபவ அடிப்படையில் இருந்ததால் முழுமையான தியாகம் எனப்படும்.

ஒன்றைக் கைவிடுவது இன்னொன்றைப் பெறுவதற்காக என்றால் அது தியாகத்தின் வகையில் அடங்காது. அது வியாபாரம் என்றே கருதப்படும். சாரமற்றது என்பதை உணர்ந்து ஒன்றைக் கைவிடுவதே முழுத்தியாகம் ஆகும். காலையில் வீட்டைப் பெருக்கி, குப்பையை வெளியே எறிந்துவிட்டு வருகிறாய். இது தியாகமில்லை. இதைச் செய்தித்தாளில் விளம்பரப்படுத்திக் கொள்ள முடியாது. இச்செயலின் பின்னணியில் வீடு சுத்தமாக வேண்டுமென்ற எதிர்பார்ப்பு உள்ளது. அவசியம் என நீ கருதியவற்றையும் குப்பையை எறிவதுபோல் உதறித் தள்ளுவது பூரண தியாகமாகும்.

ஒருவன் தன்னை உடல் எனக் கருதுகிறான். இன்னொருவன் தினமும் 'நான் உடல் இல்லை, நான் ஆத்மா' என்று மந்திரம் ஓதுகிறான். இந்த இருவரிடையேயும் வேறுபாடு கிடையாது. 'நான் உடல் இல்லை' என்று நீ சொல்வதே நீ இன்னும் உடல் நினைவாக இருக்கிறாய் என்பதை நிரூபிக்கிறது. ஒருவன் தான் உடலில்லை என நினைத்தால் அங்கேயே விஷயம் முடிந்துபோகிறது. அதை எதற்கு மீண்டும் உரக்கச் சொல்ல வேண்டும்? ஓர் உண்மையை இரண்டாம் முறையாகச் சொல்ல வேண்டிய தேவையில்லையே. பொய்யைத்தான் பலமுறை வலியுறுத்திச் சொல்வது வழக்கம்.

பூரண தியாகம் செய்கையில் அறிந்தே, உணர்ந்தே செய்ய வேண்டும். இன்னொருவர் சொன்னார் என்பதற்காக தியாகம் செய்யக்கூடாது. அது மனமொப்பிச் செய்த தியாகமாகாது. நீயே பரீட்சிப்பவனாக, பொற்கொல்லராக ஆகிவிடு. சுய அனுபவத்தால், சுயமான முடிவால், கைவிடுவதே முழுமையான தியாகம் ஆகும். ஏதோ காரணத்தால், ஏதோ எதிர்பார்த்துத் தியாகம் செய்வது பலிக்காது. இச்செயல் வாசல் வழியாக வெளியேறி, பின்புற வாசல் வழியாக உள்ளே திரும்பி விடுவது போன்றதாகும்.

மனத்திற்கு ஒரு தனி குணம் உண்டு. அது எல்லாவற் றையும் பிரித்துவிடும் பழக்கமுடையது. சில நூற்றாண்டுகள் முன்புவரை விஞ்ஞானமும் தத்துவ சாஸ்திரம் (பிலாஸபி) என்றே அழைக்கப்பட்டது. பிறகு இவை பிரிந்தன. விஞ்ஞானம் பிரிந்து இயற்பியல், வேதியல், உயிர் வேதியல், உயிரியல் என்னும் வகைகள் தோன்றின. மருத்துவம், பொறியியல் என்னும் பெரிய பிரிவுகள் ஏற்பட்டன. வேதியியலிலும் பல பிரிவுகள். மருத்துவ இயலிலோ ஏராளமான துணை இயல்கள். ஒவ்வோர் இயலிலும் பல வகை வல்லுநர். விரைவில் வலக்கண், இடக்கண் ஆகியவற்றிற்கும் தனித்தனிச் சிறப்பு மருத்துவர்கள் ஏற்படலாம்!

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு பல வகை நோய்களுக்கும் ஒரே மருத்துவரே சிகிச்சை தந்தார்; குணப்படுத்தவும் செய்தார். அந்த நிலை இப்போதில்லை. முழு மனித உடலுக்குமான மருத்துவர்கள் இப்போது மிக மிகக் குறைவு. ஒவ்வொரு மருத்துவரும் உடலின் ஓர் உறுப்பிற்கு மட்டும் வல்லுநராக உள்ளார். கண், காது, தொண்டை, வயிறு என்று ஒவ்வோர் உறுப்பிற்கும் தனி மருத்துவர் சிகிச்சை தருகிறார். உனக்குள்ளதோ ஓர் உடல்தான். உறுப்புகள் எல்லாம் பிரிக்க முடியாதபடி அதில் இணைந்துள்ளன. ஆனால் ஒரே உடலுக்குப் பல மருத்துவர்கள்.

வயிற்றில் கோளாறு. சிகிச்சை பெறுகிறாய். பின்விளைவாகக் கண்ணில் கோளாறு தோன்றுகிறது. அடுத்து கண்ணுக்கு சிகிச்சை. பக்க விளைவாகக் காதில் பாதிப்பு, காது சிகிச்சையின்போது, டான்சில் (தொண்டைச் சதை) கோளாறு. டான்சிலை நீக்கினால், அபெண்டிக்ஸ் (குடல்வால்) பிரச்சினை வந்து நிற்கிறது.

மருத்துவத்தை ஆழ்ந்து பயின்றவர்கள் ஓர் ஆபத்தான சூழ்நிலை உருவாகி வருகிறது என்கிறார்கள். மனித உடல் ஒரே அலகு (யூனிட்). மருத்துவ இயலும் அதற்கேற்ப ஒரே அலகாக ஒட்டுமொத்தமாக (ஹோலிஸ்டிக்) செயல்பட வேண்டும். துண்டு துண்டாக வைத்தியம் பார்த்தால், ஒரு துண்டில் நிகழ்வது மற்றொன்றிற்குத் தெரிவதில்லை. ஒன்றின் குறையை நீக்கும்போது மற்றொன்று பாதிக்கப்படுவதைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. அதை வேறு மருத்துவர் கவனிப்பாரெனக் கருதப்படுகிறது. நோய்களுக்கு மட்டுமே மருத்துவம் செய்யப் படுகிறது. நோயாளியைப் பற்றி அக்கறை கொள்வதில்லை. முழுமையாக உள்ள மனிதன் இப்படி மருத்துவ இயலில் துண்டுகளாகப் பிரிக்கப்படுகிறான். இந்தத் துண்டுகளை இணைத்துப் பார்க்கும் மருத்துவர்கள் இல்லாமல் போய்விட்டனர்.

இயற்பியல் ஒரு திசையிலும் வேதியல் இன்னொரு திசையிலுமாக நடைபோடுகின்றன. இவற்றின் மூலம் கிடைக்கும் முடிவுகளை இணைத்து ஆராயக்கூடியவர் யாருமில்லை. இவற்றிடையே ஒன்றிப்பு (ஸிந்தஸிஸ்) ஏற்படுவதில்லை. ஒவ்வொரு விஞ்ஞானியும் தனக்குத் தெரிந்த இயலிலும் மிகச் சிறிய கிளை இயல் ஒன்றிலேயே ஆழ்ந்து செல்கிறார். மிகச் சிறிய விஷயம் ஒன்றை அறிந்துகொள்வதில் விஞ்ஞானியின் முழு வாழ்க்கையும் கழிந்து போகிறது.

ஆன்மிகத்தின் நடைமுறை வேறுவிதமானது; எதிர் மறையானது. ஆன்மிகத்திற்கும் அறிவியலுக்கும் இடையே இதுதான் வேறுபாடு. அறிவியல் எதையும் துண்டுகளாக்கி, ஒவ்வொரு துண்டையும் பல கூறுகளாக்கி ஆராய்ச்சி செய்கிறது. இனி பிரிப்பதற்கு வாய்ப்பில்லை என்னும் பரமாணு நிலை வரை சென்றுள்ளது. எதிர்காலத்தில் பரமாணுவும் கூறுகளாக்கப்பட்டு அந்த மிகுநுணுக்கமான கூறும் ஆராயப்படலாம்.

ஆன்மிகம் இணைக்கும் வேலையில் ஈடுபடுகிறது. பிரிந்து கிடக்கும் கூறுகளில் ஒற்றுன்மையை ஏற்படுத்தியபடி, கண்டங்களை அகண்டமாக்கியபடி முன்னேறுகிறது. அந்த அகண்ட நிலைதான் ஓர் அலகாகிறது. அதுவே பிரம்மம். அதை சத்தியம், நிர்வாணம், மோட்சம் என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம்.

விஞ்ஞானிகளை ஒரு மரத்தில் ஏறுபவர்களாகக் கற்பனை செய்தால், அவர்கள் ஆங்காங்கே உள்ள கிளைகள், அவற்றின் பிரிவான சிறு கிளைகள் என்று பிரிந்து, கடைசியில் ஆளுக்கொரு இலையில் உட்கார்ந்து விடுகிறார்கள் எனலாம். ஓர் இலையில் உட்கார்ந்திருக்கும் விஞ்ஞானிக்கு மற்றோர் இலையில் உட்கார்ந்துள்ளவர் என்ன செய்கிறார் என்று தெரியாது.

ஆன்மிகத்தின் செயற்பாடு வேறுவிதமாக உள்ளது. அது இலைகளிலிருந்து தொடங்கி, உபகிளைகள், கிளைகள் என்றெல்லாம் முன்னேறி, அதன் கண்ணோட்டம் முழுமரத்தையும் தழுவுகிறது. அற்பத்திலும் அற்பத்தை நோக்கியது விஞ்ஞானத்தின் பயணம். பெரிதினும் பெரிதில் சென்று முடிகிறது ஆன்மிகத்தின் பயணம். விஞ்ஞானம் ஒன்றிலிருந்து பலவற்றை சென்றடைகிறது. ஆன்மிகம் பலவற்றிலிருந்து ஒரே ஒன்றாக உள்ளதைச் சென்றடைகிறது.

ஆகவே நீ பிரிப்பதைக் கைவிடு. துண்டுகளாக்குவதைக் கைவிடு. பிரிவுகளோ, பிளவுகளோ இல்லாத அந்த ஒன்றைப் பார். அந்த ஒன்றைப் பிரிக்கவும் முடியாது. அதனுடையவைதாம் நீ காணும் உருவங்கள் எல்லாம். அந்த உருவங்களில் சிக்கிக் கொள்ளாதே.

'நான் யார்?' என்பதை வரையறுக்கும்போது நீ முழுமையிலிருந்தும் பிரிந்து ஒரு துண்டாகிறாய். 'நான் பிராமணன்' என்று ஒருவன் சொன்னால் அவன் முழுமையான மனிதனில்லை. அவன் சமூகத்தின் இதரப் பிரிவினர்களிலிருந்து வெட்டுப்பட்டுத் தனித்துண்டாகிறான். தனது முழுமையைச் சேதப்படுத்துகிறான்.

'நான் ஓர் இந்து' என்பவன் எல்லா மதத்தினரும் சேர்ந்த முழு மனிதத்திலிருந்து பிரிந்து சிறு துண்டாகிறான். அடுத்து, ஒவ்வோர் இந்துவும் ஏராளமான பிரிவுகளாகப் பிளவுபடுகிறான். இப்படிக் கடைசியில் மனிதன் என்னும் முழுமையானவன் காணாமல் போய்விடுகிறான்.

'இது நான்' என்று நீ கூறும்போதே நீ உனக்கு ஓர் எல்லை ஏற்படுத்திவிடுகிறாய். 'நான் மனிதன்' என்று விசாலமாகச்

சொல்லும்போதுகூட அங்கு ஓர் எல்லை ஏற்படத்தான் செய்கிறது. உலகில் ஒரு தனி மனிதனின் இடம் யாது? உலக மக்களில் அவனது நிலை என்ன? 'நான் உயிர் சக்தி' என்று நீ அறிவித்தால், உன்னுடன் தாவரங்கள், பறவைகள், விலங்குகள் முதலிய எல்லாமும் சேர்ந்து எண்ணப்படும். இதைத்தான் வேறுவிதத்தில் 'அஹம் ப்ரம்மாஸ்மி' (நான் பிரம்மம், கடவுள்) என்கிறோம். அப்போது உலகிலுள்ள எல்லாவற்றுடனும் நான் ஒன்றிவிடுகிறேன். அதேபோல் எல்லாமும் என்னுடன் ஒன்றிவிடுகின்றன.

**சட்டென விழித்துக்கொள்கிறேன்**
**விளக்கை ஏற்றிவைக்கிறேன்**
**அப்போது உன்னைப் பார்க்கிறேன்**
**நீ உட்கார்ந்தபடியே இருக்கிறாய்**
**அருகில் வராமலிருக்கிறாய்**
**என்னைக் கூக்குரலிட வைக்கிறாய்**
**எனது குற்றம் என்னவென்று சொல்லிடேன்.**

இவ்வாறு கடவுள் தனியாகப் பிரிந்து உட்கார்ந்துள்ளார் என்று சொல்வதுகூட ஒருவகையில் தவறுதான். அருகில் உட்கார்ந்துள்ளார் என்பதும் தவறுதான். ஏனெனில் நமக்கும் அவருக்கும் நடுவில் இடைவெளி இருப்பதுபோல் அர்த்தமாகிறது. அவர் நமக்குள்ளேயே தானே இருக்கிறார்.

அன்றாட வாழ்க்கையில் 'கடவுள்' என்று குறிப்பிடுகையில் தலையை உயர்த்தி, ஆகாயத்தை நோக்கிக் கைநீட்டுகிறோம். அப்படியானால் நம்மை அறியாமலே நாம் கடவுளை எவ்வளவு அளக்க முடியாத தொலைவில் கொண்டுபோய் வைத்துவிட்டோம்!

வட இந்தியாவில் நூற்றாண்டுகளாக நிலவும் ஒரு பழக்கம். ஒருவரை ஒருவர் பார்க்கும்போது, பழக்கமில்லாதவரைப் பார்க்கும்போதும், மக்கள் 'ஜெய்ராம்ஜி!' என்கிறார்கள். நகரங்களில் இப்பழக்கம் மறைந்துவருகிறது. மக்கள் 'குட் மானிங்!' என்கிறார்கள். இது இனிமையாக இல்லை. 'நல்ல காலைப் பொழுது' என்று சொல்வது வானிலை அறிக்கைபோல் ஒலிக்கிறது. அதற்குமேல் ஆழமில்லை. இயற்கை வர்ணனையுடன்

முடிந்துபோகிறது. அதுமட்டுமல்ல, இப்படி யாரையெல்லாம் வணங்கலாம், யார் முன் கூறக்கூடாது என்றெல்லாம் எழுதாத விதிமுறைகள் வந்துவிட்டன. யாரால் நமக்கு ஏதாவது பயன் உண்டோ அவருக்குப் பலமுறைகூட வணக்கம் கூறப்படுகிறது. எவன் நம்மிடம் உதவி கேட்டு வருகிறானோ அவனுக்கு வணக்கம் சொல்லாமல், எடுத்த எடுப்பிலேயே கடுமையாக 'என்ன விஷயம்?' என்று கேட்கிறோம்.

'ஜெய் ராம் ஜி!' (ராமனுக்கு வெற்றி) என்று கூறுவது எவ்வளவு இனிமையாக, இயல்பாக, எளிமையாக, மங்களமாக ஒலிக்கிறது! முன்பின் தெரியாதவரிடமும் இப்படிக் கூறுவது பண்பைக் காட்டுகிறது. 'நீங்கள் எனக்குப் பழக்கமற்றவரா யிருக்கலாம். ஆனால் உங்களிடமுள்ள ராமன் எனக்குப் பழக்கமானவர்தாம்' என்பதே இதன் பொருள். 'நீ எங்களிடமிருந்து எவ்வளவு வேறுபட்டவனாயினும் நான் உன்னுள்ளே இருக்கும் ராமனைத்தான் பார்க்கிறேன்' என்றும் பொருள். நாம் யாரைப் பார்த்து 'ஜெய் ராம் ஜீ!' சொல்கிறோமோ அவனுக்கு அது புரியாமல் போகலாம். ஆனால் இந்த மரபு வழி பழக்கத்தினுள் ஏதோ ரகசியம் இருக்கிறது.

நம் மக்களில் பலர் விளக்கேற்றியதும் கைகூப்புகின்றனர். பட்டிக்காட்டுப் பழக்கம் அல்லது மூடநம்பிக்கை என்று சிலர் சிரிப்பார்கள். ஆனால் நகரத்திலும் எத்தனையோ பேர் மின்சார விளக்கைப் போட்டதும் உடனே கைகூப்புகிறார்கள். முன்பாவது மண் விளக்கேற்றுவதில் சில சிரமங்கள் இருந்தன. காற்றும் ஓர் எதிரி. எப்படியோ திரிவிளக்கை ஏற்றிவிட்டால் அப்பாடா என்று கைகூப்பத் தோன்றுவதில் தவறில்லை. ஆனால் மின்விளக்குப் போடுவதில் சிறிதளவுகூட உழைப்போ, சிரமமோ இல்லையே. ஆனால் அப்போது கைகூப்புவதன் மூலம், 'ஒளி இருக்கும் இடத்தில் கடவுள் இருக்கிறார். ஒளி நம் அருகே இருப்பதுபோல் இறைவனும் நம் அருகேதான் ஒளிமயமாக உள்ளார்' என்னும் செய்தி தெரிவிக்கப்படுகிறது.*

* God appears, and God is Light-William Blake

நீ மகனைக் கட்டிக் கொள்கிறாய். ஆனாலும் இடைவெளி உண்டு. மனைவியைத் தழுவிக்கொள்கிறாய். அங்கும் இடைவெளி உண்டு. நண்பனைக் கழுத்தில் கைபோட்டு அணைத்துக் கொள்கிறாய். அப்போதும் இடைவெளி உள்ளது. கடவுளிடம் அந்த பிரச்சினை இல்லை.

இன்னும் ஆழமாகச் செல்லலாம். அவர் அருகில் இல்லை. தொலைவிலோ இல்லவே இல்லை. கடவுள் இருக்கிறார் என்பதுடன் நிறுத்திக்கொள். அருகில், தொலைவில் போன்ற சொற்கள் அவர் விஷயத்தில் எடுபடாதவை. அவரே உள்ளே-வெளியே, இங்கே-அங்கே, நேற்று-இன்று-நாளை எங்கும் எதிலும் அவரேதான் இருக்கிறார். அவர் ஒருவர்தான் இருக்கிறார். நீர்த்துளியில் இருப்பவர் அவர். அவரே விரிந்து கடலாக உள்ளார். அகல்விளக்கில் மினுமினுப்பவர் அவர். அவரே சூரியனில் தகத்தக என ஜொலிப்பவர். பேசிய வார்த்தைகளில் இருந்தவர் அவர். அவரே பேசாத வார்த்தைகளிலும் இருக்கிறார் பாதி உச்சரித்த சொற்களிலும் அவர் உள்ளார்.

மந்திரம் என்பது பாதி உச்சரித்த (ஒலித்த) சொல்லாகும். முழுவதையும் உச்சரிப்பதற்கு அது மொழியில் அடங்காது. மந்திரங்களை ஓதாமலும் இருக்க முடியாது. அவை கேட்பதற்கு இனியவை அடிக்கடி ஓதவேண்டும்போல் தூண்டுதல் தருபவை. சாதாரணச் சொற்களால் கடவுளை அழைப்பது போதாது அல்லது மரியாதை இல்லை என நினைப்பவர்களுக்கு மந்திரம் உதவுகிறது. கடவுளுக்கு நன்றி தெரிவிப்பதற்கும் சாதாரணச் சொற்களைவிட மந்திரங்களே வலுவானவையாகத் தெரிகின்றன.

ஒன்றெனப் பார்த்தால் நன்றி உணர்வு மேலோங்கும். பலவெனப் பார்த்தால் அமைதியின்மையும் குழப்பமும்தான் உண்டாகும். ஆன்மிகவாதியை இப்படி வரையறுக்கலாம். இறைவன் மீது நன்றியால் நிறைந்து விளங்குபவன். ஆன்மிகவாதி. எதற்கெடுத்தாலும் குறை கூறிக்கொண்டே இருப்பவன் உண்மையில் ஆன்மிகவாதி அல்லன். உதாரணமாக கோயிலுக்கு வந்து வழிபடுபவர்களைக் கவனி. பெரும்பான்மையோர் ஏதாவது குறையைத் தெரிவிக்கவே வருகின்றனர். நன்றிகூற வருபவர்

அரிது. கோயிலுக்கு வருவோர், 'மகனுக்கு வேலை கிடைக்க வில்லை; மனைவி எப்போதும் நோயாளி; நான் நல்லவனாய் இருந்தும் பிரயோஜனமில்லை; கெட்டவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது என்றெல்லாம் பக்தர்கள் எனப்படுபவர்கள் குறை கூறுதல் அல்லது வரம் வேண்டுதலையே செய்கின்றனர். இவ்வாறு, ஆன்மிகவாதியின் அடையாளம் திருப்தியின்மை என்று ஆகிவிட்டது. வரம் கேட்பது ஆன்மிகவாதியின் இயல்பு என்று ஆகிவிட்டது. ஆகவேதான் ஆன்மிகவாதி படபடப்பு மிகுந்தவனாகக் காணப்படுகிறான்.

உண்மையில் நீ நன்றி உள்ளவனாக அல்லவா இருக்க வேண்டும். எத்தனை கோடி இன்பம் உனக்குக் கிடைத்துள்ளது! தொடர்ந்து கிடைத்துக் கொண்டே வருகிறது. எங்கு நோக்கினும் ஒளிவெள்ளம். ஒளியின் மூலம் சூரியனின் கிரணங்கள் கடவுளை உன்னிடம் கொண்டு வருகின்றன. காற்று வீச்சு அவரை உன்னிடம் அழைத்து வருகிறது. பூக்களின் நறுமணம் அவரை உன்னிடம் சேர்ப்பிக்கிறது. பறவைகளின் இன்னொலி அவரது எதிரொலிதான். எல்லா விதமாகவும் அவர் உன்னை சூழ்ந்துள்ளார். எல்லா திசைகளிலிருந்தும் அவர் உன்மீது ஆசிமழை பொழிகிறார். எல்லா இடங்களிலிருந்தும் அவர் உன்னைத் தீண்டுகிறார்.

நன்றி தெரிவிப்பதைத்தான் நான் பிரார்த்தனை என்கிறேன். பிரார்த்தனை என்னும் சொல் எனக்கு அவ்வளவாகப் பிடித்தமானதன்று. அது ஒருவகையில் யாசிப்பது என்று பொருள் தருகிறது. முதலில் ஆராதனை என்னும் சொல் வழங்கிவந்தது. மக்கள் வரம் கேட்பது அதிகரித்ததால் பிரார்த்தனை என்னும் சொல் புழக்கத்தில் வந்துவிட்டது. பக்தர்கள் யாசகர்களாக மாறிவிட்டனர். நன்றி கூறுதல்தான் உண்மையில் இறைவனை பிரார்த்திப்பதாகும். அவர் உனக்கு ஏராளமாக வழங்கியிருக்கிறார்; காரணமின்றியே வழங்கியிருக்கிறார். அந்த அளவற்ற வழங்குதலை உணர்ந்தால்தான் அளவற்ற மன அமைதியை அனுபவிக்க முடியும்.

யாசிப்பதைக் கைவிடு. நன்றி தெரிவிப்பதில் இறங்கு. அதற்கு எல்லையென ஒன்றும் கிடையாது. பிரார்த்தனையில்தான்

நிபந்தனை உண்டு. கேட்கும் வரம் கொடுத்தால் குறிப்பிட்ட காணிக்கை தருவேன் என நிபந்தனையாகக் கூறுகிறோம். நன்றி தெரிவிக்கையில் அதில் எந்த நிபந்தனையும் இல்லை. எல்லையற்ற அமைதியின் அனுபவத்திலிருந்து நிரந்தரமான அன்பு உணரப்படுகிறது.

நீ இறைவனுக்கு நன்றியை வெளிப்படுத்தினாய். இதன் விளைவாக இறைவனின் அன்பு உன்னை நோக்கிப் பெருகத் தொடங்குகிறது. எப்பொழுதுமே அவரது அன்பு உன் திசையில் வந்தபடி இருந்தது. ஆனால் உன் மனத்தில் நன்றி சுரக்கும் வரையிலும் அந்த அன்பை நீ உணரவில்லை. கடவுளின் அன்பை உணர்வதற்கு நன்றி உணர்வு அடிப்படையாகும்.

உடலின் தோற்றத்தில், தோலின் நிறத்தில் மயங்காதே. தோலைத் தொடுவதால் வரும் சுகம் மேலோட்டமானது. தோல் அளவிலேயானது (skin deep), ஆழமற்றது. அதில் மாட்டிக் கொள்ளாதே. உனக்கு வேண்டியது ஆழத்தில் உள்ளது. தோல் சுகம் கூழாங்கற்களுடன் திருப்தி கொள்வது போன்றது. உனக்கு வேண்டியது அசல் வைரம். கூழாங்கல்லே அற்ப சுகம் தருகிறதெனில் கடவுளிடமிருந்து கிடைக்கக் கூடிய பூரண சுகத்தை வர்ணிக்க முடியுமா? ஆகவே ஆழமாக இறங்கு. மையத்திற்குச் செல். அங்கே பிரம்மத்தின் அனுபவம் கிடைக்கும்.

பிரம்மம் அணுவைவிடச் சிறியதாகக் குறுகக்கூடியது என்பதுடன் விரிந்துகொண்டே செல்லும் இயல்பும் உடையது. ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்.* இந்த பிரபஞ்சம் விரிந்து கொண்டே செல்கிறது என்பார் (expanding universe). இதைத்தான் இந்துக்கள் ஐன்ஸ்டீனுக்குப் பல நூற்றாண்டுகள் முன்னரே அறிந்திருந்தனர். உலகின் மற்ற வகை தத்துவ இயல் கோட்பாடுகளும், மற்ற மதங்களும் உலகம் என்றும் ஒன்றுபோல்தான் உள்ளது என்று கருதிவருகின்றன. அவற்றைப் பின்பற்றுவோர் உலகம் இதற்கு மேலும் எப்படி விரிய முடியும் என்றும், ஏற்கெனவே முழுமை யாகத் தெரியும் உலகம் இதற்கு மேலும் எப்படி முழுமையாக

* Albert Einstein (1879-1955) famous for Theory of Relativity ($E=mc^2$). Nobel prize winner.

முடியும் என்றும் கேள்வி எழுப்புகின்றனர். ஐன்ஸ்டீனோ உலக வளர்ச்சி நின்றுவிடவில்லை என்று தெரிவித்தார். ஆம், உலகம் வளர்கிறது. விரிந்துகொண்டே செல்கிறது.

இந்துக்கள் கூறும் 'ப்ரஹ்ம' என்னும் சொல்லுக்கு 'வளர்ந்து கொண்டே செல்வது, விஸ்தீரணமாவது' என்று அர்த்தம் உள்ளது. பிரம்மத்துக்கு எல்லை இல்லை; அது விரிவதற்கு முடிவு இல்லை. எல்லையற்ற பேருவெளி!

எல்லாம் ஆத்மா. இவ்வாறு நிச்சயித்து, விருப்பங்களற்ற வனாகி சுகமாக வாழு. ஒரே ஆத்மா. அதுவே பல்லுயிர்களாக விஸ்தரித்தபடி செல்கிறது. இதனால் உலகமும் விஸ்தரிக்கிறது என்று இந்திய தத்துவ இயல் இயம்பியது.

உன்னைத் தவிர உலகில் வேறு எதுவும் இல்லை. எங்கும் நீயே உள்ளாய். பிறகு எதிரி என்று தனியாக எவன் இருப்பான்? மரணம் யாருக்கு ஏற்படும்? விரும்புவதற்கு என்ன உள்ளது? பெறுவதற்கு என்ன உள்ளது? இறந்த காலம், எதிர் காலம் என்னும் பிரிவுகள் கிடையாது. இந்நிலையில் நீ சுகமாக இருப்பாய்.

சுகமான நேரம் என்பது நீ மற்றவர்களுடன் ஒரே ஆத்மா என்று உன்னையும் இணைத்துக்கொள்ளும் வேளைதான். துன்பமான வேளை என்பது நீ உன்னைப் பிறரிடமிருந்து பிரித்துத் தனியாகக் காணும் நேரம்தான். இதை சிறு சிறு சம்பவங்களை ஆராய்வதன் மூலமாகவும் அறிந்துகொள்ளலாம். சாதாரண வாழ்க்கையிலும் சந்திப்பு சுகமளிக்கிறது. பல்லாண்டுகளுக்குப் பின் சந்திக்கும் தோழனைத் தழுவுகையில் சுகம் உணர்கிறோம். அவன் பிரிந்து செல்கையில் துன்பம் சூழ்கிறது. ஆழமாக யோசித்தால்-சந்திப்பு சுகம், பிரிவு துன்பம். சந்திப்பில் நாம் ஒருவர் என்று நினைக்கிறோம். ஆகவே சுகம். பிரிவில், நாம் இரண்டாவதை, பலவாவதை உணர்கிறோம். ஆகவே துன்பம். மரணத்தின் காரணமாக நிரந்தரப் பிரிவு ஏற்பட்டாலோ நாம் தாங்க முடியாத அளவு துன்பப்படுகிறோம்.

வாழ்க்கையில் நிகழ்வதெல்லாம் சிறிய சந்திப்புகளும் பிரிவுகளுமே ஆகும். ஆனால் மாபெரும் சந்திப்பு, மகோன்னத

மான சந்திப்பு ஒன்றும் உள்ளது. அதில் பிரிவே நிகழாது. அதுதான் இறைவனுடனான சந்திப்பாகும்.

எல்லோரும் ஆத்மாக்கள். ஆகவே பிரிவு ஏற்பட முடியாது; பிரிவுத் துன்பம் ஏற்பட முடியாது. சந்திப்பு-இணைதல்-நிரந்தரமாகிறது. இந்த இணைப்புக் கிடைத்தவர்கள் பெரும் அதிர்ஷ்டசாலிகள் ஆவர். பிறகு எல்லாம் சுகம்; நீயே சுகம்.

'அறியாமை காரணத்தால்தான் உனக்கு உலகம் ஒன்று இருப்பதாகத் தோன்றுகிறது. ஆத்மாவின் அடிப்படையில் நீ ஒருவன்தான் இருக்கிறாய். உன்னைத் தவிர இரண்டாவது நபர் கிடையாது. அப்படி ஒருவர் இவ்வுலகிலும் இல்லை; எவ்வுலகிலும் இல்லை.' **(சுலோகம் 141)**

**அ**ஞ்ஞானம் (அறியாமை) பிரிவுகளுக்கு இட்டுச்செல்கிறது. ஞானம் பிரிவுகளற்றது. தன்னைப் பிறரிடமிருந்து, பிற ஆத்மாக் களிடமிருந்து, பிரித்துப் பார்ப்பவன் அறிவிலி. இதனால்தான் தொந்தரவுகள் உண்டாகின்றன. 'நான் ஓர் ஆத்மாதான் உள்ளேன். எல்லா ஆத்மாவும் நான் ஒருவனேதான்' என நினைப்பது ஞானம்.

அடிப்படையில் நாம் எல்லோரும் சேர்ந்து ஒட்டுமொத்த மாக ஒருவர்தான் உள்ளார். இதுதான் நமது இயல்பு. ஆகவே இவ்வாறு சேர்த்துப் பார்க்கும்போது சுகம் விளைகிறது. ஆனால் பிரிந்து பலராக உணர்ந்தால் வருந்த நேரிடுகிறது. சுபாவத்திற்கு விரோதமான கண்ணோட்டம் அப்படித்தான் உறுத்தும். எப்போதெல்லாம் நீ துன்பமாக உணருகிறாயோ, அப்போது நீ உனது சுபாவத்திற்கு விரோதமாகச் செல்கிறாய் என ஊகிக்கலாம். எப்போதெல்லாம் சுகமாகத் தோன்றுகிறதோ அப்போது நீ உன் சுபாவப்படி செல்வதாக அர்த்தமாகும். சுபாவத்துடன் செயல் சேர்ந்தால் அது சுருதி நன்கு சேர்ந்த இசைபோல் இன்பம் தரும்.

நாம் அனைவரும் ஒரே ஆத்மா என முனைந்து உணர்ந்து சுகம் பெறலாம். சில சமயம் ஒரு சூழ்நிலையில் தானாகவே சுகம் கிடைக்கலாம்.

அதிகாலைப் பொழுது வயல்புறத்தில் உலாவச் செல்கிறாய். திடீரென, காரணம் இல்லாமல், மனத்தில் எண்ண அலைகளே

எழாமல், சுற்றியுள்ள இயற்கை சூழ்நிலையுடன் ஒன்றி விடுகிறாய். சூரியன் உதயமாகிறது; பறவைகள் பாடுகின்றன; காலைக் காற்று நறுமணம் சுமந்துவருகிறது. உயிரில் சிலிர்ப்பு எழுகிறது; சூழ்நிலை குளுமையாக இருக்கிறது. உன்னை அறியாமல் உன் உடல் லேசாக நடனமாடுகிறது. சில நொடிகள் நீயும் கடவுளின் படைப்பில் கலந்து விடுகிறாய். இது உன் முயற்சியின்றி நிகழ்கிறது.

ஆனால் நீ சராசரி மனிதன். அந்த தெய்விக நொடிப் பொழுதுக்குப்பின் மீண்டும் மண்ணுலக நினைவிற்குத் திரும்பிவிடுகிறாய். ஆனால் எல்லோரும் ஒரே ஆத்மா என்பதை உணர்ந்து, சுயநினைவுடனேயே படைப்பில் லயிப்பவரை ஞானி என்கிறோம். அவர் மீண்டும் சராசரி சிந்தனைகளாலான வாழ்க்கைக்குத் திரும்புவதில்லை.

ஜப்பான் நாட்டில் ஒரு பொம்மை பிரபலம். பெயர் தாருமா.* அதில் ஒரு விசேஷம். அதை எப்படி வீசி எறிந்தாலும் அது சம்மணமிட்டு உட்கார்ந்துவிடும். அதன் அடிப்பாகம் கனமானது. உள்ளே இரும்புத் துண்டு வைக்கப்பட்டுள்ளது. அல்லது கண்ணாடித் துண்டுகள் வைக்கிறார்கள். மீதி உட்பகுதி வெற்றிடமாக இருக்கும். பொம்மையைத் தலைகீழாக வைத்தாலும், காலால் உதைத்தாலும் அது அசைந்தாடியபடி எப்போதும் பழைய நிலைக்கே வந்துசேரும்.

பார்க்க வேடிக்கையாக இருக்கும் இந்தப் பொம்மை நமது வாழ்க்கையும் அப்படி இருக்க வேண்டுமென பாடம் கற்பிக்கிறது. வாழ்க்கையில் என்ன நேர்ந்தாலும், சற்றுத் தடுமாறினாலும், நீ பழைய, சகஜமான நிலைக்கே மீண்டுவிடு என்று அறிவுறுத்து கிறது.

தாருமா என்பது போதிதர்மரின் ஜப்பானியப் பெயராகும். அவர்தான் இந்தப் பொம்மையை ஜப்பானில் அறிமுகப் படுத்தியவர். போதிதர்மர் ஒரு பௌத்த பிட்சு ஆவார். பதினான்கு நூற்றாண்டுகள் முன் சீனாவிற்குச் சென்றவர். அதிசய மனிதர். படைப்பின் லயத்தோடு ஒன்றிப்போனவர். அவரை என்ன பாடுபடுத்தினாலும் அவரைத் தமது வாழ்க்கையின் லயத்திலிருந்து

* நம் தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மையைப் போன்றதுதான் இது.

கீழே இடற முடியாது. இரவு-பகல், இன்பம்-துன்பம், வெற்றி-தோல்வி என்னும் எந்த சூழ்நிலையிலும் அவரது வாழ்க்கையின் லயத்தை மாற்றமுடியாதபடி இருந்தார். எப்போதும் ஒரே நிலையில் இருந்தார். தாருமா பொம்மையைப் படைத்த போதிதர்மர் போல் நாம் இருக்க வேண்டும் என்பது வெளிப்படை.

தனது லயம் என்பது சமஸ்கிருதத்தில் ஸ்வச்சந்த (சுய சந்தம், தனக்கே உரிய யாப்பு, சச்சந்தன்) எனப்படும். ஸ்வச்சந்த என்பது சுதந்திரமான என்றும் பொருள்படும். சுதந்திரமான என்றால் இஷ்டப்படி ஆட்டம்போடுதல் இல்லை. ஸ்வ+தந்திர-சுய உபாயம்-தனக்கென்ற தனி வழி என்று பொருள். அது உனது சுபாவமான வழியாகத்தான் இருக்கும். சுபாவம் என்பது உள்ளேயும் வெளியேயும் ஒரேமாதிரி இருக்கும். ஆகவே சந்தம்-யாப்பு-பூர்த்தியாகி விடுகிறது. உனது வாழ்க்கை வீணை சுத்தமாக ஒலிக்கத் தொடங்குகிறது.

அறியாமை நீங்கியதும் மக்களைப் பிரித்துப் பார்ப்பது நின்று விடுகிறது. பிறகு மக்களை சந்நியாசிகள்-ஸம்ஸாரிகள் (குடும்பஸ்தர்கள்) என்று கூடப் பிரிக்கமாட்டாய்.

சிலர் என்னிடம் வந்து சொல்கிறார்கள்: “சுவாமி! நான் சந்நியாசியாக ஆசைப்படுகிறேன். ஆனால் நான் இன்னும் அதற்குரிய சூழ்நிலையில் இல்லை. நான் இல்லறத்தான். வீட்டில் மனைவி-குழந்தைகள் உள்ளனர்.”

நான் அவர்களுக்குக் கூறும் ஆறுதல் இதுதான். “கவலைப்படாதேயப்பா. சந்நியாசிக்கும் சம்சாரிக்கும் இடையே அதிக வித்தியாசம் கிடையாது ஒரு குறிப்பிட்ட வித்தியாசம் சொல்லலாம். குடும்பஸ்தன் தூங்குவதில் ஆர்வம் காட்டுகிறான். சந்நியாசியோ எப்பொழுதும் விழிப்புடன் இருக்க விரும்புகிறார். அவர் தன் காலிலேயே நேராக நிற்கிறார். இல்லறத்தான் தலைகீழாக நிற்கிறான். இருவரின் உள்ளேயும் இருப்பது ஒரே பரமாத்மா. ஒரே விதமான உயிரோட்டம்.

**உடலளவில் நாம் சந்தித்தோம் பல முறை**
**மனக் கதவோ இன்னும் திறக்கவில்லை**
**பாம்புபோல வளைந்து செல்லும்**

**வாழ்க்கையெனும் பாதையில்**
**கல-கலவென்ற சிரிப்புடன்**
**கண்ணீரும் கலந்தே வெளிப்பட்டது.**
**வெட்கத்தால் உதடுகள் தைக்கப்பட்டு**
**பேசியும் பேசாதது போலிருந்தது**

**நந்தவனத்தில் நடைபயின்று**
**நாம் பெற்ற பயன் என்ன?**
**வண்ண-வண்ண மொட்டுகள்**
**இன்னும் மலரவில்லையே!**

வாழ்க்கை முழுதும் கழிந்துபோகிறது. மொட்டுகள் இன்னும் மலரவில்லை வாழ்க்கை முழுதும் கழிந்து போகிறது. வீணையின் தந்திகளில் ஒலி எழவில்லை.

சந்தித்தும் சந்திக்காதது போன்ற நிலை. அகங்காரம் குறுக்கே நிற்கிறது. தலைகள் மட்டும் தாழ்ந்து வணங்குகின்றன. அகங்காரம் அப்படியே நிமிர்ந்து நிற்கிறது. நீ பணிவுடன் தலை தாழ்த்துவது, கை குவிப்பது முதலியவை ஏமாற்று வேலை. உனது அடக்கம் போலியானது. சமூக திருப்திக்காக நீ நயமாக நடந்துகொள்கிறாய். உன் நடவடிக்கைகளில் சிலவே உண்மை. பல போலிதான். நீ ஒருவன்/ஒருத்தியைப் பார்த்து, 'உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது என்னும்போது அதில் எத்தனை சதவிகிதம் உண்மை, எத்தனை சதவிகிதம் சுயநலம் கலந்துள்ளது என யாருக்குத் தெரியும்?

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஆழ்ந்து செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தார். தரையைப் பெருக்கியபடி அவர் அருகில் வந்த அவர் மனைவி புகார் புராணம் கூற ஆரம்பித்தாள்.

"வர வர உங்களுக்கு என்மேல் அன்பு குறைந்துவிட்டது. நீங்கள் மிகவும் மாறிவிட்டீர்கள். முன்புபோல் நீங்கள் துள்ளிக் குதித்துக்கொண்டு வீட்டிற்குள் வருவதில்லை. என்னைப் பார்த்து உங்கள் முகம் மலர்வதில்லை. என்மேல் உங்களுக்கிருந்த அன்பு முழுதும் தீர்ந்துவிட்டதுபோல் தெரிகிறது..."

கேட்கக் கேட்க முல்லாவின் நெற்றியில் சுருக்கங்கள் அதிகரித்தன. ஒரு கட்டத்தில் அவர் எரிச்சலுடன், "போதும்

நிறுத்திக்க. உன்னிடம் எனக்கு அன்பு உண்டு. உன்னிடம் மட்டும்தான் எனக்கு அன்பு. முழு அன்பு. இதுக்கு மேல என் தலையை உருட்டாதே.ஒழுங்கா தரையை கூட்டற வேலையை பார்த்துக்கிட்டே போ." என்று அதட்டினார்!

நாம் ஒன்று சொல்கிறோம்; வாழ்க்கை வேறொன்று சொல்கிறது. வாய் சொல்வது ஒன்று; கண்கள் சொல்வது வேறொன்று. பேசும் மொழி ஒருவிதமாகவும் உடல்மொழி வேறுவிதமாகவும் இருக்கிறது. யாராவது வந்து, "எனக்கு உங்கள் மேல் மிகுந்த அன்பு," என்று சொன்னால், அவருடைய கண்களை உற்றுநோக்கு. அன்பு உண்மையாயின் அந்த சமயம் கண்கள் பளபளக்கும்.

ஒருவர் உன்னிடம் வந்து, "நான் செய்த அதிர்ஷ்டத்தால் இன்று உங்கள் தரிசனம் எனக்குக் கிடைத்தது," என்று சொல்லி வணங்குகிறார். அவருடைய கண்களைக் கவனி. உணர்ச்சியற்ற வெறுமைப் பார்வை தெரிந்தால், முகத்தில் மகிழ்ச்சி தெரியாவிடில், அவர் சொன்னதெல்லாம் வெற்று வார்த்தைகள், பொய்ச் சொற்கள்.

இந்தப் பொய்ம்மையிலிருந்து விழிப்பதுதான் சந்நியாசம். காட்டுக்கு ஓடுவது துறவறம் அன்று. இனிமேல் நீ கபடமின்றி எல்லாவற்றிற்கும் உண்மைவாதியாக இருக்க முயலு. நம்பத் தகுந்தவனாக இருக்கத் தொடங்கு நாளடைவில் உன் வாழ்க்கையில் ஒழுங்கு, இன்னிசை, நறுமணம் நிறைவதை உணர்வாய். சத்தியத்திற்கென ஆழமான தனிப்பட்ட நறுமணம் உண்டு. இதன் காரணமாக வாழ்க்கையில் உல்லாசம் பிறக்கிறது.

உண்மையான ஆன்மிகவாதி சோகமாக, சலித்துப் போனவனாக, பிணக்களையுடன் இருக்கமாட்டான். உயிரோட்ட முள்ளவனாக, குதூகலம் கொண்டவனாக, ஏறத்தாழ நடனமாடுவது போல் அவன் இருப்பான். அவன் உதடுகளில் புன்சிரிப்பு வீற்றிருக்கும். தன்னைச் சுற்றிலும் பரமாத்மாதான் பரவியுள்ளார் என்ற அனுபவம் கிடைத்தவன் சோகமாகவா இருக்க முடியும்? அவரேதான் என் இல்லத்திலும் உள்ளார்; எலும்பாலான என் உடலை புனிதமாக்குகிறார்; மண்ணாலானது-மண்ணுக்குத்

திரும்புவது என்று கருதப்படும் இந்த உடலிலும் அவரது கோயில்தான் உள்ளது. இவ்வாறெல்லாம் அறிந்திருக்கும் ஆன்மிகவாதி அழுமூஞ்சியாகவா இருப்பான்? அவனிடம் அலுப்பும் சலிப்பையும் காண முடியாது. இதெல்லாம்தான் ஆன்மிகவாதியின் லட்சணமே தவிர அவன் சந்நியாசியா-ஸம்ஸாரியா என்பது முக்கியமில்லை.

உண்மையில் நீ ஒருவன்தான் உள்ளாய். துக்கப்படுபவனும் நீயே; சிரித்த முகமாக இருப்பவனும் நீயே. ஆரோக்கியமான வனும் நீயே; நோயாளியும் நீயே. இருட்டில் மறைந்துள்ளவனும் நீயே; ஒளியில் வெளிப்படுபவனும் நீயே. வித்தியாசம் என்னவென்றால் ஒருவன் கண்களை மூடிக்கொண்டுள்ளான். இன்னொருவன் கண்களைத் திறந்துவைத்திருக்கிறான். இருவருக்குமுள்ள வித்தியாசம் கண் இமை அளவுதான். கண் திறந்தால் சந்நியாசி. கண்ணை மூடிக்கொண்டால் ஸம்ஸாரி.

'உலகம் என்பது ஒரு பிரமை மட்டுமே, தோற்றம் மட்டுமே. இதை அறிந்தவன் இச்சைகளை ஒழித்தவனாக, ஆத்மசிந்தனை மட்டுமே கொண்டவனாக இருப்பான். அவன் அடையும் மன அமைதிக்கு அப்பால் ஒன்றுமில்லை.' **(சுலோகம் 142)**

**இ**ந்த உலகம் ஒரு பிரமை மாத்திரமே என்னும் உணர்விலேயே ஆழ்ந்திடு. வாழ்ந்திடு.

இது தியானத்தில் ஒரு நடவடிக்கை. இது ஒரு தத்துவக் கோட்பாடு அன்று. இந்து மதத்தினர் தங்கள் தத்துவக் கொள்கை என நினைத்துக் கூறும் 'உலகே மாயம்' என்பது வேறு. மேலும் அவர்கள் தர்க்கத்தின்மூலம் இக்கருத்தை நிரூபிக்கவும் முயன்றுள்ளனர். அவர்களுள் முக்கியமானவர் சங்கராச்சாரியார்.

ஆதிசங்கரர் கூர்மையான தர்க்க அறிவு பெற்றிருந்தார். வாதத்தில் எவராலும் வெல்ல முடியாத ஆணித்தரமான வாதங்களை முன்வைப்பவராகத் திகழ்ந்தார். அவர் உலகம் மாயை என்ற கண்ணோட்டத்தைத் தவறான திசையில் திருப்பி விட்டார். அதற்குத் தனது வாதத் திறமையைப் பயன்படுத்திக் கொண்டார்.

இதன் விளைவாக வேறு சிலர் உலகம் மாயை அன்று என்ற வாதத்தைத் தொடங்கிவைத்தனர். எந்த தர்க்கத்தாலும், எவ்வழியாலும் உலகை மாயை என்று நிரூபிக்க முடியாது. 'உலகம் ஒரு மாயை' என்று வாதத்தைத் தொடங்கும். போதே உலகம் என ஒன்றுள்ளதை நீ ஒப்புக்கொண்டு விட்டதாகத்தானே அர்த்தம். ஒருவர் எதிரே நீ 'உலகம் மாயை' என்று வாதிடுகையில், அப்படி ஒருவர் இருப்பதும் நிச்சயமாகிறது. மற்றவர்களின் புத்தியைச் சரிப்படுத்துவதற்கும், தனது வழிக்கே அதைக் கொண்டு வருவதற்கும், 'மாயை அன்று' எனத் தவறாக நினைப்பவர்களின் மனத்தை மாற்றுவதற்கும், ஆதி சங்கரருக்கும் மற்றவர்கள் (எதிர்வாதம் செய்பவர்கள்) தேவைப்பட்டார்கள். தன் கொள்கையைப் பின்பற்றவும் மற்றவர்கள் தேவைப்பட்டனர். அந்த மற்றவர்கள் எல்லாரும் மாயையா! மாயை எனில் அவர் யாரிடம் வாதம் புரிந்தார்? யாருக்கு அறிவுரை கூறினார்?

உலகம் மாயை என்பது வாத விவாதத்திற்கான விஷய மன்று. நான் வேறு கோணத்திலிருந்து இதைப் பார்க்கிறேன். இதை தியான சம்பந்தமான ஒரு நடவடிக்கை அல்லது விதிமுறை என்றே கருதுகிறேன். இதை தியானத்தின் ஓர் அங்கமாகக் கருதிப் பின்பற்றினால் நீ பலத்த வியப்பிற்குள்ளாவாய்.

உலகம் ஒரு பெருங்கனவு எனக் கற்பனை செய்து கொண்டு ஒரு வாரம் வாழ்ந்துபார். நிஜ வாழ்க்கைபோல் வாழ்க்கை நடத்து. எதையும் மாற்ற முயலாதே. கனவை மாற்ற முடியா தல்லவா? அலுவலகம் செல்வது கனவு; கோப்புகளைப் பார்ப்பது கனவு; கோப்புகளைப் புறந்தள்ளி விடுவது கனவு; மேஜையில் தலை சாய்த்துத் தூங்குவது கனவு-இவ்வாறெல்லாம் நினைத்து, கனவை மாற்ற முடியாது என்பதையும் கருத்தில் கொண்டால் பிறகு சமூகம் எப்படி இயங்கும்? இந்த நிலை ஆதிசங்கரரின் மாயாவாதத்தை எழுத்துக்கு எழுத்து பின்பற்றுவதால் உண்டாகும்.

இரு நண்பர்கள். ஒருவன் கவிதை எழுதிக் கொண்டிருந் தான். அதைப் பார்த்து மற்றவன், "எல்லாம் மாயை. கவிதையும் மாயை. எழுதுவதை நிறத்து. வாசலில் கடவுள் நிற்கிறார் பார்," என்று தடுத்தான். ஆனால் கவிஞன் தான் எழுதுவதை நிறுத்தவில்லை,

சிறிது நேரம் கழித்து இரண்டாமன் தலையைப் பிடித்துக் கொண்டு, "நண்பா, ரொம்ப தலைவலி, உன்னிடம் ஸாரிடான் இருக்கா?" என்று விசாரித்தான். முதல் மனிதன் வெடுக்கென்று, "எல்லாம் மாயை. தலைவலியும் மாயை. தலையைப் பிடித்துக் கொள்வதை நிறுத்து. வாசலில் கடவுள் நிற்கிறார் பார்," என்று பதிலளித்தான்.

'உலகம் மாயை' என்பதை வாழ்க்கை சித்தாந்தமாக ஒவ்வொரு விஷயத்திலும் பயன்படுத்திக் கொண்டிராமல், தியானத்தில் ஒரு படிக்கட்டாக மட்டும் நினைத்து வழக்கமான அலுவல்களில் ஈடுபடு. அலுவலகம் சென்று, கோப்புகளைப் புரட்டியபடி இதெல்லாம் கனவென நினை. வீடு திரும்பு; மனைவியிடம் பேசு; குழந்தைகளுடன் விளையாடு. இதெல்லாம் கனவென நினை. ஒரு வாரத்திற்கு நீ கர்த்தா (செயல்புரிபவன்) இல்லை, நடிகன் என்று மட்டுமாகவே இரு. வெளியில் வித்தியாசம் தெரியாது. மற்றவர்கள் உன்னிடம் விளைந்த மாற்றத்தைக் கண்டுபிடிக்க முடியாது.

உனக்குள்ளே அப்போது புரட்சி நிகழும். நீ அதே ஆள்தான் என்னும் சுயநினைவிருக்கும். ஆனால் ஒரு சுமையும் உணரமாட்டாய். நீ வழக்கமான பணிகளைச் செய்துவருவாய். ஆனால் உன்னிடம் அமைதி குடிகொண்டிருக்கும். நீரில் இருந்தும் நனையாத தாமரைபோல் விளங்குவாய். இச்சைகள் நீங்கும். உன் வேலை தொடரும். ஆனால் ஆசை ஏதும் இருக்காது. உன் கர்த்தா (செயல்புரியவன்) உணர்வு மறைந்துவிடும். உன் வாழ்க்கை நடவடிக்கைகள் தொடரும். ஆனால் மனத்தில் படபடப்பு இருக்காது. மன இறுக்கம் (டென்ஷன்) இருக்காது. நீ ஒரு கருவியாக மட்டும் ஆகின்றாய். ஒரு காரணமாக மட்டும் ஆகின்றாய். நீ சாட்சி மாத்திரமே என்னும் அனுபவம் பெறுகிறாய்.

உலகம் ஒரு கனவென்றால் அதில் கர்த்தாவாகச் செயல்பட எந்த வாய்ப்பும் இல்லை. உலகம் உண்மையன்று எனில் செயல்புரிபவன் எப்படி இருக்க முடியும்? தூக்கத்தில் கனவு காண்கிறாய். அதில் ஏதோ செய்கிறாய். அங்கேயும் நீ கர்த்தா இல்லை. அந்தக் கனவைப் பார்க்கின்ற செயல் புரிபவன்தான்

கர்த்தா. உறக்கம் கலைந்தபின் நீ சாட்சியாக மட்டுமே இருந்தாய் என்பதை ஒப்புக்கொள்வாய். நீ மொழியைக் கையாளும் விதத்திலிருந்தே இது தெளிவாகி விடுகிறது. 'நான் கனவில் பொருள் திருடினேன்,' என்று சொல்வது குறைவு. 'நான் பொருள் திருடுவதுபோல் கனவு கண்டேன்,' என்று சொல்வது வழக்கம். இதேபோல், 'கொலை செய்கிற மாதிரி கனவு கண்டேன்' என்று கூறுவாய். கனவு காணப்படுவதே தவிர, செய்யப்படுவதில்லை. கனவு என்னும் சொல்லுடன் 'செய்தல்' வினைச்சொல் சேராது; 'காணுதல்' வினைச்சொல்தான் சேரும். இவ்வாறு, உலகை ஒரு கனவென்று தியானத்தின் அங்கமாகப் பார்த்தால் நீ காண்பவன் என்னும் சாட்சி நிலையை அடைவாய்.

**கண்களெனும் வாசலில்**
**ஒருமுறையே வந்து நின்று**
**சத்தியத்தை யாசிக்கின்ற**
**இதுவரை பார்த்திராத**
**விசேடமான அந்தக் கனவுக்கு**
**முன்பு நான் கண்ட கனவுகள்**
**முன்னுரையாய் அமைகின்றன.**

கண்ணால் பார்ப்பதும் ஒரு கலை. அது உனக்குக் கைவந்திருந்தால் இந்த உலகம் ஒரு கல்விச்சாலை என்பது புரியும். இத்தனை காட்சிகள், இத்தனை நிகழ்ச்சிகள், இத்தனை பாவனைகள், இவையெல்லாம் நீ சாட்சி மனப்பான்மை பெறவேண்டும் என்பதைக் கற்பிக்கும் தயாரிப்புகள்தாம்.

நீ உலகத்தில் திளைப்பவனாக இல்லாமல் அதைப் பார்ப்பவனாக இரு. ஒரு நாள் திடீரெனக் கடவுள் உன் வீட்டுவாசலில் வந்து நிற்பார்! அந்த பரம தரிசனத்துக்காகத்தான் எல்லா ஏற்பாடுகளும் நடைபெறுகின்றன. கண்ணில் தீட்டியுள்ள கண்மையைக் கழுவிவிடு. கண்கள் சுத்தமாகிவிட்டால், பார்க்கும் கலை தெரிந்துவிட்டால், உற்சாகம் பிறக்கும், ஞானம் உதிக்கும். பிறகு வாசலில் கடவுள் வந்து நிற்பார். பிறகு அவர் நிரந்தரமாக உன்னிடம் இருப்பார்.

கண்கள் வெளிக்காட்சிகளுக்கு சூன்யமானால் சத்தியம் கிடைத்துவிடும் மனம் மௌனமாகிப் போனால் கடவுளின் பேச்சுக்

குரல் கேட்கும். 'நான்' என்பது நீங்கினால் அந்த வெற்றிடத்தைக் கடவுள் வந்து நிரப்புவார். அந்த மௌன சூழ்நிலையில் இறை அனுபவம் என்னும் யாத்திரை தொடங்கும். எல்லா விதத்திலும் நீ மௌனமாகிவிட்டால், அமைதியாகிவிட்டால், உண்மையில் இருக்கும் ஒன்றையே நீ காண்பாய். ஆனால் புலன்கள் அடங்காமல் இருந்தால் ஆசை காண்பிக்கின்ற உருவங்களை மட்டுமே நீ காணுவாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் வழியில் போய்க்கொண்டிருந்தார். திடீரெனத் துள்ளினார். குனிந்து கீழே கிடந்த எதையோ எடுத்தார். கடுங்கோபத்துடன் வசவுகள் கூறி அதைத் தூக்கி எறிந்தார். அவருக்குப் பின்னால் வந்தபடி இருந்தவர், "நஸ்ருத்தீன், என்ன விஷயம்? துள்ளிக் குதித்து எதையோ எடுத்துப் பிறகு வீசி எறிந்துவிட்டீரே," என்று கேட்டார்.

"மகா கஞ்சப்பயல். எட்டணா மாதிரி வட்டத் தகடை போட்டுவிட்டுப் போயிருக்கிறான். நான் காசு என நினைத்து ஏமாறிவிட்டேன்" என்றார் வெறுப்புடன்.

மனிதன் எதைப் பார்க்க விரும்புகிறானே அதுவே அவனுக்கு எதிலும் தென்படுகிறது. நீயும் காசு என நினைத்து சோடா மூடியை எடுத்து ஏமாந்திருப்பாய். கண்ணிடம் ஒரு 'புரொஜக்டர்' உள்ளது. கண் விரும்பும் பொருள் விழித்திரையில் விழுகிறது.

வேறு உதாரணம். நீ கடைத்தெருவுக்குச் செல்கிறாய். நீ எதை வாங்க அல்லது எந்த எதிர்பார்ப்புடன் செல்கிறாயோ அது சம்பந்தமான கடைகளே உன் பார்வையில் படும்! பசியோடு நீ போனால் ஹோட்டல், ஸ்வீட் ஸ்டால் போன்றவையே கண்ணுக்குத் தெரியும். அப்போது செருப்புக்கடை உன் கண்ணுக்குத் தெரியாது. நீ ஏதோ காரணத்தால் உபவாசம் கடைப்பிடித்தால் உன் கண்ணில் பலகாரக் கடைகளே தெரியாது. வயிறு நிரம்பியிருந்தால் விதம்விதமான கடைகள் இருப்பதை நீ காண்பாய். இதேபோல், பரம்பொருள் ஒன்றையே எண்ணியபடி நீ உலகில் உலவினால் அவரே எங்கும், எல்லாமாகவும் இருப்பதைக் காணலாம். அவரேதான் நீயாகவும் இருப்பதால் அவரைத் தவிர எதுவும்

கிடையாது என்பதும் உனக்குப் புலப்படும்.

நீ கடவுளிடம் கோரிக்கை எதுவும் கேட்கவில்லை என வைத்துக்கொள். கோரிக்கைகள் வெளியுலகத்துடன்தான் சம்பந்தப் பட்டவை. நீ வேண்டுவது எதுவுமில்லையெனில் வெளியுலகில் உனக்குத் தேவையானதென எதுவும் மிஞ்சியிருக்காது. எங்கும் சூன்யமாகத் தெரியும். மௌனம் பரவி நிற்கும். அந்தப் பேரமைதியில் கடவுளின் திருவடிகள் ஒலிக்கும்.

'உலகமெனும் கடலில் ஒருவன்தான் இருந்தான்; ஒருவன்தான் இருப்பான். உனக்குக் கட்டுப்பாடோ, விடுதலையோ எதுவும் கிடையாது. உனது லட்சியத்தை அடைந்து சந்தோஷமாக உலவு.'' **(சுலோகம் 143)**

**ஒ**ன்றுதான் உள்ளது. ஒன்றுதான் இருந்தது. ஒன்றுதான் இருக்கும். அதைத் தவிர, பார்த்த மற்ற எதுவும் கனவு, பொய், கற்பனை.

உன்னைக் கட்டுப்படுத்த எதுவும் இல்லை; ஆகவே உனக்கு விடுதலை தருவது என்ற பேச்சும் எழாது. நீ எப்பொழுதுமே சுதந்திரமானவன். அதுதான் உன் சுபாவம். இந்த முக்தி (சுதந்திர) நிலைதான் வாழ்க்கையின் லட்சியம். இதை நீ அடைந்தபின் ஆனந்தமாக உணர்வாய்.

மனித மனத்தின் ஆழத்தில் கசண்டுபோல் ஏற்கெனவே கீழ்த்தரமான ஆசைகள் மண்டிக் கிடக்கின்றன. அவற்றைக் கலக்கி மேலே கொண்டுவர வேண்டிய தேவையில்லை. தண்ணீரின் கீழ்மட்டத்தில் மண் தேங்கியிருக்கிறது. அது அப்படியே இருக்கட்டும். நீ மேலோட்டமாகத் தண்ணீரை நிரப்பி எடுத்துக் கிளம்பு. நாம் வாழ்க்கைக் குடத்தை அப்படி நிரப்பாமல் கீழே தேங்கிய இச்சைகளைக் கிளறிவிடுகிறோம். இதனால் பிராண ரசம் சேறாகிறது.

அருவி நீர் வேண்டுமானால் அருவியில் இறங்கி நீர் பிடிக்காதே. அருவிக்கு வெளிப்புறமாக நின்று, குடத்தை நீட்டி நீர் நிரப்பிக்கொள். நீ அருவியில் காலை வைத்தால் பிறகு தண்ணீர் குடிப்பதற்கு லாயக்கில்லாமல் போய்விடும். இதுவரை

படிகம்போல் தெளிவாக இருந்த தண்ணீர் நீ இறங்கியதால் கலங்கிப்போனது. கர்த்தாவாக நீரில் இறங்கினால் கிடைப்பது அசுத்தத் தண்ணீர் கரையில் சாட்சிபோல் ஒதுங்கி நின்று பிடித்தால் தரமான நீர். உனக்கு எந்தத் தண்ணீர் வேண்டுமோ அதை எடுத்துக்கொள். வாழ்க்கைக் குடம் உன்னுடையதுதானே.

**சேற்றின் மேல் நீர்**
**திடுக்கிடாதே.**

**நிரப்பிடு குடத்தை**
**மெல்ல-மெல்ல மேலாக.**

நீ கதவை மூடி இருட்டைச் சிறைப்படுத்திவிட முடியும். ஆனால் வெயிலை நீ ஒன்றும் செய்ய முடியாது. அதைக் கையால் மறைத்தால் இருட்டாகும் என்பாய். ஆம், இருட்டாகும். அப்போது அது வெயில் இல்லையே.

வாழ்க்கையில் எதுவெல்லாம் உத்தமமானதோ, சுந்தர மானதோ, சத்தியமோ அதெல்லாம் சுதந்திரமானவை. அவற்றைக் கட்டிப்போட முடியாது. சாஸ்திர நூல்களில் சத்தியத்தைக் கட்டிப்போட்டால் அது இறந்துவிடும். சித்தாந்தமாக முன்னிலைப் படுத்தினால் அதில் உயிரோட்டம் இருப்பதில்லை. தர்க்கத்தின் மூலம் சத்தியத்தை நிலைநாட்ட முயன்றால் சத்தியத்தைக் குழி தோண்டிப் புதைப்பதுபோலாகிவிடும். ஏனெனில் சொற்கள் அடிப்படையில் உயிரற்றவை. சத்தியத்தைச் சொற்களில் சிறைப்படுத்த முயலாதே. அதை மௌனத்தில் விரி. சிந்தனைகளில் உழலாதே. சூன்யத்தில் விழிப்புப் பெறு. கண்களில் ஆசைக் கனவுகளைத் தேக்கி வைக்காதே. கண்களை வெற்றிடமாக்கு.

வேடிக்கையான விஷயம் ஒன்று. நாம் கைதிகளைச் சிறையில் அடைக்கிறோம். ஆனால் சிறையிலிருந்து வெளியே வரக் கதவு உண்டு. அதுபோல், ஆசைகளால் நம்மைச் சிறைப்படுத்தும் இந்த உலகில்தான் மோட்சத்துக்கான கதவும் உள்ளது. சிறையிலிருந்து ஒருவன் எந்தக் கதவு வழியாக வெளியேறுகிறான்? சிறையிலேயே அமைந்துள்ள கதவு வழியாகத்தான். அதுபோல் மோட்சக் கதவும் பிரிக்க முடியாததாக

உலகச் சுவரிலேயே அமைந்துள்ளது. ஆகவே மோட்சம் உலகிலிருந்து பிரிந்துள்ள அம்சம் அன்று. நீ சாட்சியானால் மோட்சக் கதவு உனக்குத் திறக்கும். உன்னிடம் கர்த்தா உணர்வு மிகுதியாக இருந்தால் அந்தக் கதவு இருப்பதே கண்ணில் தட்டுப்படாது. அங்குமிங்கும் ஓடி-தேடினாலும் அதைக் கண்டுபிடிக்க முடியாது.

நீ செய்ய வேண்டியவற்றை நிறைவேற்றி சந்தோஷமாக இரு. அதே சமயம் நீ கர்த்தாவாக இருக்கக்கூடாது என்று கூறினால் முரண்பாடாகத் தெரிகிறதே எனலாம். கர்த்தா உணர்வுடன் செயல்பட்ட அலெக்ஸாந்தர், நெப்போலியன் கதை எப்படி முடிந்தது? அவர்கள் உலகை வெல்ல முயன்றார்கள். ஆனால் வாழ்க்கையில் தோற்றார்கள். கொள்ளை கொள்ளை யாய்ச் சம்பாதித்தார்கள். கையில் எதுவும் நிற்கவில்லை.

அஷ்டாவக்ரரின் அறிவுரைப்படி, நீ கடமைகளைச் செய்ய வேண்டும். ஆனால் சாட்சி மனப்பான்மையுடன் செய்ய வேண்டும். 'நான் செய்கிறேன்' என்கிற உணர்வு எழாமல், 'என் மூலம் செயல்கள் நடப்பதைப் பார்க்கிறேன்' என்று தள்ளிநிற்கும் மனநிலை வளரவேண்டும். அப்போது கடவுளே உன் வேலைகளைச் செய்வதுபோல் தோன்றும்.

'ஆத்மமயமானவனே, என்ன செய்வது-என்ன செய்யக் கூடாது என்னும் குழப்பங்களால் உன் மனத்தை வதைக்காதே. சாந்தமாக இருந்துகொண்டு ஆனந்தமாக உனது சொரூபத்தில் (நிஜமான உன்னில்) நிலைபெற்றிரு.' **(சுலோகம் 144)**

**எ**ன்னென்ன செய்ய வேண்டும் (சங்கல்பம்), என்னென்ன செய்யக்கூடாது (விகல்பம்) என்னும் இழுபறி நிலைதான் நமது மனம் அமைதியில்லாமல் விளங்க காரணமாகும். நீ எங்கே போவது-எங்கே போகக் கூடாது; எந்தக் கருத்தை ஏற்பது-எக்கருத்தை ஏற்கக் கூடாது என்பது போன்ற குழப்பங்களில் சிக்கிக் கொள்ளாதே. நீ எங்கே இருக்கிறாயோ அங்கேயே சாந்தமாக நிலைத்திரு. எப்படி உள்ளாயோ அதிலேயே சாந்தமாக இரு. அமைதியாக இருப்பதற்குக்கூட என்ன செய்வது என்று குழம்பினால், அங்கே அமைதிக்கு வாய்ப்பேது?

அமைதியாக இருக்க வேண்டும் என்பதே அமைதி யின்மைக்கு காரணமாக அமைவது விசித்திரம்தான். என்னிடம் வரும் சிலர் "சாந்தமாக இருக்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று ஆலோசனை கேட்கிறார்கள். அந்தக் கேள்வியிலேயே பதில் தொக்கி உள்ளது. 'தான்' என்னும் நினைப்பு, தான் செய்வதாக நினைப்பு-கர்த்தா உணர்வு — தூக்கலாக இருப்பது அமைதியின்மையின் முக்கியமான காரணமாகும். இங்கே கர்த்தா உணர்வு மறைந்து நிற்கிறது. அல்லது கர்த்தா உணர்வு மீண்டும் தலைதூக்குகிறது எனலாம். 'நான் செய்கிறேன்' என்று கர்த்தாவாக நினைத்ததுதான் அமைதியின்மைக்கு காரணமாக அமைந்தது. அதைப் போக்கிக் கொள்ள 'நான்' என்ன செய்ய வேண்டும் எனக் கேட்கத் தூண்டுவதும் அதே கர்த்தா உணர்வுதான்.

நீ தெரிந்துகொள்ள வேண்டியது என்னவெனில், நீ செய்து எதும் நடைபெறுவதில்லை. இது புரிந்தால், அசாந்திக்கு இடமில்லை. நீ இதுவரை முயன்று எப்பொழுது என்ன நடந்திருக்கிறது? எவ்வளவோ பாடுபட்டாயே, எந்த அளவிற்குப் பலன் கிடைத்தது? எதுவும் கிடைக்கவில்லை. ஆசைகளெல்லாம் நிராசையானது. பலன் உன் கையில் இல்லை. ஆனாலும் என்ன நடக்கிறது, எந்த அளவு நடக்கிறது என்று பார்த்துவிடலாமே. இன்னும் செய்யவேண்டியது எதுவுமுள்ளதா என்றும் தெரிந்துகொள்ளலாம்.

**மி**க வயதானவரான என் தாத்தாவுக்குப் பக்கவாத நோய் உண்டானது. நடப்பதற்கு மிகவும் சிரமம். ஆனாலும் இழுத்து, தேய்ந்து, எங்கள் குடும்பம் நடத்தும் கடைக்கு வந்துவிடுவார். வீட்டின் முன்புறம் கடை அவர் கடைக்கு வரவேண்டிய தேவையில்லை. அவரது வருகை தொல்லையாக இருந்தது.

அப்போது நான் கல்லூரி மாணவன். ஒரு முறை ஊருக்குப் போயிருந்தேன். நான் அவரிடம், பணிவுடன், "தாத்தா, உங்கள் உழைப்பு காலம் முடிந்துவிட்டது. நடக்கவோ முடியவில்லை. நீங்கள் கடைக்கு வரவேண்டிய அவசியமும் இல்லை. உங்கள் பிள்ளை (என் தந்தை) கடையை நன்றாக நடத்தி வருகிறார். ஒரு

பிரச்சினையுமில்லை. நீங்கள் அமைதியாக வீட்டிலேயே உட்கார்ந்திருக்கலாமே,'' என்று கேட்டேன்.

அவர் யோசனையில் ஆழ்ந்தார். நான் மேலும் தூண்டினேன். ''ஒரு பரிசோதனை மேற்கொள்ளுங்கள். ஒரு முழுநாள் கடைக்குப் போகாமல் வீட்டிலேயே இருந்துவிடுங்கள். நீங்கள் அங்கே தேவைப்படவில்லை. நீங்கள் போவதால் கடை முதலாளியான என் அப்பாவிற்கு சங்கடமாக இருக்கிறது. அவரது வேலை கெட்டுப்போகிறது. காலம் மாறிவிட்டது. நீங்கள் கடை நடத்திய காலத்திலிருந்த உலகம் வேறானது. இப்போதெல்லாம் கடைகள் நவீன முறையில் நடத்தப்படுகின்றன.''

அவர் கடை நடத்திய காலத்தில் பொருள்களில் விலை விவரம் இருக்காது. அவர் பத்து ரூபாய் விலையுள்ள பொருளை இருபது ரூபாய் என்பார். வாங்குபவரோடு அரை மணி நேரம் வாதம் செய்து கடைசியில் பத்து ரூபாய்க்கு ஒத்துக்கொள்வார். காரணம் கேட்டால், ''இதெல்லாம் ஒரு தமாஷ்தான். விற்பவரும் வாங்குபவரும் விலை பற்றி வாத விவாதம் செய்வது சுவையான நிகழ்ச்சி. இதனால் இருவரும் நெருங்கி வருகிறார்கள். இப்போதோ இருவருக்குமிடையே நட்பு ஏற்படுவதில்லை. அச்சிட்ட விலையைக் கொடுத்துவிட்டு வாங்குபவன் சட்டென்று கிளம்பிவிடுகிறான். கடைக்காரருடன் எதுவும் பேசுவதில்லை. அவரும் அவனுடன் பேசுவதில்லை,'' என்ற விளக்குவார். ஆகவே அவர் கடைக்குப் போனால் வாடிக்கையாளருடன் பேசத் தொடங்கி வம்புக்கிழுப்பார்.

வயதில் சிறுவனாயினும் நான் அவரை ''கர்த்தா உணர்வைக் கைவிடுங்கள். வேறு கர்த்தா கடையைப் பார்த்துக் கொள்ள இருக்கிறார். நீங்கள் கடைப்பக்கம் போனால் நடப்பதை சாட்சிபோல் பார்த்துவிட்டுத் திரும்பிவிடுங்கள்,'' என்று கேட்டுக் கொண்டேன்.

நான் சொன்னால் சரியாக இருக்கும் என்று அவர் கருதிவந்தார். ''சரி, பையா, நீ சொன்னபடி ஒரு முழுநாள் சாட்சிபோல் சுற்றிலும் நடப்பவற்றைப் பார்க்கிறேன். மனத்திற்கு அமைதியாக, இதமாக இருந்தால், பிறகு நிரந்தரமாக வீட்டிலேயே

இருந்துவிடுகிறேன். சாட்சி முறை மூலம் அமைதி கிடைக்கா விட்டால் மறுபடியும் கடைக்குப் போகத் தொடங்கிவிடுவேன். அங்கு பொழுதாவது போகும்,'' என்று தாத்தா ஒத்துக் கொண்டார்.

அதற்கேற்ப ஒரு முழுநாள் வீட்டிலேயே இருந்து சுற்றிலும் நடப்பவற்றை அமைதியாகக் கவனித்தபடி இருந்தார். பேசினார். ஆனால் யாரையும் குறை கூறவில்லை; யாருக்கும் அறிவுரை வழங்கவில்லை. மறுநாள் அவர் முகத்தை நான் பார்த்தபோது அதில் சாந்தமும் திருப்தியும் குடிகொண்டிருந்தது.

அவர் என்னைத் தட்டிக்கொடுத்து, ''பையா! நீ ஜெயித்து விட்டாய். கால் ஒடிந்தும் நான் கடைக்கு ஓடிக்கொண்டிருந்தேன். இந்த வயதிலும் மனம் வியாபாரத்தில் ஒட்டிக்கொண்டிருந்தது. இப்போது நான் இனி வியாபார விஷயமாகச் செய்வதற்கு ஒன்றுமில்லை என்பது புரிந்தது. கடை நன்றாக நடைபெற்று வருகிறது. நான் இல்லாமலே கடை முன்பைவிட நன்கு நடக்கிறது. ஆமாம், முதலில் நாலைந்து மணி நேரம் சேர்ந்து வீட்டிலேயே இருப்பது சிரமமாகத் தெரிந்தது. பன்னிரண்டு மணி நேரம் கழிந்தபின் சற்று சுகமாக உணர ஆரம்பித்தேன். வாழ்க்கையில் நான் மேற்கொண்டு செய்வதற்கு எதுவுமில்லை எனப் புரிந்தது. சூரியன் உதிப்பதையும் மறைவதையும் இப்போதுதான் ஜன்னல் வழியாக ரசித்துப் பார்த்தேன். நீண்ட காலத்துக்குப் பிறகு இரவில் ஆழ்ந்து தூங்கினேன். கனவுகள் வரவில்லை,'' என்று சொல்லி என்னைப் பாராட்டினார்.

பிறகு அவர் என்றும் கடைப்பக்கமே போகவில்லை. குடும்பத்திலிருந்த மற்றவர்களும் இந்த மாற்றத்தைக் கண்டு வியப்படைந்தனர். குணமும் மாறியிருந்தது. முன்பு அவர் கடைக்குப் போனபோது 'என் கடை' என்ற பற்றும், 'நான் கடையை நடத்திய விதம் இப்போதைய விதத்தைவிடச் சிறப்பானது' என்ற கர்வமும் இருந்தது. கடைக்குப் போவதை நிறுத்தியதால் இவை நீங்கின. அது மட்டும் போதாது. சுற்றிலும் நடப்பவற்றை விமரிசித்தபடி இருப்பதை நிறுத்த வேண்டும். எல்லா நிகழ்ச்சிகளையும் விலகி நின்று பார்க்க வேண்டும். இந்த அணுகுமுறை — சாட்சி முறை — மனத்தை சாந்தப்படுத்தும்.

அவரது மரணத்திற்கு இரண்டு நாளைக்குப் பிறகுதான் நான் வீட்டிற்கு வந்தேன். இறக்கும் தறுவாயில் என்னைப் பற்றிதான் நினைத்தார் என்று உறவினர்கள் என்னிடம் கூறினார்கள். அவர்கள் அவரிடம், "நாங்களெல்லாம் இல்லையா? அந்தப் பையனிடம் மட்டும் என்ன விசேஷம்?" என்று கேட்டார்களாம்.

அதற்கு அவர், "என் பேரன் என் நன்றிக்குரியவன். அவன்தான் என்னை கர்த்தா உணர்வை விடும்படி வற்புறுத்தினான். அவன் மறுபடி வரும்போது நான் உயிருடன் இருக்கமாட்டேன். நான் சாட்சி மனப்பான்மையுடன் இறந்தேன் என்றும், வாழும்போது கிடைக்காத மன அமைதி அப்போது என்னைச் சூழ்ந்திருந்தது என்றும் அவனுக்குத் தெரிவியுங்கள்," என்று கூறினாராம்.

'எதைப் பார்த்தாலும் அதன்மீது கவனம் செலுத்துவதை, அதனால் கவர்ந்திழுக்கப்படுவதை விட்டொழி, இதயத்தை வெற்றிடமாக்கு. நீ ஆத்மா. நீ சுதந்திரமானவன். சிந்தனையில் ஈடுபட்டு ஏன் குழம்ப வேண்டும்?' **(சுலோகம் 145)**

**ப**ணத்தின்மீது உனக்குக் கவனம். அதைக் கைவிடு. பலவித ஆசைகளில் உனக்குள்ள ஈடுபாட்டை தியாகம் செய். சொர்க்கத்தின்மீது உனக்கு விருப்பம். அதைத் துற. எப்பொருளிலும் மனத்தைப் பதிக்காதே. உன் இதயத்தை வெற்றிடமாக்கு, சூன்யமாக்கு.

யோசிக்க, சிந்திக்க என்ன இருக்கிறது? விமர்சிக்க, மதிப்பிட என்ன இருக்கிறது? எல்லாமும் நீ ஒருவனே. நீ ஆத்மா. நீ சுதந்திரமானவன் (முக்தன்). எண்ண ஓட்டத்தைத் தடுத்து நிறுத்து. சுற்றிலும் சிதறிய உன் கவனத்தை இழுத்துவந்து ஒருமுகப்படுத்து பரமாத்மாவில்.

இந்த அறிவுரை கிருஷ்ணரின் அறிவுரையைக்* கடந்து முன்னேறிச் செல்கிறது. கிருஷ்ணருடைய அறிவுரையில் ஓர்

* ஸர்வதர்மாள் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ—எல்லாக் கடமைகளையும் (கடமைவழிப் பற்றுகளையும்) விட்டொழித்து என் ஒருவனையே சரண்புகுவாய். (18:66)

அபாயம் உள்ளது. நீ எல்லாவற்றையும் கைவிட்டு கிருஷ்ணனின் திருவடிகளை தியானி என்று திசை காட்டப்படுகிறது. இது கிருஷ்ண பக்தர்களை வேண்டுமானால் சந்தோஷப்படுத்தலாம். ஆனால் அதுவும் ஒரே ஒரு கடமையையாவது பிடித்துவைத்துக் கொள்வதுபோல் ஆகிவிடுகிறதே.

ஆனால் அஷ்டாவக்ரர் எதிலுமே ஒட்டிக்கொண்டு விடக்கூடாது என்கிறார். வெளிப்புறம் எதிலும் கவனம் பதிக்காத மனநிலையில் சமாதி வாய்க்கிறது. பிறவற்றில் கவனம் செல்லுவது சூன்யமாகிப் போனதும் சமாதி உணர்வு பிறக்கிறது. உனது சிந்தனையில் எதுவுமே இல்லாமல் போனால், ஓர் ஒளி மட்டும் பரவியிருந்தால், அந்த ஒளி எங்கும்-எதன்மீதும் படாமலிருந்தால், அப்போது நீயே அந்த வெறுமையான ஒளியாகிவிடுகிறாய்.

மனிதனின் பொதுவான சிந்தனையை டார்ச் லைட் எனலாம். அது ஒரு பொருள் மீதுதான் ஒளி வீசும். ஒரு சமயம் ஒரு திசையில்தான் அதன் ஒளி செல்லும். மற்ற திசைகளில் ஒளி பாயாது.

இன்னொரு வகைச் சிந்தனையும் உண்டு. அது அகல் விளக்குப் போன்றது. அதன் ஒளி எல்லா மூலைகளுக்கும் செல்கிறது. குறிப்பிட்ட ஒரு பொருளின் மீது விசேஷமாக ஒளி படுவதில்லை. விளக்கைச் சுற்றி ஏதேனும் பொருள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் இரண்டும் ஒன்றுதான். அறையில் பொருளே இல்லாவிடில் சூன்யத்தில் ஒளி பரவுகிறது. இதேபோல் உன் மனமும் வெற்றிடமாகி அதில் பிரகாசம் தெரிந்தால் நீ சுதந்திரமாகி (முக்தனாகி) விடுகிறாய். வெளியுலகக் கவனம் முழுமையாக நீங்கிவிட்டதால் நீ உள்ளே இருக்கும் ஆத்மாவை உணர்கிறாய். சிந்திக்க விஷயம் எதுவும் இல்லாத நிலையில் நீ சாந்தமாகி விடுகிறாய். மற்றவர்களும் உன்னைப் பார்த்துச் சிறிது நேரமாவது சாந்தமாக விளங்குவார்கள்.

**போனவன் போனவன்தான்**
**வரவுள்ளவனும் எவனும் காணோம்**
**மிஞ்சி இருப்பவன் எவனோ**
**அவனே ததாகதன்**

இந்த நிலையை நீ அடைந்தால், சுற்றியுள்ளவர்களும் உன்னிடம் தூய்மை துலங்குவதைக் கவனிப்பார்கள். உன்னிடமிருந்து நறுமணம் எழுவதை உணர்வார்கள். நன்கு கழுவிவிடப்பட்டதுபோல் உன் முகம் ஜொலிக்கும்.

நீ சாந்தமாகி விட்டால் 'அவர்'தான் மூச்சின் மூலம் உள்ளே நுழைகிறார்; அவர்தான் மூச்சின் மூலமாக வெளியேறுகிறார் என்பதைப் புரிந்து கொள்வாய். அவர்தான் வருகிறார், போகிறார். அவர்தான் இருக்கிறார், இருந்தார், இருப்பார். ஏனெனில் இருப்பவர் அவர் ஒருவரே.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்கள் சீடர் பட்டாளத்தில் கடைசியாக நிற்பவனின் கதி என்ன?**

**இ**யேசுநாதர் மொழிந்தார்: 'வரிசையில் கடைசியில் உள்ளவன் பரமபிதாவின் விண்ணரசில் முதலிடத்தில் நிறுத்தப்படுவான்.' ஆனால் கடைசி என்பதன் பொருளென்ன? சீடர்களில் கடைசியாகச் சேர்ந்தவன் அல்லது எல்லோரிலும் வயதில் சிறியவன் என்று அர்த்தம் கொண்டால், அவன் ஆன்மித்திலும் எல்லோரிலும் இளையவனாக, இளைத்தவனாக இருப்பான் என்ற கட்டாயமில்லை. சாதாரண வாழ்க்கையில், கடைசியாக நிற்பவன் எப்படியாவது முதல் இடத்திற்கு வந்துவிட வேண்டும் என்றே விரும்புவான். இப்படி முண்டியடித்துக் கொண்டு முதலிடம் பெறும் ஆசை நீங்கிவிட்டால், கடைசியாக நிற்கும் நிலையுடன் ராஜியாகிவிட்டால், சமரசமாகிவிட்டால் அப்படிப்பட்டவனைப் பற்றி நானும் இயேசுநாதர் சொன்னதையே வழிமொழிவேன். சுருக்கமாக, 'வரிசைப்படியில் கடைசி ஆள் சிறப்புப்படியில் முதல் ஆள்' என்பேன் (last but not least).

முதலிடம் பிடிப்பதற்காக மக்கள் பந்தய ஓட்டம் ஓடுகிறார்களே அது பைத்தியக்காரத்தனம். உலக வாழ்க்கை யிலாவது இந்த வெறியை மன்னித்து விடலாம். ஆனால் சத்தியத்தைத் தேடும்போது முதலிடம்-கடைசி இடம் என்றெல்லாம் பிரிப்பது முன்னேற்றத்தைத் தடுக்கும். இந்த உலகம் பித்தர் மருத்துவமனை போன்றது. இங்கே எல்லோரும் ஓடுகிறார்கள். மாபெரும் ஆசைகள், போட்டிகள், போராட்டங் களால் இவ்வுலகம் நிறைந்துள்ளது.

சத்தியத்தை தேடி செல்பவன் உலக மக்களின் ஓட்டப் பந்தயத்திலிருந்து விலகினால் சத்தியத்தை அடைவான். அவன் பிறருடன் போட்டியிடுபவனாக, போராடுபவனாக இருக்க மாட்டான். சத்தியம் என்பது பிறர் எடுத்துக் கொண்டால் உன் பங்கு குறையக்கூடியது போன்ற செல்வமில்லை. அது அள்ள-அள்ளக் குறையாதது. உலகில் காணப்படும் சாதாரணச் செல்வமோ பிறர் எடுக்க-எடுக்க உன் பங்கு குறைந்துவிடும். அதைப் பிறர் பறித்துத் தமதாக்கினால் நீ ஏழையாகிவிடுவாய். அதைத் தடுக்க, அவர்களை முந்திச் சென்று முடிந்த அளவு செல்வத்தை உனதாக்கிக் கொள்ள வேண்டியுள்ளது. இதனால் உலகில் ஓட்டப் பந்தயமாக இருக்கிறது.

உலகில் செல்வம் கொட்டிக் கிடந்தாலும் மக்கள் தொகையின் அடிப்படையில் அச்செல்வத்தின் அளவு குறைவுதான். ஒப்பீடாகச் சொன்னால், நம் நாட்டில் குடியரசுத் தலைவர் பதவி ஒன்றுதான் உள்ளது. நாட்டு மக்கள்தொகை 120 கோடி. இவர்களில் ஒருவருக்குத்தான் அப்பதவி கிடைக்கும். ஆனால் அதற்கு ஆசைப்படுபவர்களோ ஏராளம். ஆகவே போட்டி தவிர்க்க முடியாதபடி ஆகிறது; மோதல் விளைகிறது. இந்த உலகில் பித்தர்கள் ஜெயிக்கிறார்கள்.

உலக வரலாற்றில் மாவீரர்களாக சித்திரிக்கப்படுபவர்களின் பெயர்கள் உண்மையில் மனநோயாளிகளின் மருத்துவமனைப் பதிவேட்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும். செங்கிஸ்கான்[1], தைமூர்[2], நெப்போலியன், அலெக்ஸாந்தர், ஹிட்லர், மாவோ-ஆகியோர் மனநோயாளிகளே. எல்லாவற்றையும் தன் வசப்படுத்த வேண்டும் என்னும் பேராசைக்கு இவர்கள் எடுத்துக்காட்டுகள். தாங்கள் தயங்கினால் உலகத் தலைமை வேறு யார் கைக்காவது போய்விடுமே என இவர்கள் அஞ்சினார்கள்.

1. Genghis Khan (12-13-ஆம் நூற்றாண்டு) பெயரின் பொருள் உலக அரசன். மங்கோலியப் பேரரசை நிறுவியவர்.
2. Timur/Tamburlaine (1366-1405) துருக்கிப் பேரரசர். ஆசியாவில் பெரும்பகுதியை வென்றவர்.

ஆகவே தாமதம் கூடாது. எங்கும் பரபரப்பு, எல்லாம் அவசரம், ஓய்வு கிடையாது. அமைதி கிடையாது. உட்கார முடியாது. சற்று ஓய்வு எடுத்தாலும் வாய்ப்புப் போய்விடும். மற்றவர்கள் தொடர்ந்து ஓடும்போது தான் மட்டும் சில நிமிடம் உட்கார்ந்து ஓய்வெடுப்பதா? ஓடு...ஓடு... தொடர்ந்து ஓடு. மயானத்தை அடையும்வரை ஓடு. கல்லறைக்கு வந்து விழு. உன் ஓட்டம் முடிந்தது.

ஆனால் சத்தியம் என்னும் செல்வம் எல்லையற்றது. புத்தருக்கும் மகாவீரருக்குமிடையே போட்டியில்லை. ஒருவருக்குக் கிடைத்தது இன்னொருவருக்குக் கிடைக்காமல் போய்விடுமோ என்று பயமில்லை. இதேபோல் கிருஷ்ணருக்கும் மகாவீரருக்கும் நடுவிலும் போட்டி இல்லை. சத்தியம் விரிந்து பரந்துள்ள வானம்போல் விசாலமானது. அதை எவ்வளவு வேண்டுமானாலும் பருகலாம். அதில் எவ்வளவு வேண்டு மானாலும் மூழ்கித் திளைக்கலாம். சத்தியம் குறைந்துபோகாது. பாதிப்படையாது.

ஆகவே சத்தியம் என்னும் உலகத்தில்-சத்திய லோகத்தில்-முதலிடம், கடைசி இடம் என்றெல்லாம் இருக்க வாய்ப்பில்லை. இப்படி வரிசைப் பட்டியல் தயாரிப்பது போட்டிமயமான சாதாரண உலகத்திற்குத்தான் பொருந்தும்.

சீடன் கடைசியில்தான் இருக்க வேண்டும். கடைசியாக நிற்கும் மனப்பான்மைக்கான ஏற்பாடுதான், வரிசையில் கடைசியில் நிற்கத் தயாராவதற்கான ஏற்பாடுதான் சீடத்துவம் (discipleship) என்பது. குருவிற்குப் பணிவின் சிகரமான அத்தகைய சீடனைத்தான் பிடிக்கும். குரு முதலில் நிற்பவனுக்குத்தான் முன்னுரிமை கொடுத்தால் (first come first served) அவர் லட்சிய குருநாதர் அல்லர்.

கடைசியில் மௌனமாக நின்றுகொண்டு, மௌனமாக எதிர்பார்ப்பவன், எதுவும் வேண்டுகோள் வைக்காதவன், தான் இருப்பதைக் காட்டிக்கொள்ள ஓசை எழுப்பாதவன், ‘எனக்கு நேரமாகிறது, எவ்வளவு நேரம்தான் காத்து நிற்பது?’ என்று சலிக்காதவன், ‘மற்றவர்களுக்குக் கிடைப்பது எனக்கு இன்னும்

கிடைக்கவில்லையே' என ஏங்காதவன், அபூர்வமான பொறுமை உடையவன்—அத்தகையவன்தான் குருவின் மனத்தில் முதலிடம் பிடிக்கிறான் என்பதை நிச்சயமாகச் சொல்லுவேன்.

ஆனால், கடைசியில் நின்றாலும், எப்படியாவது முதலிடத்தைப் பிடித்துவிட வேண்டுமென்று தீவிர ஆசை தோன்றினால், அந்த ஆசை நெருப்புபோல் கொழுந்துவிட்டு எரிந்தால், நீ எங்கு நின்றாலும் கடைசியில் நிற்கத்தான் லாயக்கானவன்.

நீ தியாகி ஆவதற்கு முன்னால் ஏழையாக வேண்டும் என்று கட்டாயமில்லை. நீ வாழ்க்கையில் உன் முயற்சிகள் பலிக்காமல் போனதால் நீ ஏழையாகியிருப்பாய். தியாக உணர்வால் வசதிகளை இழந்திருக்க மாட்டாய். அதுபோலவே, துறவியாவதற்காக உலகத்தைத் துறக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. ஞானோர்தயம் காரணமாக சந்நியாசியாக விரும்புவது வேறு. சோகம், வாழ்க்கையில் அலுப்பு, தோல்விகள் இவற்றின் காரணமாக, ஆனால் இவற்றை மறைத்து, சந்நியாசியாவது போலித்தனம்.

பள்ளிக்கூடத்தில் தேர்வு நெருங்கிவிட்டால் சில மாணவர்கள் தேர்வு எழுத விரும்புவதில்லை. ஜம்பமாக, 'தேர்வு எழுதினால் பாஸ் ஆகிவிடுவோம். ஆனால் இந்த சமயம் பார்த்து உடம்பு சரியில்லாமல் போய்விட்டது' என்று சாக்குச் சொல்லுவார்கள்.

**நா**ன் ஒரு சமயம் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராக இருந்தேன். ஒரு மாணவன் என் வகுப்பிலேயே தொடர்ந்து மூன்று ஆண்டுகள் இருந்தது கண்டு எனக்குத் திகைப்பேற்பட்டது. ஒவ்வோர் ஆண்டும் தேர்விற்குச் சரியாக இரண்டு-மூன்று நாள் முன் அவனுக்குக் கடுமையாகக் காய்ச்சல், சளி மற்றும் பல தொந்தரவுகள் வந்துவிடும். அவன் தேர்வு எழுதாமல் இருந்துவிடுவான்.

நான் அவனை அழைத்து, "உனக்கு வந்த நோய் உடல் சம்பந்தப்பட்டதாக எனக்குத் தோன்றவில்லை. இது மனநோய்,

ஒவ்வொர் ஆண்டும் குறிப்பிட்ட சமயம் பார்த்து ஏன் காய்ச்சல் வருகிறது? முதல் நாள் தேர்வுக்குப் போகாமல் இருந்துவிட்டு, இனி மீதித் தாள்களை எழுதினாலும் பயனில்லை என்று தெரிந்ததும் உன் காய்ச்சல் நீங்கிவிடுகிறது! உன் மனம் உன்னை ஏமாற்றுகிறது போலும். 'இனி என்ன செய்ய முடியும்? உனக்கு உடம்புக்கு வந்துவிட்டது. காய்ச்சலைத் தடுப்பது நம் வசத்தில் இல்லை. தேர்வு எழுதியிருந்தால் தங்கப் பதக்கம் கிடைத் திருக்கும். தேர்வு எழுத முடியாமல் போய்விட்டது. காய்ச்சலுடன் தேர்வெழுதித் தோல்வியடைந்திருந்தால் எவ்வளவு அவமானம் இருந்திருக்கும்' என்று மனம் உனக்கு மூளைச் சலவை செய்கிறது,'' என்று விளக்கினேன்.

சந்நியாசிகளில் பலர் இவ்விதமாகவே துறவு மேற்கொள்ளு கின்றனர். அவர்கள் தங்களால் வாழ்க்கையில் வெற்றி பெற இயலாது என்பதை உணர்கின்றனர். உலகில் சிரமம் அதிகம். பிடுங்கல்-பறிமுதல் அதிகம். கழுத்தை நெரிக்குமளவு போட்டி. உயிரே போய்விடும் அவஸ்தை. இதிலிருந்து தப்பித்து வெளியேறிவிடுவதே நல்லது-என்றெல்லாம் சிந்தித்துப் பலர் தோல்வி மனப்பான்மை (defeatism) காரணமாக சாமியாரா கின்றனர். ஆனால் மற்ற சந்நியாசிகளுடன் போட்டி போட்டுக் கொண்டு துறவிகளில் முதலிடம் பிடிக்க முயலுகின்றனர்.

**இ**யேசுநாதர் இறந்த இரவு. விண்ணுலகப் பயணத்தைத் தொடங்கிய நேரம். சீடர்கள் அவரை வணங்கி, "ஒரு விஷயம் சொல்லிவிட்டுப் போங்கள். பரமாத்மாவின் தர்பாரில் நீங்கள் நிச்சயமாக அவரை அடுத்து நிற்பீர்கள். உங்களை அடுத்து நிற்கப் போவது யார்? உங்கள் சீடர்களாகிய எங்கள் பன்னிரண்டு பேரில் யாருக்கு அந்த சௌபாக்கியம் கிடைக்கும்? எங்களது வரிசை கிரமம் எப்படி அமையும்?'' என்று விசாரித்தார்கள்.

இவர்களைத் துறவிகள் என்று கூறுவாயா? இவர்கள் இயேசுநாதரின் செய்தியை எடுத்துச் செல்பவராயினர். உலகெங்கும் நற்செய்தி பரப்பினர். இவர்கள் உண்மையில் இயேசுநாதரைப் புரிந்து கொண்டிருந்தால் விண்ணுலகில் தங்கள் வரிசை முறை பற்றிய தரம் தாழ்ந்த கேள்வியைக் கேட்டிருப்

பார்களா? யூதாஸ் (Judas) இயேசுநாதரைக் காட்டிக்கொடுத்தான். மீதிப் பேர் கேட்ட கேள்வியும் துரோக சிந்தனைதான். இவர்கள் சமூகத்தில் மிகுந்த ஏழ்மை நிலையிலிருந்து வந்தவர்கள். ஆகவே விண்ணுலகிலாவது கடவுள் மற்றும் இயேசுவை அடுத்துத் தாங்கள்தான் நிற்போம் என்று கற்பனை செய்து மகிழ்கிறார்கள்.

இவர்களைப் போல் இல்லாமல், எந்த இடமும் பரமாத்மாவின் இடம்தான் என்று கடைசி இடத்திலும் சாந்தமாக இருப்பவன், திருப்தியாக இருப்பவன், முயற்சி செய்யாமலே முதல் இடத்திற்கு உயர்த்தப்படுகிறான்.

## இரண்டாம் கேள்வி

**ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் உலகம் விரிகிறது என்பதை ஏற்றுள்ளார். பிரம்ம வாதம் என்பதும் இதுவே. அப்படியானால் அவரை பிராமணர் என்று அழைக்கலாமா?**

பிறப்பால் பிராமணர் எனப்படுபவரைவிட ஐன்ஸ்டீனை உயர்ந்த வகையான பிராமணர் எனலாம். பூணூல் தரித்த பிராமணர்களைவிட பூணூல் என்பதையே கேள்விப்பட்டிராத ஐன்ஸ்டீன் உயர்ந்த வகையான பிராமணர்தாம்.

ஐன்ஸ்டீன் இறப்பதற்கு இரண்டு நாள் முன் இவரைச் சந்தித்த ஒருவர், "மறுபிறவி என ஒன்றிருந்தால் நீங்கள் எப்படியாக விரும்புவீர்கள், விஞ்ஞானியாகத்தானே?" என்று கேட்டார். ஐன்ஸ்டீன் கண்களைத் திறந்தார். "இல்லை, இனி மறந்தும்கூட விஞ்ஞானியாக விரும்பவில்லை. ஏற்கெனவே ஒரு தடவை அந்தத் தப்பு நிகழ்ந்துவிட்டது. மறுபடியும் பிரபலமான மனிதனாக ஆவதற்கு நான் விரும்பவில்லை. குழாய் பழுது பார்ப்பவனாக வாழ்க்கை நடத்த விரும்புகிறேன். அல்லது அது போன்ற சிறிய தொழிலாளராக இருக்கவே விரும்புகிறேன். புகழ் வாய்ந்தவனாக இருந்து பார்த்தாகிவிட்டது. அதில் பிரயோஜன மில்லை. மீண்டும் பிறந்தால் சாதாரண மனிதனாக வாழ்ந்தால் போதும்," என்று தெரிவித்தார்.

இதுதான் பிராமணத் தன்மை. அடக்கம் அவனது அடையாளம். எனினும் ஐன்ஸ்டீனை முழுமையான பிராமணர் என ஏற்பதில் சிறு சிக்கல் உள்ளது. அவர் பிரம்மாண்டம் பற்றி அறிந்திருந்தார். வெளியே தெரிகின்ற உலகத்தை அவர் அறிந்திருந்தார். ஆனால் உள்ளுலகம் அல்லது அக உலகம் பற்றி அவர் அறிந்திருக்கவில்லை. அது இருக்கலாம் என அவர் ஒப்புக்கொண்டார். பிறவி பிராமணர்கள் சில சாஸ்திர நூல்களைப் படித்துவிட்டு, சிலவற்றை மனப்பாடம் செய்து, தங்களுக்கு எல்லாம் தெரியும்போல் வாதவிவாதம் செய்கிறார்கள். ஐன்ஸ்டீன் வேடம் போடாமல் தன் அறியாமையை ஒப்புக்கொண்டார். 'இந்த உலக இயக்கம் சம்பந்தமாகப் பல புதிர்களை விடுவித்திருக்கிறேன். ஆனால் உள்ளுலகம் என்னும் புதிரை அவிழ்க்க முடியவில்லை' என நேர்மையாக அவர் சொன்னதால், இந்திய பிராமணர்களை விட அவரிடம் பிராமணத் தன்மை அதிகம் எனலாம்.

உபநிஷதம் எச்சரிக்கிறது-'எனக்குத் தெரியும்' என்று எவன் சொல்கிறானோ அவனுக்கு உண்மையில் தெரியாது என்பதை நீ தெரிந்துகொள். 'எனக்குத் தெரியாது' என்று எவன் சொல்கிறானோ, அதை அப்படியே ஏற்காதே. அவனுக்கு ஒருவேளை தெரிந்திருக்கக் கூடும்.

ஐன்ஸ்டீன் வெளியுலகம் பற்றி பெற்றிருந்த விசாலமான அறிவு, உள் உலகத்தையும் அவர் அறிந்துகொண்டதாக அவருக்கு பிரமை ஏற்படுத்தவில்லை. சர்வதேசப் புகழ் அவரைத் திமிர்பிடித்தவராக மாற்றவில்லை. ஐன்ஸ்டீன் பெற்றிருந்த வெளியுலகப் புகழ் எல்லையற்று விளங்கியது. மனித வரலாற்றில் அவரளவிற்குப் புகழ் பெற்றிருந்தவர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். ஆயினும் அவரிடம் அகம்பாவம் இருக்கவில்லை. 'நான்' என்னும் உணர்வு தூக்கலாக இல்லை. ஆகவே நம் ஊர் பிராமணர்களைவிட அவர் உயர்ந்தவர்தானே.

ஐன்ஸ்டீன் அறிந்திருந்ததெல்லாம் வெளியுலகம் பற்றித் தான். அவருக்கு பிரம்மாண்டம் பற்றிய எல்லா விஷயமும் தெரியும். பொருட்களின் மூலக்கூறுகள் தெரியும். சந்திரன்-நட்சத்திரங்கள் பற்றிய புள்ளிவிவரம் தெரியும். ஆனால் அவர்

தன்னைப் பற்றிய, சுயத்தைப் பற்றிய ஆழ்ந்த அனுபவம் பெற்றிருக்கவில்லை. தன்னைப் பற்றி அறிய அவர் உள்முகப் பயணம் மேற்கொண்டதில்லை.

உண்மையான பிராமணன் யார்? தனக்குள்ளே வீற்றிருக்கும் பிரம்மத்தை அறிந்தவன் அல்லது அறிய விழைபவன்தான் பிராமணன். உண்மையான பிராமணன் தனக்குள் இருக்கும் பிரம்மமும், வெளியில் தெரியும் பிரம்மாண்டமும் ஒன்றே என அறிந்திருப்பான். உண்மையான பிராமணன் தனக்குள் நுண்ணியதாக இருப்பதுதான் வெளியே எங்கும் விரிந்து பரவியுள்ளது என்பதை உணர்ந்திருப்பான்.

இதையெல்லாம் சுயமாக அனுபவித்து அறிந்திருக்க வேண்டும். ஆன்மிகச் சொற்பொழிவுகளைக் கேட்டோ, சாஸ்திரங்களைப் படித்தோ பெறும் அறிவை நான் குறிப்பிடவில்லை. அப்போது ஒருவனுக்கு தான் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டது போன்ற பிரமை தட்டும். அந்த பிரமை அறியாமையைப் போர்வை போல் போர்த்திவிடும். அறியாமையைவிட ஊசிப்போன ஞானம், கேட்டும் படித்தும் பெறும் கடன் வாங்கிய ஞானம் ஆபத்தானது.

**உ**த்தாலகர் தன் மகன் சுவேதகேதுவை ஆன்மிகக் கல்வி பயில ஒரு குருகுலத்திற்கு அனுப்பிவைத்தார். அவன் பல்லாண்டுகள் சாஸ்திரங்கள் படித்து, வேதங்களை மனப்பாடம் செய்து, குருகுலக் கல்வியை நிறைவுசெய்தான். குருவின் பாராட்டைப் பெற்று வீடு திரும்பினான். தான் ஓர் அறிஞன் என்னும் கர்வம் அவனுக்கு மிகுதியாக இருந்தது. அவன் தந்தை அதிகம் படித்திருக்கவில்லை. தற்காலத்தில் பல்கலைக்கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றவர்கள் வீடு திரும்பி, தந்தையைச் சந்திக்கும்போது, 'பாவம், இவர் என்னளவு அறிவு பெற்றதில்லை' என்று பரிதாபப்படுகிறார்கள். அப்படித்தான் தன் தந்தையைப் பார்த்து சுவேதகேதுவும் நினைத்திருப்பான். திமிர் காரணமாக அவன் தந்தையின் பாதம் தொட்டுக்கூட வணங்கவில்லை.

தந்தையின் கண்கள் நீரால் நிறைந்தன. மகன் முறைப்படி தன்னை வணங்கவில்லையே என்று அவர் வருந்தவில்லை.

'இவன் படிப்பு முடிந்துவிட்டதாகச் சொல்கிறானே. இவனது அகங்காரத்தைப் பார்த்தால், இவன் ஒன்றுமே கற்கவில்லை என்பதுபோல் அல்லவா தெரிகிறது' என்று நினைத்ததே அவர் வருந்தியதற்கு காரணம்.

உத்தாலகர் மகனிடம், "எதை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததுபோல் ஆகுமோ, அதை நீ கற்றுக்கொண்டு வந்துள்ளாயா?" என்று விசாரித்தார்.

"அப்பா, இதென்ன, புதிதாக என்னமோ சொல்லறீங்களே. எதைப் பற்றி, யாரைப் பற்றி சொல்கிறீர்கள்? என் குருவால் என்னென்ன கற்பிக்க முடியுமோ அவை அனைத்தையும் கற்றுக் கொண்டேன். நீங்கள் சொல்லும் ஏதோ ஒன்றைப் பற்றி எங்கள் குருகுலத்தில் பேச்சே எழுந்ததில்லை. அப்படி அறிய வேண்டியது மிச்சமாக என்ன உள்ளது?"

"மகனே, உன் படிப்பு பூர்த்தியாகவில்லை என்று தெரிகிறது. மறுபடி குருகுலத்திற்குச் சென்று உயர்ந்த அறிவைப் பெற்றுவா. இதுவரை நீ பெற்றுள்ள அறிவை வைத்து உன்னை பிராமணன் என்று கூற முடியாது. நமது குலத்தில் பிறப்பால் மட்டும் ஒருவனை பிராமணன் என்று சொல்வதில்லை. அறிய வேண்டிய சூட்சுமமான ஒன்றை அறிந்தவனையே நாம் பிராமணன் என்கிறோம். அதை அறிந்து வா. நீ இப்போது சாஸ்திரங்களை மட்டுமே தலையில் ஏற்றி வந்திருக்கிறாய், உனது எடை அதிகரித்துவிட்டது. நீ பாரத்தை இறக்கிவைத்துவிட்டு வரவில்லை; சூன்யமாகியபின் வரவில்லை. உனக்குள்ளே பிரம்மம் என்னும் அக்னி ஆரம்பநிலையில்கூட இல்லை. அதாவது, நீ இன்னும் பிராமணன் ஆகவில்லை. பிரம்மத்தை அறிந்திருந்ததால்தான் நம் முன்னோர்கள் 'பிராமணர்' என்னும் பெயருக்கு உரிமை கொண் டாடினார்கள். ஆகவே நீயும் பிரம்மத்தை அறியாதவரையிலும் வீடு திரும்பாதே" — உத்தாலகர் கட்டளையிட்டார்.

வேறு வழியின்றி சுவேதகேது குருகுலம் திரும்பினான். தந்தை சொன்ன விஷயம் கற்பதற்கு மிகவும் கடினமான விஷயமாக இருக்கும் என அவனுக்குத் தோன்றியது. குருவிற்குத் தெரிந்த விஷயத்தையெல்லாம் தானும் கற்றுக்கொண்டு விட்டதால்,

கற்பதற்கு வேறென்ன பாக்கி என அவன் குழம்பினான். அவன் குருவைச் சந்தித்து நடந்ததைக் கூறினான். "எந்த ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டதுபோல் ஆகுமோ, அதை அறிந்து வருமாறு தந்தை திருப்பி அனுப்பிவிட்டார். அதை அறியாமல் மற்ற விஷயங்களை அறிந்திருப்பதால் பயனில்லை என்கிறார். அந்த ஒன்று என்ன? நீங்கள் அதைப் பற்றி பேசியதே இல்லையே, குருதேவரே!" என்று சுவேதகேது சந்தேகம் எழுப்பினான்.

குரு அவனை அமைதிப்படுத்தினார். "அந்த ஒன்றைப் பற்றி பேச முடியும் என்றால்தானே பேசலாம். சொற்களால் அதை வரையறுக்க, சித்திரிக்க முடியாது. ஆனால் அதை அறிந்தேதீர வேண்டும் என்ற உறுதியுடன்தான் இப்பொழுது நீ வந்திருக்கிறா யெனில் அதற்கு உபாயமுள்ளது. சொற்களோ, சாஸ்திரங்களோ, சித்தாந்தங்களோ உபாயங்கள் ஆக முடியாது. எனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் நான் உனக்குக் கற்றுத்தந்தாகி விட்டது. ஆனால் நீ இப்போது கூறும் விஷயம் வேறொரு தளத்தைச் சேர்ந்தது; வேறு வகையானது. ஒரு காரியம் செய். நம் ஆசிரமத்தில் எத்தனை மாடுகள் உள்ளன என்று எண்ணிக்கொள். அவற்றைக் காட்டுக்கு அழைத்துச் சென்று மேயவிடு. வெகுதொலைவிற்குப் போய்விடு. மனித நிழல் படாத இடத்திற்குச் சென்றுவிடு. அப்போதுதான் சமூகத்துடனான தொடர்பு முழுமையாக நீங்கும்.

சமூகத்திலிருந்து விலகிச் செல்லச் செல்ல, அகங்காரத்தைக் கைவிடுவது வசதியாக இருக்கும். நீ தனியாளாக இருக்கும்போது திமிராக இருக்க முடியாது. எடுத்துக்காட்டாக, நீ குளித்துக் கொண்டிருக்கும்போது, சிறுவர்கள்போல் முகத்தை அழகுகாட்டிக் கோமாளித்தனமெல்லாம் செய்யலாம். அப்போது யாராவது கதவில் ஏதேனும் ஓட்டை வழியாக உன்னைப் பார்ப்பதாகத் தோன்றினால், நீ எச்சரிக்கையாகிவிடுவாய். உன்னிடம் அகங்காரம் மறுபடியும் வந்துவிடும். அதிகாலையில் நீ ஒருவன் மட்டும் சாலையில் எங்காவது போகிறாய். அப்போது எந்த பந்தாவும் இல்லாமல் காணப்படுகிறாய். 'நீ' என்று சொல்ல இன்னொருவன் இருந்தால்தான் 'நான்' என்பதும் இருக்க முடியும்.

சுவேதகேதுவைப் பார்த்து குரு, "மனித நிழலே தெரியாத அளவு தொலைவில் சென்றுவிடு. மாடுகளுடனேயே இரு. அவற்றுடன் நட்பு ஏற்படுத்திக்கொள். அவைதாம் இனி உன் தோழர்களும் குடும்பத்தினரும் ஆவர்," என்று கூறி அனுப்பி வைத்தார்.

ஆசிரமத்தில் 400 மாடுகள் இருந்தன. அவற்றின் எண்ணிக்கை 1000 ஆனபிறகு திரும்பிவரலாம் என்றும் குரு கூறினார். சுவேதகேது மாடுகளுடன் அலைந்தான். அவை மேயும்போது மரங்களின் கீழே உட்கார்ந்து அல்லது அருவிகளின் அருகில் படுத்து ஓய்வெடுத்தான். இரவில் மாடுகளின் அருகேயே தூங்கினான். நாட்கள் கழிந்தன. கொஞ்சம் கொஞ்சமாக கால ஓட்டம் தனது தேவையை இழந்தது. இன்னொரு மனிதன் இருந்தால்தானே காலத்தைக் கணக்கிடல் தேவைப்படும். பஞ்சாங்க திதிகளும் தேவைப்படாத நிலையில் சுவேதகேது இருந்தான்.

குரு அவ்வப்பொழுது மாடுகளின் கண்களை ஊடுருவிப் பார்க்குமாறு சுவேதகேதுவிடம் கூறியிருந்தார். அவ்வாறே அவன் செய்துவந்தான். மாடுகளின் கண்களில் வெறுமை அல்லது சூனியம் தெரிவதை அவன் கவனித்தான். அந்த வெறுமை அவனது மனத்தில் சாந்தத்தை நிரப்பியது. அவனது மனத்தில் அமைதி பெருகப் பெருக, அவன் மாடுகள் ஆயிரம் ஆகிவிட்டனவா என்று எண்ணிப் பார்க்கவும் மறந்துவிட்டான்.

மாடுகளே ஒருநாள் அவனிடம் பேசின! "சுவேதகேது, இன்னும் எதற்காக இங்கே நீடிக்கிறாய்? நாங்கள் ஆயிரம் ஆகிவிட்டோம். குரு சொன்னபடி ஆசிரமத்திற்குப் புறப்படு" அதன்படி சுவேதகேது மாடுகளுடன் ஆசிரமத்திற்குத் திரும்பினான்.

குரு ஆசிரம வாசலில் அவனை வரவேற்றார். அவர் மற்ற சீடர்களிடம், "அதோ பாருங்கள் 1001 மாடுகள் திரும்பி வருகின்றன," என்று சுட்டிக்காண்பித்தார்.

அதாவது, குரு சுவேதகேதுவையும் மாடுகளில் ஒன்றாகச் சேர்த்து எண்ணினார். அவனும் பசுமாடு போல் அடங்கி

சாந்தமாகக் காட்சியளித்தான். அவன் மற்ற மாடுகளுடன் இன்னொரு மாடு சேர்ந்துவருவது போலவே தெரிந்தான். அவனது பார்வையில் சாந்தமும், நடையில் சீரான லயமும் தெரிந்தது.

ஒலிகளால் உலகில் வித்தியாசங்கள், சிதறல்கள் ஏற்படு கின்றன. ஒலியற்ற நிலையில் ஏதோ ஒன்று மட்டுமே உள்ளதாகத் தெரிகிறது. சுவேதகேது குருவிடம், "தங்களின் அடுத்த கட்டளை என்ன?" என்று கேட்டான்.

அதற்கு அவர், "வேறென்ன கட்டளை மிஞ்சியிருக்கிறது. நீ எதைத் தேடி சென்றாயோ, அதை அறிந்துகொண்டபின்தான் வந்திருக்கிறாய் என்பது புரிகிறது. உனக்கு மேற்கொண்டு எதுவும் சொல்லித்தர வேண்டியதில்லை. வீட்டுக்குச் செல். உன் தந்தை மகிழ்ச்சியுடன் வரவேற்பார். நீ பிராமணன் ஆகிவிட்டாய்," என்று ஆசி கூறி விடைகொடுத்தார்.

ஐன்ஸ்டீனை இந்த வகையான பிராமணர்களில் சேர்க்க முடியாது. அவர் ஏறத்தாழ பிராமணராகிக் கொண்டிருந்தார். அவர் வெளியுலகை அறிவியல் மூலம் அளந்துவிட்டார். உள்ளுலகை ஆராய வேண்டுமென்ற தாகமும் அவரிடம் காணப்பட்டது. ஆனாலும் அவர் புரோகித வர்க்கத்தினரைவிட, மடத்தலைவர்களை விட உயர்தரமான பிராமணர் எனலாம்.

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஜே.கிருஷ்ணமூர்த்தி உரையாற்றும் போதெல்லாம், 'மிகுந்த கவனத்துடன் கேளுங்கள். நான் சொல்வது மிகவும் கம்பீரமான, கனமான விஷயம்—** Listen seriously; it's a serious matter'— **என்றாரே. நீங்கள் உங்கள் சீடர்களை அப்படி எச்சரிப்பதில்லையே.**

ஒன்று எல்லாமே கனமாக விஷயம் அல்லது எதுவுமே கனமானதன்று. எதையாவது கனமான விஷயம் என்று சொன்னால், பிரிவுகளை ஏற்படுத்துவதாகிவிடும். சில விஷயங்கள் கனமற்றவை, எளிமையானவை என்று எண்ணத் தோன்றிவிடும்.

எல்லா விஷயங்களுமே ரகசியம் நிறைந்தவை. மரத்திலிருந்து உலர்ந்த இலை விழுவதிலும் ஏதோ அர்த்தமுள்ளது. ஜென் துறவி லாவோத்ஸு மரத்திலிருந்து உலர்ந்த இலைகள் விழுவதைப் பார்த்து ஞானம் அடைந்திருக்கிறார். இலை கீழே விழுவதுபோல் அவர் தனக்குள் வீழ்ந்துபோனார். 'இவ்வுலகில் நிகழ்வதெல்லாம் வருவதும் போவதுமாக மட்டுமே உள்ளது. இன்று இங்கே உள்ளோம். நாளையும் இருப்பது நிச்சயமில்லை. மரத்தில் ஒட்டியபடி இருந்த இலை நாம் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விழுந்தது. இவ்வாறு நானும் ஒருநாள் உலகை விட்டுப் பிரிய நேரிடும். நிரந்தரமற்ற இந்த வாழ்க்கை அர்த்தமும் அற்றது' என்று அவர் சிந்தித்தார். ஓர் உலர்ந்த இலைகூட வாழ்க்கைத் தத்துவத்தை உணர்த்துகிறது.

ஜென் சந்நியாசினி ஒருத்தி பானையில் தண்ணீர் பிடித்து வந்து கொண்டிருந்தாள். அப்போது பௌர்ணமி இரவு. பானையில் பூரண நிலவின் பிரதிபிம்பம் தெரிந்தது. திடீரெனப் பானை கீழே விழுந்துவிட்டது. தண்ணீர் சிதறியது. அந்த பிரதிபிம்பம் சிதைந்து மறைந்துவிட்டது. உடனே அவளுக்கு ஞானம் பிறந்தது! அவ்வள் நடனமாடியபடி இருப்பிடம் திரும்பினாள். அவளுக்கு ஒரு விஷயம் தெளிவாயிற்று. பிரதிபிம்பம்தான் அழியும். ஆகவே பிரதிபிம்பங்களில் சிக்கிக் கொள்ளாதே. உலகப் பொருட்கள் எல்லாம் அழிந்துவிடும் தன்மை கொண்டவை. ஆகவே இந்த உலகமும் ஒரு பிரதிபிம்பம்தான். இது உண்மையானது அன்று. சாதாரணப் பானை உடைந்ததில் ஓர் ஆழ்ந்த தத்துவமே அடங்கியுள்ளது.

ஒரு விஷயம் அல்லது பொருள் அற்பமாயினும் அதன்மூலம் பிரம்மாண்டமான ஒன்றைப் புரிந்துகொள்ள முடிந்தால் அவ்விஷயம்/பொருள் கனமானதுதான். சில சமயம் மகோன்னதமான சம்பவமும் எந்தச் சலனமும் உண்டுபண்ணாமல், எந்த மாற்றத்தையும் கொண்டுவராமல் போகலாம். உபநிஷதச் சொற்பொழிவைக் கேட்பவர்கள் எல்லோரும் ஆத்மாவை உணர்வதில்லை. எருமை மாட்டுக்கு முன்னால் அமர்ந்து வீணை வாசித்தால் எப்படி இருக்குமோ அதுபோல் உயர்ந்த விஷய

மாயினும் கேட்பவரின் கிரகிக்கும் சக்தியைப் பொறுத்தே விளைவு ஏற்படும்.

விழிப்புடன் இருந்தால் வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிடமும் நமக்கு ஏதாவது ஒரு பாடம் கற்பித்த வண்ணம்தான் இருக்கிறது. விழிப்புடன் இருந்தால் ஒவ்வோர் இலையிலும் இறைவன் பெயரைக் காணலாம். உன்னால் சரியாக விழிக்க முடிந்தால் ஒவ்வொரு விஷயமும் மகத்துவம் வாய்ந்ததென நீ தெரிந்துகொள்வாய். ஞான விழிப்புப் பெறாவிடில் எதிலும் மறைந்துள்ள அர்த்தம் உனக்குப் புரியாது. சொற்பொழிவாளர் தான் சொல்வது கனமான விஷயம் என்று அடித்துச் சொல்கிறார். ஆனால் அவ்விஷயம் கேட்பவரின் ஒரு காதில் நுழைந்து மறு காது வழியாக வெளியேறிவிட்டால் என்ன செய்வது?

கிருஷ்ணமூர்த்தியின் வேண்டுகோளில் அவரது அன்பு பிரதிபலிப்பாகிறது. அவரது சொற்பொழிவால் நீ பயன்பெற வேண்டும் என்னும் நல்லெண்மை காரணமாகவே அவர் மிரட்டல்போல் உன்னை உலுக்குகிறார், உசுப்புகிறார். அவருக்கு உன்மீது இரக்கம். அது சிலசமயம் கோபமாக வெளிப்படுகிறது. அவர் கனமான விஷயம் பேசும்போது நீ அதை வேடிக்கைபோல் எடுத்துக்கொண்டால் அவருக்கு கோபம் வருவது இயற்கைதானே.

அப்படி ஒரு சமயம் நடந்தது. கிருஷ்ணமூர்த்தியின் சொற்பொழிவு ஒரு மணி நேரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்போது அவர் சொன்னார், "தியானம் செய்வதால் ஒரு லாபமும் கிடையாது. ஆன்மிகப் பாதை சுதந்திரமானது. அதில் செல்வதற்கென விதிமுறை கிடையாது. அதில் செல்ல நல்ல நாள், நல்ல நேரம் என்றெல்லாமும் கிடையாது. இப்போதே இங்கேயே விழிப்புப் பெறு." பிறகு அவர் "யாராவது கேள்வி கேட்க விரும்பினால் கேளுங்கள்," என்று ஊக்குவித்தார்.

ஒரு கிழவர் எழுந்து, "ஐயா, தியானம் செய்வது தேவை யில்லை என்றீர்கள். சரி. ஆனால் தியானம் என்றால் என்ன என்பதைச் சொல்லுங்கள். அப்பொழுதுதானே அதைச் செய்யாமலிருக்க முடியும்," என்று ஒரு போடுபோட்டார். இது

கேட்டு அமைதியின் சிகரமான கிருஷ்ணமூர்த்தியே அதிர்ச்சி அடைந்திருப்பார்.

கிருஷ்ணமூர்த்தியின் சொற்பொழிவைக் கேட்கப் பலர் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து வந்திருக்கின்றனர். ஆனால் அவர் கூறுவதை அவர்கள் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. செத்தாரைப் போல் இருந்த அவர்களைத் தட்டியெழுப்பவே அவர் சற்று கண்டிப்புக் காட்டினார். 'நான் சொல்வது கனமான விஷயம்' என்று அவர் கூறியதைக்கூட அவர்கள் பொருட் படுத்திக் கேட்டதாகத் தெரியவில்லை!

நல்ல விஷயமொன்றைக் கேட்பதற்கும் புத்தி வேண்டும். அது சிறுவயதினரின் புத்திபோல் களங்கமற்றதாக இருக்க வேண்டும். சாந்தமான மனநிலை தேவைப்படும். மனத்தில் எண்ண அலைகள் கொந்தளிக்கக்கூடாது. தர்க்க புத்தி கூடாது. எதையும் சாராமல் மனம் நடுநிலையில் இருக்க வேண்டும்.

'நான் பேசுவதைக் கேள்' என்று ஒருவர் சொல்கையில் 'கேள்' என்பதற்கு என்ன அர்த்தம்? கேட்கும் சமயம் உனது சொந்தக் கருத்தைக் குறுக்கே வரவிடாதே என்று இதற்கு அர்த்தம். நீ சிறிது நேரம் ஒதுங்கி ஓரமாக நில் என்று பொருள். எந்தத் தடையுமின்றி, எதன் உதவியுமின்றி நேராகக் கேள். காதில் விழும் கருத்தை ஏற்பதா, வேண்டாமா என்பதைப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம். தற்போதைக்குச் சரியாகக் கேட்டுக் கொண்டால் போதும்.

யார் சொற்பொழிவு செய்தாலும் கேட்டுக் கொண்டுதானே இருக்கிறோம் என்பாய் நீ. உண்மை வேறு. ஆராய்ந்து பார்த்தால், ஒரு நிகழ்ச்சியில் உனக்கு எதைக் கேட்க விருப்பமோ அதை மட்டுமே கேட்கிறாய். உனது சுயநலத்துடன் ஒத்துபோகின்றதை மட்டும் கேட்கிறாய். உனக்குத் தேவையான அளவிற்கு மட்டுமே கேட்கிறாய். நீயே தணிக்கையாளர் (சென்ஸார்) போல் விரும்பாதவற்றை நீக்கிவிடுகிறாய். உனக்கு மனமாற்றம் ஏற்பட முடியாத அளவிற்கு மட்டும் கருத்துகளை உள்ளே வரவிடுகிறாய். உன்னுடைய பழைய கருத்துகளுக்கு வலு சேர்க்கும் கருத்துகளை மட்டும் உள்ளே வர அனுமதிக்கிறாய்.

இப்படியெல்லாம் இருப்பதால்தான், நான் கிருஷ்ணமூர்த்தி போல் எச்சரிக்காமல், சொல்ல வேண்டியதைச் சொல்லியபடியே செல்கிறேன். நான் பேசுவது கம்பீரமான விஷயம் என்ற அறிமுகப்படுத்த விரும்பவில்லை. கேட்பவர்களின் பொறுப்பில் விட்டுவிடுகிறேன். மனத்தை வெற்றிடமாக வைத்து என் பேச்சைக் கேட்பவர்கள் முழுமையாகக் கேட்பார்கள். நடுத்தரமானவர்கள் என் பேச்சில் தங்கள் கருத்துடன் ஒத்துவருவதை மட்டும் கேட்பார்கள். மீதமுள்ளவர்கள் என்னை வேடிக்கை பார்க்க வந்தவர்களாக இருப்பார்கள்.

நான் முழுமையாகப் பேசிவிடுவதே என் வேலை. நீயும் அதைக் கேட்பதற்குத் திறந்த மனத்துடன் தயாராக இருந்தால், நானும் நீயும் கருத்தளவில் இணைய முடிந்தால், அங்கே சிந்தனைப் புரட்சி நிகழும். முழுமையாகப் பேசுதலும் முழுமையாகக் கேட்டலும் நிகழ்ந்தால் பேசுபவரிடமிருந்து சத்தியம் கேட்பவரை வந்தடையும். எடுத்துக் கொடுக்க முடியாதது என நினைத்த சத்தியம் கேட்பவனைச் சென்றடையும். சொற் களால் சொல்வதற்கு கடினமான சத்தியம் சொல்லப்பட்டுவிடும். விளக்க முடியாததன் விளக்கம் கிடைத்துவிடுகிறது. இந்நிலையில் பேசுபவன்-கேட்பவன் என்று தனித்தனியாக இருவர் இருக்க மாட்டார்கள். குருவும்-சீடனும் ஒருவருக்குள் ஒருவர் லயித்து, தத்தம் தனித்துவத்தை இழந்துவிடுவார்கள்.

நான் சொல்வதெல்லாமே கனமான விஷயங்கள்தாம் அல்லது அவை கனமான விஷயங்கள் அல்ல. நீ அவற்றை எப்படி மதிப்பிட்டாலும் எனக்கு சம்மதமே. என் மதிப்பீட்டை உன்மீது சுமத்தி உனக்குக் குழப்பமேற்படுத்த நான் விரும்ப வில்லை.

முன்கூட்டியே நான் 'கனமான விஷயம் கூறப்போகிறேன். கவனமாகக் கேளுங்கள்' என அறிவித்தால், உன் மனத்தில் இறுக்கம் உண்டாகிவிடும். முதுகெலும்பை நிமிர்த்திநேராக உட்காருவாய், பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் இதேபோல் கூறும்போது, மாணவர்கள் நிமிர்ந்து உட்காருகிறார்கள். கண்களால் ஆசிரியர் அல்லது கரும்பலகையை உற்றுநோக்குகிறார்கள்.

இதனால் தலையில் இறுக்கம் ஏற்படுகிறது. ஆசிரியர் இப்படி வற்புறுத்தும்போது மாணவர்கள் சுதாரித்துக் கொண்டாலும் காதில் எதுவும் விழுவதில்லை; கண்ணில் எதுவும் தெரிவதில்லை. ஆனால் ஆசிரியருக்கு பயந்து புரிந்ததுபோல் தலையாட்டு கிறார்கள்.

பிறகு இதுவே பழக்கமாகி வாழ்க்கை முழுவதும் எல்லாம் புரிந்ததுபோல் தலையாட்டுதல் தொடர்கிறது. ஒருவன் உன்னிடம் 'இப்போது முக்கியமான விஷயம் ஒன்று சொல்லப்போகிறேன்' என்னும்போது, நீ அதைக் கேட்பதுபோல் முகத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு நடிக்கிறாய்.

ஆனால் நீ மனத்தை சுதந்திரமாகவிட்டு, லேசாக வைத்து, என் பேச்சைக் கேள் ஓய்வான உணர்வுடன் கேள். உடலையும் மனத்தையும் விறைப்பாக வைத்துக் கொள்ளாதே. நாம் இங்கே ஒரு விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறோம். இங்கே ஏதோ மாபெரும் ஆன்மிகப் பணி நடப்பதாக பிரமைகொள்ள வேண்டாம். இசை கேட்பதுபோல் நீ திறந்த மனத்துடன் என் உரையைக் கேள். ஒலியின் இனிமையில் உன்னைக் கரைத்துக்கொண்டு இசையைக் கேள். பாடலின் ராகம்-தாளம்-பொருள் பற்றி ஆராய்ந்தபடி இசை கேட்டால், 'கேட்டல்' என்னும் செயல் அர்த்தமிழந்துவிடும். நீ உன்னை மறக்கும்போதுதான் உண்மையில் நீ கேட்கிறாய்!

உன்னை நீ கம்பீரமாக ஆக்கிக்கொண்டால், உன்னைப் பற்றிய கவனம்தான் உன் மனத்தில் முதலிடம் பெறும். கேட்கும் விஷயம் இரண்டாம் பட்சமாகிவிடும். கவனம் சிதறக் கூடாது, சொற்பொழிவின் எந்த அம்சத்தையும் கேட்காமல் விட்டுவிடக் கூடாது என்று மனத்தின் மூலையில் பயமிருக்கும். ஆனால் நெகிழ்ந்த மனத்துடன் உரையைக் கேட்டால், ரசிப்பு உணர்வுடன் கேட்டால் உரையில் கூறப்படுபவை காதுவரை மட்டுமல்ல, இதயம்வரை சென்றடையும்.

என் பேச்சை நீ சரியாகக் கவனிக்காவிடில் நான் கோபப்படமாட்டேன். உனது சுபாவம் அப்படி என்று விட்டுக் கொடுத்துவிடுவேன். என்னைப் போலல்லாமல், கிருஷ்ணமூர்த்தி

தமது பணியைத் தீவிரமானது என்று கருதியதால், அவருக்கும் கோபம் வந்தது. பல்லாண்டுகளாக முயன்றும் அவரைப் புரிந்து கொண்டவர்கள் சிலரே. அவர்களிலும் அவரது கண்ணோட்டத்தை யொட்டி வாழ்க்கை நடத்துபவர்களே மிகச் சிலரே. இப்படித் தமது நீண்ட வாழ்க்கையும், ஆழ்ந்த ஆன்மிக ஆராய்ச்சியும் வீணாகிறதே என அவர் நினைத்திருக்கலாம். மனித இனத்தின் மீது அவருக்குள்ள இரக்கமே அவரைக் கடுமையாகப் பேசத் தூண்டியிருக்கும்.

ஆனால் கருணை காரணமாகக்கூட சீடர்களைக் கடிந்து கொள்வதில் எனக்கு இஷ்டமில்லை. நான் உற்சாகமேலீட்டில் உணர்ச்சிபூர்வமாகப் பேசிக்கொண்டே போகிறேன். அதை நீயும் உற்சாகத்துடன் கேட்பதோ, புறக்கணிப்பதோ உன் இஷ்டம். விஷயம் அத்துடன் முடிந்தது. நீ கேட்க விரும்பாவிடில் உன்மீது கோபப்பட நான் யார்? உன் மனத்தில் என் கருத்துகளைத் திணித்துவிட்டுத்தான் போக வேண்டும் என்று எந்தப் பொறுப்பும் எனக்கில்லையே. வண்டு யாரும் தூண்டாமலே ரீங்காரம் செய்வதுபோல் எனக்குத் தோன்றிய கருத்துகளை நான் தங்குதடையின்றி வெளியிடுகிறேன். எனக்குக் கிடைத்ததை விரும்புவோருக்குப் பிரித்தளிக்கிறேன். யாரையும் கட்டாயப் படுத்துவதில்லை. இதெல்லாம் என் தரப்பு விஷயம். உனக்கு சம்பந்தமில்லாதவை.

மேகம் நிரம்பினால் பாரம் தாங்காமல் மழையாகப் பொழிவது அதன் இயல்பு. பூமி அதை ஏற்குமா, ஏற்காதா; கம்பளம் விரித்து வரவேற்குமா, வரவேற்காதா என்றெல்லாம் மேகம் சிந்தனை செய்வதில்லை. மழைத் தண்ணீர் பாறைகளை நனைத்தபடி கீழே இறங்கும். பாறைகள் மீண்டும் உலரும். பாலைநிலத்தில் மழை பொழியும். அது நீராவியாகி வானத்திற்கு எழும்பும். பூமி மழையை ஏற்றால் பசுமை படரும். பூக்கள் மலரும். எங்கும் மகிழ்ச்சி நிலவும். ஆனால் இந்த மாதிரிச் சிந்தனைகளும் மேகத்திற்குக் கிடையாது. மலைகளின்மீது, பாலைநிலத்தில், வயல்களில், சிமிண்ட் சாலைகளில், எல்லா இடங்களிலும் மழை பெய்கிறது. அதன் கடமை பொழிவது மட்டுமே. இஷ்டப்பட்ட

வர்கள் வரவேற்றுச் சேமிக்கட்டும். மழையை விரும்பாதவர்கள் புறக்கணிக்கட்டும்.

நான் ஆன்மிகத்தைக் கனமான விஷயமாக ஆக்க விரும்பவில்லை. கிருஷ்ணமூர்த்தியைப்போல் நான் தீவிர மானவன் இல்லை. ஆகவே உங்களோடு சிரித்துப் பேசுகிறேன். உங்களையும் சிரிக்கவைக்கிறேன். அறம் அல்லது தர்மம் என்பது சுமைபோல் தோன்றக்கூடாது. ஆன்மிகம் என்பது சகஜமான விஷயமாக இருக்க வேண்டும். புத்தியை இறுக்கமாக வைத்துக்கொண்டு ஆன்மிகத்தை அணுகக்கூடாது. மனத்தை லேசுப்படுத்திக்கொண்டு, பரிசுத்தமாக வைத்திருத்தல் அவசிய மாகும். தமாஷாகப் பேசியபடியே நடுவில் கனமான, கம்பீரமான விஷயத்தைச் சேர்த்துவிடுகிறேன். விஷயம் மிகவும் கடினமானதாக இருந்தால், நான் சுவையான துணுக்குகளை நிறையக் கூறி சூழ்நிலையை இளக்குகிறேன். நீயும் சிரித்தபடி இறுக்கத்தைக் கைவிடுவாய். இறுக்கம் நீங்கினால் மனக்கதவு திறக்கும். உன் இதயத்திற்குச் செல்லும் பாதை திறந்துவிடும். எனது கனமான கருத்து அந்தப் பாதை வழியாகச் சென்று உன் இதயத்தைத் தொட்டுவிடும். முதலிலேயே நான் இப்போது கனமான விஷயம் கூறப் போவதாகத் தெரிவித்தால் உனக்கு மன இறுக்கம் ஏற்படும். அந்த சமயம் நீ கூர்ந்து பேச்சைக் கவனிப்பதாகத் தெரிந்தாலும், என் பேச்சு உன் இதயத்தைத் தொடாது. அர்த்தத்தைக் கவனிக்காமல் நீ ஒலிகளை மட்டும் கேட்பவனாக இருப்பாய்.

ஒரு விஷயத்தை உனக்குள் புகுத்த வேறு உபாயம் தேவைப்படும். உன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல் நீ மெய்ம்மறந்த நிலையில் இருக்க வேண்டும். காவல் இல்லாத வீட்டில் யாரும் நுழைய முடியும் என்பதுபோல், நீ முன்னெச்சரிக் கையாக இல்லாதபோது, நீ நெகிழ்ந்திருக்கும்போது, என் கருத்துகளை உன் மனத்தில் ஊன்ற முடியும்.

நீ திரைப்படம் பார்க்கிறாய். அப்போது நீ எச்சரிக்கையாக இருப்பதில்லை. திரைப்படத்திலேயே ஆழ்ந்துவிடுகிறாய். நடுவில் விளம்பர ஸ்லைடு வருகிறது. லக்ஸ் டாய்லட் சோப் விளம்பரம்! நடுவில் வைக்கக் காரணம் நீ அப்போது கவனமாக

இருக்கமாட்டாய். வாசலில் காவலாளி இல்லை. விளம்பரம் உனக்குள் புகுந்துவிடும். அவ்வாறு புகுந்ததைக்கூட நீ உணர்ந்திருக்க மாட்டாய். ஆனால் நீ கடையில் சோப்பு வாங்கும்போது உன்னை அறியாமலே லக்ஸ் சோப் எடுத்துத்தரச் சொல்லுவாய்!

சில சமயம் உன்னிடம் வேடிக்கையாக ஏதாவது சொல்கிறேன். நீ வாய்விட்டுச் சிரிக்கிறாய். அப்போது ஒரு கனமான விஷயத்தை நுழைத்து விடுகிறேன். அது உனக்குள் ஊடுருவிச் செல்லும். மடத் தலைவர்கள், ஆன்மிகத் தலைவர்கள் என்னைப்போல் வேடிக்கையாகப் பேசுவது கிடையாது என்று என்னிடம் ஆச்சரியத்துடன் கூறியிருக்கின்றனர். கனமாகப் பேசும் சமயத் தலைவர்களின் பேச்சு உள்ளத்தைச் சென்றடைவதில்லை. மொத்தமும் கனமாகவே பேசும் வழக்கம் இல்லாத எனக்கொரு வாய்ப்புக்கொடு. எனது அணுகுமுறை வித்தியாசமானது. அது மனத்தைத் தொடுகிறது. ஆகவேதான் என் சொற்பொழிவுகளுக்கு நிறைய இளைஞர்களும் வருகிறார்கள். மற்ற ஆன்மிகத் தலைவர்களின் கூட்டங்களில் கிழவர்களை மட்டுமே காணலாம். எனது சொற்பொழிவு ஆண்-பெண், இளவயதினர்-முதியவர்கள் என்று அனைவரும் கலந்து கொள்ளும் கொண்டாட்டமாக இருக்கிறது.

கிருஷ்ணமூர்த்தியின் அணுகுமுறை தவறென்று நான் கூறமாட்டேன். அவருக்கு அது சரியானதெனத் தோன்றியிருக்கும். எங்கள் இருவரையும் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாது. ஒப்பிடவும் வாய்ப்பில்லை. நான் என் வழியில் போகிறேன். அவரது வழி வேறு. கம்பீரமான சுபாவம் உள்ளவர்கள் அவரது உரையைக் கேட்டு ஆன்மிகம் அறியலாம். நெகிழ்ந்த மனமுள்ளவர்கள் எனது உரையைக் கேட்டுப் பயன் பெறலாம்.

## நான்காம் கேள்வி

**உங்கள் போக்கைப் பார்த்தால், நீங்கள் விரைவிலேயே உரைநடையில் பேசுவதைக் கைவிட்டு, கவிதையாகவே உரையாற்றத் தொடங்குவீர்கள்போல் உள்ளதே.**

கவிதை நடையே உரைநடையைவிட பிரார்த்தனைக்கு அதிகம் நெருக்கமானது என்பது உண்மை. நான் பேசுவதை நீ சரிவரக் கேட்டிருந்தால், நான் கவிதை நடையில்தான் என் கருத்துகளை விளக்கிவருகிறேன் என்பதை உணர்ந்திருக்கலாம். நான் பேசுவது உரைநடையில் இல்லை. கவிதை என்பது என்ன? பாடக்கூடிய பாடல் கவிதை. ஆடக்கூடிய பாடல் கவிதை. கவிதையில் இசை ஒலி கேட்கும். அதில் சீரான அமைப்பு (லயம்) இருக்கும். யாப்பின் அடிப்படையில் இருக்கும். நான் உரைநடையில் பேசுவதுபோல் தோன்றினாலும் என் பேச்சு ஒரு வகையான பாடல்தான். அப்பொழுதுதானே நீ அதை முணு முணுக்க முடியும்; உரக்கப் பாடமுடியும்; அதை அபிநயம் பிடிக்க முடியும். உனது வாழ்க்கையும் கவிதையின் இனிமையால் நிரம்பும். என் உரைநடையே இதையெல்லாம் செய்யும். நான் தனியாகச் செய்யுள் வடிவில் எழுதிக்காட்ட வேண்டுமா என்ன?

புத்தர் பேசியதெல்லாம் கவிதை, மகாவீரர் பேசியதெல்லாம் கவிதை. பிரார்த்தனைமயமான சூழ்நிலையில் கவிதைதான் வெளிப்படும். புத்தரைக் கவிஞர் என்று நான் கூறவில்லை. கவிதைக்கான மொழி, யாப்பு வகைகள், மாத்திரைகள், இலக்கணம் ஆகியவற்றை அவர் அறிந்திருக்கவில்லை. எதுகை-மோனை என்றால் என்ன என்றே அவருக்குத் தெரிந்திருக்காது. ஆனால் எல்லாப் பாடல்களையும் கவிதை என்று கூற முடியாது. உரைநடையில் கவிதை இருக்காது என்றும் கூறுவதற்கில்லை.

நான் பேசுவது உனக்கு ரீங்காரம்போல் ஒலித்தால், என் பேச்சு உனக்குள் ஊடுருவிச் சென்று இன்பரசமாகிவிடும். உன் மனத்தில் அலையை எழுப்பும். நீ தடுமாறுவாய். அப்பொழுது என் உரைநடை கவிதையாகிவிட்டது எனலாம். இறையுணர்வு மனத்தில் உதிக்கக் கவிதைதான் (பாடல்தான்) சுலபமான வழி.

ஆகவே உபநிடதங்கள் பாடல் முறையில், பாடக்கூடிய சுலோகங்களாக அமைந்திருப்பதில் வியப்பில்லை. வேதங்களை வேதப்பாடல்கள் (hymns) என்றே கூறுவதுண்டு. பைபிளிலும் உரைநடையானது பல இடங்களில் கவிதைபோலவே அமைந் திருப்பதைக் காணலாம். உரைநடை உலர்ந்தது, அன்றாட

வேலைகளுக்கு உதவுவது, அர்த்தமுடையது. கவிதையோ அர்த்தத்தை நம்பியிருக்கவில்லை; அர்த்தத்திலிருந்து விடுதலை பெற்றது; அர்த்த சூன்யமானது; ஆனால் மதுர ரசம் நிரம்பியது.

ரோஜாப்பூ மலர்கிறது. என்ன அர்த்தம்? அர்த்தம் தெரியவில்லை. ஆகவே 'மலர்தல்' உரைநடையன்று, கவிதை. ரோஜாப்பூ மலர்ந்ததால் என்ன பிரயோஜனம்? மலராமல் போயிருந்தால் என்ன நஷ்டம்? வியாபாரமயமாகிவிட்ட வாழ்க்கையில் ரோஜாப்பூ மலர்வது கவனிக்கப்படுவதுகூட இல்லை. ஆனால் அதில் கவிதை நிறைந்துள்ளது. கவிதை உணர்வுடன் நோக்கினால், ரோஜாப்பூ மலராவிடில், உலகில் மலர்ச்சியே இருக்காது; சூரியன் சோகமாகி விடுவான்; சந்திரனும் நட்சத்திரங்களும் வெளிறிப் போய்விடும்; பறவைகளால் பாட முடியாது; காதல் பிறக்காது; குழந்தைகள் கைகொட்டிச் சிரிக்கா மலிருந்துவிடுவர். ரோஜா மலர்வது கவிதைக் கண்ணோட்டத்தில் ஒரு திருவிழா போன்றது. விசேஷ அர்த்தம் தேட வேண்டிய தில்லை. பூ மலர்வது ஓர் அழகிய கவிதைதான்.

பறவைகள் பாடுவதுபோல் ஒலியெழுப்புகின்றன. அந்த ஒலிகளின் சாராம்சம் என்ன? அதற்காக அவை சாரமற்றவை என்றும் புறந்தள்ளிவிட முடியாது. ஒலிகளைத் திரட்டிப் பிடித்துக் கடைத்தெருவில் விற்பதுபோல் கற்பனை செய்தால், வாங்குவதற்கு யாரும் முன்வரமாட்டார்கள். ஆகவே இவை மதிப்பற்றவை என்று முடிவுகட்டிவிட முடியுமா? ஆனால் இன்னொரு தளத்தில்-இதயத்தளத்தில்-இவை மதிப்புமிக்கவை. பறவைகளின் ஒலி இதயத்தை மூடிவைத்துள்ள ஏதோ பூட்டைத் திறந்து விடுகிறது.

நான் நிச்சயமாகக் கவிஞன் அல்லன். ஆனால் நான் பேசுவது ஒரு வகையான கவிதைதான். என் பேச்சை நீயும் கவிதைபோல் உருவகப்படுத்திக் கேட்டால், இதயத்தில் ஏற்றால், உனக்குள்ளே நுழைய அதை நீ வரவேற்றால், உன் இதயத்தில் எல்லை இல்லாத அளவிற்குப் பூக்கள் மலர்வதை உணருவாய்.

நான் சொல்லும் கவிதை உனக்குள் வரமுடிந்தால் அது பிரார்த்தனையாகிறது. அது உள்ளே வர கொஞ்சம் வழி யமைத்துக் கொடு. உனது இதயபூமியில் அது விதையாகப் பதிய

முடிந்தால், பூக்கள் நிச்சயமாக மலரும். நான் சொல்வதை மேலோட்டமாகப் பார்த்தால் கவிதையாகத் தெரியாது. ஆனால் அது உனக்குள்ளே பிரவேசிக்க முடிந்தால் என் உரை கவிதைதான் என உன் உள்ளுணர்வு அடையாளம் காட்டும்.

நான் சொற்களால் உரை நிகழ்த்துகிறேன் எனினும் அது மௌனத்திலிருந்து வெளிப்படுகிறது. நான் பேசாமலே மௌனத்தின்மூலம் நான் உன்னுடன் 'பேச' விரும்புகிறேன். ஆனால் மௌன பாஷையைப் புரிந்துகொள்ளும் சாமர்த்தியம் உன்னிடம் இல்லை. என் உரை சூன்யத்திலிருந்து வெளிப்படுகிறது; சூன்யத்தால் போர்த்தப்பட்டுள்ளது. அதை நீ மென்று ஜீரணி. சொற்கள் மறைந்துவிடும். சூன்யம் மிஞ்சி நிற்கும். அவ்வாறு செய்யாவிடில் கூழாங்கல் போன்ற சொற்களே மிஞ்சும். சொற்களைத் திரட்டினால் நீ அறிஞன்தான் ஆவாய்; ஞானி ஆகமாட்டாய். இதற்கு மாறாக, என் உரையிலிருந்து நீ சூன்யத்தை சேகரித்தால், சொற்கள் என்னும் மேலுறையை எறிந்துவிட்டால், உனக்கு ஞான விழிப்பு ஏற்படும்; உன்னிடம் மறைந்துள்ள புத்த தன்மை வெளிவரும். துப்பாக்கியில் குண்டுகள்தாம் முக்கியமே தவிர, அவை அடுக்கிவைக்கப்பட்டிருக்கும் பெட்டியால் பயனில்லை.

பழத்தின் மேல் தோலை உரித்துப் போடுவதுபோல், என் பேச்சின் சொற்களைக் கவனிக்காதே. என் பேச்சின் ஆதாரமாகிய சூன்யத்தைக் கவனி. வாக்கியங்களின் நடுவே படி; சொற்களின் நடுவே படி. பேசும்போது இடையிடையே நான் அமைதியாக இருந்துவிடுகிறேன். அந்த அமைதியின் மூலம் நான் அதிகமாக எடுத்துத் தருகிறேன். அப்போது நீ உன் பாத்திரத்தை நன்றாக நிரப்பிக்கொள்.

**பொழிக, பொழிக நீ**
**மாமழையாய் முற்றிலும்**
**உடல் நனையும்படி.**

**அடைமழையாய்**
**நீ பொழியும்போது**
**நான் தவிப்பேன் தாகத்தால்.**

**எனது தாகமும் உனது நீரும்**
**இணைந்தே நிறைவடையட்டும்.**

**சொற்களின்மூலம் சொல்லேன் எதும்**
**புருவ மத்தியில் மௌனமாய் வசிப்பேன்**
**எனது இதயத் துடிப்பும் பெருமூச்சும்**
**உன் பதிலுக்காகக்**
**காத்திருக்கின்றன.**

ஓர் அதிசய சம்பவம் நிகழ வாய்ப்புள்ளது. ஒரு கணத்தில் அது நிகழ்ந்துவிடும். யாருக்கு வேண்டுமானாலும் அது நிகழலாம். எனது பாட்டு உன்னை நிரப்புகிறது. என் கண்கள் உன் கண்களைச் சந்திக்கின்றன. ஒரு கணம் நீ வெறுமையாகி விடுகிறாய். உனது சிறு குடம் என்னை நோக்கிச் சாய்ந்திருக்கிறது. என் உரையின் ரசம் அதை நோக்கிப் பாய்கிறது. தெய்விக இசை உன்னை நோக்கி இறங்கும். அந்த ரசமும் சங்கீதமும் சூன்யத்துக்கு உரியவை. ஆன்மிகம் உன்னிடம் எதிர்பார்ப்பது நீ என்பவன் இல்லாமல் போவதைத் தான். அப்போது அந்த வெற்றிடத்தில் கடவுள் வந்து குடியேறுகிறார். நீ சூன்யமாகிவிட்டால் அவர் உன்னில் முழுமையாக வந்திறங்க முடியும்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே, ஆனந்தத்தை அனுபவிக்க ஒருவன் இருந்தாக வேண்டும் என்ற கட்டாயம்போல் தோன்றுகிறது. ஆனால் நானேதான் எங்குமே பரவி யிருக்கிறேன் எனில் ஆனந்தத்தை எவன் அனுபவிப்பான்? வாழ்க்கை உண்மையில் ஆனந்தமாக அமைய சந்நியாசம் கட்டாயம் தேவை எனில் அந்த ஆனந்தத்தை அனுபவிக்கத் தனியாக ஒருவன் தேவை யல்லவா?**

**த**னிமனிதன் என்று இருப்பதால்தான் ஆனந்தம் உண்டாக மாட்டேன் என்கிறது. எப்படியெனில், ஆனந்தமான தருணத்தில் உன்னை நீ மறந்துவிடுகிறாய். அதாவது நீ இல்லாமல் போய்விடுகிறாய். நீ காதலிக்கும் நபர் உன் வீட்டிற்கு வருகிறார்.

நீங்கள் இருவரும் கைகோத்து உட்காருகிறீர்கள். அந்த பரவச நிலையில் உன்னை மறந்துவிடுகிறாய். நீ இல்லாத அந்த நிலையில் ஆனந்த அனுபவம் பெறுகிறாய்.

விடியற்காலை. ஆற்றங்கரை. குளிர்ந்த காற்று குளுமையான சூழ்நிலை. எங்கும் அமைதி. தெளிவான ஆகாயம். சூரியன் உதயமாகிறான். இக்காட்சியைப் பார்த்து நீ மயங்கிப்போகிறாய். 'நான்' என்னும் அகங்காரம் மறந்துவிட்ட அவ்வேளையில் நீ கலப்படமற்ற ஆனந்தத்தை உணர்கிறாய்.

நல்ல இசை கேட்டு தலையாட்டுகிறோம். அப்போது அகங்காரம் உணரப்படுவதில்லை. ஆகவே ஆனந்த ரசம் உன் மனத்தினுள் பாய்கிறது. அழகுத் தோற்றம், காதல், தியானம், இசை ஆகியவற்றிலிருந்து மட்டுமல்ல, எதிர்பாராத விஷயங்களி லிருந்தும், அவை நமக்கு மிகவும் பிடித்தமானவை என்றால், நம்மை மறக்கடிக்கும் ஆனந்தம் விளையக்கூடும்.

உனக்குக் கிரிக்கெட்டில் ஆர்வம் இருந்தால் போட்டியைப் பார்க்கப் போவாய். அந்த சமயம் மந்திரம் போடப்பட்டவன்போல் விளையாட்டைக் கவனிப்பதில் ஒன்றிவிடுகிறாய். இமைகள் மூடித் திறப்பதை மறந்துவிடுகின்றன. வாய் திறந்தபடி கிடக்கிறது. உதைபந்து, ஹாக்கி முதலிய விளையாட்டுகளிலும் உனது ஈடுபாட்டைப் பொறுத்து நீ பரவசமடையக் கூடும். அப்போ தெல்லாம் நீ சற்று நேரம் உன்னை மறந்துவிடுகிறாய். அதாவது, நீ என்பவன் இல்லாமல் போய்விடுகிறாய். இப்படித் தன்னை மறத்தல் (ஆத்ம விஸ்மரணம்) ஆனந்தத்தை விளைவிக்கிறது.

எனது உரையைக் கேட்கும்போது நீ சுகமாக உணர்ந்த தருணங்களெல்லாம் நீ உன்னை மறந்துவிட்ட சமயமாகும்.

அகங்காரம் மனித சுபாவத்தின் அங்கமாயிற்றே, அதை எப்படிக் கைவிட முடியும் என்னும் கேள்வி எழலாம். சுவாசம்போல் அகங்காரம் கட்டாயமானது அன்று. நமக்கு ஞாபகம் இல்லாவிட்டால் அகங்காரம் தோன்றாது. சைக்கிள் ஓட்டுகையில் பெடலை மிதிக்க மறந்தால் சைக்கிள் நின்றுவிடுவதுபோல்தான் இதுவும். ஆனால் உனக்கு ஞாபகம்

இல்லாவிட்டாலும் மூச்சுவிடுதல் தொடர்ந்து நிகழும். தூங்கும் போதும் மூச்சு விடுகிறோம். எத்தகைய கனவு காணினும் மூச்சு விடுதல் பாதிக்கப்படுவதில்லை. நீண்ட காலம் முழுமயக்க (coma) நிலையிலும் நோயாளி மூச்சுவிட்டுக் கொண்டிருப்பார். மூச்சுபோல் இந்த அளவிற்கு அகங்காரம் நமது சுபாவத்தின் பிரிக்க முடியாத அம்சமில்லை.

உனக்கு சுயநினைவு இருக்கும்வரைதான் அகங்காரமும் நீடிக்கிறது. அதை உணராதபோது அது இருப்பதில்லை. அது இல்லாமல் போகும் சில நிமிடங்களேகூட ஆத்மாவின் கதவு திறக்கிறது.

உனக்கு சுகம் கிடைத்த சமயங்கள் பற்றி நீ யோசித்துப் பார்த்தால், நீ அப்போது அழிந்துபோயிருந்தாய் என்பது தெளிவாகும். சிலர் 'மது அருந்துவதாலும் நம்மை மறக்கிறோம்; நம் அகங்காரம் நீங்குகிறது. போதையின் சுகம் கிடைக்கிறது. அகங்காரத்தை மறக்க எளிமையான, இனிமையான மதுப் பழக்கம் போதுமே,'' என்று கூறலாம்.

இது குதர்க்கமான வாதம். விஷம் சில நோய்களுக்கு மருந்து என்பதால் எல்லா சூழ்நிலைகளிலும் பயன்படுத்த முடியுமா? அப்படிச் செய்தால் அது ஆபத்தில் முடியும். குடிப்பழக்கம் தவிர, வேறு ஆரோக்கியமான வழிகள் மூலம் அகங்காரத்தை மறப்பதைத்தான் நான் வற்புறுத்துகிறேன். அந்த ஆரோக்கியமான உபாயங்களையே இதுவரை சுட்டிக் காட்டினேன்.

ஒரு சிப்பாய்க்குக் குடிப்பழக்கம் அதிகமாக இருந்தது. படைத்தலைவர் (ஜெனரல்) எவ்வளவோ சொல்லிப் பார்த்து அலுத்துவிட்டார். ஒருநாள் அவனை அழைத்துக் கடுமையான குரலில் தெரிவித்தார், "ஏ முட்டாளே! உன் குடிப்பழக்கம் காரணமாக நீ வாழ்க்கை முழுவதும் சாதாரண சிப்பாயாகத்தான் இருக்கப்போகிறாய். குடிப்பழக்கம் இல்லாமல் போயிருந்தால் இந்நேரம் நீ படையில் கேப்டன் ஆகியிருப்பாய். சரி, தொலையட்டும். இனிமேலாவது குடிக்காமலிருந்தால், நீ ரிடையர்

ஆகும் சமயம் குறைந்தபட்சம் கர்னல் பதவியையாவது எட்டிப்பிடித்து விடமுடியும் என்று உறுதிகூறுகிறேன்,'' என்றார்.

சிப்பாய் சிரித்தான். ''சார், தப்பாக நினைக்காதீர்கள். குடிக்காவிட்டால் நான் கர்னல் ஆக முடியும் என்று ஆசைகாட்டுகிறீர்கள். ஆனால் குடிக்கும் போதெல்லாம் நான் உங்களைப்போல் இன்னொரு ஜெனரல் ஆக இருப்பதாக அல்லவா உணர்கிறேன்,'' என்றான்.

கள் குடித்து சுகமாக உணர்வது ஆபத்தானது. அச்செயல் தனது ஆத்மாவை விற்று சுகம் காண முயல்வதுபோலாகும். நீ பார்த்திருப்பாயே, நாய் எலும்புத் துண்டை பலமாகக் கடிக்கும். சுலபத்தில் கீழே போடாது. எலும்பு சுவையாக இருப்பதாக அது நினைக்கிறது. உண்மையில் அந்த எலும்புத் துண்டு தாடையின் உட்பகுதியைக் கீறுவதால் ரத்தம் கசிகிறது. எலும்பிலிருந்து ரத்தம் வருவதாக நினைத்து நாய் தனது ரத்தத்தையே குடிக்கிறது! நாயை மன்னித்து விடலாம். அதற்கு அறிவு போதாது. ரத்தம் எங்கேயிருந்து வருகிறது என்று அது எப்படி அறியும்? ரத்தம் கசியும் இடம் அதன் கண்ணிற்குத் தெரிவதில்லை.

கள்ளின் சுகமும் இதுபோன்றதே. மதுவை ஒழிக்க முடியாது. அதை ஒழிக்க, அதைவிட உயர்ந்த வகையான மதுபானத்தை அறிமுகப்படுத்த வேண்டும். அதுதான் தியானம் என்னும் மதுபானம். இறையுணர்வு என்னும் மதுபானம். தியானத்தில் பழக்கி, குடிகாரர்களையும் மதுக்கடைக்குப் போகாமல் கோயில்களுக்குப் போகச்செய்ய வேண்டும்.

'மதுவை ஒழிப்போம்' என்று முழங்குகின்ற அரசியல் வாதிகளும் குடிக்கிறார்கள். அவர்களது வாழ்க்கை வெளியே மினுமினுப்பாகத் தெரிந்தாலும், நாள் முழுதும் சிரமமான, போலியான வாழ்க்கை நடத்துகிறார்கள். நாள் முழுதும் அவர்கள் நடிக்க வேண்டியுள்ளது. அலுப்பையும், சலிப்பையும், களைப் பையும், எதிர்ப்பையும் நாள் முழுதும் சமாளிக்க வேண்டியுள்ள அவர்கள் இரவில் குடிக்காமல் என்ன செய்வார்கள்?

மனிதன் தன்னை மறக்கவே விரும்புகிறான். மறத்தலில் தான் அவன் சுகம் காண்கிறான். ஆனால் கள் குடித்து

சுயநினைவை இழப்பது மறத்தலின் கீழ் வராது. நான் சொல்லும் மறத்தல் பரவசத்தின் விளைவாகும். சாதாரண மது உன்னைக் கீழே தள்ளுகிறது. நான் உயர்ரக மது ஒன்றை அறிமுகப்படுத்த விழைகிறேன்.

கள் குடிப்பதற்குப் பதிலாக நீ அகங்காரத்தை மறக்கும் கலையைக் கற்றுக்கொள். அகங்காரத்தை முதலில் ஒரு மணி நேரம் ஒதுக்கிவை. 'நான்' என்னும் உணர்வு தலைதூக்காமல் கடமைகளைச் செய். பிறகு அவ்வாறிருக்கும் நேரத்தை அதிகரித்துக் கொண்டே செல். 'நீ' இல்லாமல் போவதுதான் தியானம் என்பது.

ஆகவே ஆனந்தத்தை அனுபவிக்கத் தனி மனிதன் தேவையில்லை. தான் இல்லாமல் போகும்போதுதான் மனிதனிடம் ஆனந்தம் வருகிறது. நீ என்பவன் இருந்தால் உலக வாழ்வில் நரகவேதனையை அனுபவித்தே தீர நேரிடும். நீ என்பவன் இருந்தால் அங்கே துக்கமும் தவறாமல் உண்டு. இன்றைய துக்கத்தின் காரணமாக நீ நாளை சுகத்தை எதிர்பார்க்கிறாய். நீ இருப்பது நரகத்தில். கற்பனையோ சுவர்க்கத்தைப் பற்றி செய்கிறாய். இதுதான் உனது வாழ்க்கைக் கதை. கடவுள் ஒருநாள் கருணை காட்டுவார் என்றும், உன் பிரார்த்தனை வீண்போகாது என்றும் நம்புகிறாய். 'இன்று துன்பத்தைப் பொறுத்துக் கொள்வோம்; நாளை சுகம் பெறலாம்' என்று மனத்திற்கு ஆறுதல் கூறுகிறாய்.

சுகம் என்பது நாளை நடக்கப்போகும் நிகழ்ச்சியன்று. இன்று நடந்தால்தான் உண்டு, கைமேல் பலன். சுகம் இன்றே, இப்பொழுதே கிடைக்க வேண்டுமானால் அகங்காரத்தை அகற்றிவை. அகங்காரம் நீங்கியதும் உன் ஆன்மிகப் பயணம் ஆரம்பிக்கிறது.

நீ என்று தனியாக ஒருவனில்லை. இருப்பது கடவுள் மட்டுமே. நீ என்று ஒருவன் இருப்பதாக நீ கருதுகிறாய். இதனால் சிக்கல் விழுகிறது. உனது இக்கருத்து உன்னைக் கட்டிப் போடுகிறது. ஆன்மிகப் புரட்சி விளைய, 'தான்' என்னும் நினைப்பிலிருந்து நீ விடுதலை பெறவேண்டும். நீ உன்னைச் செயல்புரிபவனாக (கர்த்தா) நினைப்பது பிரமை மாத்திரமே.

**போ**தி தர்மர் சீனாவுக்குச் சென்றார். அவரை தரிசித்த சீன அரசன், "மாமுனிவரே! நான் எப்பொழுதும் அமைதியின்றித் தவிக்கிறேன். நான் சாந்தமாக இருக்க ஏதாவது வழி கூறுங்கள்," என்று வேண்டிக் கொண்டான்.

வித்தியாசமான துறவியான போதி தர்மர் ஒரு யோசனை சொன்னார்: "ஒன்று செய். அதிகாலை மூன்று மணிக்கு என் ஆசிரமத்திற்கு வா. தனியாக வரவேண்டும். மறக்காமல் அசாந்தியையும் (அமைதியின்மையையும்) எடுத்துவா," என்று கட்டளையிட்டார்.

போதி தர்மருக்கு புத்தி பிசகிவிட்டதோ என மன்னன் திகைத்தான். பொழுதுவிடியாத நிலையில், இருட்டில், தனியாக ஆசிரமத்திற்குப் போனால் என்ன நடக்குமோ என்று அரசன் குழம்பினான். அதேசமயம் போதி தர்மரிடம் ஓர் ஈர்ப்பு சக்தி உள்ளதையும் அரசன் உணர்ந்தான். ஏதோ சிறப்பு அந்த பிட்சுவிடம் இருந்தது. ஓர் ஒளி அவரிடம் தென்பட்டது. அவர் அருகில் சென்றாலே உல்லாசம் தொற்றிக் கொண்டது. அரசன் அவர் எப்படி அசாந்தியை ஓட்டுகிறார் என்பதைப் பார்த்து விடலாம் என்று நினைத்தான்.

அரசன் தயங்கியபடியே, தனியாக, இருட்டில், போதி தர்மரின் ஆசிரமத்துக்குச் சென்றான். அவர் கேட்ட முதல் கேள்வியே 'உன்னுடன் உன் அசாந்தியையும் எடுத்து வந்திருக்கிறாயா?' என்பதுதான்.

"முனிவரே, மன்னியுங்கள். அசாந்தி என்பது ஒரு பொருள் இல்லையே. அதை எப்படி எடுத்துவர முடியும்?" என்று அரசன் கேட்டான்.

பிட்சு விளக்கினார்: "அசாந்தி என்பது மனத்தின் ஏற்ற இறக்கமாகும். மனம் விரிக்கும் வலை. நீ இப்போது கண்களை மூடி உட்காரு. உனக்குள் அசாந்தியைத் தேடு. அது தென்பட்டதும், அதைப் பிடித்துவிட்டு என்னிடம் தெரிவி. உடனே உன்னைச் சரிப்படுத்தி விடுகிறேன்," என்றார்.

அரசன் அவ்வாறே கண்களை மூடி, மனத்தின் மூலை-முடுக்கிலெல்லாம் அசாந்தியைத் தேடினான். எங்கும் அது தென்படவில்லை. தேடத் தேட, அவன் தன்னை அறியாமலேயே சாந்தமாக உணர ஆரம்பித்தான். அரசன் பிட்சுவிடம் சொன்னது போல் அசாந்தி என்பது ஒரு பொருளில்லை. அது மனம் ஏற்படுத்திக்கொள்ளும் அபிப்பிராயம் அல்லது கண்ணோட்டம்.

பொழுது விடிந்தது. சூரியன் உதித்தான். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. பிட்சு சொன்னார், "போதுமப்பா, கண்களைத் திற. அசாந்தி உனக்குத் தென்பட்டிருந்தால் சொல்லு. என் கையிலுள்ள குண்டாந்தடியால் அதை விரட்டி விடுகிறேன். அது உனக்கு வசப்படவில்லை என்றாலும் சொல்லு."

அரசன் அவர் பாதங்களை நோக்கி வணங்கி, "அசாந்தி எங்கும் அகப்படவில்லை. அலசித் தேடி பார்த்துவிட்டேன். ஆச்சரியமான விளைவு என்னவெனில், நான் அசாந்தியைத் தேடும்போது எனக்கு சாந்தி கிடைக்க ஆரம்பித்துவிட்டது. நீங்கள் இந்த நிலை ஏற்பட என்ன மாயம் செய்தீர்கள்?" என்று கேட்டான்.

பிட்சு இடைமறித்தார், "அதற்கு முன் ஒரு விஷயம். நீ உனக்குள்ளே புகுந்தாய். இவ்வளவு ஆராய்ந்தாய். அப்போது உன்னை நீ காண முடிந்ததா? நீ கூறும் 'நான்' என்பவன் அகப்பட்டானா?"

"இல்லை சுவாமி! நீங்கள் குறிப்பிடும் ஆசாமியை நான் எங்கும் காணவில்லை. ஆராய-ஆராய, அடிமட்டத்தில் ஒன்றுமே இல்லை என்பதே தெரியவந்தது. எங்கும் சூன்யம், அமைதி," என்றான் அரசன்.

"ஆகவே நமது அடிப்படையில் சாந்தம்தான் உள்ளது. அசாந்தி அல்லது அமைதியின்மை என்பதை நாம்தான் உருவாக்கிக் கொள்கிறோம்," என்று முடித்தார் போதிதர்மர்.

நீ என்பவனே அடிப்படையில் இல்லை. இருப்பவர் கடவுள் மட்டுமே. இதை உணராவிடில், இருப்பது இல்லாதது போலவும், இல்லாதது இருப்பது போலவும் தோன்றும்.

'நாம் சாந்தம் வேண்டுகிறோம்; ஆனந்தம் வேண்டுகிறோம். ஆனால் ஓஷோ முற்றிலுமாக நீங்கள் இல்லாமல் போங்கள் என்கிறாரே. பிறகு என்ன லாபம்? நாம் அழிந்தால், பிறகு சாந்தத்தை அனுபவிப்பவன் யார்? ஆனந்தமடைபவன் யார்?' என்ற சந்தேகம் உங்களுக்குத் தோன்றும். இது தர்க்கபூர்வமான கேள்விதான். அந்த தர்க்க அடிப்படை எனக்குப் புரிகிறது. நான் சொல்லும் பதிலும் தர்க்க அடிப்படை கொண்டது. நீ இல்லாமல் போவதன் விளைவுதான் சாந்தி. யாரோ தனிப்பட்டு சாந்தியோ, ஆனந்தமோ அடைவதில்லை. ஆனந்தம் என்றும், அதை அடைபவன் என்றும் இரண்டு இருக்கவில்லை. 'நீ' என்பவன் உள்ளதை மறக்கும்போது ஆனந்தம் உண்டாகிறது. அமைதி உண்டாகிறது.

'அமைதியும் வேண்டும், அதை உணர நானும் இருக்க வேண்டும்' என்று நீ பிடிவாதம் பிடித்தால், நீ அசாந்த (அமைதியற்ற) நிலையிலேயே நீடிப்பாய். இதேபோல் நீயும் (தன்னுணர்வும்) ஆனந்தமும் ஒரேசமயம் இருக்க முடியாது. பிறகு நீ துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு வாழ வேண்டியதுதான். ஆனந்தத்தைத் தேடுவதை நிறுத்த வேண்டியதுதான். 'நான் என்பவன் இருந்துகொண்டு கடவுளைச் சந்திப்பேன்' என்று கூறும் பிரமையில் விழாதே. இது சாத்தியமில்லை.

**அன்பு என்னும் குறுகிய சந்தில்**
**இருவர் சேர்ந்து போக முடியாது.**

ஒன்று நீ மிஞ்சுவாய் அல்லது கடவுள் மட்டும் மிஞ்சுவார்.

கபீர்தாஸ் கூறுகிறார்-உன்னைத் தேடி-தேடி சென்ற நான் என்னை இழந்துவிட்டேன். நான் இருந்தவரையிலும் நீ இல்லை. இப்போது நீ உள்ளாய். நான் இல்லை.'

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! என் கணவருக்கும் உறவினர்களுக்கும் ஆன்மிகத்தில் என்னிடம் முன்னேற்றம் தென்பட்டும் உங்களை மிகவும் வசைபாடுகிறார்கள். நான் ஏதாவது தவறிழைத்துவிட்டேனா என்று எனக்குத் தெரியவில்லை.**

**இ**து சற்று கடினமான கேள்வி. இதைக் கேட்ட மஞ்சுவை நான் அறிவேன்.

ஆன்மிகத்தில் ஈடுபாடு உடையவர்களிடமும் மனத்தாங்கல் இருப்பது வருத்தத்திற்குரிய விஷயம்தான். எத்துறையிலும் மனைவி தன்னைவிட முன்னேறியிருப்பதைக் கணவனால் பொறுக்க முடிவதில்லை. ஆன்மிகத்திலோ ஆணாதிக்கம் அதிகம். கணவனைக் கடவுளாக நினைக்க வேண்டுமென்று இந்திய சமூகத்தில் எதிர்பார்ப்பு உள்ளது. ஆகவே ஆன்மிகத்தில் மனைவி தன்னைவிட முன்னேறிச் சென்றிருந்தால், கணவன் நேருக்கு நேர் அவளைத் திட்ட முடியாமல், அவளின் குருவை ஏசுகிறான்.

**ஒ**ரு பெண் என்னிடம் வந்து, "சுவாமி, நான் தியானம் மேற்கொள்ள விரும்புகிறேன். இதனால் என் இல்லற வாழ்க்கையில் ஏதேனும் இடையூறு தோன்றுமா?" என்று கேட்டாள். பிறகு அவளே திருத்திக்கொண்டு, "இடைஞ்சல் ஏன் வரும்? நான் தியானம் செய்கிறேனே தவிர. கள் குடிக்க வில்லையே. நான் கெட்ட காரியம் எதுவும் செய்யவில்லையே'" என்றாள்.

"அப்படியில்லை. ஒருவர் கள் குடிப்பதால் அவரது குடும்ப வாழ்க்கையில் இடைஞ்சல் வராமல் போகலாம். ஆனால் தியானம் செய்யும்போது நிச்சயமாக இடையூறுகள் குறுக்கிடும்," என்று பதிலளித்தேன்.

மேலும் விளக்கினேன். கணவன் கள் குடித்தால், மனைவி தன்னை உயர்வாக நினைக்கும் சூழ்நிலை உருவாகிறது. கணவனை மட்டம் தட்ட வாய்ப்புக் கிடைக்கிறது. கணவனுக்கு அவளிடம் பயம் உண்டாகிறது. ஆனால் கணவன் தியானம் செய்கையில் அவன் மனைவியைவிட உயர்ந்த நிலையில் இருப்பான். மனைவி தியானம் செய்தாலோ ஆணாதிக்க மனப்பான்மை காரணமாகக் கணவனால் அதைத் தாங்க முடியாது.

ஆண் தன்னைவிட உயரமான பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதில்லை என்பதைக் கவனித்திருப்பாயே. ஏன்

அப்படி? அதில் என்ன சிக்கல் உள்ளது? பெண் தன்னைவிட உயரமான ஆணைத்தானே மணந்து கொள்கிறாள்? உடல் அளவில்கூட பெண் தன்னைவிட உயரமாக இருக்கக்கூடாது என நினைக்கும் ஆண், ஆத்ம வளர்ச்சி அளவில் தன்னைவிடப் பக்குவப்பட்டவளை ஏற்பானா? தன்னைவிட கூடுதலாக அவள் படித்திருப்பதையும் அவன் விரும்புவதில்லை. எல்லாவிதத்திலும் தன்னைவிட குறைவுபட்டவளையே மணக்கிறான். அப்போதுதான் அவன் மனைவிமீது ஆதிக்கம் செலுத்த முடியும்.

மனைவியோ, கணவனோ தியானம் செய்வதில் ஒருவரை ஒருவர் கடந்து முன்னேறிவிட்டாலும் பிரச்சினைதான். பெண் குறிப்பிட்ட விதமான ஆணுடன் வாழத் திருமணம் மூலம் சம்மதிக்கிறாள். காலப்போக்கில், கணவன் தியானம் பயின்று அதில் ஈடுபடுகிறான். இது புதிய விஷயம். தியானத்தில் ஈடுபடக்கூடிய கணவனைப் பெண் திருமணம் செய்து கொள்ளவில்லை. எதிர்காலத்தில் மனைவி தியானம் செய்வாள் என்று கணவனும் திருமண சமயம் கற்பனை செய்ததில்லை. இந்த எதிர்பாராத திருப்பத்தால் இருவரிடையேயும் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது; சமநிலை தடுமாறுகிறது.

**ஒ**ரு பெண்மணி என்னிடம் வந்து, "என் கணவர் கோபக்காரர். முன்பு அவரது கோபத்தை சகித்துவந்தேன். இப்போதெல்லாம் அவர் கோபிப்பதில்லை. இதை என்னால் சகிக்க முடியவில்லை," என்றாள்!

விஷயம் தலைகீழாக இருக்கிறதே என்று நீ நினைப்பாய். இந்த மாறுதலுக்காக மனைவி சந்தோஷப்படவல்லவா வேண்டும். ஆனால் உளவியல் கண்ணோட்டத்தில் இவளது புகாரை ஆராய்ந்துபார். அவள் சொல்கிறாள், "முன்பு அவர் கோபப் பட்டாலும், அது அவரது சுபாவத்தின் அங்கமாக, இயற்கையாக இருந்தது. இப்போதெல்லாம் அவர் புத்தர்போல் மௌனமாக இருக்கிறார். நான் சீறி வெடித்தாலும் அவர் அசைந்து கொடுப்ப தில்லை. இதிலிருந்து அவருக்கு என்மீது அன்பு குறைந்துவிட்ட தென்று தெரிகிறது. அடிக்கிற கைதானே அணைக்கும்."

என் மீதும் புகார் செய்தாள்! "இனி மீண்டும் அன்பு எப்படித் துளிர்க்கும்? அவர் மரக்கட்டைபோல் ஆகிவிட்டாரே! நிங்கள்

என்னமோ மாயம் செய்து அவரை மாற்றிவிட்டீர்கள். கொஞ்சம் அவரை சூடு பெறச் செய்யுங்கள். கோபம் மட்டுமில்லை, அவர் எந்த உணர்ச்சியுமே இல்லாதவராகிவிட்டாரே.'' என்று வருந்தினாள்.

இதேபோல், தியானம் காரணமாக, கணவனிடம் காம உணர்வு குறைந்துவிட்டது என்று மறைமுகமாகக் குறிப்பிட்டு வருந்தும் மனைவிகளும் உள்ளனர். வெட்கம் காரணமாக, 'முன்புபோல் அன்பாக இல்லை' என்று மட்டுமே சொல்வார்கள். இதனால் கணவன் தன்னை விட்டு விலகுகிறான் என்று உள்ளூர பயப்படுகிறார்கள். உடல் தொடர்பு தேவையில்லாவிடில் ஆண், பெண்ணைப் புறக்கணித்துவிடுவான் என்று வாதம் செய்கிறார்கள்.

கேள்வியை எழுப்பிய மஞ்சுவை எனக்குத் தெரியும். தியானத்தில் அவள் நிச்சயமாக முன்னேறி வருகிறாள். ஆனால் இதுவே ஒரு பிரச்சினையாகிவிட்டது. அவளது முன்னேற்றத்தை அவள் கணவனும், குடும்பத்தினரும் ஜீரணிப்பது கஷ்டமாகி விட்டது. அவளது முன்னேற்றத்தை ஒப்புக்கொள்வது என்பது அவர்களுடைய அகங்காரத்திற்குத் தோல்வியாகிறது.

**மீ**ராபாயை அவளுடைய அரச குடும்பத்தினர் புரிந்து கொள்ளவில்லையே, அங்கீகரிக்கவில்லையே. அவள் சாகட்டும் என்று விஷம் அனுப்பினார்களே. அரச குடும்பத்துப் பெண், பர்தா பழக்கம் கடுமையாக உள்ள ராஜஸ்தான் மாநிலம்-இத்தகைய பின்னணியில் மீராபாய் பர்தா இல்லாமல் பொது இடங்களுக்கு வந்தாள். வழியெங்கும் ஆடி-பாடி வந்தாள். சாதுக்களின் பக்கத்தில் கூச்சமின்றி உட்கார்ந்து கொண்டாள். அவளுடைய குடும்பத்தினர் வருத்தப்பட்டனர், சங்கடப்பட்டனர். அவள் அடைந்தது ஆன்மிக முன்னேற்றம் என்பது புரியாமல், அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக குடும்பத்தினர் கருதினர்.

இயேசுநாதர் ஒரு முறை தனது ஊரிலிருந்து வந்து சீடர்களிடம் சொன்னார். "இனி நான் அங்கே போவதில் அர்த்தமில்லை. ஊர் மக்களுக்கு என் குடும்பப் பின்னணி தெரியும். ஆகவே அவர்கள், "ஒரு சாதாரணத் தச்சரின் மகன்

திடீரெனத் தன்னைக் கடவுளின் மைந்தன் என்று அறிவித்துக் கொள்வது எவ்வகையில் நியாயமாகும் என்று எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள்,'' என்றார்.

பொதுமக்களின் கண்ணோட்டம் இப்படித்தான் இருக்கும். அவர்கள் இயேசு மரம் அறுப்பதைப் பார்த்திருக்கிறார்கள். தச்சரான தன் தந்தை ஜோசப்பின் மரக்கடையில் அவர் மரவேலை செய்வதையும் கண்டிருக்கிறார்கள். மரப்பெட்டி முதலியவை தயாரிப்பதையும் பார்த்துள்ளார்கள். தங்கள் கண்ணெதிரே தச்சராக நடமாடிய இளைஞர் திடீரெனத் தன்னைக் கடவுளின் மைந்தன் என்று அறிவித்தால் யார்தான் நம்புவார்கள்?

**சி**த்தார்த்தன் புத்தராகித் தலைநகருக்கு விஜயம் செய்தபோது அவரின் தந்தை சுத்தோதனர்கூட அவர் பூரண ஞானம் பெற்றுவிட்டாரென நம்பவில்லை. அவர் சொன்னார்: "மகனே, உன்னைக் குழந்தைப் பருவத்திலிருந்து நான் அறிந்தவன். உனது ரத்தமும் எனது ரத்தமும் ஒன்றுதான். உன் எலும்புகளிலும் நான் உள்ளேன். உன் உரையையும் அர்த்தமற்ற பிட்சு வேலையையும் நிறுத்திக்கொள். மறுபடி வீடு திரும்பி இல்லறத்தான் ஆகிவிடு. உன் தந்தை என்பதால் என் இதயக் கதவு இப்போதும் திறந்திருக்கிறது. நீ செய்த குற்றங்களை மன்னித்து விடுகிறேன். வயோதிகனான என்னைத் தவிக்கவிட்டு ஓடிவிட்டாய். அன்பான மனைவியையும் செல்லக் குழந்தையையும்கூட கைவிட்டுப் போய்விட்டாய். எங்கள் கண்களின் ஒளியாக இருந்தவன் எங்களைக் குருடாக்கிவிட்டாய். ஆயினும் உன்னை மீண்டும் நான் அரண்மனையில் ஏற்றுக் கொள்கிறேன்.''

மகாத்மா புத்தர் ஞானப் பேரொளியாய் எதிரே நிற்கிறார். ஆனால் தந்தை அவரை இன்னமும் சராசரி மனிதனாகவே காண்கிறார். மற்றவர்கள் புத்தரின் மகிமையைத் தெரிந்துகொண்ட நிலையில் தந்தைக்கு எந்த விசேஷமும் ஏன் தெரியவில்லை? அவரது அஹங்காரம்தான் அவரது பார்வையை மறைக்கிறது. தன்னைவிடப் பல மடங்கு ஆன்மிகத்தில் மகன் முன்னேறி விட்டதை அவரது அஹங்காரம் ஏற்க மறுக்கிறது.

தனக்கு நெருங்கியவர்கள் எத்துறையிலாவது மிகவும் முன்னேறுவதைப் பார்த்து அவர்களை சாதனையாளர்கள் என்று ஒப்புக்கொள்ளுகின்ற பெருந்தன்மை எல்லோருக்கும் அமைந்து விடுவதில்லை.

கேள்வி கேட்ட மஞ்சுவிற்கு நான் சொல்வது: "உன் குடும்பத்தினர் உனக்கு இடையூறு செய்கின்றனர் என்பதும், என்னை வகைபாடுகின்றனர் என்பதும், நீ ஆன்மிகத்தில் மிகவும் முன்னேறிவிட்டதை உறுதிப்படுத்துகிறது. ஒரு பெண், அதுவும் மனைவி, இப்படி ஆன்மிகத்தில் முன்னேறுவதைப் பொறுக்க முடிவதில்லை. அவர்களின் அஹங்காரத்தின் மீது அடி விழுகிறது. அதற்குப் பழிவாங்கவே என்னைத் திட்டுகிறார்கள்.

"அவர்கள் என்னைத் திட்டினால் அதை அமைதியாகக் கேள். நீ வழக்கம்போல் தியானத்தில் ஈடுபடு. அவர்கள் மனத்தில் நல்லெண்ணம் உதிக்கும்போது திட்டுவதை நிறுத்திவிடுவார்கள். ஆனால் இத்தகைய மனமாற்றத்தை உண்டாக்குவது உன் கையில் இல்லை. அவர்களுக்கு அறிவுரை கூறி நல்வழிப்படுத்த வேண்டும் என்று ஒருபோதும் முயற்சி செய்யாதே. அப்படி நீ விளக்கம் தந்தால், நிலைமை மேலும் குழப்பமாகிவிடும். நடப்பதை அப்படியே நடக்கவிடு. வளைக்க முயலாதே. அவர்களை சமாதானப்படுத்தவோ, என்னிடம் அழைத்துவரவோ நினைக்காதே. அவர்களால் அஹங்காரத்தை எளிதில் துறக்க முடியாது."

ஒரு பெண்மணி என்னைச் சந்தித்தார். அவர் கணவர் எச்சரித்திருக்கிறாராம். "மறந்தும் ஓஷோவின் சொற்பொழிவைக் கேட்கப் போகாதே! உனக்குள்ள சந்தேகங்களை என்னிடம் தீர்த்துக்கொள்," என்றாராம். வீட்டிலிருந்த ஓஷோ நூல்களை வெளியே எறிந்துவிட்டாராம். வீட்டில் எங்கும் ஓஷோவின் படம் இருக்கக்கூடாது என்று கட்டளையாம்.

இப்படித்தான் நடப்பது வழக்கம். மனைவியின் போக்கால் குடும்பத்தில் பிரச்சினைகள் உருவாகின்றன என்று கணவர் நினைத்திருப்பார். தான் இருக்கும்போது தன் பேச்சைவிட இன்னொருவர் பேச்சிற்கு மனைவி அதிக மதிப்புத் தருவதா என்று கணவர் ஆத்திரப்பட்டிருப்பார். அதேசமயம், மனைவி

தன்னிடம் ஆன்மிகக் கேள்விகள் கேட்டு அறிவை வெளிப் படுத்துவதையும் கணவன் விரும்புவதில்லை.

நான் ஆலோசனை கூறினேன்: "உன் குருவாகிய என்னை மற்றவர்கள் திட்டினால் பொருட்படுத்தாதே. வழியில் கிடக்கும் பூக்களாக அவற்றை நினைத்துக்கொள். அது அவர்களின் சுபாவம் என்று விட்டுவிடு.

"உன் கணவன் உன்மீது தனக்கிருந்த பிடி அல்லது அதிகாரம் போய்விட்டதோ என்று அச்சப்படுகிறான். கணவன் தன்னை மனைவியின் எஜமானன் என்று நினைக்கிறான். கட்டளை பிறப்பிக்கிறான். 'ஓஷோவின் பேச்சைக் கேட்கப் போகாதே, தியானம் செய்யாதே' என்று தடுக்கிறான். யார் காரணமாக மனைவி மீது தனக்கிருந்த அதிகாரம் போய் விட்டதோ, அவரைக் கணவன் திட்டுவது இயற்கைதானே. பாவம், அவன் வேறு என்ன செய்வான்? வேறு ஒன்றும் செய்ய முடியாதென அவனுக்குத் தெரியும். இதற்காக நீ அவனுடன் சண்டைக்குப் போகாதே. பாராட்டெனும் பூக்கள் உன்னை மயக்கித் தடுத்து நிறுத்தியிருக்கும். திட்டுகள் என்னும் முள்களே உன்னை மேலும் தீவிரமாக முன்னேறத் தூண்டும். நீ முயன்றால் சாதாரணக் கற்கள்கூட படிக்கற்களாக மாறும்.

பிரார்த்தனை, காதல், பக்தி, தியானம், இறை உணர்வு ஆகியவற்றின் பாதையில் ஆங்காங்கே நெருப்பு தடுக்கும். உடம்பு காயப்படும். ஆனால் நீ ஆனந்தமாகப் பாடி ஆடியபடி இப்பாதையில் சென்றால், சூழ்நிலையின் ஒவ்வோர் அம்சமும் உன்னுடன் ஒத்துழைக்கும். ஆன்மிகப் பாதை முழுதும் மலர்ப்பாதை என்று நினைத்துவிடாதே. ஆங்காங்கே பூக்கள் தெரிந்தாலும் இப்பாதையில் முள்களே அதிகம் பாதை முடியும் தறுவாயில் சோதனைகள் மேன்மேலும் தீவிரமாகிவிடும். கடைசி அடி எடுத்துவைக்கும்போது கழுத்தைக் கயிற்றால் இறுக்குவது போல் உணர்வாய். அந்த உச்சகட்ட சித்திரவதை நிலையிலும் சலனமற்றிருப்பவன், அமைதியாகப் பொறுப்பவன், கடவுளின் தரிசனம் பெறுவான்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஆசக்ஷ்வ ஸ்ருணு வா தாத நானாஸாஸ்த்ரோண்யநேகஷ:|
ததாபி ந தவ ஸ்வாஸ்த்யம் ஸர்வவிஸ்மரணாத்ருதே|| 146

போகம் கர்ம ஸமாதிம் வா குரு விக்ஞ ததாபி தே|
சித்தம் நிரஸ்த ஸர்வாஸமத் யர்த்தம் ரோசயி ஷ்யதி|| 147

ஆயாஸத்ஸகலோ துக்கீ நைநம் ஜானாதி கஸ்சன|
அநேநைவோபதேஷேன தன்ய: ப்ராப்னோதி நிர்வ் ருதிம்|| 148

வ்யாபாரே கித்யதே யஸ்து நிமேஷோத்மேஷயோரபி|
தஸ்யாலஸ்யதுரீணஸ்ய ஸுகம் நான்யஸ்ய கஸ்யசித்|| 149

இதம் க்ருதமிதம் நேதி த்வந்த்வைர்முக்தம் யதா மன:|
தர்மார்த்தகாமமோக்ஷேஷு நிரபேக்ஷம் ததா பவேத|| 150

விரக்தோ விஷயத்வேஷ்டா ராகீ விஷயலோலுப:|
க்ரஹமோக்ஷவிஹீனஸ்து ந விரக்தோ ந ராகவான்|| 151

'**அ**நேக விதமான சாஸ்திரங்களையும் நீ பல்வேறு வகைகளில் எடுத்துச்சொன்னாலும் அல்லது கேட்டாலும் சரிதான். ஆனால் எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும்! இல்லாவிடில் உனக்கு மன அமைதி கிடைக்காது; மன ஆரோக்கியம் கிடைக்காது.' **(சுலோகம் 146)**

ஜெர்மன் நாட்டுச் சிந்தனையாளர் ஒருவர் ரமணரை தரிசிக்க வந்தார். வெகுதொலைவிலிருந்து வந்த அவர் ரமணரிடம், "நான் நிறைய எதிர்பார்ப்புகளுடன் தங்களிடம் வந்துள்ளேன். சத்தியம்

என்பது என்ன? அதைக் கற்றுக்கொடுங்கள்; அதில் பயிற்சி அளியுங்கள்,'' என்று வேண்டினார்.

ரமணர் சிரித்தார். ''நீ தவறான இடத்திற்கு வந்துவிட்டாய். சத்தியம் என்பதை அறிய, கற்க வேண்டுமானால் வேறு குருவிடம் செல்: இங்கே மறப்பதற்கு மட்டும் உதவி செய்யப்படுகிறது. நீ ஏற்கெனவே கற்றதை மறக்கத் தயாரானால் நான் உன்னுடன் ஒத்துழைக்கிறேன்,'' என்று தமது கண்ணோட்டத்தைக் கூறினார்.

பள்ளிக்கூடம், கல்லூரி, பல்கலைக்கழகம் ஆகியவை சமூகம், நாகரிகம், பண்பாடு முதலியவற்றை ஆழமாகக் கற்பிக்கின்றன. அவையெல்லாம் கற்று முடி. ஆன்மிகம் என்பதோ தீக்கொழுந்து. அதைக் கொண்டு, நீ படித்ததை எல்லாம் எரித்துவிடு. அவை சாம்பலாகட்டும்.

பொதுக் கல்விக்கும் ஆன்மிகத்திற்கும் இடையே ஓர் அடிப்படை விரோதம் உள்ளது. கல்வி, நினைவாற்றலின் மூலம் தகவல்களை நிரப்புகிறது. ஆன்மிகம் உன்னை நினைவாற்றலின் பிடியிலிருந்து விடுவிக்கிறது. நினைவாற்றல் இருக்கும்வரை மனத்தில் முட்கள் பதிந்திருக்கும். முள்ளே இல்லாதபடிக்கு மனம் செம்மையாக வேண்டும்.

இங்கே ஒரு விஷயம் தெளிவுபடுத்த வேண்டும். இப்படிச் சொல்வதால், ஞானிக்கு எதுவுமே ஞாபகம் இருக்காது என்று அர்த்தமில்லை. அவர் தனது பெயர்-முகவரி-இருப்பிடத்தை மறந்திருக்க மாட்டார். ஒருவேளை வீடு திரும்பினால், மனைவி-மகனை எளிதில் அடையாளம் கண்டுகொள்வார். அவருக்கு ஞாபக சக்தி இருக்கும். ஆனால் அது எஜமானன்போல் அவரை ஆட்டுவிக்காது. அவர் விரும்பினால் ஒரு கருவிபோல் மட்டுமே இயங்கும்.

பொதுவாக, இதற்குத் தலைகீழான நிலைமையே காணப்படுகிறது. ஞாபக சக்தி எஜமானனாக நம்மை ஆள்கிறது. பழைய நினைவுகளே மேகங்களைப்போல் உன் மனமாகிய ஆகாயத்தில் சூழ்ந்து பரவியுள்ளன. நீ ஒரு ரோஜாப்பூவைப் பார்க்கிறாய். உடனே இதற்குமுன் பார்த்த ரோஜாப் பூக்கள்,

ரோஜாப்பூக்களுடன் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் உன் மனத்தை ஆக்கிரமித்து விடுகின்றன. எதிரே நிற்கும் ரோஜாப்பூவை ரசிக்கத் தவறுகிறாய். பேரழகும் நறுமணமும் வாய்ந்த அப்பூவைப் படைத்த இறைவனின் நினைவு எழாமல் போய்விடுகிறது.

நேற்று ஒருவன் உன்னைத் திட்டினான். இன்று மீண்டும் அவனைச் சந்திக்க நேருகிறது. அப்போது அவனது திட்டு குறுக்கே வந்து நிற்கிறது என்றால் நீ ஞாபக சக்திக்கு அடிமையாகிவிட்டதாக அர்த்தம். அவன் மன்னிப்புக் கேட்க வந்திருக்கலாம். ஆனால் உனது ஞாபகசக்தி 'உன்னைத் திட்டினவனை நம்பாதே' என்று கூறும். உன்னால் மனம் திறந்து அவனை வரவேற்க, அவனுடன் பேச முடியாமல் போய்விடும். அவன் மன்னிப்புக் கேட்டாலும், நீ அவனை சந்தேகப்படுவாய். ஒருவேளை ஏமாற்ற வந்திருக்கிறான், அல்லது பயந்துவிட்டான் ஆகவே வந்திருக்கிறான் என்று நீ முடிவு செய்வாய். 'நான் அவனைப் பழிவாங்கி விடக்கூடாது என்பதற்காக வந்திருக்கிறான் போலும்' என்றும் நீ நினைப்பாய். அவன் முற்பகலில் செய்தது இப்போது பிற்பகலில் உன் சிந்தனையைச் சேறாக்கிவிடுகிறது. ஞானிக்கும் திட்டுக் கிடைக்கிறது. ஆனால் அவர் அதனை உடனேயே காற்றில் பறக்கவிட்டு மறந்துவிடுகிறார்.

சாஸ்திர நூல்களைப் படிக்கலாம். பிறர் அவற்றை விளக்குவதைக் கேட்கலாம். ஆனால் சாஸ்திர அறிவு உனக்கும் பேருண்மைக்கும் (சத்தியத்திற்கும்) குறுக்கே வரக்கூடாது. இதனால் உன் மன ஆரோக்கியம் கெட்டுவிடும். வறட்டு சம்பிரதாயக் கொள்கைகளால் மூளையின் எடைதான் அதிகரிக்கிறதே தவிர, உயிரில் துடிப்பு இருப்பதில்லை.

சாஸ்திரங்களைப் படிப்பதன் விளைவாகக் கடல் அலைகள் போல் எண்ணங்கள் பொங்கி எழுகின்றன. இதன் காரணமாக மனத்தில் அமைதி ஏற்பட வாய்ப்பில்லாமல் போகிறது. எண்ணத்தால் அசாந்தியும், அசாந்தியால் எண்ணமும் உருவாகின்றன. அந்த எண்ணங்கள் உலகியலானவை, இறையியலானவை, தாங்கள் பின்பற்றும் மதம் சம்பந்தமானவை, ஓதும் புனித நூல் காரணமானவை என்றெல்லாம் பிரிந்து

இருந்தாலும், அடிப்படையில் எல்லா எண்ணங்களும் மன அமைதியைக் குலைக்கவே செய்கின்றன. மேகங்கள் வெவ்வேறு உருவம், வெவ்வேறு கொள்ளளவு ஆனாலும் அவை சூரியனை மட்டுமின்றி மொத்த ஆகாயத்தையும் மறைக்க வல்லவையாய் இருக்கின்றன.

எண்ணங்கள் திரண்டு குவியும்போது நீ உன்னையே அறிய முடியாமல் போய்விடும். உன்னை அறியாமல் நீ உன்னில் நிலைபெற முடியாது. இது ஸ்வாஸ்த்ய எனப்படுகிறது (தற்போது உடல்நலம், சொஸ்தம் என்கிறோம்). இதன் பொருள் ஸ்வயம்+ ஸ்தித-சுயத்தில் நிலைத்திருத்தல். அதாவது தனது மையத்தில் இருத்தல். அப்போதுதான் சாந்த நிலை கைவரப் பெறுகிறது. சாந்தமாயிருத்தல் உடல்-மன ஆரோக்கியத்தின் அடையாளமாகும்.

ஒவ்வோர் எண்ணமும் நம்மை விழவைக்கிறது. ஒவ்வோர் எண்ணமும் உன்னை உன் மையத்திலிருந்து இழுக்கிறது.

நீ அமைதியாக உட்கார்ந்திருக்கிறாய். உன் மனத்தில் எந்த சிந்தனையும் இல்லை. அப்படியானால் நீ எங்கே இருக்கிறாய்? சிந்தனையற்ற நிலையில், நீ எங்கே இருக்க வேண்டுமோ அங்குதான் இருப்பாய். அப்போது ஒரு பெண் உன்னைக் கடந்து செல்வதைப் பார்க்கிறாய். அவ்வளவுதான், சுத்தமான சிலேட்டுப் பலகை போன்றிருந்த உன் மனத்தில் ஒரு கோடு இழுக்கப் படுகிறது. தான் உன் மனத்தில் சலனம் ஏற்படுத்தியதை அப்பெண் அறிந்திருக்க மாட்டாள். நீ உட்கார்ந்திருப்பதை அவள் பார்த்திருக்கக்கூட மாட்டாள். உன் கண்ணில் தெரிவதற்காக அவள் புறப்பட்டு வரவில்லை. அவளது அலங்காரமும் வேறு யார் பொருட்டாகவோ இருந்திருக்கும்.

அவள் யாரென்றுகூட தெரியாவிடிலும் உன் மனத்தில் அவளைப் பற்றிய சிந்தனைகள் ஒரு கோப்பாக அமையும். 'ஆஹா! என்ன அழகு! இவளை அடைய எந்த அதிர்ஷ்டசாலி கொடுத்து வைத்திருக்கிறானோ,'' என்று பெருமூச்சு விடுவாய். அவள் எங்கே போகிறாள் அல்லது வசிக்கிறாள் என்றறிய நீ அவளைப் பின்பற்றத் தொடங்குகிறாய். அமைதியான

நீர்ப்பரப்பில் கல் எறிந்ததுபோல் உன் மனத்தில் வளையம்-வளையுமாகச் சுழல்கள் எழும். முதலில் எறிந்த சிறு கல்லைச் சுற்றிச் சுழல்கள் எழுந்ததுபோல், உன் மனத்தில் இதுவரை உன்னைக் கவர்ந்த பெண்கள், அவர்களுடன் பழக எடுத்த முயற்சிகள் என்று பழைய நினைவுகள் அலைகளாய் வீசும். ஒரு நிமிடம் முன் சாந்தமாயிருந்த உன் மனம் ஒரு சிறு நிகழ்ச்சியால் எந்த அளவிற்குப் பரபரப்படைகிறது என்று பார்த்தால் எண்ணங்களின் ஆற்றல் புரியவரும்.

பெண்ணால்தான் மனம் சலனமடையும் என்றில்லை. எவராலும், எப்பொருளாலும், எந்நிகழ்ச்சியாலும் உன் மனம் அலைமயமாகிவிடும் ஆபத்து உள்ளது. ஏன், ஒரு யோகி உன்னைக் கடந்து சென்றாலும் மனம் சலனமடையும். 'ஆஹா, இவரைப்போல் நாமும் யோகியானால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று மனம் கற்பனையில் இறங்கும். அவ்வளவுதான், சிறியதான இந்த முதல் கல் வீசப்பட்டது. அது பல புதிய எண்ண அலைகளையும் தோற்றுவிக்கும். யோகியானால் என்னென்ன அதிசய சக்திகள் கிடைக்கும், மோட்ச உலகில் என்னென்ன இன்பங்கள் உண்டு என்று மனம் பட்டியலிடத் தொடங்கும். எண்ணங்கள் ஓட்டப் பந்தயம் நடத்தும். ஏனெனில் உன் மனச் சக்கரம் மையத்திலிருந்து நழுவத் தொடங்கும்.

எண்ணங்களால் குழம்பாத மனம் ஆரோக்கியமாக விளங்கும். இத்தகு நிலைதான் தியானம் என்பது. எண்ணங்களற்ற நிலையே சமாதி என்பதும். மோட்ச நிலையும் இஃதேதான். ஏனெனில் இந்நிலையில் ஒருவன் தனக்குள் அமிழ்ந்து மையத்தில் உட்காருகிறான். எங்கும் போவதும் வருவதும் இல்லை. மனம்தான் ஊசலாடுமே தவிர ஆத்மா அசைந்து கொடுப்பதில்லை.

நீ மனத்துடன் உன்னை இணைத்துக் கொண்டால், உனக்குள்ளே போவதும் வருவதுமான பிரமை உண்டாகும். ஓர் அழகியோ, யோகியோ உன்னைக் கடந்து செல்ல வேண்டியதில்லை. அப்போது நீ மரத்தின்கீழ் உட்கார்ந்திருந்தாலே அலைகின்றவனாகத்தான் கருதப்படுவாய். எங்கும் போகாமலே உன் யாத்திரை தொடங்கிவிட்டது!

சாந்தமாக இருப்பதுதான் நமது சுபாவம். அமைதியை இழக்கும் பைத்தியக்காரத்தனத்தை நாம்தான் செய்கிறோம். அங்குமிங்கும் ஓடுகிறோம்.

சாஸ்திரம் பேசுவதால், கேட்பதால் என்ன பலன் விளையும்? புதிய எண்ணங்கள், புதிய அலைகள் மனத்தில் எழும். புதிய உணர்வுகள் தோன்றும். புதிய இலக்குகள் அமைந்து அவற்றை அடையத் தவிப்பு ஏற்படும். புதிய சுவர்க்கம், புதிய மோட்சம் பற்றிய கற்பனைகள் உதிக்கும். ஆனால் சத்தியம் அங்கெல்லாம் இல்லை. ஆகவே நீ எங்கேயும் போகவேண்டியதில்லை. நீ (உன் மனம்) எங்கும் செல்லாமல், நின்றுவிட்ட கடிகார ஊசல் (பெண்டுலம்) போல் ஆனால், அப்போதுதான் நீ சத்தியத்தில் நிலைபெறுகிறாய்.

எல்லாவற்றையும் நினைவில் வைத்திருப்பதால்தான்-நமது நினைவாற்றல் குறித்துப் பெருமை கொள்வதால்தான்-நாம் மன அமைதியை இழக்கிறோம். அறிந்ததை, நடந்ததை மறக்க-மறக்கத்தான் மன அமைதி மிகும். நினைவுகளே இல்லாமல், அதன் காரணமாக எண்ணங்களே எழாமல், மனம் வெறுமையாக இருக்கும்போது ஞான கிரணம் உனக்குள் இறங்கிவரும்.

ஒருநாள் ஒரு துறவியுடன் உரையாடிக் கொண்டிருந்தேன். அவர் ஜார்ஜ் குர்ஜியேஃபின் கருத்துகளால் கவரப்பட்டவர். வெளிநாடு சென்று வந்தவர். குர்ஜியேஃபின் சாதனை முறையைப் பரிசோதித்துப் பார்த்தவர். அந்த சாதனை முறையின் மையக்கொள்கை ஆத்மஸ்மரணம்-தன்னை நினைத்தல்-(self-remembering) என்பதாகும். இது மிகவும் மதிப்பு வாய்ந்த சொல். இச்சொல்லின் அர்த்தமும் தியானம் என்பதன் அர்த்தமும் ஒன்றுதான். இதன் அர்த்தமும் குரு நானக்கும் கபீர்தாசரும் பயன்படுத்திய 'சுரதி' என்ற சொல்லும் ஒன்றே. ஸ்வயம்+ஸ்ம்ருதி (தன் நினைவு) சுரதி என ஆகிறது. சிக்கல் என்னவென்றால், நம்மில் பலருக்குத் 'தான்' யார் என்பதே தெரியாதே. பிறகு 'தன்னை அறிதல்' என்னும் நிலைக்குப் போவது எப்படி? பலர் தவறுதலாக அஹங்காரத்தைத் 'தன் நினைவு' என்று தவறுதலாக அர்த்தம் கொள்வார்கள். உண்மையில் 'நான் யார்?' என்பதை

அறிந்துகொண்டு, அந்த 'நான்'இல் லயித்தல்தான் ஆத்மஸ்மரணம்.

உடலாகிய நான் என்பதை, மனமாகிய நான் என்பதை மறக்கப் பயில வேண்டும். அப்போது நீ பரவசமாக உணர்வாய். நிஜமான நீயின் நினைவில் லயிப்பாய். உடலின் நினைவும், மனத்தின் நினைவும் மறந்து ஆத்மாவின் நினைவு மேலேழும்.

மறந்தால் நினைவு வரும் என்று சொல்வது முரண்போல் தெரியலாம். ஆனால் வாழ்க்கையே அப்படித்தானே. நீ சம்பவங்கள் எப்படி நிகழ வேண்டுமென எதிர்பார்க்கிறாயோ அதற்கு விபரீதமாக, முரணாகத்தானே அவை நடைபெறுகின்றன.

ஒரு மனிதன் தூங்க விரும்புகிறான். அதற்காக மிகவும் முயற்சி எடுக்கிறான். ஆனால் அவனது ஒவ்வொரு முயற்சியும் அவன் தூங்குவதற்குத் தடையாகத்தான் அமைகிறது. அவன் எவ்வளவு முயற்சி செய்கிறானோ அதே அளவிற்குத் தூக்கமும் தள்ளிப்போனபடியே இருக்கிறது! தூக்கம் வரவேண்டுமானால் அதற்கான எல்லா முயற்சிகளையும் கைவிட வேண்டும். தூக்கத்தை வரவழைக்கும் முயற்சி தூக்கத்தை வரவிடாமல் செய்துவிடுகிறது.

உதாரணமாகச் சிலர் 'ஒரு ஆடு, ரெண்டு ஆடு' என்று எண்ணிக்கொண்டே போகும் முறையை (count sheep) மேற்கொள்ளுகிறார்கள். சிலர் மந்திரங்கள் சொல்கிறார்கள். தூக்கம் வர யார் எந்த உபாயம் சொன்னாலும் பின்பற்றிப் பார்க்கிறார்கள். ஆனாலும் விழித்தபடியே இருக்கிறார்கள். முயற்சி என்பதே சிரமத்தைக் குறிக்கிறது. சிரமம் எப்படி ஓய்வைத் தரும்?

தூக்கமின்மையைப் போக்கிக் கொள்ள வழி சொல்லுமாறு என்னிடம் வருபவர்களுக்கு நான் சொல்லும் ஆலோசனை அவர்களைத் திடுக்கிடவைக்கிறது. "சுவாமி, நாங்கள் ஏற்கெனவே உயிரற்றவர்கள்போல் உள்ளோம். உங்கள் பேச்சைக் கேட்டால் நிஜமாகவே செத்துப்போவோம்," என்று புலம்புகிறார்கள். நான் சொல்லும் ஆலோசனை 'தூக்கம் வராவிட்டால் நாலு மைல் ஓடுங்கள்' என்பதுதான். அவர்களோ, "ஓடினால், கொஞ்சம் மிஞ்சியுள்ள தூக்கமும் நீங்கிவிடுமே," என்று மறுக்கிறார்கள்.

உண்மை என்ன? நீ ஓட்டப் பயிற்சி செய்தால் களைத்துப் போவாய். தூக்கம் வந்து தழுவும். பகல் முழுதும் உழைப்பவன் இரவில் ஆனந்தமாகத் தூங்குகிறான். பகல் முழுதும் சொகுசாக இருப்பவனுக்கு உறக்கம் வருவதில்லை. நாள் முழுதும் மண்வெட்டியவன், கல் உடைத்தவன் இரவில் குறட்டைவிட்டுத் தூங்குகிறான். இதிலிருந்தே முயற்சி செய்பவனுக்குத் தூக்கம் வராது; முயற்சி ஏதும் செய்யாதவன் தன்னை அறியாமலே தூங்கிவிடுவான் என்பது தெளிவாகிறது.

இதுபோலவே தன் நினைவைக் கொண்டுவர, தன்னை நினைக்காமலிருக்க வேண்டும். ஆடலில், பாடலில், இதுபோன்ற முயற்சிகளில் உன்னை முழுமையாக மற. நீ யார், உன் இருப்பிடம் எது, நீ பண்டிதனா-பாமரனா, நல்லவனா-பாவியா எல்லாவற்றையும் மற. எதுவுமே நினைவில்லாத நிலைக்குச் சென்றுவிடு. செருப்பைக் கழட்டி வாசலிலேயே விட்டுவிடுவதுபோல் உன் அறிவு, புண்ணியம், அஹங்காரம் எல்லாவற்றையும் துற. உனக்குள் புதிய ஒளி தோன்றும்; குழப்ப மேகம் கலைந்து ஞான சூரியன் தென்படும்.

மறத்தல் என்னும் செயற்பாட்டினால் தன் நினைவு மலர்ந்து விரியும். ஞானமும் இவ்வாறே பெறப்படுகிறது. மனப்பாடம் செய்வதில் ஈடுபடுபவர்கள் மறந்துபோவது வழக்கமாயுள்ளது. மனப்பாடம் அதிகமாகச் செய்தால் மறப்பதும் அதிகமாகி விடுகிறது. ஆனால் எதை மறக்க முயல்கிறோமோ அது நினைவில் பசுமையாக நீடிக்கிறது. இப்படித்தான் ஆன்மிகத்தின் சூத்திரங்கள் முரண்பாடு உடையவையாக (paradoxical) தெரிகின்றன. ஆகவே ஆன்மிகத்தை தருக்க முறையில் ஆராயக்கூடாது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் டாக்டரிடம் போனார். அவருக்கு பயங்கரமான இருமல். டாக்டர் திடுக்கிட்டார். "எப்படி இந்த அளவிற்கு இருமல் பயங்கரமாக வளர்ந்தது?"

"ஏன் வளராது, டாக்டர்? ஏழு நாளாக இருமல் பயிற்சி செய்து வருகிறேன். நேற்றிரவு முழுவதும் பயிற்சி செய்தேன்," என்று காரணம் கூறினார் முல்லா.

நீ எதைத் தொடர்ந்து பயிற்சி செய்கிறாயோ அதில் நீ வல்லமை பெறுவாய். இரவு முழுதும் இருமும் பயிற்சி செய்தால், இருமல் வலிமை பெறும். இதேபோல், நிஜமான தன்னை நினைத்தபடி இருந்தால், உன் ஆத்ம பலம் அதிகரிக்கும். ஆனால் தன்முனைப்பிலேயே ஈடுபட்டு நீ அஹங்காரத்தை வளர்த்துக் கொள்கிறாய். அது உன் கண்ணை மறைக்கிறது. உன் மன ஆகாயத்தில் ஞான சூரியன் ஏற்கெனவே உள்ளது. அறியாமை மேகங்களால் அது மூடப்பட்டுள்ளது. மேகம் அகன்றால் சூரியன் தெரியும். அது ஏற்கெனவே உள்ளதால் புதிதாகத் தோன்ற வேண்டியதில்லை.

ஞானமும் அறிவும் வேறானவை. ஞானம் உன் இயற்கையான அம்சம். அது உள்ளேயிருந்து சுரக்கிறது. அதை வெளியே சாஸ்திர நூல்களில் தேடினால் கிடைக்காது. அவற்றைக் கற்கும்போது அவை கூறுபவை சில மடிப்புகள் போலமைந்து நமது சுபாவத்தை மறைத்து விடும்.

அறிவு என்பது கல்வி மூலம் வெளியே இருந்து வருவது. அஷ்டாவக்ர கீதையானாலும், என் சொற்பொழிவானாலும் நீ அதிலிருந்து பெறும் அறிவு வெளியிலிருந்து உற்பத்தியாவதுதான். நீ சேகரிக்கும் வேலை மட்டும் செய்கிறாய். ஆகவே அறிவு உனது சுபாவமன்று. அது வெளியிலிருந்து வருவதால் விதேசி யாகும். இப்படி வெளிப்பொருளைத் திரட்டிக் குவித்தால், உனக்கு உள்ளேயிருப்பது எதுவோ அது வெளிப்படுவதில் தடங்கல் விளைகிறது.

நாம் கிணறு வெட்டுகிறோம். ஆழத்தில், அடிமட்டத்தில் தண்ணீர் ஏற்கெனவே உள்ளது. நாம் வெளியிலிருந்து தண்ணீர் பிடித்துவந்து கிணற்றுக்குள் கொட்டுவதில்லை. நாம் கிணற்றின் அடிமட்டத்தில் மண்டிக் கிடக்கும் மணல் படுகைகளை அகற்ற மட்டுமே செய்கிறோம். தண்ணீர் பீறிட்டு வருகிறது.

அஷ்டாவக்ரர் கருத்துப்படி-ஞானம்தான் நமது சுபாவம். அதன் ஊற்று நமக்குள்ளேதான் இருக்கிறது. நடுவில் மறைக்கும் பெரிய மணல் மடிப்புகளை அகற்று. சில மடிப்புகள் வேதங்களாலானவை; சில மற்ற மத நூல்களால் ஆனவை; சில நீ

படித்தும்-கேட்டும் சேகரித்தவை. இவற்றையெல்லாம் மற. இந்த மடிப்புகளை அகற்று. அப்போதுதான் நீ தன்னில் நிலைபெறுவாய். அதுவே மனத்தின் ஆரோக்கிய நிலை-ஸ்வாஸ்த்யம்.

ஆனால் நாம் சொற்களில் அதிகம் நம்பிக்கை கொண்டுள்ளோம். சொற்களின் இனிமையில் மயங்குகிறோம். ஆம், சொற்கள் இனியவை. இசை ஒலி உடையவை. அவற்றின் சுவையும் இனியது. ஆகவேதான் சொற்களை வைத்து காவியம் இயற்றுகிறோம். சொற்களைக் குறிப்பிட்ட விதத்தில் வரிசைப்படுத்தினால் இசைப்பாடல் கிடைக்கிறது.

சொற்களில் தர்க்கம் மறைந்துள்ளது. தர்க்க முறையிலான சொல்லமைப்பால் மனம் திருப்தியடைகிறது. சிந்தனைக் குழப்பம் என்ற இருட்டில் நாம் தடுமாறுகிறோம். அப்போது தர்க்கம் அக்குழப்பத்தை அலசி, மனத்தைத் தெளிவுபடுத்துகிறது. இதன் மூலம் பிரச்சினைக்குத் தீர்வு காணும் வாய்ப்பும் கிடைக்கிறது. அச்சடித்த எழுத்துகள் மீதோ நமக்கு அபாரமான நம்பிக்கை உள்ளது.

**ந**ண்பர் ஒருவர் சந்திக்க வந்தார். "சுவாமி, நீங்கள் கூறும் அறிவுரைகள் எந்த சாஸ்திரத்தில் எழுதப்பட்டுள்ளன?" என்று விசாரித்தார்.

"ஏன், ஏதாவது சாஸ்திரத்தில் எழுதப்பட்டிருந்தால்தான் நான் சொல்வது சரி என்று அர்த்தமாகுமா? அப்போதுதான் ஒப்புக்கொள்வீர்களா? எழுதப்படுபவை எல்லாம் உண்மைதானா? ஒரு விஷயம் உண்மை என்றால், அது சாஸ்திரத்தில் எழுதப்படாவிடிலும் உண்மைதான். ஒரு விஷயம் தவறு என்றால், எல்லா சாஸ்திரங்களும் சரி என்றாலும், அது தவறுதான். சொல்லும் விஷயத்தை அப்படியே மதிப்பிடு. சாஸ்திரத் தராசு வேண்டாம்," என்று அவருக்கு விளக்கினேன். அச்சில் வருவதைத்தான் நம்புவேன் என்பது அறியாமையின் விளைவு என்று சுட்டிக் காட்டினேன்.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு விபத்தில் சிக்கிக்கொண்டார். அவரது கால் ஒரு லாரியில் மோதியதால் அவர் காயமடைந்தார்.

ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். டாக்டர் காயத்திற்குக் கட்டுப் போட்டார். "காயம் இன்றே ஆறிவிடும். நாளை காலை வந்து டிஸ்சார்ஜ் செய்துவிடுகிறேன்," என்றார்.

மறுநாள் காலை டாக்டர் பரபரப்பாக முல்லாவின் படுக்கையருகே வந்தார். "நஸ்ருத்தீன்! இன்று உமக்கு டிஸ்சார்ஜ் இல்லை. நீர் விபத்து பற்றி நேற்று சொன்னதைவிட உமக்கு அடிபட்டது பற்றி இன்றைய பேப்பரில் நிறைய புதிய விவரம் தரப்பட்டுள்ளது. ஆகவே உம்மை மறுபடியும் பரிசோதித்து, சிகிச்சை செய்தாக வேண்டும்," என்று கூறினார்!

**ரா**மகிருஷ்ணர் ஒரு நிகழ்ச்சி சொல்கிறார். அவருடைய சீடன் ஒருவன் செய்தித்தாள் படித்துக்கொண்டிருக்கிறான். அவன் மனைவி வந்து, "ஹாய்யா பேப்பர் படிக்கிறீங்களே, பக்கத்துத் தெருவில் நேத்து ராத்திரி தீப்பிடிச்சிடுச்சு தெரியுமா?" என்று கேட்டாள். அதற்குக் கணவன், "அதையெல்லாம் நம்ப முடியாது. நீ சொல்ற தீ விபத்து பற்றி பேப்பர்ல ஒரு செய்தியும் போடலியே. நீ கேள்விப்பட்டது பொய்யா இருக்கும்," என்று தட்டிக்கழித்து விட்டான்!

அச்சடித்த விஷயத்தை நாம் மிகவும் நம்புகிறோம். இதனால் எந்த விஷயத்தை அச்சிட்டு வழங்கி மக்களை ஏமாற்றுவது எளிதாக இருக்கிறது. ஆகவேதான் வாசகர்கள் மத்தியில் விளம்பரங்களுக்கு நல்ல செல்வாக்கு காணப்படுகிறது. அச்சடித்த விளம்பரம் வாங்குவோரை உடனே வரவழைக்கிறது. பெரிய எழுத்து விளம்பரம் நேரடியாக நெஞ்சுக்குள் சென்று விடுகிறது. எழுத்தின் அளவுப்படி விளம்பரத்தில் நம்பிக்கை அதிகரிக்கிறது. அச்சில் வந்தது தப்பாக இருக்காது என்பது மக்களின் கருத்து.

ஆனால் சத்தியமும் அச்சில் வரவேண்டும் என்பது அர்த்தமற்றது. சொற்களின்மீது நமக்குள்ள கவர்ச்சியைக் குறைத்துக்கொள்ள வேண்டும் சத்தியம் என்பது சூன்யத்துடன் (வெறுமையுடன்) சம்பந்தப்பட்டது; மௌனத்துடன் சம்பந்தப்பட்டது. கடவுளுக்கென்று தனியாக மொழி கிடையாது. ஆனால் இந்துக்கள், 'சமஸ்கிருதம் தேவ வாணி. அதுவே கடவுளின் மொழி'

என்கின்றனர். ஜைனர்கள் கடவுளின் மொழி பிராகிருதம் என்னும், பௌத்தர்கள் பாலி, யூதர்கள் ஹீப்ரு என்றும் வாதிடுகின்றனர். மற்ற மதத்தினரும் தத்தம் மொழியை தேவபாஷை என்கின்றனர்.

இரண்டாம் உலகப் போர் முடிவடைந்த பிறகு ஜெர்மானிய படைத்தலைவர் ஒருவரும், ஆங்கிலேயப் படைத்தலைவர் ஒருவரும் சந்திக்க நேர்ந்தது. ஜெர்மானியர் சொன்னார், "எங்கள் நாட்டுப் படை தொடர்ந்து தோல்வி கண்டது ஏன் என்று புரியவில்லை. எங்களிடம் சிறந்த ஆயுதங்களும், விஞ்ஞானக் கருவிகளும் இருந்தன. தொழில்நுட்பத்தில் நாங்கள் உங்களைவிட முன்னேறியவர்கள். பிறகும் நாங்கள் ஏன் தோற்றோம்?"

"உங்கள் தோல்விக்கான காரணம் வேறு. எங்கள் படையினர் போருக்குக் கிளம்புவதற்கு முன்னால் மறக்காமல் கடவுளை வழிபட்டனர்," என்று ஆங்கிலேயர் தன் தரப்பை எடுத்துக்கூறினார்.

ஜெர்மானியர்: "இது எப்படி காரணமாக முடியும்? நாங்களும் கடவுளை வழிபட்ட பின்னரே போருக்குப் புறப்பட்டோம்."

ஆங்கிலேயர்: "ஆனால் கடவுளுக்கு உங்கள் பிரார்த்தனை புரிந்திருக்க வாய்ப்பில்லையே."

ஜெர்மானியர்: "ஏன் அப்படி? அவர் பாரபட்சம் காட்டுபவரில்லையே."

ஆங்கிலேயர்: "கடவுளின் மொழி ஆங்கிலமாயிற்றே. அவருக்கு ஜெர்மன் மொழி பிரார்த்தனை புரிந்திருக்க முடியாதே!"

ஒவ்வொரு மொழிக்காரனும் தனது மொழியே கடவுள் பேசும் மொழி என்று நினைக்கிறான். ஆனால் கடவுளின் மொழி என்று உலக மொழிகளில் எதையும் கூற முடியாது. எல்லா மொழிகளும் மனிதன் படைத்தவைதாம். கடவுளின் மொழி என்று குறிப்பிட வேண்டுமானால் மௌனம்தான் அவரது மொழி, இதேபோல், கடவுள் அருளிய சாஸ்திரம் என்று விசேஷமாகக் கிடையாது. எல்லா சாஸ்திரங்களையும் மனிதர்கள்தான்

இயற்றினார்கள். இந்துக்களின் கண்ணோட்டத்தில் வேதங்களை எந்த புருஷனும் எழுதவில்லை (அபௌருஷேய). மற்ற மதத்தினரும் தங்கள் புனித நூல்கள் ஒலிகளாக விண்ணிலிருந்து இறங்கி வந்ததாகக் கூறுவர்.

இப்படிப் போட்டி போடுவதன் காரணம் என்னவென்றால், தங்கள் சாஸ்திரம் பரமாத்மாவால் நேரடியாகப் படைக்கப்பட்டது என்று வாதிடுவதால் தங்கள் மதமே உயர்ந்தது என்னும் அபிப்பிராயம் வேரூன்றும் என்பதே. இதற்கு அடுத்த கட்டமாகப் பிற மதங்களின் சாஸ்திரங்கள் அவ்வளவு உயர்வானவை அல்ல என்று விமர்சிக்கிறார்கள்.

சாஸ்திரங்களால் சண்டைகள்தாம் உண்டாகினவே தவிர, சத்தியம் உண்டாகவில்லை. சாஸ்திரங்களால் போராட்டங்கள் வெடித்தன; சம்பிரதாயப் பிரிவுகள் தோன்றின; மக்களிடையே ஒற்றுமை இல்லாமல் போய்விட்டது. ஒருவரை ஒருவர் வெட்டினர், வன்முறை வளர்ந்தது. கொலைகள் சர்வசாதாரணமாகிவிட்டன.

கடவுளின் மொழி மௌனம். இதனால் சொற்கள் சாத்தானின் மொழி என்று அர்த்தமாகாது. இதன் பொருள், ஒரு மனிதன் முழுமையான மௌனத்தை (மோன நிலையை) அடையும்போது சத்தியத்தை உணர்கிறான் என்பதாகும். ஆனால் மனிதன் எதையாவது சொல்ல விழைந்தால், அதற்கு ஊடகமாகச் சொற்கள் பயன்படுகின்றன. அவன் அறிந்ததை, உணர்ந்ததை, அனுபவித்ததைச் சொற்கள் மூலமாகச் சொல்ல முயலும்போது பெரும் பகுதி, சல்லடை நீர்போல், சொல்லப்படாமல் வெளியேறுகிறது.

நீ கடற்கரைக்குச் சென்று சூர்யோதயம் காண்பதாக வைத்துக் கொள்வோம். கடற்பரப்பில் உதய கிரணங்களின் செம்மை, பறவைகளின் ஒலி, இதமான காற்று ஆகியவற்றால் பரவசமடைகிறாய். குடும்பத்தினருக்கும் இந்த எழில் காட்சியைக் காண்பிக்க விரும்புகிறாய். உடனே வீடு திரும்பி, அவர்களை எழுப்பிக் கடற்கரைக்கு அழைத்துவர முடியாது. சில நிமிடங்களிலேயே சுற்றுச்சூழலும் மாறிவிடும். ஆகவே சட்டைப்பையிலிருந்த காகிதத்தை எடுத்து, அக்காட்சியை ஓவியமாகத் தீட்டுகிறாய். சூரிய உதயம், அலைகள், வளையும்

தென்னை மரங்கள் ஆகியவற்றை வரைகிறாய். படத்துடன் வீட்டிற்கு வருகிறாய். நீ பார்த்த காட்சிகள்தான் உள்ளனவே தவிர, உன் மெய்சிலிர்க்கும் அனுபவமும் அந்தப் படத்தில் இருக்காது. உன் அனுபவம் காகிதத்தில் இறந்துபோயிருக்கும். சௌந்தர்யத்தை எப்படிக் கட்டி கொண்டுவருவாய்? கவிதையாக எழுதினாலும் முழு அழகும் அதில் அடங்காது.

தற்காலத்தில் தொழில்நுட்பம் மிகுந்த, விலை உயர்ந்த புகைப்படக் கருவிகள் உள்ளன. அவற்றின் மூலம் கண்ணைக் கவரும் வண்ணப்படங்கள் எடுக்கலாம். அப்படங்களிலும் உயிரோட்டம் இருக்காது. நிஜமான சூரியன் எழும்பிக்கொண்டே இருக்கும். புகைப்படத்திலுள்ள சூரியன் ஒரே இடத்தில் தேங்கியிருப்பான். அது இறந்துபோனதற்கு சமம்தானே. மேலும், நீ வானத்தில் உதயசூரியன், பாலசூரியன், அஸ்தமன சூரியன் என்றெல்லாம் பார்த்து விதவிதமான அனுபவம் பெறுவாய். போட்டோ சூரியன் உனக்கு எந்த உணர்வும் தராது. 'நன்றாயிருக்கிறது' என்று மட்டுமே சொல்லத் தோன்றும்.

புகைப்படம் எடுப்பவர் வந்து உன்னைப் படம் பிடிக்கிறார். நீ 'போட்டோ சரியாவே இல்லை, என்னைப்போல இல்லை' என்று அதிருப்தியை வெளிப்படுத்துகிறாய். புகைப்படம் எடுப்பவர் வேண்டுமென்றே கோணலாக உன்னைப் படம் பிடிக்கவில்லை. கேமராவிற்கும் உன்னுடன் விரோதம் இல்லை. எப்படியோ அப்படியேதானே அது படம் பிடிக்கும். எங்கே கோளாறு? நீ கண்ணாடியில் பார்க்கும் உன் முகம் உயிர்க்களையுடன் உள்ளது. போட்டோவில் அந்த ஜீவகளை இருப்பதில்லை.

சூன்யத்தில் போக வேண்டியது சொற்களில் இறங்கினால் இந்த நிலை ஏற்படும். போட்டோ நிச்சயமாக உன்னுடையதுதான். உன் முகம்தான். அதில் உள்ளது. உன் கண்-காது-மூக்கு முதலியவை போட்டோவிலும் அதேபோல்தான் உள்ளன. ஆனாலும் அதுவும் நீயும் ஒன்றில்லை. நீ உயிருடன் தென் படுகிறாய். போட்டோ உயிரற்ற உடல்போல் உள்ளது. இதேபோல் சொற்களின் வழியாக சத்தியத்தை வெளிப்படுத்தினால் அது சிதைந்து காணப்படுகிறது.

ஒரு நேரான குச்சியை தண்ணீர்க் குடுவையில் நிறுத்தினால் அது கோணலாகத் தெரிகிறது. ஊடகத்தின் பாதிப்பு, சூரிய கிரணங்களின் பாதிப்பால் அப்படித் தோன்றுவதாக விஞ்ஞானிகள் கூறுவர் (Theory of refraction). சத்தியத்தையும் சொற்களின் வழியாக வெளிப்படுத்தும்போது கோணலாக மாறுகிறது. இந்து சத்தியம், முஸ்லீம் சத்தியம், கிறிஸ்தவ சத்தியம், ஜைன சத்தியம் என்றெல்லாம் சத்தியம். வெவ்வேறு கோணல்களாகச் சிதறுகிறது. சத்தியம் சொற்களின் வழியாக வெளிவரும்போது மத சம்பிரதாயங்களாக உருவெடுக்கிறது. மதக் கொள்கைகளாக மாறுகிறது. எனவேதான் சொற்களின் வழியாக, சாஸ்திரங்கள் வழியாகக் கடவுளை நோக்கிச் செல்ல முயன்றால் தடங்கல் ஏற்படும்.

நீ வெயிலில் நடந்து செல்கிறாய். பின்னால் உன் நிழல் விழுகிறது. நிச்சயமாக நிழல் உன்னுடையதுதான். ஆனால் நான் உன் நிழலைப் பிடித்தால் உன்னைப் பிடிக்க முடியாது. இதை காரணமாக வைத்து அந்த நிழல் உன்னுடையதன்று என நான் வாதம்புரிய முடியாது. ஆனால் உன்னைப் பிடித்தால் உன் நிழலும் எனக்கு வசப்பட்டுவிடும்.

சுவாமி ராமதீர்த்தர் ஒருநாள் ஒரு குழந்தை தன் நிழலைப் பிடிக்க முயல்வதை ரசிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். நிழலைப் பிடிக்க முடியாமல் குழந்தை அழுதது. அவர் ஒரு கணம் யோசித்தபின், குழந்தையின் கையைப் பிடித்து அதன் தலைமேல் வைத்தார். நிழலும் அவ்வாறே செய்வதை, நிழல் மீது தன் கை படிவதைக் குழந்தை பார்த்தது. உடனே அது நிழலைப் பிடித்துவிட்டதாக எண்ணிக் கலகலவென்று சிரித்தது. ராமதீர்த்தர் சொன்னார்: 'இந்தக் குழந்தை மூலம் நான் ஒரு பாடம் கற்றுக்கொண்டேன். நிழலைப் பிடிக்க முயன்றால் அது கையில் அகப்படாது. மூலத்தைப் பிடித்தால் அதே நேரத்தில் நிழலையும் பிடித்துவிடலாம். ஆனால் நிழலைப் பிடித்தால் மூலம் வசப்படாது'. அவ்வாறே சாஸ்திரப் பயிற்சியின் அடிப்படையில் மூலப்பொருளை அடைந்துவிட முடியாது.

சாஸ்திரங்கள் மூலமாகக் கடவுளை அடைய வழி கிடையாது. ஆனால் கடவுளை நீ முதலில் உணர்ந்துவிட்டால்

பிறகு சாஸ்திரங்களை எளிதில் புரிந்துகொள்ளலாம். சாஸ்திரங்களைப் படித்து சத்திய தரிசனம் பெற்றவன் எவனுமில்லை. ஆனால் சத்தியத்தை அறிந்து கொண்டவனை சாஸ்திரங்களை அறிந்துகொண்டவனாகவும் கருதலாம். சத்தியத்தை அறிந்த பிறகே சாஸ்திரங்கள் படித்தால் இன்பமாக இருக்கும். நான் இப்படிச் சொல்வது விசித்திரமாக இருக்கலாம். ஆனால் சாஸ்திரங்களில் சத்தியத்தின் பிரதிபிம்பம் ஆங்காங்கே காணப்பட்டு உன்னை மகிழ்விக்கும். உதாரணமாக, சத்தியத்தை உணர்ந்தபின் பகவத்கீதை படித்தால், 'அடேடே! நான் உணர்ந்த விஷயத்தை கீதையும் சொல்கிறதே' என்று ஆச்சரியப்படுவாய். இவ்வாறு, முதலில் அனுபவம், பிறகு அதை உறுதிப்படுத்தும் சாட்சியங்களாக சாஸ்திரங்கள் என உன் ஆன்மிகப் பயணம் அமைய வேண்டும்.

சாஸ்திரங்களை எழுதிய மாமுனிவர்கள் நீ அவற்றை மனப்பாடம் செய்யவேண்டுமென எதிர்பார்க்கவில்லை. அப்படி மனப்பாடம் செய்தால் நீ ஞானியாகிவிடுவாய் என்றும் அவர்கள் நினைக்கவில்லை. உனக்கு ஆன்மிகத்தில் ருசி ஏற்பட்டால், பார்வை நூல்களாக (ரெஃபரன்ஸ்) கொள்ளவே சாஸ்திரங்கள் எழுதப்பட்டன. ஆன்மிகப் பாதையில் உனக்கு முன்பே பலர் சென்றிருக்கும் தடத்தை அவை காட்டுகின்றன. உனக்கு மனக் கோளாறோ என்று சந்தேகப்படாமலிருக்கவும் அவை உதவுகின்றன.

உனக்கு இறையுணர்வு கிடைக்கத் தொடங்கியதும், சாஸ்திரங்கள் உனக்கு ஆதரவு தரும்; ஊக்கமளிக்கும், தட்டிக்கொடுக்கும். 'நீ சரியான பாதையில்தான் செல்கிறாய். இப்படித்தான் மற்ற ஞானிகளுக்கும் நிகழ்ந்தது." என்று அவை சாட்சியம் கூறி அவை உன்னை வலுப்படுத்தும்.

இதை வேறு விதமாகவும் சொல்லலாம். ஓர் ஆளை உனக்குத் தெரியுமென்றால் அவரது புகைப்படத்தை நீ அடையாளம் கண்டுகொள்வாய். ஆனால் புகைப்படத்தை மட்டும் முதலில் பார்த்திருந்தால் அதை வைத்து அவரை அடையாளம் கண்டுபிடிப்பாய் என்பது அவ்வளவாக நிச்சயமில்லை. உனது

சிறுவயதுப் படம் இன்றைய உன் முகத்துடன் ஒத்துவராது. நீ இடைக்காலத்தில் வளர்ந்துவிட்டாய். ஏன், ஒரே மனிதனையே வெவ்வேறு தோற்றங்களில் (pose), வெவ்வேறு கோணங்களில், புகைப்படமெடுத்தால், அவை வெவ்வேறு ஆள்களின் படம்போல் தோன்றும்.

**சோ**வியத் ரஷ்யாவில் ஸ்டாலினின்* ஆட்சிக்காலம். எவனோ ஒருவன் திருடிவிட்டான். பார்த்தவர்கள் கூறியதை வைத்துப் பத்துப் படங்கள் வரையப்பட்டன.

இடப்பக்கம், வலப்பக்கம், பின்புறம், முன்புறம், இந்த திசை, அந்த திசை என்றெல்லாம் அந்த மனிதனின் பத்துத் தோற்றங்கள் வெளியிடப்பட்டன. ஒரு வாரத்தில் பத்துபேர் காவல்நிலையத்திற்கு வந்து திருட்டுக் குற்றத்தை ஒப்புக்கொண்டனர். அவ்வாறே எழுதியும் கொடுத்தனர்! ஸ்டாலின் காலத்தில் சந்தேகத்துக் குரியவர், குற்றம் செய்யாவிடிலும், தாமாகவே முன்வந்து குற்றம் செய்ததாக ஒப்புக் கொண்டால்தான் குறைந்த தண்டனையுடன் தப்பிக்கலாம். காவல்துறையே முதலில் பிடித்துவிட்டால் மிகவும் கடுமையான தண்டனை கிடைக்கும்.

நீ உன் புகைப்பட ஆல்பத்தை ஆரம்பத்திலிருந்து பார். நீ எவ்வளவு மாறிவிட்டாய் என்பது உனக்கே புலப்படும். இதேபோல் சில ஆண்டுகளாகச் சந்திக்காத உன் நண்பனை மீண்டும் சந்திக்கையில் உனக்குச் சட்டென்று அவனை அடையாளம் தெரிவதில்லை.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒரு பாலத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தார். முதுகு காட்டிக்கொண்டு பாலச்சுவர் மேல் உட்கார்ந்திருந்தவனை அவருக்குத் தெரியும் போலிருந்தது. அவர் அவன் முதுகைத் தட்டி, "டியர் ஃப்ரண்ட்! எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு இன்றுதான் கண்ணில் பட்டாய்," என்று சிரித்தார்.

---

* ஜோசப் ஸ்டாலின் (1879-1953). ரஷ்ய சர்வாதிகாரி. இரும்புக்கரம் கொண்டு மக்களை அடக்கி ஆட்சி செய்தவர். ஸ்டாலின் என்றாலே இரும்பு என்று பொருள்!

அந்த ஆள் திடுக்கிட்டான். அதிர்ச்சியில் அவன் கீழே விழும் நிலையில் இருந்தான். அவனுக்கு நஸ்ருத்தீனை யார் என்றே தெரியவில்லை. அவன் பணிவுடன், "ஐயா, மன்னிக்கவும். நீங்கள் வேறு யாரையோ மனத்தில் வைத்து நான்தான் அவன் என்று தவறாக நினைத்துவிட்டதாகத் தோன்றுகிறது," என்றான்.

"டேய், என்னையா ஏமாத்தப் பார்க்கிறே. உன்னிடம் கொஞ்சம் மாறுதல் தெரிவது உண்மைதான். முன்பு கொழுக்கு-மொழுக்கு என்றிருந்தாய். இப்போதோ மெலிந்து காணப்படுகிறாய். முன்பு ஆறடி உயரம் இருந்தாய். இப்போது சுருங்கி ஐந்தடி உயரம்தான் காணப்படுகிறாய். ஆனால் என் கண்களை ஏமாற்ற முடியாது. நீ அப்துல் ரகுமான்தானே?" என்றார் முல்லா.

அவன் மறுத்தான். "ஐயா, மன்னியுங்கள். என் பெயர் ஃபரீத் என்று தெரிவித்தான்.

"அட பாவி! உருவத்தை மாற்றினாய். உயரத்தை மாற்றினாய். பெயரையுமா மாற்றிக் கொண்டாய்?" என்று முல்லா ஆச்சரியப்பட்டார்.

பத்து ஆண்டு இடைவெளிக்குப் பின் நண்பனை அடையாளம் காணுதல் சிரமமாகிவிடுகிறது. பத்து ஆண்டுகள் வெளியூரில் அல்லது வெளிநாட்டில் வசித்துவிட்டு ஊர் திரும்பும் மகனையும் சட்டென அடையாளம் தெரிவதில்லை. தினம்-தினம் ஒருவரைப் பார்க்கும்போது அவரிடம் ஏற்படும் மாற்றங்கள் கண்ணில் படுவதில்லை. மாற்றங்கள் தென்பட்டாலும் அவற்றுடன் ஒத்துப்போக முடிகிறது.

படத்தை வைத்துக்கொண்டு ஆளைக் கண்டுபிடிக்க முடியாது. ஆள் ஏற்கெனவே தெரிந்தவராயின், படத்தில் தெரியும் சாயலை அடையாளம் கண்டு ஆளைத் தேட முடியும். அசலிலிருந்துதான் நகல் எடுக்க முடியும். நகலிலிருந்து பிறகு நகல் எடுத்தாலும் அது அசல் ஆகிவிடாது.

'அறிஞனே! நீ போகம், கர்மம் கடந்து சமாதிநிலைவரை வந்திருக்கக்கூடும். ஆனாலும் எல்லா ஆசைகளும் அடங்கிப்

போன விசேஷ சுபாவத்தைப் பெற மனம் ஆவல் கொண்டிருக்கும்'' **(சுலோகம் 147)**

**நீ** சாஸ்திரங்கள் படித்து ஞானியாகலாம். வாழ்க்கை இன்பங்களை அனுபவித்தவனாக இருக்கலாம். செயல் வீரனாக இருக்கலாம். சமாதி நிலை கூட உனக்கு வசப்பட்டிருக்கலாம். இவை எல்லாம் சாஸ்திர ஞானம் காரணமாகக் கிடைத்திருக்கலாம். இதனாலெல்லாம் தன்னில் லயித்த நிலையை அடைய வேண்டும் என்னும் விருப்பம் பூர்த்தியாகி விடாது. சாஸ்திரம் படித்து சமாதி போடு; உன்னை சாந்தமாக்கிக்கொள்; உடலைக் கட்டுப்படுத்தி புத்தரைப்போல் பத்மாசனம் போடு. உடலையும் மனத்தையும் கட்டுப்படுத்தி, கட்டாயப்படுத்தி, ஓர் ஒழுங்குமுறையின் கீழ் கொண்டுவா. ஆனால் இந்த உபாயங்களால் நீ தன்னில் நிலை பெற்றவனாக ஆகிவிட முடியாது. மூலப் பொருளுடன் உனது சந்திப்பு நிகழாது. ஆன்மிக முயற்சிகள் எல்லாம் மேற்கொண்டும் ஏதோ ஒன்று இன்னமும் கைக்கு எட்டாததுபோல் தோன்றும்.

ஆகவே பதஞ்சலி சமாதி நிலையை ஸவிகல்ப (with choice) சமாதி, நிர்விகல்ப (choiceless) சமாதி என்றும் இரு வகைகளாக்குகிறார். ஸவிகல்ப சமாதியில் நினைவுகள் நீடிக்கின்றன; சாஸ்திரங்களின்மீது கொஞ்சம் பிடிப்பு உள்ளது; மனம் முன்புபோல் கொந்தளிக்காமல் ஏறத்தாழ அமைதியாக உள்ளது. அதாவது, நீ வீட்டருகே வந்துவிட்டாய். இதோ, படியில் காலை வைத்துவிட்டாய். கதவு திறக்க வேண்டியதுதான் மிச்சம். நீ இன்னமும் இந்துவாக, முஸ்லிமாக, பிராமணனாக, வேறு சாதியாக இருக்கிறாய். அடுத்த கட்டமாக நிர்விகல்ப சமாதி நிலையைச் சென்றடைய வேண்டும். எண்ணங்கள் ஏதுமின்றி மனம் வெற்றிடமாக வேண்டும். எல்லா பற்றுகளும் நீங்கிவிட வேண்டும். அப்போது ஏற்கெனவே ஸவிகல்ப சமாதி மூலம் படியேறிவிட்ட உன்னைக் கதவு திறந்து வரவேற்கும்.

மனிதன் முயன்று நிறைய சாதிக்கலாம். மற்றவர்களை மட்டுமல்ல, உன்னையே ஏமாற்றிக்கொள்ளவும் வழிகளுண்டு. உதாரணமாக, நீ பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்க விரும்புகிறாய். இதற்காக உபவாசம் இருக்கிறாய். உணவைக் குறைக்கிறாய்.

இதனால் வீரிய சக்தி குறைகிறது. காம உணர்வு தணிகிறது. பெண்களுடன் பழகுவதைத் தவிர்க்கிறாய். பெரும்பாலும் தனிமையில் இருக்கிறாய். காமத்தைத் தூண்டும் தகவல் எதுவும் உன்னிடம் அண்டவிடாதபடி தடுக்கிறாய். இப்படியெல்லாம் செய்து நீ பிரம்மசரிய நிலையை அடைந்துவிட்டதாக களிக்கிறாய். ஆனால் இது போலியான பிரம்மசரியம். மீண்டும் நன்றாகச் சாப்பிடத் தொடங்கு. ஊரின் மையத்திற்கு வா. பெண்களைப் பார். மீண்டும் காமம் தோன்றிவிடும்.

இந்நிலையைக் கோடை கால நதியுடன் ஒப்பிடலாம். அந்த சமயம் ஆற்றில் தண்ணீர் இருப்பதில்லை. எங்கும் மணல், கரைக்கும் நதிக்கும் வித்தியாசம் தெரியவில்லை. ஆறே மறைந்துவிட்டதாக அர்த்தம் கொள்ள முடியாது. வறண்டு விட்டது. அவ்வளவுதான். சிறிது காலம் கழித்து மழை பெய்யும். ஆறு நீரால் நிரம்பிப் பெருக்கெடுத்து ஓடும்.

பிரம்மசரியம் என்ற பெயரில் இந்திய சந்நியாசிகள் பயந்தபடியே சாப்பிடுகிறார்கள். ஒருவேளைதான் சாப்பிடு கிறார்கள். அதிலும் எதைச் சாப்பிடலாம், எந்த பானம் பருகலாம் என்று பத்தியக் கட்டுப்பாடுகள் வைத்துக்கொண்டு மற்ற உணவுகளையும் பானங்களையும் விலக்கி வைத்துள்ளனர். உடம்பில் வீரியத்தை உண்டாக்காத உணவுகளை மட்டும் சாப்பிடுகிறார்கள். பெண்களைத் தவிர்க்க தனி மடம் அல்லது ஆசிரமத்தில் தனிமை வாழ்வு நடத்துகிறார்கள். சில துறவிகள் பெண்களுடன் பேசுகையில் நிலத்தைப் பார்த்துப் பேசுவார்கள். இவர்களது பிரம்மசரியம் கோடைகால நதி போன்றதுதான்.

சந்நியாசி ஒரு மாதம் நன்றாகச் சாப்பிடட்டும், ஓய்வெடுக்கட்டும், தூங்கட்டும். கடைத்தெருவில்-சமூகத்தில்-வசிக்கட்டும். பெண்களுடன் சகஜமாக இரு. பிறகு பார். மழை பெய்த நதியின் வறட்சி காணாமல் போவதுபோல், சந்நியாசியின் பிரம்மசரியமும் மறைந்துவிடும். இது பிரம்மசரியத்தையே அவமானப்படுத்துவதாகும். இது சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொண்டு மேற்கொள்ளப்படும் பிரம்மசரியம். இது சத்தியத்தை உணர்ந்துகொண்டதன் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டதன்று.

சத்தியத்தின் அநுபவம் ஏற்பட்டுவிட்டால் பிரம்மசரியத்துக்கான விதிமுறைகள் அடிபட்டுவிடும். தானாகவே காம உணர்வு அகலும். பெண் அருகில் இருந்தாலும் பாதிப்பில்லை. உணவுப் பத்தியமும் தேவைப்படாது.

மகாத்மா காந்தி எருமைப் பாலைத் தவிர்த்தார். அது வீரியத்தை அதிகமாகச் சுரக்க வைக்குமென நினைத்தார். பிறகு பசும்பாலைத் தொடங்கியவர் அதே பயத்தால் நிறுத்தினார். அடுத்து, ஆட்டின் பாலை குடிக்கலானார். அவர் எங்கு போனாலும் ஆட்டிற்கு ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. பிரம்மசரியத்தில் அவருக்கிருந்த அக்கறையும், அதைக் கடைப்பிடிக்க அவர் எடுத்த முயற்சிகளெல்லாம் பாராட்டத் தகுந்தவை. குறை என்னவென்றால், இத்தகைய பிரம்மசரியம் மேலேயிருந்து சுமத்தப்பட்டதாகும். அது உள்ளேயிருந்து சுரக்க வேண்டும்.

இதேபோல் சமாதி நிலை பற்றியும் கூறலாம். சமாதி நிலைக்குப் பல உபாயங்கள் உள்ளன. முக்கியமாக பிராணாயாமப் பயிற்சி கூறப்படுகிறது. இப்பயிற்சியைச் சரியாக மேற்கொண்டு, கொஞ்சம் கொஞ்சமாக மூச்சைக் கட்டுப்படுத்தினால், எண்ணங்கள் தலைதூக்குவதும் நின்றுவிடும். ஏனெனில் சுவாசிக்காமல் சிந்திக்க முடியாது. எவ்வளவு நேரம் மூச்சடக்குகிறோமோ அத்துணை நேரம் எண்ணங்களும் எழா. ஏனெனில் மூச்சு நின்றால் மனம்-உடல் இரண்டும் உயிரற்றவை போலாகிவிடும். ஆனால் எவ்வளவு நேரம்தான் நம்மால் மூச்சு விடாமல் இருக்க முடியும்? உயிருடன் இருக்க மீண்டும் மூச்சுவிட நேரிடும். ஓடிப்போயிருந்த எண்ணங்களெல்லாம் திரும்பிவிடும்.

சமாதி உபாயங்கள் அறிந்தவர்கள் அதை இரண்டாகப் பிரிக்கின்றனர். ஒன்றின் பெயர் ஜட சமாதி. உண்மையில் இது சமாதியில்லை. இது வெறும் ஜடத்தன்மை, அசைவற்ற, உயிர்த் துடிப்பு அற்ற நிலை. இப்படி சடம்போல் ஒருவன் காணப்பட்டால் சிலர் அவன் சமாதியில் இருப்பதாக நினைக்கக்கூடும்.

முட்டாளாக இருப்பவன் கவலைப்படுவதில்லை. கவலைப் படுவதற்கு மூளையில் கொஞ்சமாவது சரக்கு இருக்க

வேண்டுமே. அவன் எதையும் சிந்திக்காமல் சும்மா உட்கார்ந்திருப்பான். தன்னைச் சுற்றி நடப்பவற்றில் அவன் அக்கறை காட்டமாட்டான். நெருப்புப் பிடித்தாலும் பதறமாட்டான். அவன் இருக்கும் கோலம் நிர்விகல்ப சமாதிபோல் தோன்றும்.

ஆனால் முட்டாள்தனமோ, சலனமற்ற தன்மையோ சமாதி நிலை ஆகிவிடாது. அடுத்த முறை நீ சந்நியாசிகளை தரிசிக்கும்போது அவர்களின் கண்களை உற்று நோக்கு. அவற்றில் உயிரோட்டம் பளபளக்காது. ஆத்மபிரகாசம் வெளிப்படாது. சோம்பலும், சோகமும், சோர்வுமே தெரியும். அவர்கள் தங்களின் வாழ்க்கை ஓட்டத்தை பலகீனப்படுத்திவிட்டனர். காரணம், பிராணாயாமம் என்று கூறிக்கொண்டு அவர்கள் குறைவாக சுவாசிக்கிறார்கள்.

யோகாசனங்கள் பல வகையாகக் கூறப்படுகின்றன. ஆனால் உடல்-கை-கால்களை எப்படி வளைத்தாலும் அதுவும் ஆசனமேயாகும். உனக்குச் சிக்கலேற்பட்டால் தலையைச் சொரிந்து கொள்கிறாய். அதை ஒரு விசேஷ முத்திரை (தோற்றம்) எனலாம். பார்க்கும் எவரும் அந்த மனிதன் கவலைப்படுவதைப் புரிந்துகொள்வர்.

**பு**கழ்பெற்ற வக்கீல் ஒருவர். வாதாடுகையில் சிக்கலான இடம் வந்தால் கோட்டின் முதல் பட்டனை வருடிச் சுழற்றுவார். இதனால் அவருக்குச் சிந்தனையை ஒழுங்குபடுத்திக் கொள்ள முடிந்தது. எதிர்த்தரப்பு வக்கீல் இந்த மர்மத்தை அறிந்து கொண்டார். முதல் வக்கீல் காரிலேயே கோட்டை விட்டுச் செல்வார். இரண்டாம் வக்கீல் கார் டிரைவருக்குப் பணம் கொடுத்து முதல் பட்டனை வெட்டியெறிந்துவிடச் செய்தார்.

மறுநாள் வழக்கு தொடர்ந்தபோது, ஒரு சிக்கலான இடத்தில் வக்கீலின் கை தன்னை அறியாமல் கோட்பட்டனை நோக்கி உயர்ந்தது. பட்டன் இல்லாததால் அதிர்ச்சியடைந்தார். அவரது சிந்தனை குழம்பிவிட்டது. வரிசையாகக் கூறிவந்த வாதங்கள் பாதியில் நின்றுவிட்டன. எதை-எதையோ சம்பந்தமில்லாமல் பேசினார். வழக்கில் அவரது தரப்பு தோற்றுவிட்டது.

சிலர் கவலை சமயம் சிகரெட் பிடிப்பதைப் பார்த்திருப்பாய். இதனால் அவர்களுக்கு ஆறுதல் கிடைப்பதுபோல் தோன்றுகிறது. அந்தச் சில நிமிடங்கள் சிகரெட் புகையின் மணம், அது பரவும் விதம் முதலியவற்றைக் கவனிப்பதன் மூலம்; முதலில் பிரச்சினை நினைவு இருப்பதில்லை. அடுத்து, பிரச்சினையைச் சமாளித்துவிடலாம் போல் தீவிரம் பிறக்கிறது. பிரச்சினை தீராது என்று தெரிந்தாலும் சிகரெட்டின் போதை விரக்தி உணர்வில் சுவை காண்கிறது. "கவலைப்படும்போது சிகரெட்டின் உதவியை நாடாதே," என்று ஒருவனிடம் கூறினால் அவன் "கவலை ஏற்பட்டால் நான் அதைச் சற்றாவது மறக்க வேறு என்ன செய்வது?" என்று திருப்பிக் கேட்பான்.

மனமும் உடலும் ஒன்றை ஒன்று பாதிக்கின்றன. சில வகை யோகாசனங்கள் மூலம் மனத்தில் எண்ணங்கள் திரள்வது குறைகின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. உதாரண மாக, நீ படுத்தபடி புத்தகம் படித்தால், மூளையில் ரத்தம் அதிகமாகப் பாய்வதன் காரணமாக, படித்த விஷயம் கழுவப்பட்டு நீங்கிவிடும். உட்கார்ந்து படித்தால் அதிகம் நினைவிலிருக்கும். முதுகெலும்பை நேராக வைத்தபடி படித்தால் மிக அதிகமாக ஞாபகமிருக்கும்.

ஒரு விஷயத்தை நினைவில் வைக்க வேண்டிய சூழ்நிலை இருந்தால், உன் முதுகெலும்பு தன்னை அறியாமலே நிமிர்கிறது. ஒரு முக்கியமான விஷயம் பேசப்பட்டால் அதைக் கவனமாகக் கேட்க வேண்டுமென்ற மனத்தின் தீவிரம் முதுகெலும்பை நிமிர்த்துகிறது. சாதாரண விஷயம் பேசப்பட்டால், நீ நாற்காலியில் தொய்வாக உட்காருகிறாய். அதாவது அதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டுமா அல்லது தேவையில்லையா என்பதில் அக்கறை இல்லை என்பதை அந்தத் தோற்றம் காட்டுகிறது. மனத்தின் வெவ்வேறு நிலைகள் உடலின் வெவ்வேறு அசைவுகளில் அல்லது தோற்றங்களில் பிரதிபலிப்பாகின்றன.

யோகாசனங்களில் ஒன்றான பத்மாசனத்தில் நீ அமர்ந்தால் சக்தி வட்டமாகச் சுற்றுகிறது. அச்சமயம் முதுகெலும்பு நேராக இருப்பின், உடலின் மீது புவிஈர்ப்பு சக்தியின் பாதிப்பு குறைவாக

இருக்கும். மூச்சு சாந்தமாகவும் மெதுவாகவும் அமைந்தால் எண்ணங்கள் குறையும்; அவை வலுவின்றி இருக்கும். கண்கள் மூக்கின் நுனியில் பதிந்தால், அக்கம்பக்கத்திலுள்ள பொருள் களால் இடைஞ்சல் ஏற்படாது. போகிறவர்-வருகிறவரும் தெரியாது. இந்த நிலையைப் பயிற்சி மூலம் தொடர்ந்தால் வாய்க்கின்ற சமாதிநிலை ஜடசமாதியாகும். உடலின் மூலம் மனத்தை ஒருவகையில் கட்டுப்படுத்திவிட்டதை இது குறிக்கிறது. வெளிப்புற உதவியைக் கொண்டு உட்புறத்தை அடக்கிவிட்டதை இது காட்டுகிறது.

இது உண்மையான சமாதி இல்லை என்றும், மேலேயிருந்து திணிக்கப்பட்டு, வலிந்து முயற்சி செய்து பெறப்பட்ட சமாதியாகும் என்கிறார் அஷ்டாவக்ரர்.

நீ போகத்தை அனுபவி; கர்மத்தில் ஈடுபடு; சமாதி நிலைக்குப் போ. ஆனால் உன் ஆழ்மனத்தில் ஏதோ விட்டுப் போனது போலிருக்கும். உனக்கு எது கிடைக்க வேண்டுமோ அது இன்னமும் கிடைக்கவில்லையே என்ற குறை இருக்கும். வெளிப்பார்வைக்கு எல்லாம் அமைதியாகத் தெரியும். உள்ளே தணல் அணையாமலிருக்கும். உள்ளே உறங்காத எரிமலை போலிருக்கும்.

ஜடசமாதியும் ஆசையின் காரணமாக அமைகிறது. அது வலுக்கட்டாயமாக அடையப்பெறுகிறது. அது செயற்கையானது. இந்த சமாதி எந்தத் தீர்வும் தராது.

"முயற்சி மேற்கொள்வதன் காரணமாக மக்கள் எல்லாரும் துன்பப்படுகின்றனர். இந்த விஷயம் யாருக்கும் தெரியாது. இந்த உபதேசத்தைப் புரிந்து கொண்டவன் மோட்சமெனும் நிர்வாண நிலையை அடையப் பெறுவான்." (சுலோகம் 148)

**உ**ன் முயற்சியின் காரணமாகவே நீ துன்புறுகிறாய். இப்படி வேறு சாஸ்திர நூல்கள் கூறுவதில்லை, இங்கே முயற்சி என்பது 'என்னால் முடியும்' என்னும் அகங்காரத்துடன் செயல்படுவதைக் குறிப்பிடுகிறது. 'நான் முயன்று பணம் சம்பாதிப்பேன்; பதவியைப் பிடிப்பேன்; சமாதிநிலையை அடைவேன்; கடவுளையும் என்

உள்ளங்கையில் பிடிப்பேன்' என்றெல்லாம் உன் அகங்காரம் அறிவிக்கிறது. 'நான்தான் செய்பவன் (கர்த்தா); நான்தான் முயல்பவன்; நான்தான் வெல்பவன்' என்றெல்லாம் அகந்தை மேலிடுகிறது.

அகங்கார முயற்சியால் துன்பம் விளையும் என்பதை வெகு சிலரே அறிந்துள்ளனர். அவர்களை பாக்கியசாலிகள் எனலாம். அவர்கள் மோட்சம் பெறுவதை யாரும் தடுக்க முடியாது. இதற்கு நிர்வாணம் என்றும் பெயர்.

நிர்வாண நிலையே சகஜ சமாதி என்பது. இந்த சமாதி தானாகவே வாய்க்கிறது. இது நீ முயன்று பெறுவதன்று. பிரயாசையின் விளைவாகக் கிடைப்பதன்று. இது பிரசாதம்போல் கிடைப்பதாகும்.

நீ வாழ்க்கையில் எதைச் சம்பாதித்தாலும், எவ்வளவு சம்பாதித்தாலும் அது உன் ஆளுமையைவிடக் குறைந்த அளவினதாகவே இருக்கும். செயல் என்பது செயல் புரிபவனைவிட சிறியதாகவே இருக்கும். நீ கவிதை இயற்றினால், அது எவ்வளவு சிறியதாயினும், உன்னைவிட சிறியதுதான். கவிதை என்பது கவிஞனைவிட பெரியதன்று. அவன் படைக்கா விடில் கவிதை தோன்ற முடியாதே. ஓவியம் ஓவியரைவிட பெரியதன்று. நடனம் நர்த்தகியைவிட சிறப்பானதன்று. இதுபோலவே நீ அடையும் சமாதி உன்னைவிட சிறியதுதான். பெரிதினும் பெரிது உனக்கு வாய்க்க வேண்டுமானால், அது வலிந்து முயலுவதால் கிடைக்காது; சமர்ப்பணமானால்தான் கிடைக்கும். எல்லாவற்றையும் கடவுளின் திருவடிகளில் சமர்ப்பித்து நீ வெற்றிடமானால், அங்கு பெரிதான சக்தி தன்னை நிரப்பும்.

இரண்டு சொற்கள்-சங்கல்பம், சமர்ப்பணம். சங்கல்பம் என்பது 'நான் செய்தே தீருவேன்' என்று தீவிர முடிவெடுப்பதைக் குறிப்பிடும் சொல்லாகும். இது பதஞ்சலி, மகாவீரர் போன்றோரின் வழிமுறையாகும். அவர்களைப் பின்பற்றுவோர் அஷ்டாவக்ரரைப் புரிந்துகொள்ள மாட்டார்கள்.

ஏனெனில் அவரது வழிமுறை சமர்ப்பண அடிப்படையிலானது. அவர் சொல்வது: 'நீ கர்த்தாவாக இராதே. கடவுள் உனக்கு வேண்டியதைச் செய்துதருவார். நீ கொஞ்சம் அப்பால் போ. கடவுள் உனக்குப் பதிலாக நின்று வேலையை முடிப்பார். நீ இடையிடையே குறுக்கிடாமலிரு. உன் வேலை இப்போதே நின்றுவேறும். நீ (கர்த்தா உணர்வுடன்) தலையிடுவதால்தான் வேலைகள் நடப்பதில் குறுக்கீடுகள் வருகின்றன.

நீ கர்த்தாவாக நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போது மன இறுக்கம் உண்டாகிறது. நீ அமைதியிழந்து பரபரப்பாகிறாய். எது எப்படி உள்ளதோ அதை அவ்வாறே சுவீகரி. ஒவ்வொன்றுடனும் முரண்பட்டு மோதாதே. பிரவாகத்தை ஒட்டி முன்னேறு. நதி உன்னை இட்டுச் செல்லும் விதமாகவே செல். எதிர்நீச்சல் போடாதே. எதிர்ப்பதால், போராடுவதால், நீ தோற்கிறாய். உன் மனத்தில் சோகம் பரவுகிறது.

முயற்சி செய்வதால் பலன் கிடைக்காமல் துக்கம் விளைகிறது. அப்போது மக்கள் கூடுதல் முயற்சி தேவை என நினைத்து, கூடுதலாகப் பாடுபடுகிறார்கள். ஆனால் அதற்கேற்ப அவர்களின் துன்பமும் அதிகரிக்கிறது. ஆனால் அஷ்டாவக்ரர், 'ஓடினால் எங்கும் போய்ச்சேர மாட்டாய். அப்படியே நில். நீ லட்சியத்தை அடைந்துவிடுவாய்' என்கிறார். சீன தத்துவஞானி லாவோத்ஸு 'போரிட்டால் தோல்வி காண்பாய். தோற்பதைப் பொருட்படுத்தாவிடில் உன்னை யாரும் வெல்ல முடியாது' என்கிறார். மக்கள் உன்னைத் தோற்கடிக்க முடிகிறது. ஏனென்றால் நீ வெற்றி பெறத் துடிக்கிறாய். கபீரின் சீடர் மலூக்தாசின் ஒரு பாட்டு:

**மலைப்பாம்பு முயல்வதில்லை**
**பறவை பாடுபடுவதில்லை**
**மலூக்தாஸ் ஏன் உழைக்க வேண்டும்?**
**படியளிக்க பகவான் உள்ளானே**

இதைச் சோம்பேறிகளின் மூலமந்திரம் என்று கூறுவதுண்டு. ஆனால் 'கடவுளுக்கே சரண் நாங்களே' என்னும் சமர்ப்பண மனப்பான்மையையும் இது காட்டுகிறது.

கடவுள் (உன்னைக் கருவியாகக் கொண்டு) எல்லாம் செய்கிறார். அவரைத் தொடர்ந்து செயல்படவிடு. நீ குறுக்கே வராதே. கடவுள் உன் வாழ்க்கைப் பாதையில் நடந்துவருகிறார். நீயும் இணைந்து நடக்க வேண்டியதில்லை. இறை பிரவாகம் ஓடுகின்றது. நீ அதில் ஒன்றிவிடு. நீச்சல்கூட போடாதே.

'கண்களை மூடித் திறப்பதைக்கூட சிரமமான செயல் என நினைக்கிறவன் எவனோ அந்த மகாசோம்பேறிக்கு மட்டுமே சுகம் கிடைக்கும். மற்றவர்களுக்கு சுகம் சாத்தியமில்லை.' **(சுலோகம் 104)**

**தி**டுக்கிட வைக்கும் சுலோகம் இது. இதற்குச் சொல்வழிப் பொருள் எடுத்துக்கொள்ளக்கூடாது. தன் கண்களை மூடுவதா, திறப்பதா என்பதைக் கூட கடவுள் பொறுப்பில் ஒப்படைத்துவிடும் அளவிற்குக் கர்த்தா உணர்வை அவரிடம் சமர்ப்பிப்பவனை வேடிக்கையாக இங்கே சோம்பேறி என்கிறார். 'நான் செய்பவன்' என்னும் உணர்வு இந்த உயர்ந்தபட்ச அளவிற்கு நீங்கிவிட்டால் அவனுக்கு சுகம் கிடைப்பது இயற்கைதானே.

சமீபத்தில் ஐரோப்பாவில் ஒரு நூல் புகழடைந்தது. அதன் ஆசிரியர் அஷ்டாவக்ரரின் பெயரைக்கூட கேள்விப்பட்டிருக்க மாட்டார். தன்னுடைய அனுபவங்களைக் கொண்டு இந்த நூலை அவர் எழுதியிருக்கிறார். இதன் தலைப்பு சோம்பேறிகளுக்கு சுவர்க்கஞான வழிகாட்டி என்னும் கருத்துடையது இதன் தலைப்பு- A Lazyman's guide to Enlightenment.

சற்று யோசித்தால், உண்மையிலேயே, உடல் ரீதிப்படி, கண் தானாகவே இமைக்கிறது. நீயே முயற்சி செய்து மூடி திறக்கும் நிலை இருந்தால் உன்னால் தாங்க முடியுமா? ஒரு நாளைக்கு ஆயிரக்கணக்கில் கண் மூடித் திறக்கிறது. நீயே மூடி திறப்ப தானால் விரைவிலேயே களைத்துப்போவாய். ஒரு கொசு கண்ணருகே வந்தால், அப்போது நீயா கண்ணை மூடிக் கொள்கிறாய்? கண் தானே மூடிக்கொள்கிறது. நீ மூடி திறப்பதானால் கொசு அதற்குள் கண்ணில் நுழைந்துவிடும். இப்படித் தானாக மூடுவது அறிவியலில் தன்னிச்சைச் செயல்

(reflex)* எனப்படுகிறது. ஆன்மிகத்தில் இது கடவுளின் செயல் என்பார்கள்.

நீயாக முயன்று சுவாசிப்பதில்லை. அது தானாகவே நடைபெறுகிறது. அது உன் பொறுப்பில் விடப்படவில்லை. நீ மயக்க நிலையிலிருந்தாலும் மூச்சு தடைபடாது. கடவுள் அதைக் கவனித்துக் கொள்வார். தூக்கத்திலும் மூச்சுவிடுதல் தொடர்கிறது. அவ்வாறு மூச்சு விடாவிடில் நிரந்தரத் தூக்கமாக மாறிவிடுகிறது.

மூச்சுவிடுதல் மட்டுமல்ல. வாழ்க்கையின் வேறு பல முக்கிய அம்சங்களும் உன் வசம் இல்லை. உனக்குப் பிறக்க விருப்பமா என்று அனுமதி கேட்டா உன் பிறப்பு நிகழ்ந்தது? நீ இளைஞனாக சம்மதமா என்று கேட்டுவிட்டா இளமை உன்னிடம் வந்தது? முதுமை வரத் தொடங்கிவிட்டது. அடுத்து சாவு வரும். இப்படி உன்னைக் கேட்காமலே நடக்கும் விஷயங்களில், நீ குறுக்கிடாமலிருந்தால் மனம் அமைதியாக விளங்கும். இந்த மாறுதல்கள் உன்னால்தான் விளைவதாக நினைத்து நீ கர்த்தா மனப்பான்மையுடன் இருந்தால், நீ அமைதி இழப்பாய். ‘நான் இதைச் செய்வேன்-அதைச் செய்வேன்’ என்று சூளுரைத்தால், நீ படபடப்பு காரணமாக அமைதியிழந்தே இருப்பாய். இந்தப் படபடப்பு உன் சிக்கலை அதிகமாக்கும்.

நீ சாப்பிடும் வேலையைச் செய்கிறாய். ஜீரணிக்கும் வேலையையும் நீதான் செய்ய வேண்டுமானால், முடியுமா அது உன்னால்? தொண்டையில் உணவு இறங்கியபின் நீ செய்ய வேண்டியது அல்லது செய்ய முடிவது வேறு எதுவும் இல்லையே. தொண்டையில் இறங்கும் உணவு எங்கெங்கெல்லாம் சென்று எப்படி வெளியேறுகிறது என்பதை நீ யோசிப்பாயானால் உனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.

மனிதன் இறந்த பிறகும் அடுத்த 24 மணி நேரம் வரை வயிறு ஜீரணிக்கும் செயலைத் தொடர்கிறது என்பதை அறிந்து நீ அசந்து போவாய். ஒருவேளை ஆள் பிழைத்துக்கொண்டால்... என்று மனம் நினைக்கிறது போலும்! மூளையோ இறப்பிற்குப் பின்

---

* automatic and inborn response without reaching the level of consciousness.

நான்கு நிமிடம்தான் இயங்குகிறது.[1] இதயத் துடிப்பு நின்று மூளை செயலிழப்பதற்கு முற்பட்ட இந்த இடைவெளியில்தான் செயற்கை சுவாசம் மற்றும் கருவிகளின் மூலம் ஒருவனைப் பிழைக்க வைக்கலாம். மூளைநாளங்கள் சிறியவை, வலுக் குறைந்தவை. ஆகவே சில நிமிடங்களுக்குப் பின் உயிர் திரும்பாது.

ஆனால் வயிறு வலுவானது. அது 24 மணி நேரம்வரை மரணத்தைத் தாண்டியும் செயல்படுகிறது. ஜீரணிக்கிறது, சத்து (ரசம்) தயாரிக்கிறது. இரவில் தூங்கும்போதும் வயிறு ஜீரண வேலையைத் தொடர்கிறது. 'கோமா'வில் நீண்ட காலம் ஒருவன் கிடந்தாலும் அவனுக்கு அளிக்கப்படும் திரவ உணவை வயிறு செரிக்கிறது. இந்த வேலை உன்னிடம் தரப்படவில்லை. ஏதோ ஒரு மகாசக்தி எல்லாத் தேவைகளையும் கவனிக்கிறது.

அந்த மகாசக்தியின் அபயமளிக்கும் கரம் உனக்குப் பின்னால் காவலாக உள்ளது. நீ தேவையில்லாமல் கவலையில் ஆழ்ந்துள்ளாய். பக்க பலமாக அருகில் தந்தையிருந்தும் கவலைப்படும் சிறுவன்போல் உன் நிலை உள்ளது.

**ஜா**ர்ஜ் பெர்னார்ட் ஷாவின்[2] தந்தை காலமானார். எனக்கு மிகவும் அச்சமாக உள்ளது என்று ஷா தன் நண்பர்களிடம் மனக் கலக்கத்தை வெளியிட்டார். அப்போது அவர் 60 வயதைக் கடந்திருந்தார்! அவர்கள் திகைத்து காரணம் கேட்டனர். "என் அப்பா என்னுடன் வசிக்கவில்லை. அவர் எங்கள் சொந்த ஊரிலேயே இருந்துவிட்டார். ஆனாலும் அவர் உயிருடன் இருந்தவரைக்கும் நான் அவரைச் சார்ந்த சிறுவன் உணர்வுடனே நிம்மதியாக இருந்தேன். எனக்கு முன்னால் பாதையில் ஒருவர் சென்று கொண்டிருக்கிறார் என்று நம்பிக்கை இருந்தது. அவரது இறப்பினால் நான் இப்போது தன்னந்தனியனாக உணர்கிறேன்.

---

1. மருத்துவக் கண்ணோட்டத்தில், மரணத்திற்குப் பின், உடல் இயக்கம்: மூளை 10 நிமிடம் செயல்படும். இதய தசைகள் 20 நிமிடம், கண் 30 நிமிடம், காது 1 மணி; கை-கால் தசை 4 மணி, ரத்த அணுக்கள் 18 மணி, எலும்புகள் 3 நாள், தோல் 5 நாள். உடலைவிட்டு உயிர் கால் பெருவிரல் தொடங்கிப் பிரிகிறது.

2. **Shaw (1856-1950)** ஷேக்ஸ்பியருக்கு அடுத்த சிறந்த ஆங்கில நாடகாசிரியர். நோபல் பரிசு பெற்றவர்.

இந்தத் தனிமை எனக்கு பயமூட்டுகிறது. இனி நான் என்ன செய்தாலும் அதற்கான முழுப்பொறுப்பை நான்தான் ஏற்றாக வேண்டும். என் செயல்களில் விளையும் தவறுகளும் என் தலையில்தான் விடியும். என்னை அதட்டவோ, அடக்கவோ பெரியவர் யாருமில்லை. என்னைப் பற்றி கவலைப்படுபவரும் யாருமில்லை. நான் அநாதையாகிவிட்டதாகத் தவிக்கிறேன்,'' என்று ஷா தன் மனக்குமுறலை வெளிப்படுத்தினார்.

நாத்திகன் அமைதியாக இருப்பது கடினம். அவன் கடவுள் கிடையாது என்பதால், எல்லா பிரச்சினைகளையும் அவனேதான் சமாளிக்க வேண்டும். எல்லாத் தோல்விகளுக்கும் அவனேதான் பொறுப்பேற்க வேண்டும். கடவுளை பலிகடா ஆக்க முடியாது. சுற்றிலும் எங்கும் போராட்டம் எல்லாப் பாதைகளிலும் முள். எதைத் தொட்டாலும் சிக்கல். யாரிடம் போய் நாத்திகன் தன் மன பாரத்தை இறக்கிவைப்பான்?

ஆத்திகன் பாடு பரவாயில்லை. அவன் சொல்லுவான்: 'கடவுளே, நீதானே என்னைப் படைத்தாய். எல்லாம் உனக்குத் தெரியும். உன் இஷ்டப்படி என்னை, என் வாழ்க்கையை, நடத்திச்செல். என் மூச்சில், இதயத்துடிப்பில் நீயே நிறைந்துள்ளாய். ஆகவே நான் ஏன் கவலைப்பட வேண்டும்?'' இவ்வாறு அவன் சமர்ப்பணமாகி விடுவான்.

சோம்பேறிகள் இரு வகையினர். வேலை செய்வதைத் தவிர்க்கும் சோம்பேறியை இந்த சுலோகம் குறிப்பிடவில்லை. அத்தகைய சோம்பேறியிடம் சமர்ப்பண உணர்வு கிடையாது. இந்த சோம்பேறித்தனத்திலும் 'நான் எதுவும் செய்யமாட்டேன்' என்னும் கர்த்தா உணர்வு மிஞ்சியுள்ளது. ஆனால் அஷ்டாவக்ரர் சோம்பேறிகளில் தலைசிறந்தவனைச் சொல்லுகிறார். அவன் செயல்புரியாமல் இருப்பதுடன் கர்த்தா உணர்வையும் கைவிடுகிறான். செயல் புரிவதை மட்டும் விடுபவன் சாதாரணச் சோம்பேறி. ஆனால் அவனுக்குக் கவலைகள் நிறைய இருக்கும். ஏனெனில் எல்லா வேலையும் தேங்கி நிற்கிறது. அதே சமயம் அவற்றை பற்றிக் கவலைப்பட நிறைய நேரமும் ஓய்வும் கிடைக்கிறது.

வயதானவர்கள் அதிகமாகக் கவலைப்படுவதற்கு இதுதான் காரணம். அவர்கள் உத்தியோகத்தில் இருந்த காலத்தில் அதிலேயே ஆழ்ந்துவிட்டதால் கவலைப்பட அவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. இப்போது கையில் வேலை ஒன்றும் இல்லாததால் கவலைகள் நினைவிற்கு வந்து துன்புறுத்துகின்றன.

ரஸ்கின்* தன் நினைவுகளின் தொகுப்பில் தான் பார்த்தவர்களில் சந்தோஷமாக இருப்பவர்கள் யார் என்றும், அவர்களது சந்தோஷத்தின் காரணம் என்னவென்றும் ஆராய்ந்துள்ளார். அவர்கள் தங்கள் பணிகளில் அளவுமீறி ஈடுபட்டிருந்ததால், தாங்கள் சுகமாக இருக்கிறோமா, இல்லையா என்பதைக்கூட பிரித்தறிய அவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை என்று அவர் கண்டுபிடித்ததாகக் கூறுகிறார்.

ஆனால் இப்படி ஓடியாடி உழைத்தவர்கள் பணியிலிருந்து ஓய்வுபெற்றபின் திகைத்துப் போகிறார்கள். அவர்களை இதுவரை ஊக்குவித்த கர்த்தா உணர்விற்குத் தீனிபோட கருமம் எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. ஆகவே அவர்களின் கர்த்தா உணர்வு கவலைப்படுவதன் மூலம் பொழுதைக் கழிக்க உதவுகிறது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஓர் அலுவலகத்தில் உதவியாளர். அலுவலக உரிமையாளர் அவரிடம், "பல புதிய மெஷின்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பத்து மனிதர்களின் வேலையை ஒரே மெஷினே செய்கிறது. இதனால் உமது எதிர்காலம் குறித்து உமக்கு பயமாக இல்லையா?" என்று கேட்டார்.

"ஐயா, எந்த மனிதனும் அலுவலகத்தில் எந்த வேலையும் செய்வதில்லை. பத்து பேர் உள்ள அலுவலகத்திலும் எந்த வேலையும் நடப்பதில்லை. வேலையே செய்யாத மெஷின் கண்டுபிடிக்கப்பட்டால்தான் என்னைப் போன்றவர்கள் பயப்பட வேண்டும்" என்று நஸ்ருத்தீன் பணிவாகத் தெரிவித்தார்.

நஸ்ருத்தீன் தினமும் அலுவலகம் சென்றுவிடுவார். ஒரு நண்பர் இதைக் கண்டு ஆச்சரியப்பட்டார். அவர் முல்லாவிடம்,

---

* ஜான் ரஸ்கின் (1819-1900) புகழ்பெற்ற கலை விமரிசன எழுத்தாளர். இவரது சிறந்த நூல் The Seven Lamps of Architecture.

"நீங்கள் விடுப்பே எடுப்பதில்லையே. நீங்கள் அலுவலகத்தில் அந்த அளவிற்கா முக்கியமானவராகத் தேவைப்படுகிறீர்கள்?" என்று விசாரித்தார்.

"அதை ஏன் கேட்கறீங்க. அலுவலகத்திற்கு நான் தேவைப்படவே இல்லை. ஆகவேதான் நான் விடுப்பு எடுப்பதில்லை! விடுப்பு எடுத்தால், நான் போகாவிட்டாலும் அலுவலக வேலைகள் ஒழுங்காக நடைபெறும் என்றும், நான் தேவைப்படவே இல்லை என்பதும் முதலாளிக்குத் தெரிந்துவிடும். பிறகு அவர் என்னை வேலையிலிருந்து எடுத்துவிடுவார். அதைத் தடுக்கவே நான் தினமும் அலுவலகத்திற்குத் தேவை என்பதைக் காட்டிக் கொள்வதுபோல் விடுப்பு எடுக்காது இருக்கிறேன்," என்று நஸ்ருத்தீன் விளக்கினார்.

'இது செய்யப்பட்டது-இது செய்யப்படவில்லை' என்னும் இழுபறி நிலையிலிருந்து மனம் விடுபட வேண்டும். அவ்வாறு விடுபட்டவன் அறம், பொருள், இன்பம், வீடு இந்த நான்கிலும் ஆர்வம் எடுத்துக் கொள்ள மாட்டான்.' **(சுலோகம் 150)**

**இ**து கடைசிக் கட்டம், இறுதி நிலை. அறம், பொருள், இன்பம், வீடு இந்நான்கிலிருந்தும் விடுபட்டவன் செய்வதற்கு எதுவும் மிச்சம் இல்லாதவனாக இருக்கிறான். புண்ணியம் தேடுதல், பணம் சம்பாதித்தல், இன்பங்களை அனுபவித்தல், சுவர்க்க வாழ்க்கைக்கு ஆசைப்படுதல், முக்திபெற முயலுதல் ஆகிய எல்லாவற்றின் பின்னணியிலும் கர்த்தா உணர்வு நீடிக்கிறது. 'நான் ஒன்று செய்ய வேண்டும்; நான் இல்லாமல் எதுவும் நடக்காது' என்னும் உணர்வு நீடிக்கிறது.

இது செய்யப்பட்டது-இது செய்யப்படவில்லை என்பதைப் பொருட்படுத்தாதவனுக்கு எல்லாம் சமம். நடைபெறுமா, சரி; நடைபெறாதா, சரி; நடந்து விட்டதா, சரி, நடைபெறவில்லையா, சரி- இவ்வாறு ஒருவனுக்கு மனநிலை அமைந்துவிட்டால், அவன் பிறகு எதிலும் தனி ஆர்வம் கொள்ளமாட்டான். அவனுக்கு சுவர்க்கத்திலோ, மோட்சத்திலோ நாட்டம் இருக்காது.

'புலனாசைகளை வெறுப்பவனை விரக்தன் என்கிறோம். புலன் இன்பங்களில் பேராசை கொண்டிருப்பவன் போகியாவான்.

பிடித்தல்-விடுதல் ஆகிய இரண்டு நிலைகளிலிருந்தும் விடுபட்டவன் யோகியுமல்லன், போகியுமல்லன்.' **(சுலோகம் 151)**

**மூ**ன்று நிலைகள் கூறப்படுகின்றன-போகி, யோகி, இரண்டையும் கடந்தவன். ஒருவன் ஒட்டிக்கொள்பவன், இன்னொருவன் வெட்டிக்கொள்பவன், மூன்றாமவன் இரண்டையும் கடந்தவன்.

புலன் இன்பங்களை வெறுப்பவன் யோகி. அவற்றில் திளைப்பவன் போகி. வெறுப்பு-விருப்பு இல்லாத உயர்ந்த மூன்றாவது நிலையும் உள்ளது. பொருள்கள்-மனிதர்கள் மீது தனிப்பட்ட பற்றோ, அன்போ இல்லாமலும், அதே சமயம் அவற்றை வெறுக்காமலும் இருக்கும் நிலை இது. பரமஹம்ஸ நிலையென்றும், பரமசமாதி என்றும் இது அழைக்கப்படுகிறது.

ஒருவனுக்குப் பணத்தின்மேல் பைத்தியம் பிடிக்கும் அளவிற்கு மோகம். செல்வம் சேகரிப்பதிலேயே அவன் வாழ்நாளையெல்லாம் செலவிடுகிறான். ஒருநாள் அவன் விழித்துக் கொள்கிறான். வாழ்க்கையை வீணாக்கிவிட்டதை உணர்கிறான். அவனது பணமோகம் நீங்கிவிடுகிறது.

இப்போது அவன் எதிர்திசையில் ஓடுகிறான். அவனிடம் பணம் கொடுத்தால் தேள் கொட்டியதுபோல் துடிக்கிறான். பணத்தின் பக்கமாக அவன் பார்ப்பதே இல்லை. 'பணம் ஒரு பாவம். அதிலிருந்து தப்புங்கள். பணத்தைக் கண்டால் ஓடிப்போய் விடுங்கள்' என்று கூச்சலிடுகிறான். 'காமினி காஞ்சன்' (பெண்-பொருள்) இரண்டிலிருந்தும் தப்பிக்கச் சொல்கிறான்.

முதல் ஓட்டத்தில் பிடிப்புடையவனாக இருந்தான். எல்லாவற்றிற்கும் ஆசைப்பட்டான். இரண்டாவது ஓட்டத்தில் எல்லாவற்றையும் துறந்தான். அன்பு, வெறுப்பாக மாறியது. ஆனால் அதுவும் புலனாசைகளுடன் சம்பந்தப்பட்டதுதான்-எதிர்மறையாக.

அன்புக்கும் தொடர்பு தேவை. வெறுப்புக்கும் தொடர்பு தேவை. நண்பனுடனும் நீ சேர்ந்திருக்கிறாய். பகைவனுடனும் எதிர்மறையாகச் சேர்ந்திருக்கிறாய். இந்த இருவகைத் தொடர்புகளும் நம்மைக் கட்டிப் போடுபவை என்று அஷ்டாவக்ரர்

கூறுகிறார். பூட்டப்படுவது பொன் விலங்காகவும் இருக்கலாம், இரும்பு விலங்காகவும் இருக்கலாம். இவற்றில் பொன் விலங்கு அதிக ஆபத்தானது. அது ஒருவகை ஆபரணம்போல் தோன்றுவதால், அதிலிருந்து விடுபடுவதற்கு மனம் வராது. சிறைச்சாலை தரம் குறைந்ததாக, அசுத்தம் நிறைந்திருந்தால் அதை விட்டு எப்படா வெளியேறுவோம் என்று ஏங்குவோம். ஆனால் சிறைச்சாலை குப்பைகளின்றி சுத்தமாகவும், அலங்காரமாகவும், அழகாகவும் இருந்தால், யாருக்குத்தான் அதைவிட்டு வெளியேறத் தோன்றும்?

பாவம் நம்மைக் கட்டிப்போடுகிறது. புண்ணியம் அதைவிட இறுக்கமாக நம்மைக் கட்டிப்போடுகிறது. போகம் நம்மைக் கட்டிப்போடுவது போலத்தான் யோகமும் செய்கிறது.

போகி புலன் இன்பங்களில் தோய்ந்தவனாக இருக்கிறான். யோகி புலனாசைகளை வெறுப்பதில் தீவிரமாக இருக்கிறான். போகி நேராக நிற்பதாக வைத்துக் கொண்டால் யோகி தலைகீழாக நிற்கிறான். ஒருவன் பெண்ணைப் பின்பற்றி ஓடுகிறான். இன்னொருவன் பெண் என்றாலே அஞ்சி அவள் இல்லாத திசையில் ஓடுகிறான். இரண்டிலும் ஓடுதல் பொதுவாக உள்ளது. இந்த இரண்டு நிலைகளையும் கடந்தவனுக்குத்தான் சத்தியத்தின் அனுபவம் வாய்க்கிறது. இந்த சத்தியானுபவத்திற்கு சாஸ்திரங்களின் உதவி தேவையில்லை. யாரிடமும் அதைக் கேட்டுப் பெற வேண்டியதில்லை. சத்தியம் என்பது உனது சொத்துதான். அது ஏற்கெனவே உனக்குக் கிடைத்துள்ளது. அதை சாஸ்திரங்களில் தேடினால் உன் நேரம்தான் வீணாகும்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஓர் ஊருக்குச் சுற்றுப்பயணமாகச் சென்றுவிட்டு வீடு திரும்பினார். பயணம் வசதியாக இருந்ததா என்று மனைவி விசாரித்தாள்.

“அதை ஏன் கேக்கறே? திரும்பி வரச்சே ரொம்ப கஷ்டமா போச்சு. ரயிலில் மேல் பர்த் கொடுத்திட்டான். வயிறு கடபுடா என்றிருந்தது. அடிக்கடி கீழே இறங்கி டாய்லட்டுக்கு ஓட வேண்டியிருந்தது,” என்று எரிச்சலுடன் முல்லா பதிலளித்தார்.

“ஏன் அப்படி கஷ்டப்படணும்? நீங்க கீழ் பெர்த்காரர்கிட்ட சொல்லி அவருக்கு மேல் பெர்த்தைக் கொடுத்திட்டு நீங்க கீழே படுத்திருக்கலாமே.”

அப்படித்தான் நானும் நினைச்சேன். ஆனா கேட்க வசதிப்படலை?”

“இதிலபோய் ஏன் கூச்சப்படணும்? கீழ் பெர்த்காரரிடம் கேட்க என்ன தயக்கம்?”

“நான் என்ன செய்யறது? பெர்த்தை விட்டுக்குடுங்கன்னு நான் சொல்றதுக்கு கீழ் பெர்த்தில யாருமே இல்லையே!” என்றார் முல்லா அப்பாவியாக.

சிலர் ஒவ்வொரு விஷயம் குறித்தும் மற்றவர்களிடம் கேட்க வேண்டுமெனத் துடிக்கிறார்கள். காரணம், அவர்களின் சந்தேகத்திற்கு அவர்கள் எதிர்பார்க்கின்ற பதில் உள்ளேயிருந்து வருவதில்லை. அவ்வாறு விசாரிப்பதற்கு யாரும் அருகில் இல்லாவிட்டால் குழப்பமாகி விடுகிறது. அவர்கள் சாஸ்திரங்களில் பதில் தேடுகிறார்கள். அதற்குப் பதிலாக அவர்கள் தமக்குள் அமிழ்ந்து பதில் தேட வேண்டும்.

எல்லாமும் உனக்குள்தான் உள்ளது. சாஸ்திரங்கள் என்பவை தமக்குள் தேடியவர்கள் கண்டதன் தொகுப்புதான். கிருஷ்ணரின் பகவத்கீதை வேதங்களைப் படித்து அந்தத் தாக்கத்தால் படைக்கப்படவில்லை. கிருஷ்ணரின் அனுபவங்கள் மற்றம் சிந்தனையின் சாரமே கீதை நூல்.

இதனால் வேதங்களைப் படிப்பது வீண் என்று எண்ணிவிடாதே. வேதங்களைக் கட்டாயம் படி. ஆனால் தலைசிறந்த இலக்கியம் என்ற அடிப்படையில் அவற்றைப் படி. வேதங்களின் சொற்களை இறுதி சத்தியம் என்று நினைத்து விடாதே. பாரதத்தின் பாரம்பரிய இலக்கியம் என்ற முறையில் அவற்றைப்படி. அவை மாமுனிவர்களின் வசனங்கள். அதற்கேற்ப உரிய மரியாதை கொடுத்துப் படி. ஆனால் அங்கேயே நின்றுவிடாதே. அப்படி நின்றுவிடுவது சமையல்கலை நூல்

படித்துவிட்டு, சமையல் செய்யாமல் உட்கார்ந்துவிடுவதற்கு சமம். சமையல் செய்யாமல் வயிறு நிறையாது; பசி நீங்காது.

வேதங்கள் அற்புதமான இலக்கியம். அவற்றின் சுவை உணர்ந்துபடி. ஆனால் இந்துக்கள் அவற்றையும் மற்ற மதத்தினர் அவரவர் புனிதநூலையும் ஓதுவதால் மட்டும் சத்தியம் கிடைத்துவிடும் என்று பிரமை கொள்ளாதே. இவற்றைப் படிப்பதால் ஆன்மிகத் தாகம் எழும்பினால் அதுவே போதும். சத்தியத்தைத் தேடும் ஆர்வம் இவற்றைப் படிப்பதால் வலுப்பெற்றால் போதும்.

சத்குரு எனப்படுபவர்களுடன் பழகு. இதனால் சத்தியம் கிடைத்துவிடாது. ஆனால் சத்தியத்தை தேடும் ஆர்வம் வலுப்பெறும். சத்தியத்தை உனக்குள்ளேதான் தேட வேண்டும் என்பதையும் புரிந்துகொள்வாய். அவ்வாறு உன்னை உனக்குள்ளே தள்ளிவிடுபவரே சத்குரு. உன்னை உன்னோடு இணைப்பவையே உண்மையான சாஸ்திரங்கள். கபீர்தாசர் சொல்வதைக் கேளுங்கள்.

**எவருக்குக் காவலர் கடவுளோ**
**அவரை எவரும் அழிக்க முடியாது;**
**உலகமே எதிர்த்து நின்றாலும்**
**அவரது ஒரு முடியைக்கூட**
**எவரும் அசைக்க முடியாது.**

எல்லாப் பொறுப்பையும் கடவுளிடம் ஒப்படைத்துவிடு. நீ அப்படி ஒப்படைக்காவிடிலும் அவர்தான் உன்னை ரட்சிப்பவர். இந்த இரண்டிற்குமிடையே என்ன வேறுபாடு என்றால், நீயாகவே உன்னைப் பராமரிக்கும் பொறுப்பை அவரிடம் விட்டுவிட்டால், உன் எதிர்காலக் கவலைகள் நீங்கிவிடும். பிறகு நீயாகவே கண் இமையைக்கூட திறந்துமூட வேண்டியதில்லை. உனக்கென்று பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்ய வேண்டாம். அவரே உனக்காக எல்லாவற்றையும் செய்துதரட்டும். இதற்காக நீ போர்வையால் உன்னை மூடியபடி தூங்க வேண்டியதில்லை. ஆனால் அதுதான் கடவுளின் விருப்பம்போல் தோன்றினால் அவ்வாறே செய்.

சிலர் அஷ்டாவக்ரர் ஒரு வேலையும் செய்வதற்கு மிஞ்சவில்லை என்று கூறிவிட்டதாக நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில் நீ செய்வதற்கு ஏராளமான பணிகள் உள்ளன. கர்த்தா உணர்வுடன் செய்வதற்குத்தான் எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. இந்த வேறுபாடு தெரியாவிட்டால் நீங்கள் என்னிடம் வந்து, "சுவாமி, செய்வதற்கென்று ஒரு காரியமும் மிஞ்சியிருக்கவில்லை என நினைக்கிறோம்," என்பீர்கள். இப்படிச் செய்தால் நீங்கள் சாதாரணமான, கீழ்த்தரமான சோம்பேறியாகி விடுவீர்கள்.

கர்த்தா மனப்பான்மையைக் கைவிட்டால் கடவுள் உன்மூலம் நிறையப் பணிகளை நிறைவேற்றி வைப்பார். அவ்வாறு உழைக்கையில் நீ விசேஷமான சுவையை அனுபவிப்பாய். அலுப்பில்லாமல் ஆடி-பாடி வேலை செய்வாய். வேலை செய்வது ஒரு கொண்டாட்டம்போல் இருக்கும். இந்த நிலையை கபீர்தாசர் கூறுகையில், 'நான் புல்லாங்குழல் மாத்திரமே. நீ என்மூலம் உன் இசையை வெளியே பரப்புகிறாய். நீ இசைப்பதை நிறுத்திவிட்டால் எங்கும் மௌனம் பரவுகிறது,' என்கிறார்.

கிருஷ்ணர் பகவத்கீதையில் அர்ஜுனனிடம் 'நீ கடவுளின் கருவியாகிவிடு. கடவுளின் செயல் நடைபெற நீ காரணமாக மட்டும் இரு' என்று அறிவுறுத்துகிறார். அர்ஜுனனோ கர்மத்தை (போர்புரிதலை) கைவிட்டு, காட்டுக்கு ஓடி, சோம்பேறியாக விரும்புகிறான்.

கிருஷ்ணர் சொல்கிறார்: "நீ ஆன்மிகச் சோம்பேறியாகிவிடு. கர்த்தா மனப்பான்மையைத் துற. கடவுள் உன்மூலம் செய்விக்கும் செயல்களை நடைபெறவிடு. அவர்தான் உன்னைப் போர்க் களத்திற்கு அழைத்து வந்தார். உன் மூலம் கடவுள் போர் புரிந்து தீமையை அழிக்க விரும்பினால் அவ்வாறே நடைபெறட்டும். நீ போர் செய்ய மறுத்தால், வேறு ஒருவன் மூலமாகக் கடவுள் தன் பணியைச் செய்துவிடுவார். நீ போர்புரியக் கையை உயர்த்தாவிடில் அவர் இன்னொரு வீரனின் கையை உயர்த்திப் பிடிப்பார். நீ கொல்லாவிடில் வேறு ஒருவன் கொல்வான் உனது காண்டீவ வில் வேறு கைக்கு மாறிவிடும்.

"நீ உனக்குரிய கருமத்தைச் செய்வதைவிட்டு ஓடாதே. கர்த்தா உணர்வு மட்டும் தலைதூக்காமல் இருந்தால் போதும். கர்த்தா உணர்வு நீங்கியதும் உன் வாழ்க்கை ஆரோக்கியமாகி (ஸ்வஸ்தமாகி, சொஸ்தமாகி) விடும். அமைதியான நீரோடைபோல் உன் வாழ்க்கை அமையும்."

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஞானத்தை நோக்கி மேற்கொள்ளும் யாத்திரையில் ரசம், விரசம், ஸ்வரசம் என்று கேள்விப்படும் நிலைகள் வழித்தங்கும் இடங்கள் மாத்திரம்தானா?**

**ர**சம் என்பது வழித்தங்கும் இடம் (முகாம்) அன்று. அது இறுதியில் போய்ச்சேர வேண்டிய இடம். உபநிடதத்தில் 'ரஸோ வை ஸ:' என்றொரு மகாவாக்கியம் உள்ளது. அதாவது, கடவுள்தான் ரசம், மகாரசம், பிராணரசம். அந்த ரசத்தில் தோய்ந்துபோவது ஆன்மிகத்தில் உச்ச நிலையாகும்.

கேள்வி கேட்டவர் பர-ரசம் என்பதைக் கூறியிருக்க வேண்டும். பிற பொருட்களில், விஷயங்களில் திளைத்தல் என்பது இதன் அர்த்தம். இது வாழ்க்கையில் வழித்தங்கும் இடம் மட்டுமே ஆகும். இந்த வகை இன்பங்களை அனுபவித்து, பிறகு சலித்துப்போனால் அந்த வெறுப்பான, வெறுமையான நிலை விரசம் எனப்படும். இது எதிர்மறையான நிலை. பிறவற்றில் இன்பம் (பர ரசம்) திகட்டியதால் ஏற்பட்ட விளைவே விரசம். ஆனால் இந்த விரக்தி நிலையில் யாரும் தொடர்ந்து இருக்க முடியாது. பர ரசமே சலித்துப்போனவன் விரசத்தில் (ரசமற்ற தன்மையில்), வைராக்கியத்தில் மட்டும் எப்படி நீடிக்க முடியும்? நேர்மறையில் நீடிக்க முடியாதவன் எதிர்மறையில் எப்படி நீடிப்பான்? போகத்தைத் தொடர முடியாதவன் யோகத்தில் எப்படி நிரந்தரமாக இருப்பான்?

ரசம் என்பது சுவையானது. பர ரசம் அப்படியன்று. பர, அதாவது, பிறவற்றையே சுகம் தருபவை என நாடிச் செல்வதால்,

அது விரைவிலேயே அலுத்துவிடுகிறது. பிற பொருட்களி லிருந்தும் பிறரிடமிருந்தும் துன்பம்தான் கிடைப்பது வழக்கம். இதனால் காலப்போக்கில் விரசம் உண்டாகிறது. உலக இன்பங்களின்மீது அருவருப்பு ஏற்படுகிறது. மனத்தில் கசப்பு பரவுகிறது.

ஆனால் விரசமும் வழித்தங்கும் இடம்தான். இதற்கு அடுத்த கட்டம்-கடைசிக் கட்டம் ஸ்வரசம் (சுயரசம், தன் சுவை) எனப்படுகிறது. சுய ரசம், பர ரசத்தைவிட மேலானது. தன்னில், தனக்குள் உள்ள சுவையை அறிவது மோட்சத்திற்கான வழியாகும். குறைந்தபட்சம் இந்நிலையில் பிறரைச் சார்ந்திருக்க வேண்டியதில்லை. சுய என்பதுடன் சுதந்திரமும் சேர்ந்தே வருகிறது. இந்த அளவு உனக்கு விடுதலை கிடைக்கிறது.

ஆனால் இந்த நிலையும் முகாம் போன்றதுதான். சுய ரசத்திலும் சுயம் என்பது மறைந்துபோய், ரசம் மட்டும் மிஞ்சினால் இறுதிக் கட்டம் அல்லது சேருமிடம் நெருங்கிவிட்டது என்று பொருள்படும். சுயம் என்பது நீடிக்கும் வரையிலும் எங்கோ ஓரளவாவது 'பிற' (பர) என்பதும் இருக்கும். ஏனெனில் 'நான்' என்பவன் 'நீ' என்பவன் இல்லாவிடில் இருக்க முடியாது.

சுயம், பரம் இவை ஒரே காசின் இரு பக்கங்கள் போன்றவை. பர ரசத்தில் சுகம் கிடைக்கும் என நினைத்தாய். ஆனால் கிடைக்கவில்லை. சுய ரசமோ ஆனந்தம் தருகிறது. நடுவில் வரும் விரசம் என்பது பர ரசத்தில் சுகம் கிடைக்காததால் எழும் கோபம் அல்லது வெறுப்பு உணர்வுதான். இது நீடிப்பதில்லை.

சுய ரசம்-உனக்குள் இருப்பதன் சுவை-அறியப்பட்டால் நீ கடவுளின் கோயிலை நெருங்கிவிட்டாய் என்று பொருள்படும். ஏறத்தாழக் கோயிலின் படிகளில் ஏறிவிட்டாய். பர ரச நிலையில் நீ கடவுளுக்கு முதுகைக் காட்டியபடி நிற்கிறாய். இதனால் கோபமுற்று விரசநிலையில் நீ கடவுளை நோக்கித் திரும்பத் தொடங்குகிறாய். சுய ரச நிலையில் கடவுளின் திசைநோக்கி நடந்து அவரது மாளிகையின் படிகளில் ஏறத் தொடங்கிவிட்டாய். படிகளில் செருப்பைக் கழற்றிப் போடுவதுபோல், நீ சுயம் (நான்)

என்பதை அகற்றிவிட்டால் மாளிகைக்குள் செல்லலாம். அந்த மாளிகையின் முழுப் பெயர் ரசம் என்பது மட்டுமே. சுயம், பரம் என்பவை அங்கே கிடையாது. அங்கு இருப்பதே ஒரு ரசம்தான். குறிப்பாகப் பெயர் வேண்டுமானால் ராம ரசம் என்றும், பொதுவில் பிரம்ம ரசம் என்றும் அழைக்கலாம். புத்தர் இதையே நிர்வாணம் என்கிறார்.

**ஸ்**டான்லி ஜோன்ஸ் என்ற கிறிஸ்தவ பாதிரியாரைச் சந்தித்திருக்கிறேன். அவர் உலகப் புகழ்பெற்ற கிறிஸ்தவ மத அறிஞர். பல நூல்களும் எழுதியிருக்கிறார். அவை அவரது பரந்த அறிவை மட்டுமே காட்டுகின்றன. அவர் ஆத்ம அனுபவம் பெற்றவரில்லை. அவர் ஒருமுறை ரமண மகரிஷியைச் சந்தித்தார். அப்போது அவர் ரமணரிடம் குதர்க்கமான கேள்விகள் கேட்டார். ரமணர் கூறிய பதில்களை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்த உரையாடல் பின்வருமாறு:

ஜோன்ஸ் : நீங்கள் இலக்கை அடைந்துவிட்டீர்களா?

ரமணர் : எந்த இலக்கு? எங்கே வருவது? எங்கே போவது? எங்கே போய்ச்சேருவது?

ஜோன்ஸ் : நீங்கள் என் கேள்விக்கு நேரடியான பதிலைக் கூறவில்லையே. உங்களுக்கு நீங்கள் தேடியது கிடைத்துவிட்டதா?

ரமணர் : பெறுபவன் யார்? பெறுவது எதை? எல்லாம் அவனே, அதுவே. பெறுபவன் என யாருமில்லை. பெறப்பட வேண்டியது என்று எதுவும் இல்லை.

ஜோன்ஸ் : நீங்கள் நேரடியான பதில் கூறாமல் நழுவுகிறீர்கள். என்னைப் பொறுத்தவரையிலும், இயேசுநாதர் எனக்குக் கிடைத்ததுமே எல்லாம் கிடைத்து விட்டது. நீங்களும் அதுபோல் தெளிவான பதில் சொல்லுங்கள்.

ரமணர் : ஒன்று கிடைத்தது என்றால் அது தொலைந்தும் போகும். யாருடன் பழகுகிறோமோ, அவரை

விட்டுப் பிரியவும் நேரிடும். திருமணம் நடக்கும். மண முறிவும் சாத்தியம். பிறப்பெனில் இறப்பும் உண்டு. பெற முடியாததைப் பெறு. பிறகு அதை இழக்கும் ஆபத்தும் நேராது.

இந்தப் பதில்களைக் கேட்டு ஸ்டான்லி ஜோன்ஸுக்குத் தெளிவு ஏற்படவில்லை; தலைசுற்றல்தான் ஏற்பட்டது. இந்த மகரிஷி கேள்விக்கு சம்பந்தமில்லாமல் என்னென்னவோ சொல்கிறாரே என்று திகைத்தார். ‘எதைப் பெற முடியாதோ அதைப் பெறு என்கிறாரே. பிறகு பெறுதல் என்பதற்கு அர்த்தம் என்ன?’ என்று குழம்பிய ஜோன்ஸ் ரமணருக்கே உபதேசம் செய்ய ஆரம்பித்தாராம்!

பல ஆண்டுகளுக்குப் பிறகு ஜோன்ஸை நானும் சந்தித்தேன். எனக்குப் பழக்கமான ஒரு கிறிஸ்தவரின் வீட்டிற்கு அவர் விருந்தாளியாக வந்திருந்தார். அந்த கிறிஸ்தவர் எங்கள் சந்திப்பிற்கு ஏற்பாடு செய்தார். ஜோன்ஸ், ‘நீங்கள் தேடியது உங்களுக்குக் கிடைத்துவிட்டதா?’ என்று அதே பழைய கேள்வியை என்னிடமும் கேட்டார்.

“அதே பதிலையே நான் தருகிறேன்,” என்றேன். எந்தப் பதில் என்று அவர் திருப்பிக் கேட்டார். அவர் பழைய சம்பவத்தை மறந்துபோயிருந்தார்.

“பெறுவது எப்படி? எதைப் பெறுவது? பெறுபவன் யார்?” என்று நான் சொன்னதும் அவருக்கு பழைய சம்பவம் நினைவிற்கு வந்தது. அவர் சிரித்தார். “நீங்களும் ரமண மகரிஷி போலவே பேசுகிறீர்களே, நான் அவரைச் சந்திக்கச் சென்றேன். அவரது பேச்சு அர்த்தமுள்ளதாகத் தோன்றவில்லை. என் நேரம்தான் வீணாயிற்று. இதைவிட மகாத்மா காந்தியுடனான சந்திப்பும், அரவிந்தருடனான சந்திப்பும் பயனுள்ளதாக இருந்தன. அவர்களின் கருத்துகள் சுத்தமாகவும் தெளிவாகவும் இருந்தன,” என்று ரமணருடனான சந்திப்பை நினைவுகூர்ந்தார்.

சில ஆன்மிக விஷயங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும் அளவிற்குத் தெளிவாக இருக்க முடியாது. புத்திக்குப்

புரிந்துபோகின்ற விஷயங்கள் ஆழமானவையாக இருப்பதில்லை. ஏனெனில் கடவுள் விஷயம் புத்தியைக் கடந்து நிற்பது.

பிற விஷயங்களின் சுவையை (பர ரசம்) உணர முடியும். விரசம் என்பதையும் புரிந்துகொள்ளலாம். சுய ரசமும் புரியக்கூடியது. இவை மூன்றும் அறிவின் கட்டுப்பாட்டில் உள்ளன.

சில சமயம் உன் வாழ்வில் காதல், பிரார்த்தனை அல்லது தியானத்துடன் சம்பந்தப்பட்ட நேரத்தில் திடீரென்று நீ ஜிவ்வென்று பறந்து உயர்ந்த சிகரத்தின்மீது உட்கார்ந்துவிட்டது போன்ற இன்ப அனுபவம் கிடைக்கும். நீ உன்னை மறப்பதோடு சுற்றுப் புறத்தையும் மறந்துவிடுவாய். அப்போது உன் மனத்தில் இறங்கும் ரசம் கடவுளின் ரசமாகும். காதல் அல்லது பாசத்தில் கடவுளின் முதல் கிரணம் இறங்கி வருகிறது. தியானத்தின் ஆழ்நிலையில் கடவுளின் ரசம் அருவியாகக் கொட்டுகிறது.

பர ரசம், விரசம், சுய ரசம், கடவுள் ரசம் எல்லாவற்றின் அடிப்படையும் ரசம்தான். அதுதான் தோற்றுவாய். கடைசி இலக்கும் அதுவே. நாம் எங்கெல்லாமோ அலைந்து புறப்பட்ட இடத்திற்கே திரும்புகிறோம். இவ்வாறு வாழ்க்கை என்னும் வட்டம் பூர்த்தியடைகிறது. ஆன்மிக மொழியில் சொல்வதானால் நாம் எங்கிருந்து புறப்படவில்லையோ, எங்கிருந்து அகலவில்லையோ, அங்கேயே போய்ச் சேருகிறோம்! அங்கு என்ன உள்ளதோ அதுவாகவே ஆகிவிடுகிறோம்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நுணுக்கமான உணர்வுகளைப் பெற்றிருப்பதால் ஆத்மஞானி உடல் வலியை அதிகமாக உணருவான் என்று ஒருமுறை சொன்னீர்கள். ஆனால் அவன் அதை வெளியாள்போல் பார்க்கிறான். ஓர் ஆத்ம ஞானிக்கு மனக் கஷ்டமும் ஏற்படுவதுண்டா?**

**தி**பெத்தில் புத்தமதத் த்லைவர் மிலோரபா மரணப் படுக்கையிலிருந்தார். உடலில் மிகவும் வலி. ஒரு சீடன் (பிட்சு)

அவரிடம், "மகாபிரபு, தங்களுக்குத் துன்பமாக இருக்கிறதா?" என்று விசாரித்தான்.

குரல் கேட்டுக் கண்களைத் திறந்த மிலோரபா, "நான் துன்பப்படவில்லை. ஆனால் துன்பம் இருக்கிறது," என்று சொன்னார்: அதாவது, அவரைச் சுற்றிலும் துன்பம் நிற்கிறது. துன்பம் என்று ஒன்று கிடையாது என்று அவர் சொல்லவில்லை. ஆனால் அவர் அதனால் தொடப்படாமல் சற்று விலகி நின்று அதைக் காண்கிறார்.

ஞானியின் வாழ்க்கையிலும் துன்பம் நிகழ்கிறது. ஆனால் அது அவரை ஊடுருவதில்லை. காலில் முள் குத்தினால் புத்தருக்கும் அது தெரிந்துவிடும். அவர் சுயநினைவுடன்தானே இருந்தார். கூர்மையான உணர்வு காரணமாக புத்தர் முள் தைத்ததை உன்னைவிடக் கூடுதலாக அறிவார். புத்தரைச் சுற்றிலும் அமைதியின் ஆட்சி. ஊசி கீழே விழுந்தாலும் ஓசை கேட்கும். உன் கடை இருக்கும் கடைத்தெருவிலோ எப்போதும் பரபரப்பு. ஊசி விழுந்தால் ஓசை கேட்காது. நீயும் பரபரப்பாகக் கடை விஷயமாக ஓடுகிறாய். முள் தைத்தாலும் அவசரத்தில் அதிகம் உணர்வதில்லை. புத்தருக்குக் கடை எதுவும் கிடையாது. அவர் எங்கும் ஓடுவதில்லை. ஆகவே முள் தைத்தால் உன்னைவிட அதிகமாக உணர்வார். வெள்ளைக் காகிதத்தில் இழுக்கப்பட்ட கோடுபோல் அவரது உணர்வு தெளிவாக இருக்கும். உனது காகிதமோ அழுக்காக உள்ளது. ஏற்கெனவே அதில் ஏராளமான கோடுகள் குறுக்கும் நெடுக்குமாக உள்ளன. அதில் கோடிழுத்தால் எளிதில் மீண்டும் கண்டுபிடிக்க முடியாது.

வெண்மையான துணியில் ஒரு சொட்டுக் கறையும் தெளிவாகத் தெரிகிறது. கறுப்புத் துணியில் கறை தெரியாது. ஏராளமான துன்பங்களின் காரணமாக உன் வாழ்க்கையும் கறுப்பாகிவிட்டது. சிறு-சிறு துன்பங்களை நீ உணர்வதுகூட இல்லை. சிறிய துன்பத்தை மறந்து அதிலிருந்து விடுபட பெரிய துன்பத்தை உண்டாக்கிக் கொண்டால் போதும்.

உதாரணமாக, தலைவலி என்று நீ முனகும் சமயம் இன்னொருவன் வந்து 'உன் கடையில் தீப்பிடித்துவிட்டது' என்று

சொன்னால், எழுந்து ஓடுவாய். தலைவலியை மறந்துவிடுவாய். பெரிய மீன் சிறிய மீனை விழுங்குவதுபோல், தீ விபத்து உன் தலைவலியை விழுங்கிவிடும்.

**பெ**ர்னார்ட் ஷா ஒரு சம்பவம் குறித்து எழுதியிருக்கிறார். அவருக்கு ஒரு முறை நெஞ்சுவலி வந்தது. அது ஹார்ட் அட்டாக்காக இருக்கும் என பயந்ததால் ஒரு டாக்டருக்கு தொலைபேசியில் செய்தி அனுப்பி அழைத்தார். படுக்கையில் படுத்தபடி டாக்டரை எதிர்பார்த்தார். டாக்டர் மாடிப்படிகள் ஏறிவந்தார். மூச்சு வாங்கியதால் உடனே நாற்காலியில் அமர்ந்தார். அடுத்து, அவர் நெஞ்சில் இதயப் பகுதியைப் பிடித்துக் கொண்டு 'வலி, வலி' என்று சப்தமிட்டார்.

பெர்னார்ட் ஷா பயந்துவிட்டார். தனக்குச் சிறிது நேரம் முன்புதான் நெஞ்சு வலித்ததை மறந்து அவர் படுக்கையிலிருந்து எழுந்தார். விரைந்து சென்று தண்ணீர் கொண்டுவந்தார். ஒரு டவலால் டாக்டரின் வியர்வையைத் துடைத்தார். ஐந்தாறு நிமிடங்களில் டாக்டர் சாதாரண நிலைக்கு வந்தார். உடனே அவர் ஷாவிடம், "ஃபீஸ் கொடுங்கள்," என்று கேட்டார்.

"எனக்கல்லவா நீங்கள் ஃபீஸ் தர வேண்டும். நான்தானே உங்களைக் காப்பாற்றினேன்," என்றார் ஷா.

"நான் உங்கள் எதிரே நெஞ்சுவலிபோல் காண்பித்துக் கொண்டது வெறும் நாடகம். நான் உள்ளே நுழைந்து உங்கள் நிலையைப் பார்த்ததுமே உங்களுக்கு இதயநோய் இல்லை என்பது புரிந்தது. சொன்னால் நம்ப மாட்டீர்களென்று இப்படி நடித்து உங்களுக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்தேன். நீங்கள் பரபரப்பாக எனக்கு சேவை செய்ததுபோல் இதய நோயாளியால் செய்ய முடியாது," என்று டாக்டர் விளக்கினார்.

பெர்னார்ட் ஷா எப்பொழுதும் பிறரைக் கிண்டல் செய்வது வழக்கம். இம்முறை அவர் டாக்டரிடம் மாட்டிக் கொண்டார். டாக்டர் கூறியதைக் கேட்டு ஷா சிரித்தார். "ஆமாம், டாக்டர், நிஜமாகவே நான் வலியை மறந்துவிட்டேன். எனக்கு வலித்ததாக நினைத்தது கற்பனை என்று தோன்றுகிறது," என்றார்.

பெரிய துன்பம் விளைந்தால் சிறிய துன்பம் மறந்து போகிறது. இம்மாதிரி நிகழ்ச்சிகள் செய்தித்தாள்களில் வெளி வந்துள்ளன. உதாரணமாக, பத்து ஆண்டுகளாக பாரிசவாயுவால் படுக்கையில் கிடந்தவன் வீட்டில் நெருப்புப் பிடித்ததை அறிந்து எப்படியோ வெளியே வந்துவிடுகிறான். மக்கள் பார்த்து ஆச்சரியத்துடன், "எப்படி உன்னால் எழுந்திருக்க முடிந்தது?" என்று வினவியவுடன், அவன் திடுக்கிட்டு, தனது நோய் நினைவுக்கு வந்து அப்படியே கீழே விழுந்துவிட்டான்!

உன்னிடமுள்ள வியாதிகளில் சில உனக்குப் பொழுது போகாததால் உண்டானவை. உன்னைப் பம்பரம்போல் சுழலவைத்து உன் கவனத்தை மாற்றக்கூடிய அவசர வேலை இல்லாததால் சில்லறை வியாதிகளைப் பற்றி நினைக்கிறாய். அவசர வேலை அல்லது ஆபத்து வந்தால், அல்லது பெரிய நோய் வந்தால், சிறிய தொந்தரவுகளை மறந்துவிடுவாய்.

ஞானியின் வாழ்க்கையிலும் துன்பம் ஏற்படும். அது நிஜமான நிகழ்ச்சி. ஆனால் அவன் துன்பப்படுவதில்லை. துன்பம் ஏற்படுவதும் அதனால் பாதிக்கப்பட்டுத் துடிப்பதும் வெவ்வேறு சம்பவங்கள். துன்பத்துடன் நம்மை இணைப்பதால்தான் நாம் வேதனைப்படுகிறோம்.

தலைவலி நமக்கு ஏற்படுகிறது. புத்தருக்கும்கூட எப்பொழுதாவது தலைவலித்திருக்கும். யாராயிருந்தால் என்ன? மனிதத் தலை எல்லோருக்கும் ஒரே மாதிரித்தானே? ஆனால் நீ தலைவலியுடன் உன்னை இணைத்துக் கொள்கிறாய். நீ '**எனக்குத்** தலைவலி' என்கிறாய். புத்தர் தலைவலிப்பதை ஒப்புக்கொள்வார். ஆனால் **என்** தலை என்று இணைக்கமாட்டார். 'உடலிலுள்ள தலைக்கு வலிக்கிறது' என்பார்!

உடல் விஷயம் இப்படி என்றால் ஞானிகளுக்கும் மனக் கஷ்டத்துக்கும் சம்பந்தம் உண்டா என்ற கேள்வி எழுகிறது.

உடல் நிஜமானது. ஆத்மா சத்தியமானது. மனம் என்பதுதான் ஒரு பிரமை அல்லது மாயை. உடலில் வலித்தால் அது புத்தருக்கும் தெரிந்து விடுகிறது. ஆத்மாவுக்கு துக்கம்

ஏற்படுவதில்லை. அது நிரந்தரமான சுகத்தில் ஆழ்ந்திருக்கிறது. அது சத்-சித்-ஆனந்த வடிவானது. மனம் என்பது ஏமாற்று ஒரு மோசடி. மனம் என்பது எதனால் உண்டாகிறது? ஒன்றுடன் உன்னை இணைத்தால் அங்கே மனம் பிறக்கிறது. என் உடல், என் வீடு, என் மனைவி, என் செல்வம் என்று நீ நினைக்கும்போது, சொல்லும்போது அங்கே மனம் பிறக்கிறது. 'எனது' என்பது மனம் உற்பத்தியாகும் இடம். ஆகவேதான் மகாவீரர், புத்தர், கிருஷ்ணர், இயேசுநாதர் முதலிய எல்லாரும் ஒரே விஷயத்தை வலியுறுத்து கின்றனர். எதனுடனும் உன்னை இணைத்துக் கொள்ளாதே, எதையும் உன்னுடன் சேர்த்துக் கொள்ளாதே (அபரிகிரகம்) என்கின்றனர். 'எனது' என்னும் உணர்விலிருந்து நீ விடுபட்டால், மனத்திடமிருந்தும் விடுதலை பெறுவாய். 'எனது' என்பதை அகற்றியதும், உன் துன்பங்களின் அஸ்திவாரம் விழுந்துவிடும். மனமென்னும் மாய மாளிகை சரிந்துவிடும்.

'எனது' என்பது எவ்வளவு பெரிதோ அந்த அளவிற்கு மனமும் பெரிதாக இருக்கும். 'எனது' என்னும் உணர்வு தேயத்தேய மனமும் வலிமை குன்றும். நீ உயர்ந்த பதவியில் இருந்தால் உன் மனமும் பெரிதாகத் தெரியும். பதவியிலிருந்து இறங்க நேர்ந்தால் உன் மனமும் சுருங்கி விடுகிறது, சிறியதாகி விடுகிறது. ஆகவே பதவி, பணம் ஆகியவற்றை இழப்பது பிடிக்காத விஷயமாக இருக்கிறது. ஏனெனில் இதனால் ஒடுங்க, அடங்க நேரிடுகிறது. இப்படிச் சுருங்கிவிடுவது யாருக்குத்தான் பிடிக்கும்? இதனால் அவமான உணர்வு மேலிடுகிறது. பிறர் நிந்திப்பதுபோல், சட்டைப் பையிலிருந்த பணமெல்லாம் தீர்ந்து ஏழையாகிவிட்டதுபோல் தோன்றுகிறது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் நண்பர் ஒருவருடன் சாலையில் சென்று கொண்டிருந்தார். ஓரிடத்தில் சிற்றோடை. நண்பர் அதைக் கடக்கத் தாவினார். ஆனால் தண்ணீரில் விழுந்துவிட்டார். முல்லாவும் தாவினார். ஓடையின் மறுபுறத்திற்கு வந்துசேர்ந்தார். நண்பருக்கு ஆச்சரியம். ஏனெனில் அவரைவிட முல்லாவிற்கு வயது அதிகம். மேலும் முல்லாவிற்கு முதுமை தொடங்கியிருந்தது.

நண்பர் கேட்டார், "நீங்கள் எப்படி ஓடையில் விழாமல் சரியாகத் தாவ முடிந்தது?"

முல்லா தன் இடுப்பில் செருகியிருந்த சுருக்குப்பையைத் திறந்து காட்டினார். அதில் பணம் இருந்தது. "இதன் சூடு எனக்கு சக்தியைக் கொடுத்தது," என்றார் முல்லா.

நீ 'எனது' என்று கூறிக்கொண்டு எவ்வளவு சேர்க்கிறாயோ அந்த அளவிற்கு மனம் விரிந்துகொண்டே செல்கிறது. 'எனது' என்பதை தியாகம் செய்தால் மனம் என்பதும் நீங்கிவிடுகிறது. மனம் என்று ஓர் உறுப்பு கிடையாது. அது ஒரு பிரமை மாத்திரமே. அது பிரதிபிம்பம் போன்றது. நீ கண்ணாடியின் முன்னால் நிற்கிறாய். கண்ணாடி உண்மை. நீயும் உண்மை. ஆனால் கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம் உண்மையானதன்று.

உடலும் ஆத்மாவும் ஒன்றையொன்று சந்திக்கின்றன. ஆத்மாவில் உடலின் பிரதிபிம்பம் விழுகிறது. அதை உண்மையென நினைத்தால் மனம் என்பது தோன்றிவிடுகிறது. 'நான்தான் அடிப்படையில் உடல் இல்லையே' என்பதை நினைவில் வைத்தால், எப்படி நான் அதன் பிரதிபிம்பம் ஆக முடியும் என்ற கேள்வி எழும். அப்போது மனம் தோன்ற வாய்ப்பில்லை.

மனம் என்பது ஒரு பிரமை மட்டுமே. அப்படி ஒன்று உண்மையில் இல்லை. அது உண்டென்பது இந்த வீடும் நீயும்போல்தான். வீடு உண்மை. நீ உண்மை. ஆனால் நடுவில் வரும் 'என்' (என் வீடு) என்பது பொய். ஏனெனில் நீ இல்லாத போதும் வீடு இருந்தது. நீ எதிர்காலத்தில் இல்லாமல் போன பிறகும் வீடு இருக்கும். நீ இறந்ததும் அதன் சொந்தக்காரர் இறந்துவிட்டாரே என்று வீடு அழாது. நீ யார் என்பதே வீட்டிற்குத் தெரியாது.

நீ இல்லாத போதும் குடும்பச் சொத்து என்று இருந்தது. நீ இறந்த பிறகும் அது இங்கேயே நீடிக்கும். குடும்பப் பொருட்களும் இங்கேயே கிடக்கும். இவற்றின் மீது நீ உரிமை கொண்டாட முடியாது. இதனால்தான் இந்துக்கள் 'எல்லாப் பொருட்களும், கோவிந்தா, உன்னுடையவே' (த்வதீயம் வஸ்து கோவிந்த) என்கிறார்கள். 'எல்லாம் கடவுளுடையது, எனதென்று

எதுவும் கிடையாது' என்பதை உணர்ந்துகொண்டால், பிறகு மனம் என்பது இல்லாது போய்விடும்.

மனம் ஒரு பிரமை. பாதையில் கயிறு கிடப்பதைப் பார்க்கிறாய். அதைப் பாம்பென்று நினைக்கிறாய். அங்கிருந்து ஓட்டம் பிடிக்கிறாய். ஒருவன் எதிரே விளக்குக் கொண்டு வருகிறான். அதன் வெளிச்சத்தில் பாதையில் கயிறுதான் கிடப்பது தெரிகிறது. உடனே நீ வாய்விட்டுச் சிரிக்கிறாய். மனம் என்பதும் இதேபோன்ற பிரமைதான். ஞான விளக்கை ஏற்றிப்பார். மனம் என்பது இருக்காது. உண்டெனக் கருதினால்தான் மனம் என்பது உண்டு.

ஞானிகள் மனம் என்னும் ஒன்று இல்லை என்பதை அறிவர். அவர்களுக்கு மனக்கஷ்டம் ஏற்படும் சாத்தியம் இல்லை. மனம் என ஒன்றிருப்பதை நம்பினால்தான் மனக்கஷ்டம் என்பதும் உணரப்படும்.

ஏழை நாடுகளில் மனவியாதிகள் அதிகமாக இல்லை. மனநோய் மருத்துவர்களும் குறைவு. பணக்கார நாடுகளில் மனநோய் நிபுணர்கள் தேவைப்படுகின்றனர். அமெரிக்காவில் உடல்நோய்களுக்கான மருத்துவர்கள் குறைவாகவும், மனநோய் மருத்துவர்கள் அதிக எண்ணிக்கையிலும் காணப்படுகின்றனர். அங்கு செல்வம் கொழிக்கிறது. ஆகவே 'எனது' என்று உரிமை கொண்டாடும் தன்மை பரவலாக உள்ளது. அமெரிக்காவில் நிலவும் செல்வச் செழிப்புப்போல் எந்த நாட்டிலும் எக்காலத்திலும் இருந்ததில்லை. இந்தச் செழிப்பின் காரணமாக மனமும் பெருத்து விட்டது. இதன் விளைவாக மனநோய்களும் அதிகரித்துவிட்டன. அங்கு நால்வரில் மூவர் என்ற விகிதத்தில் மன ஆரோக்கிய மில்லாது உள்ளனர்.

இப்படி ஏராளமான நோயாளிகளுக்கு சிகிச்சை செய்து-செய்து மனநோய் மருத்துவர்களும் மனநோயாளியாகிவிடும் விசித்திரம் அமெரிக்காவில் நடக்கிறது. இந்த விஷயத்தை நான் அனுபவத்தால் அறிவேன். ஏனெனில் என்னிடம் வந்து சந்நியாசம் பெற்றவர்களில் மனநோய் மருத்துவர்களும் உண்டு. மூழ்குபவனைக் காப்பாற்ற முயன்று தானும் மூழ்குபவனைப்போல்,

நோயாளிகளுக்கு சிகிச்சை செய்து மருத்துவர்களே மன நோயாளியாகி விட்டனர்.

ஒருநாள் நான் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருந்தேன். சற்றுத் தொலைவில் ஒருவன் உட்கார்ந்தபடி மீன்களுக்குப் பொரி தூவிக்கொண்டிருந்தான். ஆற்றின் ஓரமாக நீந்திச்சென்ற ஒரு சிறுவன் திடீரென, "ஐயோ! காப்பாற்றுங்கள்," என்று கூக்குரலிட்டான். எனக்கு நீந்தத் தெரியும். நான் ஆற்றில் குறிப்பதற்கு முன் பொரி தூவிக் கொண்டிருந்தவன் தண்ணீரில் குதித்துவிட்டான். ஆனால் அவ்வாறு குதித்தவன் ஒன்றிரண்டு நிமிடங்களிலேயே, "ஐயோ! என்னைக் காப்பாற்றுங்கள். நான் மூழ்கிவிடுவேன்போல் இருக்கிறதே," என்று கதறினான்.

நான் திகைத்துப்போனேன். நான் நீரில் குதித்து ஒவ்வொருத்தராகக் கரைக்குக் கொண்டு வந்தேன். பொரி தூவினவன் சொன்னான், "எனக்கு நிஜமாக நீந்தத் தெரியாது. பையனின் அலறலைக் கேட்டதும் என்னை அறியாமல் குதித்து விட்டேன்."

மேற்கு நாடுகளில் மக்கள் மனநோய்களில் மூழ்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைக் காப்பாற்ற முயலும் மருத்து வர்களும் மனநோய்களுக்கு ஆளாகிறார்கள். மனத்தத்துவத்தில் மாமேதையான ஸிக்மண்ட் ஃப்ராய்டுகூட சிறிதளவு மனநோயாளியாகவே தெரிகிறார். உளவியல் தந்தை எனப்படும் அவர் சில விஷயங்களுக்கு அஞ்சினார். யாராவது இறந்துபோன செய்தி கேள்விப்பட்டால் அவர் உடல் நடுங்குமாம்! அவர் சமாளிக்க முயன்றபோதிலும் இரண்டு முறை மயக்கம் போட்டாராம்.

மனநோய் என்று சொல்வதற்குப் பதிலாக மனமே ஒரு நோய் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். அமெரிக்காவில் இப்படித்தான் நடக்கிறது. செழிப்பு காரணமாக அங்கே பெரும்பாலோர் மனம் பலூன்போல ஊதிப்போயிருக்கிறது. விரிந்து கொண்டே செல்லும் பலூன் ஓர் எல்லையை அடைந்ததும் வெடிப்பதுபோல், மனமும் அளவுமீறி விரியும்போது நோய்க்கு ஆளாகிறது.

மனநோய் வல்லுநர்கள் ஸீஸோஃப்ரேனியா* பற்றி சொல்லுவார்கள். மனிதனுக்குள்ளே இரண்டு பிரிவுகள் (divisions) உள்ளன. இரண்டு நபர்கள் சேர்ந்து ஒரு மனிதன் ஆனது போன்ற நிலை. நீயும் அத்தகைய பிளவுபட்ட மனிதர்களைப் பார்த்திருப்பாய். உன் மனைவி நன்றாகப் பேசிக் கொண்டிருக்கிறாள். சூழ்நிலை சரியாக உள்ளது. நடுவில் நீ அவள் கருத்தை அல்லது வேண்டுகோளை மறுத்து ஏதோ சொல்கிறாய். அவ்வளவுதான், இதுவரை லக்ஷ்மிபோல் இருந்த உன் மனைவி துர்க்கையாகி விடுகிறாள்!. மகாகாளியாகி விடுகிறாள்! சிவபெருமான் நெஞ்சின்மேல் காளி நடனமாடியதைப்போல் இவளும் உன்னைத் தாக்க விரும்புகிறாள். மிகச் சிறிய விஷயத்திற்குப்போய் இவள் பயங்கரமாக மாறிவிட்டாளே என்று நீ திடுக்கிடுகிறாய். லக்ஷ்மியும் மகாகாளியும் ஒரே பெண்ணின் உடலில் இருப்பதுபோன்ற நிலைதான் ஸீஸோஃப்ரேனியா (முரண் மூளைநோய்). அப்போது எண்ணம்-உணர்வு-செயலில் தொடர்பில்லாமல் போகிறது.

ஒருவருடன் நமக்கு நெருங்கிய நட்பு உள்ளது. சிறு சச்சரவில் நட்பு மாயமாய் மறைந்து விடுகிறது. உனக்காக உயிரையே கொடுப்பேன் என்று சபதமிட்டவன் இப்போது உன் உயிரை எடுப்பேன் என்று கொக்கரிக்கிறான். எந்த மனிதனையும் நம்ப முடியாது. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பலர் — குறைந்தபட்சம் இருவராவது — உள்ளனர்.

மனம் என்பது ஒரு கும்பல். நீ உண்மையில் பலர் சேர்ந்து உருவானவன். இந்தக் கும்பலை நம்ப முடியாது. காலையில் ஒருவர் வந்து, 'உன்னை எனக்குப் பிடித்துள்ளது' என்று சொன்னால் சட்டென்று நம்பிவிடாதே. அவர் மாலையே உன்னைச் செருப்பால் அடிக்க வரக்கூடும். நடுவில் ஏதாவது நிஜமான அல்லது கற்பனையான காரணம் இருக்கும். அவர் மோசடிப் பேர்வழி என்று அர்த்தமில்லை. அவர் காலையில் உன்னை நேசிப்பதாக முழு மனத்துடன்தான் சொன்னார். மாலையில் செருப்பால் அடிக்க வந்ததும் மனபூர்வமாகத்தான்.

---

* **Schizophrenia** தீவிரமான மனக்கோளாறு. நோயாளி மாயத்தோற்றம், மருட்சி, மழுங்கிய உணர்வுகள், யதார்த்த நிலையிலிருந்து விலகுதல் போன்றவற்றிற்கு ஆளாவார்.

நீ யாரிடம் அன்பு செலுத்துகிறாயோ அவரையே மனத்தின் மூலையில் கடுகளவாவது வெறுக்கிறாய். மனைவியுடன் அடிக்கடி பிரச்சினை உண்டாகிறது. அவள் கண்ணில் படாமல் தொலைந்தால் சரி என்று நினைக்கிறாய். அவளும் அதை உணர்ந்து பிறந்தகம் சென்றுவிடுகிறாள். பிறகு அவளைப் பற்றி கனவு காண ஆரம்பிக்கிறாய். அவளுக்குக் கவிதை நடையில் பிரிவுத் துன்பம் பற்றி கடிதம் எழுதுகிறாய். இது போலிக் கடிதமில்லை. அந்த சமயம் நிஜமாகவே உன் மனத்தின் ஒரு பகுதி அப்படித்தான் வருந்துகிறது. உன் கடிதத்தை நம்பி அவள் திரும்பிவந்தால், உன் மனத்தின் இன்னொரு பகுதி மீண்டும் உன் சுயரூபத்தை வெளிப்படுத்தும். நீ விட்ட இடத்திலிருந்து மறுபடியும் சண்டைபோட ஆரம்பிப்பாய்.

மனத்தின் ஒரு பகுதி யாரை நேசிக்கிறதோ அவரையே இன்னொரு பகுதி நுணுக்கமாக வெறுக்கிறது. யாருடன் நட்போ அவரிடமே பகைமை உண்டாகிறது. ஒரு குதிரை இப்பக்கம் இழுக்கிறது. இன்னொரு குதிரை வேறுபக்கமாகச் செல்கிறது. இடையில் வண்டி தடுமாறுகிறது. ஒருவன் பின்னாலிருந்து இழுக்கிறான். இன்னொருவன் முன்னாலிருந்து இழுக்கிறான். ஒருவன் காலை பற்றி இழுக்கிறான். இன்னொருவன் கையை பற்றி இழுக்கிறான். இப்படி உனக்குள்ளேயே ஒரு மனிதனுக்குள்ளேயே குண வேறுபாடுகளின் இழுவை வடப் போட்டி நடக்கிறது. இந்த நிலையில் பெரும்பான்மையோர் ஏன் பைத்தியங்களாவதில்லை என்று ஸிக்மண்ட் ஃப்ராய்டு கேட்கிறார். ஆம், இது ஆச்சரியமான விஷயம்தான்.

## மூன்றாம் கேள்வி

**ராமகிருஷ்ண பரமஹம்சர் ஒரு கையில் மண்ணும், இன்னொன்றில் வெள்ளிக் காசுகளும் வைத்து அவற்றை ஒன்றாக கங்கையில் எறிந்துவிட்டார் என்று கூறப்படுகிறது. இன்னொரு முறை சுவாமி விவேகானந்தர் ராமகிருஷ்ணரின் படுக்கையின் கீழ் வெள்ளிப் பணம் வைக்க,**

**ராமகிருஷ்ணர் படுக்கையில் படுத்ததுமே துடித்தார் என்பார்கள். இந்த சம்பவங்களின் பொருளென்ன?**

**ரா**மகிருஷ்ணருடன் சம்பந்தப்பட்ட இந்த இரு சம்பவங்களும் சரியாகப் புரிந்து கொள்ளப்படவில்லை. இவற்றை விளக்கியவர்களுக்கு பரமஹம்ச நிலை பற்றி எதுவும் தெரியாது. ராமகிருஷ்ணர் ஒரு கையில் வெள்ளி, மற்றொரு கையில் மணல் வைத்திருந்தார் என்பதற்கு நாம் சாதாரணமான, மேலோட்டமான பொருள் எடுத்துக் கொள்கிறோம். உடனே நாம் அவர் வெள்ளியையும் மண்ணையும் சமமாகக் கருதினார் (சமதரிசி) என்கிறோம். அப்படியானால் அவர் இரண்டு கையிலும் வெள்ளியெடுத்து நீரில் எறிந்திருக்கலாமே.

ராமகிருஷ்ணருக்கு எல்லாமே சமம்தான். தண்ணீரில் எறிவதும் விசேஷ அர்த்தம் கொண்டிருக்கவில்லை. ராக நிலை (பற்றுகள்) கடந்து, விராக (வைராக்ய) நிலை அடைந்தவன் வெள்ளியும் மண்ணும் ஒன்றெனக் கருதுவான். ராமகிருஷ்ணர் அதையும் கடந்து வீதராக (பரமஹம்ச) நிலையை அடைந்தவர். ராமகிருஷ்ணரின் செய்கை அவருக்காக அமைந்ததன்று; சுற்றி நின்றவர்களுக்காகச் செய்யப்பட்டது. ராகத்தில் (புலன் இன்பங்களில்) ஆழ்ந்தவனுக்கு விராகம் (ஒட்டுதலின்மை) கற்பிக்க வேண்டும். பிறகு அவனை இந்த இரண்டு நிலைகளையும் கடந்த வீதராகியாக்க வேண்டும். வாழ்க்கையில் ஒவ்வோர் அனுபவத்தையும் பெற்று, அதைக் கடந்து முன்னேற வேண்டும் என்று ராமகிருஷ்ணர் கூறிவந்தார். இதற்கு அவரது பின்வரும் அனுபவமே சான்று.

ராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவம் பலரால் அறியப்பட்டிருக்கவில்லை. அவர் மதுராநாதர் என்னும் சீடரை அழைத்தார். "நான் ஒரு கனவு கண்டேன். நான் பட்டாடை அணிந்து வெல்வெட்டு திவானில் தலையணைகளை அடுக்கி ஒய்யாரமாகச் சாய்ந்திருக்கிறேன். ஆனந்தமாக ஹுக்கா பிடிக்கிறேன். அப்போது விரலில் மின்னும் தங்க மோதிரத்தில் பதிக்கப்பட்ட வைரக்கல் ஜொலிக்கிறது. ஆகவே என் அடி

மனத்தில் இப்படி ஒரு ஆசை புதைந்திருப்பது தெரியவருகிறது. இந்தக் காட்சியை இப்போது நிஜத்தில் அனுபவித்துவிட வேண்டும். இல்லாவிடில் இந்த ஆசை நீடித்து, இவற்றை அனுபவிக்க நான் இன்னொரு பிறவி எடுக்க நேரிடும். நீ போய் இதற்கான ஏற்பாடுகளைச் செய்,'' என்று கூறி அனுப்பினார்.

மதுராநாதர் ராமகிருஷ்ணரின் தீவிரமான பக்தர். 'ஏன்' என்று ஒருபோதும் கேட்காத சீடர். குருதேவர் சொன்னபடியே ஏற்பாடுகள் செய்தார். கங்கைக் கரையில் மறைவான இடத்தில் திவானில் ராமகிருஷ்ணர் தலையணைகளின் மீது சாய்ந்து படுத்தார். பட்டாடை அணிந்திருந்தார். லக்னோவில் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஹுக்காவைக் கையில் பிடித்துப் புகையை இழுத்து வெளியிட்டார். மோதிரத்தில் மின்னும் வைரத்தைக் கவனித்தார். மதுராநாதர் அருகில் ஒரு புதரில் ஒளிந்தபடி நடப்பவற்றைக் கவனிக்கலானார்.

அடுத்து, ராமகிருஷ்ணர் தனக்குத்தானே பேசலானார்: 'ராமகிருஷ்ணா! இந்த வைரமோதிரத்தை நன்றாக ரசித்துப் பார்த்துவிடு. இல்லாவிடில் மறுபடியும் பிறக்க நேரிடும். பட்டாடை எவ்வளவு வழவழப்பாக இருக்கிறதென்று இப்போதே தடவிப்பார். ஆசை தீர இப்போதே ஹுக்கா புகையை நன்றாக இழுத்துவிடு. இல்லாவிடில் இதற்காக மறுபடியும் பிறக்க நேரிடும்.''

ஐந்து நிமிடத்திற்குப் பிறகு அவர் எழுந்து நின்று சிரித்தார். மோதிரத்தை கங்கையில் எறிந்தார். பட்டாடையைக் கிழித்து கங்கை நீரில் ஓடவிட்டார். ஹுக்காவை உடைத்து அதன் மீது குதித்தார். மதுராநாதர் குருநாதருக்கு சித்தபிரமை உண்டாகி விட்டதோ என்று பயந்தார். குருநாதர் ஹுக்கா பிடிப்பதைப் பார்த்து ஏற்கெனவே அவர் சங்கடப்பட்டார். ராமகிருஷ்ணர் கடைசியில் மெத்தை-தலையணைகளையும் கங்கையில் தூக்கிப் போட்டார். மதுராநாதர் ஒளிந்து பார்ப்பதை ஊகித்து அவரை வெளியே வரச் சொல்லி, ''மதுரா! எல்லாம் பார்த்தாகிவிட்டது. அனுபவம் முடிந்துவிட்டது. அவற்றில் சாரம் இல்லை என்று தெரிந்தது. நல்லது. இனி நான் மீண்டும் உலகிற்கு வரவேண்டியிராது,'' என்று மகிழ்ச்சியாகச் சொன்னார்.

ராமகிருஷ்ணரின் கருத்து என்னவென்றால், ஒரு விருப்பம் தீவிரமாகத் தோன்றினால் அதை அனுபவித்துவிடு என்பதுதான். அவர் ஓடிப் பதுங்குபவர் அல்லர். ராகம் (பற்று) தோன்றினால் அதை அனுபவித்து முடித்துவிடுமாறு அவர் சொல்கிறார். ஆனால் அதன் மூலம் திருப்தி கிடைக்காது என்பதைக் கற்றுக்கொள் என்று புத்திமதி கூறுகிறார்.

ஒரு கையில் மண்ணும் ஒரு கையில் வெள்ளியும் எடுத்து அவர் கங்கையில் எறிந்தது தனக்கு இரண்டும் சமம் என்று விளம்பரப்படுத்திக் கொள்ள அல்ல. பக்கத்திலிருப்பவருக்கு வாய்மொழியால் கூறாது செய்கையால் உபதேசம் செய்ய ராமகிருஷ்ணர் நினைத்திருப்பார். ஞானிகளின் உபதேசங்களை அவர்களுக்கே மீண்டும் பொருத்திப் பார்க்கக்கூடாது. உபதேசம் பெறுபவர்கள் யார் என்பதைத்தான் கவனிக்க வேண்டும். ஞானிகள் உபதேசம் கொடுத்தால் அது அவர்களைவிட்டு நீங்கிவிடுகிறது. அது யாரிடம் சென்று சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்கிறது என்று பார்க்க வேண்டும்.

ஒருவேளை ராமகிருஷ்ணர் அருகில் பணவெறி பிடித்தவன் எவனாவது தென்பட்டிருப்பான். அவனுக்கு புத்தி புகட்ட ராமகிருஷ்ணர் இவ்வாறு செய்திருப்பார். அவரது படுக்கையின்கீழ் விவேகானந்தர் வெள்ளிப்பணம் வைத்ததால் ராமகிருஷ்ணர் துடித்தமை விவேகானந்தருக்கான உபதேசமாக இருந்திருக்கும். 'நீ ஐரோப்பா போகவுள்ளாய். அங்கே பணம்தான் பிரதானம். நீ அந்த மாயவலையில் மாட்டிக் கொண்டுவிடாதே' என்பதை விவேகானந்தர் என்றும் மறக்க முடியாதபடி செய்வதற்கே ராமகிருஷ்ணர் படுக்கையில் உட்கார்ந்ததும் துள்ளித் துடித்திருக்கிறார்.

'பணம் விஷம் போன்றது' என்று வாயால் கூறுவதால் மட்டும் அது மனத்தில் ஆழமாகப் பதிந்துவிடாது. அவ்வாறு தினமும் ராமகிருஷ்ணர் சீடர்களுக்கு உபதேசித்திருப்பார். காதால் கேட்பதால் மட்டும் இந்த எச்சரிக்கை உள்ளத்தின் ஆழம்வரை போகாது. ஆகவேதான் ராமகிருஷ்ணர் நெஞ்சில் தணல் வைக்கப்பட்டதுபோல் துடித்தார். அவர் மறைந்து (1886) 130 ஆண்டுகள் ஆகிவிட்ட போதிலும் இந்த சம்பவம் பசுமையாய்

இருப்பது வாய்மொழி உபதேசத்தைவிட செய்கையால் உபதேசிப்பது அதிகப் பலன் தரும் என்பதை நிரூபிக்கிறது.

**ரா**மகிருஷ்ணர் மறைவிற்குப்பின் விவேகானந்தர் ஐரோப்பா செல்ல ஏற்பாடுகள் தயாரித்து வந்தார். ராமகிருஷ்ணரின் மனைவி சாரதா தேவியாரைச் சந்திக்க ஒருநாள் சென்றார். ஐரோப்பா செல்ல அனுமதியும் ஆசீர்வாதமும் பெறுவதற்காகவே இந்தச் சந்திப்பு.

அந்த சமயம் சாரதா தேவி சமையலில் ஈடுபட்டிருந்தார். ராமகிருஷ்ணர் மறைந்த பிறகும் அவருக்கும் சேர்த்தே சாப்பாடு தயாராகி வந்தது. ஏனெனில் ராமகிருஷ்ணர், இறக்கும் சமயம் கண்களைத் திறந்து, "நான் எங்கே போய்விடப் போகிறேன். இங்கேயேதான் இருப்பேன். அன்பர்களின் கண்களுக்கு நான் தெரிவேன். நீ அழக்கூடாது. நீ விதவையாகவில்லை. ஏனெனில் நான் இறக்கவில்லை. எப்போதும் ஒரேமாதிரி இருப்பேன். உடல் நீங்கத்தான் செய்யும். உனது திருமணம் எனது உடலுடன் சம்பந்தப்பட்டதில்லையே," என்று ஆறுதல் கூறினார்.

அக்கால விதவைகளில் சாரதா தேவியார் மட்டுமே சுமங்கலிகளின் சின்னமாகிய வளையல்களை உடைத்துக் கொள்ளவில்லை. அவர் அழுது புலம்பவும் இல்லை. சாப்பாடு தயாரானதும் தட்டில் பறிமாறியபின், "பரமஹம்ச தேவரே, சாப்பிட வாருங்கள்," என அழைப்பார். மணையருகே அமர்ந்து விசிறுவார். பிறகு எழுந்து அவருக்காகப் படுக்கை விரிப்பார். கொசுவலை தொங்கவிடுவார். "நீங்கள் இப்போது தூங்கி ஓய்வெடுங்கள்," என்று கூறிவிட்டுப் போவார்!

சாரதா தேவியார் சமையல் செய்து கொண்டிருந்தபோது விவேகானந்தர் அவரைச் சந்தித்தார். "அன்னையே! நான் பரமஹம்சரின் உபதேசங்களைப் பரப்புவதற்காக ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லவிழைகிறேன். தங்கள் அனுமதி கிடைக்குமா? தங்கள் ஆசி கிடைக்குமா?" என்று கேட்டார்.

சாரதா தேவியார் அலட்டிக்கொள்ளாமல், "விவேக், அதோ கிடக்கும் கத்தியை எடுத்துக்கொடு. காய்கறி நறுக்க வேண்டும்," என்றார்.

பொதுவாக, யாருமே கத்தியை எடுத்துக் கொடுக்கையில், பிடியைத் தன் கையில் வைத்துக்கொண்டு முனையை எதிரே நீட்டுவார்கள். விவேகானந்தர் பிடியுள்ள பகுதியை அன்னை யாரை நோக்கி நீட்டினார்.

அன்னையார் சொன்னார்: "கத்தியை அப்படியே வைத்து விடு. அது தேவைப்படாது. நான் ஒரு விஷயம் தெரிந்துகொள்ள அந்த சங்கேதத்தைச் சொன்னேன். நீ வெளிநாடு போகலாம்."

"அன்னையே! தாங்கள் சொல்வது புரியவில்லையே!"

"விவேக், உனக்கு ஆசி கூறுகிறேன். நீ வெளிநாடு செல்லலாம். உன் மனத்தில் மகாகருணை நிலவுகிறதா என்றறியவே இப்படி சோதனை செய்தேன். பொதுவாக, யாரும் தன் கையைக் கீறிவிடக்கூடாது என்பதற்காக கத்தியின் பிடிப்பகுதியைத் தன் கையில் வைத்துக்கொள்வார்கள். எதிரிலிருப்பவர் கத்தியை வாங்கும்போது கீறிவிடுமே என்று அக்கறை காட்ட மாட்டார்கள். ஆனால் நீ மாற்றிப் பிடித்தாய். கூரான முனைப் பக்கத்தை உன் கையால் பிடித்தாய். உன்னால் யாருக்கும் ஒருபோதும் துன்பம் நேராது; நீ நன்மையே செய்வாய். எனவே உனக்கு அனுமதியுடன் ஆசியும் கூறுகிறேன்," என்று அன்னையார் விளக்கினார்.

ஆகவே, குரு ஏதாவது பேசினால் அல்லது செய்தால் அது சீடனை முன்னிட்டே என்பதைப் புரிந்துகொள். குரு என்னும் தளத்தில் எந்த மாறுதலும் இல்லை. இறைவன் என்னும் ஒரே ரசத்தை உணர்ந்தபின் பொருள்களுக்கிடையே உள்ள வேறுபாடுகள்-மண்-வெள்ளி-என்ற வித்தியாசங்கள் மறைந்து விடுகின்றன. எல்லாமே கடவுள் படைத்தவை என்பதால் அனைத்தும் சமம்.

அஷ்டாவக்ரர் ராகம் (பற்று), விராகம் (வெறுப்பு) இரண்டும் கடந்த நிலையை வலியுறுத்துகிறார். அதற்கு ராமகிருஷ்ணர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறார். ஏனெனில் அவர் அனுரக்தி (ஒட்டுதல்), விரக்தி (விலகுதல்) ஆகிய இருநிலைகளையும் கடந்தவராயிருக்கிறார்.

## நான்காம் கேள்வி

> **"ஓஷோ அவர்களே! நீங்கள் எங்களுக்கு 'ஓடாதே, விழி, சாட்சியாகு' என்று உபதேசிக்கிறீர்கள். ஆனால் வேலை பார்க்கும்போது லஞ்சமும், நண்பர்கள்–உறவினர்களால் மது, மாமிசமும் எங்களைத் தடுமாற வைக்கின்றன. நிலக்கரி நிரம்பிய அறைக்குப் போனால் கரியின் கறைபடாமல் வெளியில் வர முடியுமா?"**

**சாட்சி** மனப்பான்மை உண்டாகும்போது உன்னிடம் மாறுதல் நிகழ்கிறது. அது உன்னைக் கோழையாக ஓடிப்போகச் செய்வதில்லை. உன்னை விழிப்புப் பெற்றவனாக மாற்றுகிறது.

கோழையாக லஞ்சத்தைத் துறப்பதும், விழிப்புப் பெற்று லஞ்சத்தைத் தவிர்ப்பதும் வெவ்வேறானவை. சாஸ்திர நூல்கள், 'லஞ்சம் வாங்காதே. நரகத்தில் அழுகுவாய். சுவர்க்கம் கிடைக்காது.' என்று பயமுறுத்துவதன் காரணமாக நீ லஞ்சத்தைத் தவிர்த்தால், அது கோழைத்தனம் காரணமாகத் தான் என்று அர்த்தம். அப்போதும் உனக்கு சுவர்க்க வாழ்க்கை என்னும் மறைமுக லஞ்சம் தரப்படுகிறது.

பக்தன் கோயிலுக்கு வந்து துதி (ஸ்துதி) செய்கிறான். அதன் அடிப்படையில் முகஸ்துதி உள்ளது. 'நீ மகான். நான் அற்பன். நீ பாவம் போக்குபவன். நான் மகாபாவி" என்று கடவுள் சிலையை நோக்கிச் சொல்கிறான். இதுவும் ஏமாற்றுவேலைதான், முகப்புகழ்ச்சிதான்.

இதேபோல் நீ அரசியல் தலைவரிடமும் பேசுகிறாய். "நீங்கள் மாமனிதர். நீங்கள் இல்லாவிடில் இந்த நாட்டின் கதி என்ன ஆகும் என்று கற்பனை செய்துகூட பார்க்க முடியவில்லை. நீங்கள் இல்லாமல் நாடே இருண்டு போயிருக்கும்," என்பாய். உன் புகழ்ச்சியால் அவர் நெகிழ்ச்சியடைவார். அதைக் கவனித்து நீ தொடர்வாய். "நான் உங்கள் கால்தூசிக்கு சமமானவன். நான் என்றும் உங்கள் ஊழியன்," என்பார். அவர் மேலும் நெகிழ்ந்துபோவார். இதுதான் சரியான சமயம் என்று நீ அவரிடம்

ஒரு கோரிக்கையை அல்லது தேவையை நிறைவேற்றித்தரச் சொல்லுவாய். அவரால் மறுக்க முடியாது. ஏனெனில் நீ அவரை மாமனிதர் என்று புகழ்ந்திருக்கிறாய். ஆகவே உன் வேண்டுகோளை நிறைவேற்றாவிடில் தனது மாமனிதர் அந்தஸ்து பங்கமுறுமே என அவர் அஞ்சுவார். கடவுள் சந்நிதியிலும் நீ இதே தந்திரத்தைப் பயன்படுத்துகிறாய். நீ கொடுப்பதாகச் சொல்லும் காணிக்கை என்பது லஞ்சத்தின் இன்னொரு பெயர்தான். நீ அந்தத் தலைவரிடம் வெட்டொன்று துண்டொன்றாக 'என் கோரிக்கையை நிறைவேற்றுங்கள்,'' என்று ஒற்றை வரியில் கேட்டால் அவர் உன்னைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிடுவார்.

நீ லஞ்சம் வாங்கினால் நரகத்திற்குப் போவாய் என்று நான் கூற விரும்பவில்லை. அப்படி நீ நரகத்திற்குப் போவாயா என்பது எனக்கு உறுதியாகத் தெரியாது. நரகத்திலும் லஞ்ச வழக்கம் இருக்கும். சாத்தானுக்கு லஞ்சம் கொடுத்தால் அவன் உன்னைச் சூடில்லாத எண்ணெய்க் கொப்பரையில் போடுவான் அல்லது ஆபத்தில்லாத மாற்று வேலை கொடுப்பான். சுவர்க்கத்தின் நுழைவு வாயிலிலும்கூட லஞ்சம் தருவது தேவைப்படலாம். உலகங்களின் பெயர்கள் வெவ்வேறாக இருந்தாலும் நடைமுறைகள் ஏறத்தாழ ஒரேமாதிரி இருக்கக்கூடும். மேலே எப்படியோ கீழேயும் அப்படியே என்று ஒரு பழமொழிகூட உண்டு (As above so below). எல்லாப் படைப்பும் மொத்தத்தில் ஒன்றுதான். ஆனால், சுவர்க்கத்திற்குள் நுழைவதற்கு லஞ்சமாக நற்செயல்கள் என்னும் செல்வம் திரட்டு.

சுவர்க்கத்தில் வாழும் தேவர்கள் அப்படி ஒன்றும் யோக்கியமானவர்கள் இல்லை.* யாராவது முனிவர் கடுந்தவம் செய்தால் இந்திரனின் சிம்மாசனம் ஆட ஆரம்பிக்கிறது. இந்திரனுக்கு நடுக்கம் ஏற்படுகிறது. அவனும் பயம், போட்டி மனப்பான்மை ஆகிய உணர்ச்சிகளுக்கு ஆளாகிறான். தேவர்களும் மனிதர்களைப் போலவே நடந்து கொள்கிறார்கள். பெண்ணாசையில் அவர்கள் மனிதர்களைவிட மோசமானவர்

* தேவர் அனையர் கயவர் (திருக்குறள் 1073)

களாக இருக்கிறார்கள்! மனிதர்களின் குணங்கள் எல்லாம் அவர்களிடமும் காணப்படுகின்றன. உணவாசை, உடையாசை, நகையாசை, பெண்ணாசை, பதவியாசை, பொறாமை, கோழைத் தனம் அவர்களிடமும் உண்டு — ஆனால் மனிதர்களைவிட கூடுதலாக!

லஞ்சம் பெறுவதில் துன்பம் அடங்கியுள்ளது. அதுவே துன்பம் நரகம் முதலியவை இரண்டாம் பட்சம். திருடுவதால் விளையும் பலன் இரண்டாம் பட்சமானது. திருடுதலே துன்பம்தான். திருடனாக மாற நேரிடுகிறதே என்ற நினைப்பே வேதனை யானதுதான். இவ்வுலகில் திருடுவதால் நரகத்தில் எண்ணெய்க் கொப்பரையில் வாட்டப்பட்டு ஒருவன் துன்பப்படுவான் என்று நான் கூறவில்லை. திருடுவதால் அவன் இவ்வுலகிலேயே தானே தன்னை எண்ணெய்க் கொப்பரையில் தள்ளிக் கொள்கிறான். தான் மூட்டிய திருட்டு என்ற நெருப்பில் தானே விழுகிறான்.

பொய் பேசுவதால், விளைவு எதுவானாலும், தொந்தரவு உனக்குத்தான், உண்மை பேசும்போது நீ மலரைப் போல் சுதந்திரமாக விரிகிறாய். பொய் பேசுகையில் அச்சத்தால் ஒடுங்குகிறாய். ஒரு பொய்யை மறைக்கப் பத்து பொய் கூற நேரிடுகிறது. பொய்கள் சங்கிலித் தொடர்போல் வரிசையாக அமைந்து விடுகின்றன.

சத்தியம் மலடி போன்றது. அதிலிருந்து இன்னொரு சத்தியம் தோன்றுவதில்லை. ஒரு தடவை உண்மை சொன்னால் அத்துடன் விஷயம் முடிந்துபோனது. அதற்குக் குழந்தைகள், பேரக் குழந்தைகள் என்றெல்லாம் பிறப்பதில்லை.

பொய் இந்தியப் பெற்றோர்களைப் போன்றது. கியூபோல் குழந்தைகளின் வரிசையை ஏற்படுத்திவிடுகிறது. அந்தக் குழந்தைகளிலிருந்து புதிய குழந்தைகள் பிறக்கின்றன. இவ்வாறு எண்ணற்ற பொய்களால் சூழப்பட்ட நீ அவற்றிலிருந்து வெளியே வருவது கடினம்.

ஒரு சிறிய பொய்யை மறைக்க அதைவிட பெரிய பொய் சொல்ல வேண்டியுள்ளது. இப்படி பொய் வளர்ந்து-வளர்ந்து மலைபோல் ஆகிறது. நீ அதன் கீழ் மாட்டிக்கொண்டு நசுங்கிப்

போகிறாய். வெளியேற முடியாமல் அங்கேயே கிடந்து அழுகிப் போகிறாய்.

நீ அன்பை வெளிப்படுத்தும்போது உனக்குள் நறுமணம் எழுகிறது. இனிய இசை கேட்கிறது. சலங்கை ஒலிக்கிறது. சிறிது நேரம் நீ சுவர்க்கத்தில் இருப்பதுபோல் உணர்கிறாய். ஆனால் கோபம் பொங்கும்போது நீ ராட்சசனாகிறாய். நரகம்போல் உணர்கிறாய்.

ஆனால் சுவர்க்கம், நரகம் என்றெல்லாம் கிடையாது. நிலப்படத்தில் அவற்றைப் பார்க்க முடியாது. அவையிரண்டும் உன் மனத்தில் எதிரெதிரான நிலைகள்தாம், ஒவ்வொரு நிமிடமும் நீ கடிகார ஊசல்போல் சுவர்க்கத்திற்கும் நரகத்துக்குமிடையே அசைந்தாடிக் கொண்டிருக்கிறாய்.

உறவினர்களின் மது மாமிசப் பாதிப்பிற்கு அஞ்சி நீ ஓட விரும்புவதாய்ச் சொல்கிறாய். நீ வேறெங்கு போனாலும் புதிய உறவினர்களை ஏற்படுத்திக் கொள்வாய். உன் ஊரில் மட்டும்தானா குடிகாரர்கள் உண்டு? நீ எந்த ஊருக்குப் போனாலும் குடிப்பவர்கள் நிச்சயமாக இருப்பார்கள். நீ எந்த வேலைக்குப் போனாலும் எந்த வடிவிலாவது லஞ்சம் அங்கும் எதிர்ப்படும். நீ எங்கே ஓடிப்போவாய்? உன்னை யாரும் குடிக்கச் சொல்லிக் கட்டாயப்படுத்தவில்லையே. நீ விழிப்புப் பெற்றால் குடிப்பதை நீயாகவே தவிர்ப்பாய்.

மற்றவர்கள் வற்புறுத்துகிறார்கள் என்பதற்காக நீ விஷம் குடிப்பாயா? பிறர் எவ்வளவு வற்புறுத்தினாலும், முகத்துதி செய்தாலும், கெஞ்சினாலும் நீ விஷத்தைத் தொடமாட்டாய். குடித்தால் உயிர் போய்விடுமென உனக்குத் தெரியும். இந்த எச்சரிக்கையான விழிப்புணர்வை நீ மது விஷயத்திலும் பிரயோகித்தால், உன்னால் குடிக்க முடியுமா? உன்னைப் பிறர் வற்புறுத்திக் குடிக்கவைக்க முடியுமா? மற்றவர்கள்கூட உன் எதிரே குடிக்கத் தயங்குவார்கள்.

மற்றவர்கள் மீது பழி சுமத்தாதே. அவர்கள் தலையில் பொறுப்பைத் தள்ளிவிடாதே. 'நான் என்ன செய்வது? சொந்தக்

காரர்கள் குடிக்கிறார்கள், மாமிசம் சாப்பிடுகிறார்கள்' என்று அப்பாவிபோல் நாடகமாடாதே. உன் அடிமனத்தில் குடிக்கவும் மாமிசம் உண்ணவும் ஆசை மறைந்துள்ளது. ஆனால் உறவினர் களைக் காரணம் காட்டுகிறாய். ஊரோடு ஒத்துவாழ்வதைத் தவிர வேறு வழியில்லை என்று தத்துவம் பேசுகிறாய். இதற்கெல்லாம் அர்த்தம் நீ விழித்துக்கொள்ள விரும்பவில்லை என்பதுதான்.

நீ உன் வாழ்க்கையில் எதையுமே கட்டாயப்படுத்தப்பட்டுச் செய்யவில்லை என்பதே என் முடிவு. உள்ளத்தின் ஆழத்தில் நீ விரும்புவதையெல்லாம் செய்கிறாய். உறவினர்களுடன் பகைத்துக் கொள்ளலாமா என்று கேட்பாய். உறவினர்கள் அப்படி என்ன செய்து விடுவார்கள்? தங்கள் குடும்பங்களில் நிகழும் நல்லது-கெட்டதற்கு உன்னை அழைக்க மாட்டார்கள். அவ்வளவுதானே? நல்லதாகப் போயிற்று. நீ அவ்வகையில் அதிர்ஷ்டசாலி. உன்னை அப்படி விலக்கியமைக்கு நீ அவர்களுக்கு நன்றி அல்லவா சொல்ல வேண்டும்.

நீ லஞ்சம் வாங்காவிடில் கொஞ்சம் ஏழையாக நீடிப்பாய்; சிறிதளவு பணக்கஷ்டம் இருக்கும். அவ்வளவுதான். ஆனால் நீ நேர்மையாக இருந்தால் உன் வீட்டின் கூரையைப் பிய்த்துக் கொண்டு பணம் கொட்டுமாறு கடவுள் ஏற்பாடு செய்வார் என்று நான் கூறத் தயாராக இல்லை. அவ்வாறு உன்னிடம் சொல்பவர்கள் பொய்யர்கள். அவர்கள் உன்னை ஏமாற்றுகிறார்கள்.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சிலர், "நாங்கள் நேர்மையாளர்கள். ஆனால் சமூகத்தில் மோசடி பேர்வழிகள்தாம் வசதியாக வாழ்கின்றனர். ஏன் இந்த முரண்பாடு?" என்று கேட்கிறார்கள்.

நான் திருப்பிக் கேட்கிறேன், "நேர்மையாளர்கள் வசதியாக வாழ்வார்கள் என்று எதை வைத்துச் சொல்கிறீர்கள்? அப்படி யாராவது உங்களிடம் கூறியிருந்தால், அவன் உங்களை ஏமாற்றியிருக்கிறான். சரி, வசதி என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"மோசடிப் பேர்வழிகள்தாம் பெரிய வீடு கட்டி வாழ்கிறார்கள்," என்று பதில் கிடைக்கிறது.

இவர்கள் ஏமாற்றி வாழ விரும்பவில்லை. அதே சமயம் பெரியதாக ஒரு வீடு கட்டி வாழவேண்டும் என்றும் ஆசைப்படு கிறார்கள். முரண்பாடு இங்குதான் உள்ளது. மோசடி பேர்வழிகள் ஏமாற்றி நிறையச் சம்பாதிப்பதால் அவர்கள் பெரிதாக வீடு கட்டுவதில் முரண்பாடில்லை. நேர்மையுடன் இருப்பவர்கள் சிறிய வீடுதான் கட்ட முடியும்.

சிறிய வீட்டிலும் ஒருவர் சுகமாக வாழ முடியும். பெரிய வீட்டில்தான் சுகம் கிடைக்கும் என்று சொல்பவர் யார்? பெரிய வீடுகளில் வசிப்பவர்களைக் கேட்டுப்பார். சுகமாக இருக்கிறோம் என்று சொல்பவர்கள் மிகக் குறைவாக இருப்பர். இதுபோலவே, நிறையப் பணம் இருந்தால் அதே விகிதப்படி சந்தோஷமும் அதிகம் கிடைக்கும் என்றும் சொல்ல முடியாது. வரலாற்றில் பார்த்தால் பேரரசர்கள் விறகுவெட்டிபோல் நிம்மதியாக ஆழ்ந்து தூங்கியதில்லை என்பது தெரியவரும். பெரும் செல்வந்தர்கள் அமைதியாகவா விளங்குகிறார்கள்? ஓய்வாகவா வாழ்கிறார்கள்? நீ வெளியிலிருந்து மேலோட்டமாக அவர்களது வாழ்க்கையைப் பார்த்து பிரமிக்கிறாய்.

உன் ஆழ்மனத்தில் இந்த வசதிகளின் மீது ஆசை இருக்கிறது. நம்மிடமும் பெரிய வீடு இருந்தால், நம்மிடமும் கார் இருந்தால், நம்மிடமும் பணக் குவியல் இருந்தால் என்றெல்லாம் ஏங்குகிறாய். இவற்றையெல்லாம் நேர்மையான முறையிலும், லஞ்சம் வாங்காமலும் சம்பாதிக்க ஆசைப்படுகிறாய். இரண்டு கைகளிலும் லட்டு வேண்டும் என எதிர்பார்க்கிறாய். நேர்ன்மயின் பெயரில் ஜெபமாலை உருட்டுகிறாய், தியானம் செய்கிறாய். நேர்மையும் ஆடம்பரமும் ஒரேசமயம் இருப்பது நடக்க முடியாத காரியம்.

மோசடிக்காரர்கள் பற்றிய உன் கண்ணோட்டம் நியாய மற்றது. பாவம், மோசடி செய்பவர் எவ்வளவு சிரமப்பட்டு, திட்டம் போட்டு ஏமாற்றும் வேலை செய்யவேண்டியுள்ளது! நரகத்திற்குப் போகும் அபாயமும் உள்ளது. பெரிய வீடாவது கட்டி வாழ்ந்துவிட்டுப் போகட்டுமே. அவன் ஆத்மாவையே அல்லது மனசாட்சியையே அல்லவா விற்றுவிடுகிறான். பெரிய வீடும்,

வசதிகளும், செல்வமும் அந்த இழப்பை ஈடுசெய்ய முடியுமா? அவன் பிறரை ஏமாற்றுவதற்காகப் படும் கஷ்டங்களோடு ஒப்பிட்டால் அவனுக்குக் கிடைக்கும் வாழ்க்கை வசதிகள் குப்பைதான். ஆகவே நேர்மையாளனாகிய உன் பார்வையும் போலி வசதிகளான அந்தக் குப்பையில்தான் படிந்திருக்கலாமா?

உன்னால் நேர்மையைக் கைவிடவும் முடியவில்லை. அதே சமயம் மோசடிக்காரனிடம் உள்ள வசதிகளையும் நீ பெற ஆசைப்படுகிறாய். நீ ஓட்டப்பந்தயத்தில் கலந்து கொள்ளாமல் முதலிடமும் பரிசும் பெற விரும்புகிறாய். ஆனால் நீ ஓரிடத்திலேயே உட்கார்ந்துகொண்டு பரிசு கிடைக்கவில்லையே என்று புகார் செய்கிறாய். அவர்கள் ஓடுகிறார்கள். முதலிடம் பெறுகிறார்கள். ஓடுபவர்களுக்காகத்தானே பரிசு ஏற்பாடு? ஆனால் அதற்கான பயிற்சி, நீண்டகால உழைப்பு, ஓடும்போது உணரும் சிரமம், கொட்டும் வியர்வை ஆகியவற்றை ஓடுபவர்கள் பொறுத்துக் கொள்கிறார்கள். நீயோ அசையாமல் உட்கார்ந்தபடி முதலிடம் பெற விரும்புகிறாய். உன் வாழ்வில் கடவுள் ஏதாவது அதிசயத்தை நிகழ்த்தட்டும் என்று காத்திருக்கிறாய். ஏன்? ஏனென்றால் நீ நேர்மையாளன் என்னும் தலைக்கனம் உனக்கு இருக்கிறது.

நீ லஞ்சம் வாங்கவில்லையென்றால் அதை வாங்கும்போது ஏற்படக்கூடிய சங்கடத்திலிருந்து தப்பிவிட்டாய். அதனால் விளையக்கூடிய ஆபத்திலிருந்து தப்பிவிட்டாய். லஞ்சத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தால் அனுபவிக்கக்கூடிய போலியான, தற்காலிக சுகங்களிலிருந்தும் தப்பிவிட்டாய். நீ சிக்கல்களில் அகப்பட்டுக் கொள்ளாமல் இருந்துவிட்டாய். இத்தனை நல்விளைவுகள், நிம்மதி உனக்குக் கிடைக்கின்றனவே, இது போதாதா?

'நீ விழிப்புப் பெறு' என்று நான் சொல்வதன் பொருள் நீ வாழ்க்கையைப் பரவலாகப் பார் என்பதாகும். அவ்வாறு விரிந்த பார்வை கொண்டால் உனக்குள் ஒரு புரட்சி நிகழும். எதெல்லாம் தேவையில்லையோ, வீணானதோ — அது பொருளாயினும் சிந்தனையாயினும்-அது துன்பம் தருகிறது; இப்போதே இந்த

நிமிடமே தருகிறது: இங்கேயே தருகிறது. இந்த விஷயம் புரிந்துபோனதும் துன்பத்திலிருந்து உனக்கு விடுதலை கிடைக்கத் தொடங்குகிறது. உன் வாழ்க்கையில் சுகத்தின் வீணை ஒலிக்கத் தொடங்குகிறது.

நீ சற்று விழித்தால் உன் வாழ்வில் தானாகவே புரட்சி நிகழும். நீ உறவினர்களை விட வேண்டியிருக்காது. வேலையை விட்டு விலக வேண்டியிருக்காது. சாட்சி மனப்பான்மை ஏற்பட்டுவிட்டால், நீ லஞ்சம் வாங்குபவர்களைப் பார்ப்பாயே ஒழிய, நீ லஞ்சம் வாங்கமாட்டாய். அவர்களை வெறுக்கவும் மாட்டாய். மது-மாமிசத்தில் ஈடுபடும் உறவினர்களை பார்ப்பாயே ஒழிய நீ அவற்றை ஏற்கமாட்டாய். இதற்காக உன் உறவினர்களை வெறுக்கவும் மாட்டாய்.

வாழ்க்கையில் சலிப்புற்று அல்லது பிரச்சினைகளுக்கு அஞ்சிப் பலர் சாமியார் ஆகிறார்கள். ஆனால் துறவறம் மேற்கொண்ட எல்லோரும் அத்தகைய கோழைகள் அல்லர். சகஜமாக, சுபாவமாக அந்த சிலருக்குத் துறவறத்தில் நாட்டம் தோன்றுகிறது. புண்ணியம் சம்பாதிப்பதுகூட அவர்களின் லட்சியமாக இருக்காது. துறவறம் காந்தசக்திபோல் தன்பால் இவர்களை இழுக்கிறது.

இதோ எதிரில் உட்கார்ந்திருக்கும் என் சீடர்களில் 'கிருஷ்ண மொகம்மதும் (!) ஒருவர். இவர் மிலானோவில் (இத்தாலியின் தலைநகரான மிலன்) பெரிய பதவியில் இருந்தவர். எல்லா வசதிகளையும் உதறிவிட்டு இங்கே வந்துவிட்டார். வாழ்க்கைக்கு பயந்து கோழையாக ஓடிவரவில்லை. இயற்கையான தூண்டுதலால் துறவறம் மேற்கொள்ள இந்தியாவிற்கு வந்தார். மகாராஷ்டிரத்தில் உள்ள சுற்றுலாத் தலமாகிய பஞ்சகனியில் ஆசிரமம் அமைத்து வாழ நினைத்தார். வழியில் இங்கு புணேயில் (பூனாவில்) என்னைச் சந்தித்தார். என்னுடன் உரையாடிய பிறகு அவர் இங்கேயே தங்கிவிட முடிவெடுத்தார்.

நீ அமைதியானவனாகிவிட்டால், சாட்சியாகிவிட்டால், பரமானந்தத்தால் நிறைந்துபோனால், நீ தொடர்ந்து வீட்டிலேயே இருப்பாய் என்ற சொல்ல முடியாது. அநேகமாக நீ குடும்பத்தை

விட்டு வெளியேறி விடுவாய். இதில் ஒரு சிறப்பு இருக்கிறது. நீ ஒன்றிலிருந்து ஓடிப்போகவில்லை; ஒன்றை நோக்கிப் போகிறாய். போலி சாமியார் எதையோ விட்டு ஓடுகிறான். அவன் கண்கள் அவன் எங்கே போக வேண்டும் என்பதைக் கவனிப்பதில்லை; எங்கேயிருந்து போகிறான் என்பதைக் கவனிக்கின்றன. வீடு, குடும்பம், மனைவி, குழந்தைகளை நினைத்தபடியே சாமியாராகிறான். உண்மையான துறவியை எங்கிருந்தோ ஒரு குரல் அழைக்கிறது. அக்குரலைத் தடுக்க முடியாது. நீ ஓடவில்லை; உன்னை ஒரு சக்தி இழுத்துச் செல்கிறது. இயற்கையான தூண்டுதலுடன் நீ துறவியானால் நீ அதிர்ஷ்டசாலி. ஓடிப்போய் துறவியானால் எதையெல்லாம் விட்டு ஓடினாயோ அவற்றையே நினைத்து வருந்துவாய். அந்தப் பாசப் பிடிப்பைப் பிறர் முன்னிலையில் வெளியிட முடியாதபடி துடிப்பாய்.

நீ லஞ்சம் நிறைந்த சூழ்நிலையில் இருக்க அஞ்சி ஓடிப்போய் சாமியாரானவன் என வைத்துக் கொள்வோம். மரத்தடியில் உட்கார்ந்தபடி பாதையையே பார்த்தவண்ணம் இருப்பாய். எவனாவது பக்தன் வந்து காணிக்கை செலுத்த மாட்டானா என ஏங்குவாய். அதுவும் லஞ்சம்தான். எவனாவது நிரந்தரமான சீடன் கிடைத்துவிட்டால் உனது உணவு, உடை, இருப்பிடம் பிரச்சினையும் நீங்கிவிடும். மழைக்காலம் வந்தாலும் கவலையில்லை.

இவ்வாறு நீ எதைவிட்டு ஓடிவந்தவனாயிருந்தாலும் மொத்தத்தில் எதை விட்டும் ஓடமுடியாதவனாகி விடுகிறாய். விழிப்புப்பெற்றவனாக ஆனால், ஓடாதவனாயினும் நீ ஓடியவனே. எதை விட்டு ஓடினாலும் ஓடாவிட்டாலும் ஒன்றே. உன் வாழ்க்கை புது வடிவம் எடுக்கிறது. நிலக்கரி அறைக்குள் நீ போய்வந்தாலும் உன் மீது கருப்புக் கறை படியாது. உடம்பில்தானே கறைபடும். ஆனால் நீ உடம்பல்லவே. ஆடையில் கறை படியக்கூடும். ஆனால் நீ துணியல்லவே. நிஜமான உன்மீது எக்கறையும் படிய முடியாது. நீ சுபாவமாகவே களங்கமில்லாதவன். நீ சுத்தமானவன்.

**உனக்குள் ஒடுங்குவதால் பயனில்லை**
**நடுநிலையில் நின்றாலும் பயனில்லை;**
**உலகத்தின் நடுவில் இருந்தபடி,**

**துன்பங்கள் அனைத்தும் பொறுத்தபடி,**
**வாழ்வதே உண்மை வாழ்க்கையாகும்**
**குறுகலாயினும் வாழ்க்கை நீரோட்டத்தில்**
**இறங்கிவிடு துணிச்சலாக.**
**கோயிலிலிருந்து கடைத்தெருவிற்கும்**
**கடையிலிருந்து கடவுள் வரையிலும்**
**மீண்டும்-மீண்டும் போய்வா**
**கரையில் மௌனமாய் உட்கார்ந்திராமல்**
**புயலின் நடுவே பலமாய்ப் பாடு.**

கடவுள் உலகைப் படைத்ததன் மூலம் ஒரு மாபெரும் திருவிழா நடத்திவருகிறார். இதை நீ தொலைவிலிருந்து வேடிக்கை பார்த்தபடி நிற்காதே. நீயும் அதில் பங்கு பெறு. ஆடு. பாடு. ஆனாலும் சாட்சியாகவே இதையெல்லாம் செய்ய வேண்டும். நீ ஒதுங்கி நின்று, கரையிலேயே உட்கார்ந்திருக்கும் பார்வையாளனாக இருந்தால், நீ வலிமை குன்றியவனாக இருப்பாய். நதியின் பிரவாகத்தில் திளைத்து, புயலுடன் விளையாடியபடியே சாட்சியாகவும் இருப்பதில் என்ன பிரச்சினை? மலைமேல் தனியாளாக நின்றால்தான் சாட்சியாக முடியுமா? கடைத்தெருக் கூட்டத்தில் நின்றால் சாட்சியாகப் பார்க்க முடியாதா? கடைத்தெரு சூழ்நிலையிடம் ஏன் பயப்படுகிறாய்?

உன் வேலை பார்ப்பது மட்டுமே. பார்க்கின்றவன் நீ என்பதை அறிந்திருந்தால் போதும். பிறகு நீ மலையைப் பார், மரத்தைப் பார்; நதியைப் பார், நீர்வீழ்ச்சியைப் பார்; கூட்டத்தைப் பார், கடைகளைப் பார். பார்க்கப்படுவது எதுவானால் என்ன? நீ சாட்சியாக எதையும் பார்; எல்லாவற்றையும் பார். அடிப்படையில் அவை வெறும் தோற்றமே என்பதை நினைவில் வை.

ரமண மகரிஷிக்கு அருணாசல மலை மீது சிநேகம். ஒவ்வொரு நாளும் பலமுறை எழுந்து மலைக்குப் போய்விடுவார். காலை உணவு, மதிய உணவு, தூக்கம், சத்ஸங்கம் இவற்றின் இடையிடையே அவர் மலைக்குக் கிளம்பிவிடுவார். ஆனால் விசாலமான மலையாதலால் அதன் எல்லாப் பகுதிகளையும் பார்த்ததில்லை.

ஒருநாள் அவர் பக்தர்களிடம் சொன்னார்: "மலைக்குப் போனால் ஒவ்வொரு சாப்பாட்டு வேளையிலும் நான் ஆசிரமத்திற்குத் திரும்ப வேண்டியுள்ளது. நாளைக்கு நான் உபவாசம் கடைப்பிடிக்கப் போகிறேன். இதனால் நான் இடையிடையே ஆசிரமத்திற்குத் திரும்பி வேண்டியிருக்காது. நாளை பட்டினியிருந்து மாலைவரை நான் இந்த மலையில் இதுவரை பார்க்காத பகுதிகளைத் தேடிப்பார்க்கப் போகிறேன். தொலைவில் ஓர் அருவியின் ஓசை கேட்கிறது. இதுவரை அங்கு போய்ப் பார்க்க முடியவில்லை. அதையும் பார்த்து வருகிறேன்."

இரவு பக்தர்கள் அவர் எவ்வளவோ மறுத்தும் நிறையச் சாப்பிட வைத்தார்கள். 'நான் மலையேற வேண்டும். வயிறு நிரம்பியிருந்தால் நடக்க முடியாது.' என்று அவர் சொல்லியும் பக்தர்கள் கேட்கவில்லை. சாட்சி மனப்பான்மை உடையவன் முதலில் தன் பக்கத்தை எடுத்துரைப்பான். பிறர் கேட்காவிடில், 'சரி. நடப்பது நடக்கட்டும்' என விட்டுவிடுவான்.

மறுநாள் காலை ரமணர் மலை ஏறத் தொடங்கினார். வழியில் ஒரு பக்தன் காலை உணவுடன் காத்திருந்தான்! ரமணர் காலைப் பிடித்துக்கொண்டான். ரமணர் திகைத்துப் போனார். இப்போது சாப்பிட உட்கார்ந்தால் நான் மலையைச் சுற்றுவதில் தாமதம் ஏற்படும் என்று அவர் சொல்லிப் பார்த்தார். அவனோ கேட்பதாயில்லை. வேறு வழியில்லாமல் ரமணர் அவன் கொண்டுவந்ததைச் சாப்பிட்டுவிட்டு நடையைத் தொடர்ந்தார்.

ஒன்றிரண்டு மணி நேரம் நடந்தபின் ஐந்தாறு பெண்மணிகள் அவரை வழிமறித்தனர். நண்பகல் உணவு கொண்டு வந்துள்ள தாகத் தெரிவித்தனர்! இந்த அப்பாவிப் பெண்கள் தன் மீதுள்ள பக்தியால் உணவு தயாரித்து, மலையேறி வந்திருக்கிறார்களே என்ற அனுதாபம் காரணமாக ரமணர் அந்த மதிய உணவையும் ஏற்றுக்கொண்டார்.

அவர் நினைத்த அளவிற்கு அவரால் மலையைப் பார்வையிட முடியவில்லை. உணவு கொண்டுவந்து பக்தர்கள் தாமதப்படுத்தியதாலும், உண்டபின் ஓய்வெடுத்ததாலும், உண்ட

களைப்பால் நடைவேகம் குறைந்ததாலும் அவரால் வழக்கமான அளவிற்குக்கூட மலையைச் சுற்ற முடியவில்லை.

இருள் சூழும் நேரம். ரமணர் ஆசிரமத்திற்குத் திரும்பினார். சாப்பாடு தயாராக இருந்தது! "சுவாமி, தாங்கள் நாள் முழுதும் உபவாசம் என்றதாலும், நடந்து களைத்திருப்பீர்கள் என்பதாலும், வழக்கத்தைவிட சீக்கிரமாகவே உணவு தயாரித்து விட்டோம்," என்று பக்தர்கள் தெரிவித்தனர்.

ரமணர் சிரித்தபடி, "நானா இன்று உபவாசம் இருந்தேன். வழக்கத்தைவிட அதிகமாக அல்லவா இன்று சாப்பிட நேர்ந்தது. போதும். இனி என்றும் உபவாசம் இருக்கமாட்டேன்," என்று அறிவித்தார். ஆம், பிறகு வாழ்ந்த காலத்தில் அவர் உபவாசம் மேற்கொண்டதில்லை.

இதுதான் சாட்சி மனப்பான்மை. உபவாசம் இருந்தாலும் அதில் அரசியல்வாதிபோல் பிடிவாதம் கிடையாது. நீயாக இருந்தால் உணவு கொண்டு வந்தவர்களைப் பார்த்துக் கூச்சல் போட்டிருப்பாய். "என்னை என்னவென்று நினைத்தீர்கள்? என் விரதத்தைக் கெடுக்கவா வந்திருக்கிறீர்கள்? தவத்தைக் கெடுக்க இந்திரன் அனுப்பும் அப்சரசுகள் என்றா நினைத்துக் கொண்டீர்கள்?" என்றெல்லாம் திட்டியிருப்பாய். ஆனால் ரமணரோ பக்தர்களின் குழந்தையுள்ளத்தைக் கவனித்து நெகிழ்ந்து கொடுத்தார்.

ரமணரின் கையில் புற்றுநோய்க் கட்டி தோன்றியது. ஆசிரம டாக்டர் அவரைக் குளியலறைக்கு அழைத்துச்சென்று, கட்டியை ஆபரேஷன் செய்துவிட்டார். கட்டி மேற்புறமாக இருந்ததால் அவ்வாறு செய்தார். அதே இடத்தில் மீண்டும் பெரியதாகக் கட்டி தோன்றியது. செப்டிக் (நச்சுத் தொற்று) ஏற்பட்டது. சென்னையிலிருந்தும், கொல்கத்தாவிலிருந்தும் டாக்டர்கள் வந்து 4-5 முறை அறுவை சிகிச்சை செய்தனர். இப்படியே ஓராண்டு ஓடிவிட்டது.

ரமணர் தடுத்துப் பார்த்தார். "சிகிச்சை போதும். இயற்கை தனது வேலையைச் செய்யட்டும். நீங்கள் ஏன் அதன் போக்கில் குறுக்கிடுகிறீர்கள்?" என்று சொல்லிப்பார்த்தார்.

அவர் பேச்சை யாரும் கேட்பதாக இல்லை. "பகவானே, அமைதியாக இருங்கள். நோய் விஷயத்தில் தலையிடாதீர்கள். என்ன செய்ய வேண்டுமென்று டாக்டர்களுக்குத் தெரியும்," என்று பக்தர்கள் கூறிவிட்டனர்.

ஓராண்டு முடிந்தது. டாக்டர்கள்தாம் களைத்துப்போனார்கள். தோல்வியை ஒப்புக்கொண்டார்கள். ரமணர் சிரித்தார். "நீங்கள் தேவையில்லாமல் அலட்டிக்கொண்டு கவலைப்படுகிறீர்கள் என்று நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். என்ன நடக்க வேண்டுமோ அதை நடைபெறவிடுங்கள். அவ்வப்போது அறுவை செய்து என்னைப் படுக்கையில் தள்ளிவிட்டீர்கள். ஆங்காங்கே வெட்டிப் போட்டு விட்டீர்கள். மனிதனின் விருப்பப்படி எதுவும் நடப்பதில்லை என்று அப்பொழுதே சொன்னேன். அதையே நீங்கள் இப்போது வேறுவிதமாக, 'எங்களால் முடிந்தது இவ்வளவுதான்' என்று கூறுகிறீர்கள். நடப்பது நடந்தே தீரும்*. அதைத் தடுக்க முயலாமல் நடைபெறவிடுங்கள்," என்று டாக்டர்களுக்கே ஆறுதல் கூறினார்.*

ரமணர் மறைவதற்கு (1950) சற்றுமுன், "பகவான், தாங்கள் திரும்பிவருவீர்களல்லவா?" என்று ஒரு பக்தர் கேட்டார். அதற்கு ரமணர், "நான் போவதற்கு இடம் எங்கே உள்ளது? நான் எப்பொழுது வந்தேன்? பிறகு எப்படி நான் போகமுடியும்? எப்போதும் ஒரே நிலையில் இருப்பவன் மீண்டும் வருவதைப் பற்றி என்ன சொல்ல முடியும்? நான் வாழ்க்கை முழுவதும் உங்களுக்குக் கற்பித்த பாடம் ஆத்மா வருவதுமில்லை-போவதுமில்லை என்பதுதானே?" என்று திருப்பிக்கேட்டார்.

சாட்சி மனப்பான்மை நிலையில் செயல் முக்கியமில்லை. இதற்காக 'நான் சாட்சி மனப்பான்மையுடன் மது அருந்துவேன்' என்று சொல்ல முடியாது. குடிக்க வேண்டும் என்று ஆவல் தோன்றினாலே நீ இன்னும் சாட்சி நிலையை அடையவில்லை என்றுதான் பொருள். எது நடைபெறுகிறதோ அதை நடக்க

---

* அவரவர் பிராரப்த பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கு இருந்து ஆட்டுவிப்பன். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது. நடப்பது என் தடைசெய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆகவே மவுனமாய் இருக்கை நன்று.' - ரமண மகரிஷி

விடுவது சாட்சி மனப்பான்மை. அதை வலிந்து செய்வது சாட்சி மனப்பான்மை இல்லை. செயலை நடக்கவிட்டு நாம் பார்க்கிறோம். நாம் கர்த்தா இல்லை.

நீ பொருள்களிலும் மனிதர்கள் மீதும் ஆசை வைத் திருக்கும் வரையிலும் நீ கர்த்தா நிலையில் இருப்பாய். இதற்குப் பதிலாக நீ இறைவனை எதிர்பார்க்கத் தொடங்கியதும், சாட்சி நிலைக்கு வந்துவிடுவாய். நீ சாந்தமான மனநிலையைப் பெற்றுவிடுவாய். பொருள்களாலும் மனிதர்களாலும் பரபரப்படைய மாட்டாய்.

**என் கண்களின் பரப்பில் படிந்துள்ள**
**உலகின் கறுப்பை நீக்கிவிடு**
**பதிலுக்கு உனது வருகையை நிரப்பு**

உனது கண்ணில் மணல்துளி அல்லது துரும்பு நுனி விழுந்துவிடுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது உன்னால் எதையுமே பார்க்க முடிவதில்லை. கண்ணில் மண் துளி விழுந்தால், எதிரே இமயமலையே இருந்தாலும் கண்ணுக்குத் தெரியாது. அந்தத் தூசியை அகற்றினால்தான் மீண்டும் பார்வை தெளிவாகும். ஒரு கொசுகூட கண்ணுக்குத் தெரியும்.

இதேபோல் நீ சாட்சியாக-பார்க்கக்கூடியவனாக-இல்லா விடில் பிரம்மாண்டமும்கூட உன் கண்ணில்படாது. கண்ணில் விழுந்த தூசி அகலத் தொடங்கியதும் பார்வை மீள்வதுபோல் நீ சாட்சி என்னும் விழிப்பைப் பெற்றால் நீ எல்லாவற்றையும் உனக்குள்ளேயே பெற்றிருக்கிறாய் என்பது தெரியவரும். நீ புதிதாக எதையும் பெறவேண்டியதில்லை.

அஷ்டாவக்ரரின் நோக்கில், நீ ஏற்கெனவே பரிபூரண னாகத்தான் இருக்கிறாய். நீ இப்பொழுது என் எதிரே உட்கார்ந்துள்ளதைப்போல் கடவுள் உனக்குள் வீற்றுள்ளார். தன் முழுமையான லீலை குணங்களுடன் உன்னுள் இருக்கிறார்.

ரமண மகரிஷியைச் சந்தித்து அவருடன் வாதம் செய்ய ஒரு பண்டிதர் வந்தார். “தாங்கள் ஓர் அவதாரமென்று உரிமை கோருகிறீர்களா?” என்று கேட்டார். ரமணர், “ஆம், நான்

அவதாரம்,'' என்று சொல்வாரென்று பண்டிதர் எதிர்பார்த்தார். அதை வைத்துக்கொண்டு தொடர்ந்து வாதம் செய்யலாமென பண்டிதர் ஆசைப்பட்டார்.

ரமணரின் விளக்கம் வித்தியாசமாக இருந்தது ''அவதாரம் என்பது அரைகுறையான தோற்றம். ஞானிதான் பூரணமானவன். அவதாரம் மூலம் கடவுள் சிறிய அளவில்தான் இறங்கிவருகிறார். ஞானியோ முழுக்கடவுள் என்னும் நிலையில் உள்ளான். ஏனெனில் கடவுளைத் தவிர வேறு யாரும் இவ்வுலகில் கிடையாது என்பது அவன் முடிவு. நான் அவதாரம் என்று சிறிய அளவில் ஏன் சுருங்க வேண்டும்? நான் ஏற்கெனவே பூரணமானவனாயிற்றே,'' என்றார்.

நான் உனக்குச் சொல்கிறேன்-நீயும் பூரணமானவன்தான். ஒவ்வொரு மனிதனும் முழுமையானவன்தான். பூரணமான ஒன்றிலிருந்து பூரணம்தானே பிறக்க முடியும். நாம் கடவுளிட மிருந்து பிறந்தவர்கள். நாம் எப்படி அபூரணமாக இருக்க முடியும்?

உபநிடதம் சொல்கிறது. 'பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்தால் மிஞ்சுவதும் பூரணமே' நான் சொல்வது, பூரணத்துடன் பூரணத்தைச் சேர்த்தாலும் அதே பூரணம்தான் கிடைக்கும். கடவுள்-மனிதன்=கடவுள். கடவுள்+மனிதன்=கடவுள். ஆகவே எப்போதும் எங்கும் பூரணம்.

வேறு கோணத்தில்-நாம் அனைவரும் பூரணம். நாம் பூர்ணத்திலிருந்துதான் விலகி வந்திருக்கிறோம். அப்படியும் பூரணமாகத்தான் இருக்கிறோம். இதை உணர்வதால் கிடைக்கும் அனுபவமே பிரம்ம ஞானம், புத்தநிலை, அல்லது கைவல்யம்.

நீ வாத விவாதத்தில் இறங்காதே. சண்டை சச்சரவில் மாட்டிக் கொள்ளாதே. இதை அடைதல், அதை விடுதல், இதிலிருந்து தப்பித்து ஓடுதல் என்றெல்லாம் முயன்றால் பாரம் தாங்காமல் செத்தே போவாய். ஒன்றிலிருந்து தப்பினால் இன்னொன்றில் சிக்கிக்கொள்வாய். வாணலியிலிருந்து தப்பிக் குதித்தால் கீழே அடுப்பு நெருப்பில் விழுவாய்.

நீ எங்கே உள்ளாயோ, அங்கேயே அப்படியே இரு. சுற்றிலும் நடப்பதைப் பார்த்தபடி இரு. மனைவி, பிள்ளைகள், நண்பர்கள், உத்தியோகம், கடை வியாபாரம், கடைத்தெரு சூழல்- எல்லாவற்றையும் சாந்தமாகப் பார்த்துக் கொண்டிரு. நடப்பதை நடைபெற விடு. எப்படி நடைபெறுகிறதோ அப்படியே நடக்க விடு. வேறு விதமாக, உன் இஷ்டப்படிதான் நடக்க வேண்டுமென வற்புறுத்தாதே. கடவுள் காட்டுவதைப் பார். கடவுள் உன் மூலம் செய்விப்பதைச் செய்.

இப்படி எல்லாவற்றையும் கடவுளின் விருப்பத்திற்கு விட்டு, தன்னை சமர்ப்பிப்பவன் போற்றுவதற்கு உரியவன் என்கிறார் அஷ்டாவக்ரர். முதலில் சிறிய விஷயங்களிலிருந்து பயிற்சி ஆரம்பி. எடுத்த எடுப்பில் பெரிய விஷயங்களுக்குப் போய் விடாதே. மனம் ஒரு தொந்தரவு பிடித்த சனியன். முதலிலேயே பெரிய விஷயத்திற்குப் போகத் தூண்டும். "நீ சாட்சியாகும் பயிற்சியை ஆரம்பி," என்று நான் சொன்னால், நீ உடனே "பெரிய பிரச்சினையாகிய காமத்திற்கு சவால் விட்டு சாட்சிப் பயிற்சியைத் தொடங்குகிறேன்," என்கிறாய். 'மலை ஏறும் பயிற்சியை மேற்கொள்' என்றதும் 'எவரெஸ்ட்டிலிருந்து தொடங்குகிறேன்' என்கிறாய். ஆம், நீயும் எவரெஸ்ட்டில் ஏறி நிற்க முடியும். ஆனால் இன்றே முடியாது. மலையேறும் பயிற்சியின் முதல்நாளே முடியாது.

எட்மண்ட் ஹில்லாரி* என்ற தனிமனிதர் எவரெஸ்ட்டில் ஏறினார். ஆனால் மனிதகுலம் மொத்தமும் சந்தோஷப்பட்டது. நீயும் செய்தி படித்தபோது மகிழ்ந்திருப்பாய். நீ சிகரம் ஏறவில்லையே. நீ இருந்த இடத்திலேயே தானே இருந்தாய். ஆனால் ஒரு மனிதன் சிகரம் ஏறிவிட்டால், மனித குலமே ஏறிவிட்ட மாதிரிதான் அர்த்தம். ஒருவர் புத்தர் ஆனால் மற்ற சாதாரண மக்களும் மகிழ்கிறார்கள். ஒருவர் அந்நிலையை அடைந்தாரெனில், நாமும் முயன்றால் அந்நிலையை அடையலாம் என்ற நம்பிக்கை தோன்றுகிறது. எவரெஸ்ட்டில் ஏறுவது, புத்தநிலையை அடைவது கற்பனை செய்யும் விஷயமில்லை,

* சர் எட்மண்ட் ஹில்லாரி நியூசிலாந்தைச் சேர்ந்தவர். டென்சிங் நார்கேயுடன் சேர்ந்து 29.5.1953இல் எவரெஸ்ட் சிகரத்தில் ஏறினார்.

கனவு காணும் விஷயமில்லை. சாத்தியப்படும் விஷயமே என்று தெரிவதேகூட நிம்மதியும் ஊக்கமும் தருகிறது.

சிறு விஷயங்களிலிருந்து துவங்கு. காலையில் உலாவும் போது அல்லது எங்கும் செல்லும்போது சாட்சியாகிவிடு. இது கஷ்டமில்லை. 'உடல்தான் நடைபோடுகிறது. அதை நான் பார்க்கிறேன்' என்றும் எண்ணத்துடன் பார்.

சாப்பிடும்போது வாய் சாப்பிடுகிறது. தூங்கும்போது உடல் படுக்கையில் கிடத்தப்பட்டிருக்கிறது என்றெல்லாம் கருதப் பழகு. நீ படுத்திருக்கிறாய். வீட்டிற்கு வெளியே சாலையில் சந்தடி. கார்கள் ஓடுகின்றன. விமானம் பறக்கிறது. குழந்தை தூளியில் அழுகிறது. நீ அந்த ஓசைகளைக் கேட்காமல் இருக்க முடியாது. ஆனால் ஆராயாதே. எரிச்சலடையாதே. முதலில் இப்படிச் சிறிய குன்றுகளாகப் பார்த்து ஏறு. பிறகு படிப்படியாக உயரமான மலைகள் மேல் ஏறலாம். ஆன்மபலம் ஏற-ஏற, நீ சினம், மோகம், பேராசை, மாயை, காமம் ஆகிய பெரிய மலைகளில் கால் வைக்கலாம்.

ஆனால் மக்களோ எதிர்விதமாகச் செயல்படுகிறாக்ள். நான் சாட்சி விஷயமாகச் சொன்னதுமே அவர்கள் பெரிய மலையுடன் மோதுகிறார்கள். இதனால் தோற்கிறார்கள். உடனே சாட்சி மனப்பான்மையைப் பயிலுவதை நிறுத்திவிடுகிறார்கள். 'சாட்சி மனப்பான்மையா? ஐயோ, நம்மால் முடியாது' என்று அலறுகிறார்கள். எடுத்த எடுப்பிலேயே மல்யுத்த வீரர் தாரா சிங்குடன் மோத முடியுமா? அதற்கு நீண்ட காலப் பயிற்சி தேவை. அவசரப்பட்டால் கை-கால் முறிந்துபோகும். பிறகு வாழ்நாள் முழுதும் அசையக்கூட முடியாது.

நான் உன்னைப் படிப்படியாகத்தான் சாட்சியாக மாறச் சொல்கிறேன். ஆனால் மனம் பேராசை பிடித்தது. எடுத்த எடுப்பிலேயே வலுவான உணர்வாகிய காமத்துடன் மோதும்படி மனம் தூண்டும். சாட்சிப் பாதையில் முதலடி எடுத்து வைக்கும்போது பெரியதான எதிர்மறை உணர்வுகளுடன் நீ மோத முடியாது. அப்படி நீ ஒரேயடியாகத் தாவக்கூடாது. முதலில் மிகச்

சிறிய நிகழ்ச்சியிலிருந்து தொடங்கு. அதை சாட்சியாகப் பார்ப்பதற்குப் பயிற்சி செய்.

உதாரணமாக, சிகரெட் பிடிப்பதை எடுத்துக் கொள்வோம். நீ பெட்டியிலிருந்து சிகரெட்டை எடுக்கிறாய், அதன் முனையைப் பெட்டியின் மேல் தட்டுகிறாய். தீக்குச்சியை எடுக்கிறாய். சிகரெட்டைப் பற்றவைக்கிறாய். இதையெல்லாம் நீ சுயநினைவில்லாமலே (ஆட்டோமேடிக்) செய்கிறாய். இயந்திரம்போல் செயல்படுகிறாய். எப்போதும் ஒரே மாதிரிச் செய்கிறாய்.

இதற்கு மாறாக, இதையே சுயநினைவுடன் செய்துபார். பெட்டியிலிருந்து சிகரெட்டை மெதுவாக உருவு. நீ எவ்வளவு மெதுவாக எடுக்கிறாயோ அந்த அளவிற்குப் புகைக்கும் விருப்பம் குறைந்துவிடும். பெட்டியின் மேற்புறம் நீ சிகரெட்டை ஒருமுறை தட்டுகிறாயல்லவா? இனி ஏழு முறை தட்டு! 'ஒரு தடவை தட்டினால் போதாதா? இதென்ன முட்டாள்தனம்?' என்று உனக்கே தோன்றும். தீக்குச்சியைக் கொளுத்தி, காத்திருந்து, அதை அணையும் சமயம் சிகரெட்டில் காட்டு. மிக மெதுவாகப் புகையை உள்ளே இழு. மிக மெதுவாகப் புகையை வெளியே விடு. இப்படி மூச்சு வருவதையும் போவதையும் கவனி. என்ன நடக்கிறது? புகையை உள்ளே இழுத்தாய்; இருமல் வந்தது. அடுத்து, புகையை வெளியேவிட்டாய். மீண்டும் இருமினாய். யோசி. சிகரெட்டால் ஆகும் செலவைக் கணக்கிடு. டாக்டர்கள் புகை பிடிப்பதால் நுரையீரல் கெடும், புற்றுநோய் உண்டாகுமென எச்சரிக்கின்றனர். மீண்டும் யோசி. சிகரெட்டால் எப்போது என்ன சுகம் கிடைத்தது? இன்னொரு முறை புகையை உள்ளிழுத்து வெளியே விடு. சுகம் எங்கே கிடைத்தது?

சிகரெட்டில் சுகம் இல்லை என்று நான் வெளிப்படையாகச் சொல்வதில்லை. மற்ற சந்நியாசிகளுக்கும் எனக்கும் இடையே உள்ள வித்தியாசம் இதுவே. அவர்களை நீ, "சுவாமி! தாங்கள் சிகரெட் பிடித்ததுண்டா? அதில் சுகம் இல்லை என்று எப்படித் தெரியும்?" என்று கேட்டுப்பார். புகைபிடிப்பதில் சுகம் இருக்கலாம் அல்லது இல்லை என்பதை நீ சுயமாக அனுபவத்து என்னிடம் சொல்லு. நீ பாரபட்சமின்றி புகை போவதை-வருவதை ஆழ்ந்து

கவனித்தால் நீ மனிதன் என்னும் நிலையிலிருந்து சரிந்து புகைவிடும் என்ஜின் போல் இருப்பது எத்துணை முட்டாள்தனமானது என்பதை நீயே உணர்வாய். உன் கை பின்வாங்கிவிடும். நீயும் திடுக்கிடுவாய். இந்த இடைவெளியில் புரட்சி நிகழ்கிறது.

இதுபோல் சிறிய விஷயங்களில் சாட்சிப் பயிற்சியை மேற்கொள். அப்போது விழிப்புடன் இரு. இயந்திரமாக எதையும் செய்யாதே. சட்டெனப் பாதியில் செயலை நிறுத்தாதே. முதலில் விழிப்புடன் செய்துபார். பிறகு அச்செயல் அல்லது பழக்கம் தானாக நின்றுவிடும். அவ்வாறு நின்றுபோவது இறுதி விளை வாகும். நீயாக எதுவும் செய்யவேண்டியதில்லை. உனது ஞானம் முதிர்ச்சி பெறத் தொடங்கியதும், பொருட்களையும் மனிதர்களை யும் நீ பார்க்கும் விதம் மாறத் தொடங்கும். சட்டென்று கூண்டை உடைத்து வெளியேற வேண்டாம்; காயம் படும். கூண்டிலேயே துடித்து நீடித்தபடி, வெளியேறச் சிறிது சிறிதாக முயற்சிசெய்.

அதற்கேற்ப சாட்சி மனப்பான்மை படிப்படியாக வளர்ந்து, கடவுளின் குரல் உனக்குக் கேட்கத் தொடங்கும்-ஏ மனிதா? எனது விரிவு, விஸ்தரிப்புதான் நீ. நான்தான் உனக்குள் ஊடுருவி யிருப்பவன். நீ என்னுடையவன்தான். நான் கடலெனில் நீ அலை, என்கிறார் அவர்.

பிறகு கடவுள் உனக்கு சாட்சியாக விளங்குவார். இதுதான் உன் வாழ்க்கையில் பெரிய மாற்றமாக இருக்கும். மரண பயம் விடைபெறும். உடலுடனான பற்று நீங்கிவிடும். கனவுகள் கலைந்துவிடும். இறை உணர்வுடன் நீ நிரந்தரமாக ஒன்றிவிடுவாய்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! மனத்தில் பல யோசனை களையும் கேள்விகளைய்யும் சுமந்து இங்கே வந்தேன். ஆனால் எதையும் கேட்க முடியாமல் வாயடைத்துவிட்டது. என் கண்ணீரைப் பாருங்கள். அதற்கு மதிப்புக்**

**கொடுங்கள். நமக்குள் திருமண பந்தம்போல் அல்லவா உள்ளது.**

**உ**ணர்ச்சிமயமான கேள்வி இது.

கேள்விகள் இருவகை — புத்தியிலிருந்து புறப்படும் கேள்வி, இதயத்திலிருந்து எழும் கேள்வி. புத்தியிலிருந்து எழும் கேள்வி மதிப்பற்றது. பைசா பெறாதது.சொறிவதால் ஏற்படும் சுகம்போல் புத்தியுடன் சம்பந்தப்பட்ட வினாக்கள் தரும் குறுகுறுப்பு மேலோட்டமானது.

இதயத்திலிருந்து எழும் கேள்விகள் மதிப்புவாய்ந்தவை. அவை உணர்வுபூர்வமானவை. ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டவை. ஆத்மாவிலிருந்து செயல்கள் (கர்மங்கள்) வெகுதொலைவில் உள்ளன. எண்ணங்கள் சற்று குறைவான தொலைவில் உள்ளன. அதைவிட குறைந்த தொலைவிலிருந்து உணர்ச்சி. அதையும் விடக் குறைவான தொலைவில் நிஜமான நீ உள்ளாய்.

ஆத்மா (நிஜமான நீ)-உணர்ச்சிகள்-எண்ணங்கள்-கர்மங்கள் (செயல்கள்)

இக்கேள்வியைக் கேட்டவர் ஆண் சீடர். கேள்வி ஒரு பெண் கேட்டதோ என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் உணர்ச்சி என்பது பெண் இயல்பு. ஆணிடம் பெண் இயல்பு தெரியலாம். பெண் அறிவின் அடிப்படையில் தர்க்கபூர்வமான கேள்வி கேட்டால் அவளுக்கு உள்ளது ஆண் புத்தி எனலாம். ஆணுக்கும் பெண் இயல்பு அமையக்கூடும் என்பதால்தான். இந்து மதத்தில் கடவுள் ஒருவரே ஆண் என்றும், ஆத்மாக்கள் ஆகிய நாம் அனைவரும் அவருடைய தோழிகள் என்று குறிப்பிடப் படுகிறது. ஸமஸ்கிருதத்தில் ‘ஆத்மா’ என்பது பெண்பால் சொல்லாகும்.

இந்தக் கேள்வியைக் கேட்டவன் என்னைச் சந்திக்க வந்தவன்தான். ‘நீ என்னிடம் என்ன சொல்ல விரும்புகிறாய்?’ என்று விசாரித்தேன். ஆனால் அவனால் எதுவும் பேச முடியவில்லை. கண்களில் நீர் நிறைந்திருந்தது. கண்ணீரே

அவனது செய்தியைச் சொல்லிவிட்டது. வார்த்தைகளால்தான் எதையும் வெளிப்படுத்தமுடியும் என்று கட்டாயமில்லை. எண்ணத்தை வெளியிட வேறு வழிகளும் உண்டு. அவை சில சமயம் வார்த்தைகளைவிட அதிகமாகக் கூறிவிடுகின்றன. கருத்து வெளிப்பாட்டிற்குச் சொற்களின் பிரயோகம் என்பது சாதாரண மான அல்லது ஆரம்பக் கட்டம்தான்.

பக்தன் ஏராளமான விஷயங்களைக் கடவுளின் சந்நிதியில் சொல்லவேண்டும் என நினைக்கிறான். ஆனால் இறை அனுபவம் கிடைக்கும் சமயம் வாயடைத்துப் போகிறது. காதலிலும் இப்படித்தான் நடக்கிறது. காதலன்-காதலி மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் உதிக்கின்றன. சந்திக்கும்போது அவற்றைக் கூற நினைக்கின்றனர். ஆனால் அந்த சமயம் பார்த்து வாயடைத்துப் போகிறது. இதுதானே அன்பின் இலக்கணம். என்ன பேச வேண்டும், அதை எப்படிப் பேச வேண்டும் என்று காதலர்கள் மனத்தில் நடத்திப்பார்த்த ஒத்திகை சந்திப்பின்போது கைகொடுப்பதில்லை.

ஆகவேதான் நடிகர்-நடிகைகளால் உண்மையான காதலர்களாக வாழ முடிவதில்லை. அவர்கள் எப்பொழுது சுயஉணர்வுடன் இருக்கிறார்கள், எப்பொழுது நடிக்கிறார்கள் என்று அவர்களாலேயே வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாமல் திணறுகிறார்கள். அவர்கள் மனைவியிடம் அல்லது காதலியுடன் பேசும்போது அது உண்மையான பேச்சா அல்லது அவர்கள் ஒத்திகை பார்க்கும் நாடகம் அல்லது திரைப்படத்தின் வசனமா என்று குழப்பம் ஏற்படுகிறது.

உனது காதல் உண்மையானதென்றால், நீ என்னென்ன பேச வேண்டுமென்று திட்டமிட்டு வந்தாயோ அந்த வாய்சொற்கள் எல்லாம் கண்களோடு கண்கள் நோக்கும்போது என்ன பயனும் இல்லாமல் போகின்றன. சொற்களைவிட காதல் பெரிது, பக்தி பெரிது. ஆகவே அன்பிற்கும் பக்திக்கும் மௌனமே சிறந்த மொழி.

கண்ணீர் எப்பொழுதும் மதிப்பிழப்பதில்லை. கண்ணீர் விடுக்கும் அழைப்பு எப்பொழுதும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

அழத் தெரிந்தவனுக்கு அவன் வேண்டுவதெல்லாம் கிடைத்து விடும். கண்ணீரைவிட அதிக மதிப்புள்ள எதுவும் மனிதனிடம் கிடையாதெனலாம். நீ இறைவனின் சந்நிதியை அடைந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் அர்ப்பணித்தால், உலகிலுள்ள பூக்களை யெல்லாம் பறித்து அவர் திருவடிகளில் சமர்ப்பிப்பதற்கு சமமாகும். நீ சிந்தும் கண்ணீரால் அமையும் பாதையில் நடந்தே கடவுள் உனக்குள் பிரவேசிப்பார்.

**அறிந்திருந்தும் அறியாதவன் போலாகிவிடு**
**எப்படி வழிபடுவது என்று என்னைக் கேட்காதே**
**பக்தி உணர்வு பொங்கியெழுந்தால்**
**எதிரிலுள்ள மண் பொம்மையைப் பார்த்து**
**'நீ என் கடவுள்' என்று சொல்ல முடியும்**

நீ குளக்கரையில் ஒரு பக்தனைப் பார்க்கிறாய். கல்லாலான சிறு சிலையை அவன் வழிபடுகிறான். அதைக் கண்டு உனக்குச் சிரிப்பு வருகிறது. நட்ட கல்லை தெய்வமென்று நாலு பூ வைத்து, மந்திரம் முணுமுணுக்கிறானே என்று அவன்மீது பரிதாபப் படுகிறாய். நீ அவனைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. வெளியிலுள்ள உன்னால் அவனது உள்மனத்தைப் பார்க்க முடியாது. அவனைப் பொறுத்தவரையில் எந்தக் கல்லும் ஈசனுக்கு உகந்த கல். ஏனெனில் கல் எல்லாம் கடவுளே.

பக்தன் தனது பக்தி உணர்வை எப்பொருள் மீது சுமத்துகிறானோ அப்பொருளில் கடவுள் இறங்கிவருகிறார். அவர் எங்கும் பரவியுள்ளதால் அவர் எளிதில் எப்பொருளிலும் ஊடுருவி நிற்க முடியும்.

உன் கண்களில் கண்ணீர் சுரப்பது நல்லது. இதனால் உன் கண்கள் சுத்தமாகும். சுத்தமான இடமே கடவுளின் உறைவிடம். அவர் உன் கண்களைக் கதவுகளாகக் கொண்டு உள்ளே எழுந்தருளுவார். ஆகவே நன்றாக, முழுமையாக அழு.

இப்போது கேட்கப்பட்டது பக்தியுடன் தொடர்புடையது. அஷ்டாவக்ரரின் கண்ணோட்டம் வேறானது. அங்கே கண்ணீருக்கு இடமில்லை. அவரைப் பின்பற்றுபவனின் கண்கள்

உலர்ந்தே இருக்கும். அவரது மார்க்கத்தில் உணர்ச்சிவசப் படுதலுக்கு இடமில்லை. பக்தி, பிரேமை, உருவ வழிபாடு, பூஜை-அர்ச்சனை ஆகியவை பற்றி அவர் கூறியதில்லை.

கேள்வி கேட்டவன் பக்தி மார்க்கத்திற்குப் பொருத்த மானவன் என்று தெரியவருகிறது. அவன் வழி மலர்ப்படுக்கை போன்றது; பசுமை நிறைந்தது. அங்கே பறவைகளின் ஒலி கேட்கிறது. அஷ்டாவக்ரர் காட்டும் பாதை பாலைநிலம் போன்றது. பாலை நிலத்திற்கும் தனியானதோர் அழகு உண்டுதான். ஆனால் பசுமை கிடையாது. அங்கே கிருஷ்ணனின் புல்லாங்குழல் ஒலிக்காது. எல்லா திசைகளிலும் பேரமைதி பரவி நிற்கிறது.

கேள்வி கேட்டவனுக்கு அஷ்டாவக்ர மகாகீதை பயன் படாது. அவன் பக்தி உணர்வு நிறைந்த நாரத பக்தி சூத்திரங்களிலும், மீராவின் பஜனைப் பாடல்களிலும் தனக்குச் சாதகமான சூழ்நிலையை அடையாளம் காணலாம். ஒன்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஞான வழியில் 'நீ' என்பது கிடையாது. ஆகவே ஆன்மிக மொழியிலும், சாதாரண இலக்கணத்திலும் 'நான்' என்பதும் இல்லாமல் போய்விடும். பக்தி வழியில் முதலில் 'நான்' என்பது மறக்கப்படுகிறது. உடனடியாக 'நீ' என்பது அழிந்துவிடுகிறது. வெவ்வேறு திசையிலிருந்து வெவ்வேறு வழியாகப் பயணம் நடைபெற்று பரமசூன்யத்தில் நிறைவடைகிறது. இதை பரம புண்ய நிலை என்றும் சொல்லலாம்.

பக்தன் தன்னைக் கடவுளின் திருவடிகளில் சமர்ப்பித்து விடுகிறான். நான் என்பது மறைந்து சூன்யமாகிறான். ஞானி கடவுளையே கூட மறந்துவிடுகிறான்! தன்னிலிருந்து பிரிந்து தனிப்பட்ட ஒன்று இருப்பதாக அவன் நினைத்ததில்லை. ஆகவே கடவுளுக்கென்று இடம் எங்கே ஒதுக்குவது? இதனால்தான் புத்தரும் மகாவீரரும் கடவுளைப் பற்றி குறிப்பிடாமலிருந்து விட்டனர். ஞானிக்கு ஓர் ஆத்மாதான், தன் ஆத்மாதான் தெரியும். அதிலேயே அவன் திளைக்கிறான். பரமாத்மா என்னும் சொல்லைக் கவனித்தால் அதில் வரும் 'பர' என்னும் முன்னொட்டு 'இன்னொன்று' என்னும் பொருளுடையது.

ஞானியோ எல்லோருக்கும் சேர்த்து ஒரே ஆத்மாதான் உள்ளது என்பான். இன்னொன்று உண்டு என்பதை அவன் ஏற்கமாட்டான். ஞானி நான் என்னும் ஆத்மா மட்டுமே உள்ளேன் என்றும், பக்தன் நீ என்னும் பரமாத்மா மட்டுமே உண்டு என்றும் கூறுவான். நான், நீ இரண்டில் ஒன்று அழிந்தாலும் லட்சியத்தை அடைந்து விடலாம். இலக்கணப்படியும் ஒன்று இல்லையானால் இன்னொன்று சுயமாகவே நீங்கும்.

கேள்வி எழுப்பியவனிடம் நான் கேட்டுக் கொள்வது அஷ்டாவக்ரர் பக்கம் போகாதே என்பதுதான். அவனது சுபாவப்படி பக்தி வழியே அவனுக்கு ஏற்றதாகும். பக்தியிலும் வேதனை உண்டாகும். ஆனால் அது இனிய வேதனையாக இருக்கும்.

பக்தனும் வருந்துவான், அழுவான், விரகம் (பிரிவு) என்னும் நெருப்பில் எரிவான், நொறுங்குவான், மனம் உடைவான். ஆனால் இத்தகைய வேதனையில் ஒருவிதமான சுவையை உணர்வான். இந்த வலி துன்பம் தராது; அது சௌபாக்கியமாகக் கருதப்படும். நீ பின்வாங்காவிடில், இந்த இலையுதிர் காலத்தைத் தொடர்ந்து வசந்த காலம் வரும்.

**இலையுதிர் காலம் நுழைந்தது காட்டில்**
**மரகத இலைகள் மஞ்சளாயின;**
**கொடிகள் எல்லாம் காய்ந்து உலர்ந்தன,**
**மரங்கள் மாறின எலும்புக்கூடாய்.**

**திடீரென வீசிய தென்றலுடன்**
**எங்கிருந்தோ ஒரு மாயம் இறங்கிவந்தது;**
**செடிகளில் இலைகள் துளிர்த்தன மீண்டும்,**
**வசந்தம் மீண்டும் விரைந்து வந்தது.**

ஒரு முறை நீ இந்தத் துன்ப நெருப்பில், பக்தியெனும் நெருப்பில் எரிந்துபோ. பிறகு வசந்தம் வரும். நிச்சயமாக வரும். இந்த வலியை சுபமெனக் கருது. பக்தியில் தங்களை அழித்துக் கொள்ளும் ஆற்றல் உள்ளவர்கள் அதிர்ஷ்டசாலிகள். கடவுள் அவர்களிடமிருந்து வெகுதொலைவில் இல்லை. அவர்கள்

கடவுளின் கோயிலாக ஆவதற்கு எப்போதும் தயார்நிலையில் உள்ளனர். கதவு திறக்கட்டும்; கடவுள் காலடி எடுத்துவைப்பார்.

உன் கண்ணீர் என்றும் மதிப்பிழக்காது. சொற்கள் பயனளிக்காமல் போகலாம்; கண்ணீர் என்றும் வீணானதில்லை. கடவுளின் திருவடிகளில் கண்ணீரை சமர்ப்பிப்பவன் வெறுங் கையுடன் திரும்புவதில்லை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்

**ஹேயோபாதேயதா தாவத்ஸன்ஸார விடபாங்குர:|**
**ஸ்ப்ருஹா ஜீவதி யாவத்வை நிர்விசார தஸாஸ்பதம்||** 152

**ப்ரவ்ருத்தௌ ஜாயதே ராகோ நிவ்ருத்தௌ த்வேஷ ஏவ ஹி|**
**நிர்த்வந்த்வோ பாலபத்தீமானேவமேவ வீயவஸ்தித:||** 153

**ஹாதுமிச்சதி ஸன்ஸாரம் ராகீ துக்கஜிஹாஸயா|**
**வீதராகோ ஹி நிர்துக்கஸ்தஸ்மின்னபி ந ஜித்யதே||** 154

**யஸ்யாபிமானோ மோக்ஷே அபி தேஹேஅபி மமதா ததா|**
**ந ச ஞானி ந வா யோகீ கேவலம் துக்கபாக ஸௌ||** 155

**ஹரோ யத்யுபதேஷ்டா தே ஹரி: கமலஜோஅபி வா|**
**ததாபி ந தவ ஸ்வாஸ்த்யம் ஸர்வவிஸ்மரணாத்ருதே||** 156

**தீ**ராத தாகம் போன்ற ஆசை விவேகமற்ற நிலையைக் காட்டுகிறது. அந்தத் தீராத ஆசை நீடிக்கும் வரையிலும் இழிவானது - ஏற்கத்தக்கது, விடுதல் - பிடித்துக்கொள்ளல் ஆகியவையும் நீடிக்கும். இவை உலகப் பற்று என்னும் மரம் முளைப்பதற்கான விதைகளாகும் **(சுலோகம் 152)**

பேராசைதான் மனிதனின் வாழ்க்கைச் சிக்கல்களின் அஸ்திவாரமாகும். பேராசையைப் பற்றி சரியாகப் புரிந்து கொண்டால் அனைத்து மதங்களின் மையக் கருத்தைப் புரிந்துகொண்டது போலாகும். அப்போது துக்கம் ஏற்படுவதன் காரணமும் புரியவரும். துக்கத்திற்கான காரணம் தெரியவந்தால், பிறகு அதிலிருந்து விடுதலை பெற அதிக நேரம் பிடிக்காது. துன்பத்தின் காரணம் தெரியாதவரையிலும் அது அதிகரித்தபடி

செல்லும். காரணம் தெரியாமல் துன்பத்தைப் போக்கிக்கொள்ள முயல்வது இருட்டில் அம்புவிடுவதற்கு சமமாகும். இருட்டைப் போக்க வெளிச்சம் தேவை. துன்ப இருட்டு அகல ஞான ஒளி தேவை.

உடலுக்கு நோய் வரின் நாம் முதலில் அதற்கான காரணத்தை அறிய முயலுகிறோம். சரியான காரணம் தெரிந்துபோனால் பாதி சிகிச்சை முடிந்துபோன மாதிரிதான். நோய் என்னவென்று தெரியாமல் ஊகத்தின் பெயரில் சிகிச்சை செய்வது ஆபத்து. அதைவிட சும்மா இருந்துவிடலாம். மருந்துகளால் நன்மையும் உண்டு, நஷ்டமும் உண்டு. சிகிச்சை செய்ய-செய்ய நோய் அதிகரித்தது என்று வேடிக்கையாகச் சொல்வது உண்மையாக நிகழ்வதுண்டு. சில நோய்கள் தாமாகவே, இயற்கையான முறையில் குணமாகிவிடும். ஆனால் தவறான மருந்து கொடுத்துவிட்டால் உயிருக்கே ஆபத்தாகிவிடும்.

மனம் பற்றி விந்தையான செய்தி உள்ளது. மனக் குழப்பத்தின் காரணம் என்ன என்பதைக் கண்டுபிடித்து விட்டால் முழுமையான சிகிச்சையாக அமைந்துவிடும். ஏனெனில் மனநோய்கள் பிரமையால், தவறான கண்ணோட்டத்தால் விளைகின்றன. நோய் என்று சொல்வதுகூட தவறு. இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்து என்று ஒருவன் விடை கூறினால் அவனுக்கு பிரமை பிடித்திருக்கிறது எனலாம். சரியான விடை 'நாலு' என்பது நினைவிற்கு வந்ததும் இந்த பிரமை உடனேயே முழுமையாக நீங்கிவிடுகிறது.

மனநோய் என்பது பாலைவனத்தில் ஆங்காங்கே திடீரெனத் தெரியும் கானல்நீர் போன்றதாகும். அது ஒரு மாயத் தோற்றம் மட்டுமே. உனக்குத் தாகமுள்ளதால் தொலைவிலுள்ள மணல் தண்ணீர்போல் தெரிகிறது. கனவில் தோன்றும் நீர்நிலை போன்றது. பசியுள்ளவனுக்கு ஆகாயத்தில் உள்ள சந்திரன் ரொட்டி போன்று தெரியும். உனக்குள்ள பசி-தாகம் மணலுக்குத் தண்ணீரின் தோற்றத்தையும், சந்திரனுக்கு ரொட்டியின் உருவத்தையும் சுமத்துகிறது.

மனநோய்கள் என்பவை இல்லாத ஒன்றின்மேல் கற்பனையை ஏற்றுவதால் (projection) உண்டாகின்றன. உடல்

நோய்க்காவது ஏதாவது ஆதாரம் உண்டு. மனநோய்கள் ஆதாரமற்றவை. உடல் வியாதியில் ஆதாரம் தெரிந்ததும் சிகிச்சை தொடங்குகிறது. மனநோய் விஷயத்தில் ஆதாரம் எதுவும் இல்லை என்று தெரிந்ததும் சிகிச்சையில்லாமலே நோய் அகன்றுவிடுகிறது. ஆகவே, ஞானமே முக்தி என்கிறார் சாக்ரடீஸ்.

மூன்று நிலைகள் சொல்லலாம். மிக உயர்ந்த நிலை என்பது தரிசன முக்தி. மகாவீரரை, புத்தரை, கிருஷ்ணரை அகக் கண்ணால் முழுமையாக தரிசிக்க முடியுமானால் அதுவும் முக்தி தரும். அந்த அளவிற்கு மிகச்சிலரே பக்குவப்பட்டிருப்பார்கள்.

இரண்டாம் நிலை மத்திம (நடு) நிலை. சத்தியத்தை அறிந்த மகாஞானியின் உபதேச மொழியை உணர்ந்து கேட்டாலே (ச்ரவணம்) மோட்சம் பெறக்கூடியவர்கள் உண்டு. அத்தகை யோரை மகாவீரர் 'ச்ராவக்' என்கிறார்.

மூன்றாவது நிலையில் உள்ளோர் சாது சந்நியாசிகள். சத்தியத்தை செவி மடுத்தும் முக்திபெற முடியாமல் இவர்கள் தொடர்ந்து வேறு பல முயற்சிகளை மேற்கொள்ள வேண்டி யிருக்கும். ஏனெனில் அவர்களது கிரகிக்கும் சக்தி பூரணமாக அமையவில்லை.

ஆசை இருக்கும்வரை நீ உலகப் பற்றை விடமுடியாது. ஆசையும் உலகமும் வெவ்வேறல்ல.

சிலர் தங்களுக்கு உலகப் பற்றுக் கிடையாது என்றும் உலகை விட்டு நீங்கவே விரும்புவதாகவும் கூறுவார்கள். இதனால் சுவர்க்கத்தின் இன்பங்கள் கிடைக்கும்; மோட்ச ஆனந்தம் கிடைக்கும்; சமாதிநிலையின் பேரமைதி நிலையில் பிரவேசிக்க முடியும் என்பார்கள். ஆனால் இவையெல்லாமும்கூட ஆசைகள்தானே?

என்னைச் சந்திப்பவர்களில் சிலர், "நாங்கள் ஆசைகள் நீங்கி சாந்தமான மனநிலையை அடையப்பெற வேண்டும். அவ்வாறு சாந்தநிலையை அடைய எங்களுக்கு தியானமுறை ஏதாவது கற்றுக்கொடுங்கள்," என்று வேண்டுகிறார்கள்.

அமைதி நிலையைப் பெறவேண்டும் என விரும்புவதே ஒருவகையான ஆசைதான். அதற்காக விசேஷமான தியான முறை கற்க விரும்புவது இன்னொரு ஆசை. சாந்த நிலையை அடைய வேண்டும் என்னும் ஆசை உங்களை இங்கே இட்டு வந்திருக்கிறது. ஆசையை ஆதாரமாகக் கொண்டால் தியானம் எப்படிச் செய்யமுடியும்? ஆசை இல்லாத இடத்தில்தான், சூழ்நிலையில்தான் தியானம் கைகூடும். பிறகு தியானம் என்பது செய்ய வேண்டிய ஒன்றாக இருக்காது. அது தானாகவே நிகழத் தொடங்கும். வலிந்து செய்யப்படும் முயற்சிக்கு தியானம் என்று பெயரில்லை. நடப்பதல்ல தியானம், நிகழ்வதே தியானம். ஆசைகள் இல்லாவிடில், மனத்தில் எழும் அலைகள் தாமாகவே அமைதியாகிவிடும்.

உதாரணமாக, காற்று வேகமாக வீசினால் ஏரியில் அலைகள் எழுகின்றன. ஒவ்வோர் அலையாக உன்னால் அமைதிப்படுத்த முடியாது. காற்று நின்றுவிட்டால் போதும். எல்லா அலைகளும் தாமாகவே அடங்கிவிடும். வேடிக்கை என்னவென்றால், காற்று நம் கண்ணிற்குத் தெரிவதில்லை. அவ்வாறு கண்ணுக்குத் தெரியாதது நமக்கு நினைவிலிருப்பதில்லை. ஆசை என்னும் உணர்வும் காற்றைப் போலவே கண்ணுக்குத் தெரிவதில்லை. அது கனமானதுதான். ஆனால் பார்வையில் அகப்படுவதில்லை; கைக்கு வசப்படுவதில்லை.

காற்று கண்ணுக்குத் தெரிவதில்லை என்பதால்தான் அதை அடக்கி, அலைகளை நிறுத்த முடிவதில்லை. அதுபோலவே, ஆசை உணர்வு கண்ணில் படுவதில்லை என்பதால், மன அலைகளைத் தணிவித்து, நாம் சாந்தநிலையை அடைய இயலவில்லை. ஆசையை அடக்காமல், மந்திரங்களை ஜெபிப்பதால் பலன் விளையாது. ஏனெனில் எண்ண அலைகள் ஆசை என்னும் காற்றுடன் சம்பந்தப்பட்டவை.

ஒவ்வொருவரும் வெவ்வேறுவித அலைகளால் பாதிக்கப் படுகின்றனர். ஒருவன் கோபமென்னும் அலையை அடக்கி சாந்தமாக இருக்க விரும்புகிறான். இன்னொருவன் காமமென்னும் அலையைக் கட்டுப்படுத்த விழைகிறான். மூன்றாமவன் பேராசை

அலையை, நான்காமவன் மோக அலையை அடக்க விரும்புகிறான்.

எனக்கென்னவோ சாதாரணமான மனிதனுக்கு சந்நியாசிகளைவிட அமைதி கிடைக்க அதிக வாய்ப்புள்ளதாகத் தோன்றுகிறது. சாதாரணமானவன் என்றாவது, எப்படியாவது கிடைக்கக்கூடிய பொருளைத் துரத்தி ஓடுகிறான். ஆசிரமத்தில் அமைதியாகக் காட்சி தரும் சந்நியாசியின் மனத்திலோ கொந்தளிப்பு. மனம் சலனமற்று விளங்க வேண்டும், மோட்சம் பெற வேண்டும் என சந்நியாசி ஆசைப்படுகிறார். அவை எளிதில் வசப்படக்கூடியவை அல்லவே.

இல்லறத்தான் துரத்தும் பொருட்கள், லட்சியங்கள் முயன்றால் கிடைக்கக்கூடியவைதாம். திட்டமிட்டுப் பணத்தைத் துரத்தினால், பணம் கிடைத்துவிடும். இதில் பிரச்சினை இல்லை. எத்தனையோ முட்டாள்கள்கூட பணம் சம்பாதித்துள்ளனர். உனக்கு ஏன் கிடைக்காமல் போகும்? காலப்போக்கில் வங்கியில் பணம் சேரும். வீடு கட்டுவாய். இதேபோல் திட்டமிட்டு உழைத்தவர்கள் உயர் பதவிகளை அடைந்திருக்கின்றனர், வெற்றிகளைக் குவித்திருக்கிறார்கள்.

ஆனால் ஆன்மிகவாதிகள் எவற்றைத் துரத்தியபடி ஓடுகிறார்களோ அவை துரத்துவதால் கிடைக்கக்கூடியவை அல்ல. ஓடித் துரத்துவதுதான் அவற்றைப் பெறுவதில் தடையாக உள்ளது. ஒரே இடத்தில் நின்றால், லயித்தால், அவை கிடைக்க வாய்ப்புண்டு. ஓடித் துரத்திக் கடவுளைப் பிடிக்க முடியாது. சத்தியத்தை துரத்திச் சென்று பிடிக்க முடியாது. பேரமைதியை ஓட்டத்தால் பெற்றனுபவிக்க முடியாது.

ஓடுதல் என்பதே அமைதியின்மையின் அடையாளம்தான். ஓடுதலும் ஆசையும் ஒன்றையொன்று பூர்த்தி செய்கின்றன. ஆசையின் அடிப்படை இதுதான். சுகம் இங்கே இல்லை; இப்பொழுதில்லை; வேறெங்கோ உள்ளது; என்றோ கிடைக்கலாம்; அடுத்த பிறவியில் கிடைக்கலாம்; சுவர்க்கத்தில் கிடைக்கலாம். ஆகவே சுகம் எங்கே என்று ஓடித் தேட வேண்டியுள்ளது. சும்மா இருக்கச் சுகமுண்டே என்று மனம் ஓரிடத்தில் உட்காரவிடாது.

அரை நொடி நின்றாலும் நமது ஓட்டத்தில் பின்னடைவு ஏற்பட்டுவிட்டதாக நாம் அஞ்சுகிறோம்.

ஆசை என்பது நீ எப்படி உள்ளாயோ அதில் சுகத்தை உணரவில்லை என்று அர்த்தம் தருகிறது. சுகம் கிடைக்க, நீ வாழ்க்கையில் கூடுதலாக எதை எதையோ எதிர்பார்க்கிறாய். செல்வம், சொந்த வீடு, சமூக அந்தஸ்து, நிறைய புண்ணியச் செயல்கள் முதலியவற்றால் சுகம் கிடைக்கும் என நம்புகிறாய்.

ஆசைப்படுதலைக் கைவிட்டால் இப்பொழுதே, இங்கேயே, இந்த சூழ்நிலையிலேயே நீ ஆனந்தம் பெற்றுவிடலாம். உடனடியாக ஆனந்தம் பெறும் கலைதான் ஆசை அறுத்தல் என்பது. நீ இப்பொழுதுள்ள நிலையிலேயே ஆனந்தத்தை அனுபவிக்கலாம் என்பது அஷ்டாவக்ரரின் புரட்சிகரமான அறிவிப்பாகும். ஏனெனில் ஆனந்தப்படுவது உனது சுபாவமாகும். அது உனக்கு இயற்கையானது. நீ அதை எப்போதுமே இழந்ததில்லை. அந்நிலையிலிருந்து நீ எப்போதுமே வீழ்ந்ததில்லை.

உனது மனமாகிய ஏரியில் கண்ணுக்குத் தெரியாத எந்தக் காற்று வீசுகிறது? அதனால்தான் எப்போதும் நடுக்கத்துடனும் சலனமாகவும் காணப்படுகிறாய். ஏரியும் அதில் அலை எழுப்பும் காற்றும் வெவ்வேறு. ஆனால் மனமாகிய ஏரியும் உனதே. அதில் அலை எழுப்புகின்றவனும் நீயே. நீதான் ஊக்கமும் தருகிறாய்.

ஆசை என்பதன் அர்த்தம் அதிருப்தி. ஆசை என்பதன் அர்த்தம் எதிர்காலம். எதிர்காலச் சிந்தனையைக் கைவிட்டால் ஆசைகள் மறைந்துவிடும் அல்லது குறைந்துவிடும். ஏனெனில் நம் ஆசைகள் நிறைவேறுவதற்கு நாம் எதிர்காலத்தைதான் நம்பியுள்ளோம்.

எதிர்காலம் என ஒன்று கிடையாது. அது மனிதனின் கற்பனை. அது இன்னும் வந்து சேராதது. அது வரும்போது பார்த்துக் கொள்ளலாம். கையில் இருப்பது அற்பகாலமான நிகழ்காலம்தான். கடந்த காலம் ஒரு நினைவு. எதிர்காலம் ஒரு கற்பனை. எனவே நிகழ்காலத்தில் நீ லயித்துவிடு, ஆழ்ந்துவிடு. கடந்த கால அழுத்தமும், எதிர்காலக் கவலையும் இல்லாத இக்கால சூழ்நிலை உன்னை சாந்தப்படுத்தும், சமனப்படுத்தும்.

நான் அப்படித்தான் அமைதியானவுன் ஆனேன். நீயும் அவ்வாறு ஆகலாம். ஆனால் எதிர்காலத்தின் எதிர்பார்ப்பு வேண்டாம். இதனால் உன் மன இறுக்கம் அதிகரிக்கும். உன் ஆசை நாளையாவது நிறைவேறுமா என்று நீ இன்று கவலைப்படுகிறாய். நாளையப் பொழுதும் இன்றுபோல்தான் இருக்கும். 'நாளை' என்று தனிப்பட்ட ஒருநாள் வருவதில்லை. வருகின்ற ஒவ்வொரு நாளுமே 'இன்று' என்னும் நாள்தான். ஆகவே 'இன்று' துக்கப்பட்டால் வருகின்ற ஒவ்வொரு 'இன்று' துக்கநாளாகவே அமையும். மன இறுக்கமும் கவலையும் உன் உயிரைத் துளைத்துவிடும். உன் வாழ்வில் இசையின் இனிமை இருக்காது. நடனத்தின் குதூகலம் இருக்காது.

மரங்கள் இச்சமயம் பசுமையாக உள்ளன. பறவைகள் தற்சமயம் பாடி திரிகின்றன. பாடுவதை அடுத்த நாளைக்கு அவை ஒத்திப்போடவில்லை. இன்றைய சூரியன் இதோ பிரகாசிக்கிறான். ஒருநாள் ஓய்வெடுத்து மறுநாள் உதிக்கலாமென சூரியன் நினைத்ததில்லை. இப்பொழுது காணப்படும் வானம் நாளையும் இருக்குமா எனத் தெரியாது. மனிதனைத் தவிர மற்ற படைப்புகள் இன்றே, இப்போதே வாழ்கின்றன. மனிதனோ என்றாவது, வேறு எங்கோ சுகமாக வாழ்வோம் என நினைக்கிறான். இப்போ தைக்கும் என்றைக்காவது என்பதற்கும் இடையே இருக்கும் இறுக்கமே ஆசைவெறி என்பது.

ஆசை மன அமைதியைக் கெடுக்கிறது. ஆசையின் அளவிற்கேற்ப அமைதியின்மையும் அதிகரிக்கிறது. ஆகவேதான் நான் இல்லறத்தானின் அசாந்தி சந்நியாசியின் அசாந்தியைவிடக் குறைவானது என்கிறேன். உன் ஆசை உலக சம்பந்தமான சிறிய விஷயங்களுடன் முடிந்துபோகிறது. உனக்கு என்ன வேண்டும், கார்? சொந்த வீடு? இவை விசேஷமான ஆசைகள் இல்லை. மக்கள் காரும் வீடும் வாங்குவதும் விற்பதுமாக இருக்கிறார்கள். இந்த ஆசைகளால் பெரிய அளவில் மன இறுக்கம் உண்டாகாது. ஆனால் சந்நியாசி மோட்சமல்லவா வேண்டுகிறார். இது மாபெரும் ஆசை என்பதால் அமைதியின்மையும் அவருக்கு அதிகமாயுள்ளது. அவரது சமூக கௌரவம் காரணமாக அவர் தனது மனக்குழப்பத்தை மற்றவர்கள் முன்பாக வெளிப்படுத்தவும் முடியாது.

நீ யாராவது மோட்சத்திற்குப் போவதைப் பார்த்திருக்கிறாயா? அல்லது மோட்சத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டதாக உனக்கு யாராவது தகவல் அனுப்பியது உண்டா? மற்ற ஆசைகள்-கார் வாங்குவது, வீடு கட்டுவது, பணம் குவிப்பது போன்றவை-கண்ணெதிரே நிறைவேறுவதைப் பார்க்கிறோம். ஆனால் மோட்சத்துக்குப் போக விரும்புவதாகச் சொல்வது அறியாமையைக் காட்டுகிறது.

அஷ்டாவக்ரர் ஆத்மா எங்கும் போவதோ, வருவதோ கிடையாதென அறிவிக்கிறார். அது எப்படிப் போகும்? எங்கேதான் போகும்? ஆகாயம் எங்காவது போவதும் எங்கிருந்தாவது வருவதும் உண்டா? ஒரு பானையை அங்கும் இங்கும் கொண்டு செல்லலாம். அதனுள் இருக்கும் ஆகாயம் (சூன்யம்) எங்காவது செல்வதுண்டா? நீ நடக்கிறாய். ஆனால் உன் ஆத்மா நடப்பதில்லை.

உலகம் இயங்குகிறது; தனது அச்சில் சுழல்கிறது. கடவுள் அப்படியே இருக்கிறார். அச்சாணிபோல் உள்ளார். உலகம் அதை மையமாகக் கொண்டு சுழலும் சக்கரமாகும்.* மோட்சத்திற்காக எங்கும் போகவேண்டியதில்லை. மோட்சம் என்பது ஓர் அனுபவம். நான் இருக்குமிடம் எதுவோ அதுவே மோட்ச உலகம் என்றும், நான் எப்படி உள்ளேனோ அதுவே மோட்சநிலை என்றும் புரிந்துகொள்ள வேண்டும்.

ஆன்மிகத் தலைவர்கள் உனக்கு விசித்திரமான உபதேசம் செய்கிறார்கள். நீ ஏற்கெனவே பணம் சம்பாதிக்கும் வெறி கொண்டவன். ஆச்சாரியர்கள், 'பணத்தில் அப்படி என்ன இருக்கிறது? நிரந்தரச் செல்வத்தை அடைய முயற்சிசெய்' என்று உபதேசிக்கிறார்கள். அதுவும் ஆசைப்படும் செயல்தானே. இதேபோல் அவர்கள் பெண்ணாசையைக் கண்டிக்கிறார்கள். 'பெண் உடலில் அப்படி என்ன விசேஷமாக இருக்கிறது? விரைவிலேயே பெண் உடலும் உலர்ந்து எலும்புக்கூடாகத்தான் மாறும்' என்று பயமுறுத்துகிறார்கள்.

* பூமி தனது அச்சில் சுற்றிவர 23 மணி 56 நிமிடம் 4 நொடி எடுத்துக்கொள்கிறது. அது நொடிக்கு 29.8 கி.மீ. வேகத்தில் சூரியனைச் சுற்றிவர 365.25 நாள் எடுத்துக்கொள்கிறது.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு பெண்ணைக் காதலித்தார். அவளைத் திருமணம் செய்துகொள்ள முடிவெடுத்தார். அப்பெண் சொன்னாள்: திருமணத்திற்கு ஒப்புக்கொள்வதற்கு முன் ஒரு விஷயம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இப்போது நான் இளமையாகவும் அழகாகவும் தெரிகிறேன். எனக்கு ஐம்பது வயதாகும்போது என் கன்னங்கள் ஒட்டிப்போகத் தொடங்கும் கூந்தலில் பாதி நரைத்துவிடும். முகத்தில் சுருக்கங்கள் விழும். எனக்கு வயோதிகம் ஆரம்பித்துவிடும். அப்போதும் உங்கள் அன்பு தொடர்ந்து நீடிக்குமா?"

முல்லா இந்தக் கேள்வியை வேறு விதமாக அர்த்தம் செய்துகொண்டார். "ஐம்பது வயதில் இப்படியெல்லாம் ஆகவேண்டுமென்று நீ எண்ணம் கொண்டுள்ளாயா? ஏன் வம்பை விலைக்கு வாங்குகிறாய்? ஐம்பது வயதில் நீ முகத்தில் சுருக்கங்கள் கொண்டுவரவும், தலை நரைத்துப் போகவும், கன்னங்கள் ஒட்டிப்போகவும் நடவடிக்கை எடுத்து அரைக் கிழவி ஆவதென்று திட்டமிட்டிருக்கிறாயா? நல்லவேளையாக முன்கூட்டியே சொன்னாய். நான் தப்பித்தேன் இந்தச் சிக்கலில் நான் மாட்டிக் கொள்ள விரும்பவில்லை," என்று கூறி முல்லா திருமண எண்ணத்தைக் கைவிட்டார்.

ஆன்மிகத் தலைவர் என்ன சொல்கிறார்? "பூவுலகத்துப் பெண்கள் இப்படித்தான் ஆவார்கள். ஆகவே அவர்களைப் பார்த்து ஆசைப்படாதே. இதன் விளைவாக உனக்கு சுவர்க்கத்தில் தேவகன்னியர் கிடைப்பார்கள். பொன்னுடல் படைத்த அவர்கள் என்றும் இளமையாகவே இருப்பார்கள்," என்று எல்லாம் தெரிந்தவர்போல் உறுதிகூறுகிறார்.

இதேபோல் மதத் தலைவர்கள் இவ்வுலகில் உள்ள பதவிகளுக்காக ஆசைப்படாதே என்கின்றனர். இந்த உலகத்து டில்லியை (ஆளும் பதவியை) நம்பாதே என்று எச்சரிக்கின்றனர். ஏனெனில் இன்று நாற்காலியில் வீற்றிருப்பவன் நாளை கீழே தள்ளப்பட்டுத் தரையில் கிடக்கிறான். மிகுந்த சிரமப்பட்டு ல்லியை அடைந்தவன் கடைசியில ராஜ்காட்டுக்குத்தானே ாடு) போகிறான். ஆகவே மதத்தலைவர்கள் 'மேலே ஒரு

டில்லி இருக்கிறது. அதன் பெயர் பரமபதம். அங்கே போக நடவடிக்கைகள் எடுத்தால் சுகமயமான அவ்வுலகில் நிரந்தரமாக வாழலாம்' என்று உறுதியளிக்கிறார்கள்.

இவ்வாறு உனது ஆசையின் எல்லையை விரிவாக்கும் முயற்சி நடைபெறுகிறது 'விரைந்து அழிவதை விடு; நிரந்தரத்தை நாடு' என்று உன்னிடம் கூறப்படுகிறது. ஆனால் விஷயம் அதேதான்; மொழி அதேதான்; அதே துரத்தி ஓடுதல்; அதே ஆசை வெறி. இதனால் ஆசை பலமடங்காகப் பெருகி, உன் அறிவிற்கும் ஆற்றலுக்கும் அப்பாற்பட்டதை அடைவதற்கான முயற்சியில் உன் உள்ளத்தில் புயல் வீசும்; அலைகள் எழும்; நீ முன்பைவிட அமைதியற்றவனாகத் தவிப்பாய்.

என்னைச் சந்திக்க யாராவது சாது-சந்நியாசி வந்தால், அவர் சராசரியான இல்லறத்தானைவிட அதிக நடுக்கத்துடன் தென்படுகிறார். ஏனெனில் நீ உனக்கு வசப்படக்கூடியதைத்தான் ஓடித்துரத்துகிறாய். துறவியோ அடைவதற்கு அரிதான ஒன்றை, தனது சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்றை அல்லவா துரத்துகிறார். நடைபெறக்கூடிய ஒன்றிற்காக நீ முயலுகிறாய். அவர் நடைபெற இயலாத ஒன்றிற்காக முயலுகிறார். நீ ஆசைப்படுவது கிடைப்பது சாத்தியம். அதற்கு நூற்றுக் கணக்கில் சான்றுகள் உள்ளன. அவர் ஆசைப்படுவது-மோட்சமடைவது-நடக்கக்கூடியது என்று யாரும் திரும்பிவந்து சான்று கூறியதில்லை.

மோட்சம் என்று தனியானதோர் உலகம் கிடையாது என்பதால் மகாவீரர்கூட அங்கே போய்ச் சேர்ந்திருக்க மாட்டார். மோட்சம் என்பது ஏற்கெனவே தன்னிடமே உள்ளது என்று அவருக்குத் தெரிந்திருந்தது.

புத்தர் ஞானம் பெற்றபின் ஒருவர் அவரை அணுகி, "தங்களுக்கு என்ன கிடைத்தது?" என்று விசாரித்தார். புத்தர் சொன்னார்: "இதென்ன அசட்டுக் கேள்வி. எனக்கு எது கிடைத்ததோ, அது ஏற்கெனவே எனக்க வாய்த்திருந்தது. இந்த விஷயத்தை மறந்து போயிருந்தேன். என் பையிலேயே கிடந்த ஒன்றை நான் கவனிக்கத் தவறியதுபோல் உணர்ந்தேன்."

ஆகவே, அடைய வேண்டியது ஒன்றுமில்லை. அது ஏற்கெனவே அடையப்பட்டுதான் உள்ளது. நீ அறிந்திராவிடிலும், மோட்சம் உன் சுபாவத்தில் ஊறியிருக்கிறது. நீ அறிந்திராவிடிலும், நீயே பரமேஸ்வரன்.

ஆசையென்ற விதையிலிருந்து தோன்றியதுதான் உலகம். எதைத் தின்றால் பித்தம் தெளியும் என்பதுபோல், ஆசையைத் தணிக்கும் வழியை நாடுகிறோம். எதிர்காலம் என்னும் நமது முகாமை அடைய ஏற்ற வழியைத் தேடுகிறோம்.

ஆனால் ஆன்மிகத்தில் தனிப்பாதை எதுவும் கிடையாது. போய்ச் சேர வேண்டிய இடம் என ஒன்றிருந்தால்தானே பாதையும் இருக்கமுடியும். நீ எங்கே இருக்கிறாயோ அதுதான் உன் இலக்கு, நீ அடைய நினைத்த இடம்.

ரின்ஜாயீ என்றொரு ஜப்பானிய ஜென் பிரிவுத் துறவி. அவர் ஒரு மரத்தின் கீழேயே அமர்ந்து வாழ்க்கையை ஓட்டி வந்தார். அருகில் ஒரு குன்று. அதன்மேல் புகழ்பெற்ற கோயில். ஆனால் அவர் குன்றிலேறிக் கோயிலுக்குப் போனதில்லை. அவ்வழியே கோயிலுக்குச் சென்றுவரும் பக்தர்கள் அவர் மரத்தின் கீழேயே எப்போதும் கிடப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள், "சாமி, நீங்கள் ஏன் குன்றேறிக் கோயிலுக்குப் போவதில்லை?" என்று காரணம் கேட்டனர்.

ரின்ஜாயீ சிரித்தார், "நான் இங்கு முதலில் வந்தபோது குன்றேறிக் கோயிலை தரிசிக்கலாம் என்று நினைத்தேன். சற்று ஓய்வாக இந்த மரத்தடியில் உட்கார்ந்தபடி ஆழ்ந்த சிந்தனையில் இறங்கினேன். புண்ணியத் தலம் என்பது நமக்குள்ளேயே உள்ளது என்ற எண்ணம் பளிச்சிட்டது. ஆகவே நான் இங்கேயே தங்கிவிட்டேன். இனி எங்கும் போகவேண்டுமெனத் தோன்றவில்லை," என்றார்.

சில பக்தர்களுக்கு அவர்மேல் இரக்கம் உண்டானது. பாவம், வயதானவர், குன்றேற முடியாதவர், நல்லவர் என்பதை நினைத்து அவர்கள் அவரிடம், "நாங்கள் உங்களைத் தோள்மேல் ஏற்றிக் கொண்டோ, காவடியில் (டோலியில்) சுமந்தோ மலைக்கோயிலுக்கு அழைத்துச்செல்கிறோம்," என்று முன்வந்தார்கள்.

ஆனால் ரின்ஜாயீ மறுத்தார். "என்னை நீங்கள் தூக்கிக்கொள்ள வேண்டாம். நீங்கள் எங்க போகிறீர்களோ அங்குதான் நான் ஏற்கெனவே இருக்கிறேன். நீங்கள் அங்கே போனாலும், உண்மையான நீங்கள் அங்கே போய்ச்சேர மாட்டீர்கள். உடலளவில் நீங்கள் மலைக்கோயிலை அடைந்து விட்டாலும், திரும்பிவருகையில் நிஜமான நீங்கள் இங்கேயே மரத்தடியில் உட்கார்ந்துவிடுங்கள்," என்று அழைப்பு விடுத்தார்.

புண்ணியத் தலம் நமக்குள்ளேயே இருக்கிறது. சத்தியம் நமக்குள்ளேயே இருக்கிறது. ஏனெனில் சத்தியம் நமது சுபாவமாகும். பொய்க்குத்தான் நடிப்புத் தேவை. இதை உணர்ந்துகொண்டால் போதும்.

ஆசை நீடிக்கும்வரை பற்று நீடிக்கிறது. பற்று நீடிக்கும் வரை விவேகம் உண்டாகாது. அவிவேகம் இருந்தால் மனம் சஞ்சலப்பட்டுக் கொண்டே இருக்கும். எண்ண அலைகள் தொடர்ந்து எழும்பி மனம் குழப்பத்தில் இருக்கும். காற்று வீசுவது நின்று அலைகள் ஓய்ந்தபின் ஏரியின் நீர்ப்பரப்பு கண்ணாடிபோல் காட்சி தரும். ஞான நிலையை அடைந்த மனமும் இப்படித்தான் சலனமின்றி விளங்கும்.

புத்தர் மொழிகிறார்: நீ கண்ணாடிபோல் ஆகிவிடு. பிறகு எது உள்ளதோ (உண்மைப் பொருளோ) அதுவே, உன்னிடம் பிரதிபலிப்பாகும். தற்போது நடுக்கத்துடன் உள்ளாய். அலைவீசும் இந்நிலையில் எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. உருவக் குழப்பம் உள்ளது.

ஒருவன் ஓடிக்கொண்டே புகைப்படம் எடுக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அந்தப் படங்கள் தெளிவின்றிக் குழப்பமயமாக இருக்கும். அதுபோன்றே, நாம் ஓடியபடியே வாழ்க்கையைப் பார்க்க முயற்சி எடுக்கிறோம். அப்படியே நில். எங்கும் ஓடாதே. எல்லா அசைவுகளும், எல்லா இயக்கமும் சற்று நின்றுபோகட்டும். இயக்கமின்மை, சலனமின்மை என்ற நிலை உருவாகட்டும். அப்போது உண்மைப் பொருள் உனக்குக் காட்சி தரும்.

உலகம் என்பது என்ன — ஓடி-ஓடி கடவுளைக் காண முயலுதல். ஓரிடத்தில் நின்று, தங்கி, நிதானமாகப் பார்த்தால் உலகம் தெரியாது. கடவுள் தெரிவார். ஓடினால் உலகம். நின்றால் கடவுள். புகைப்படம் தெளிவாக எடுக்கப்பட்டால் கடவுள் தெரிவார். கோணல் மாணலாக எடுக்கப்பட்டால் உலகம் தெரியும்.

கடவுளும் உலகமும் இரண்டல்ல. உலகமே கடவுள், கடவுளே உலகம். பார்வை இரண்டு விதமாக அமையலாம். ஓடியபடியே ஒருவன் பார்க்கிறான். ஆசையைத் துரத்தியபடி ஓடுவதால் அவனால் சரியாகப் பார்க்க முடியவில்லை. பார்ப்பதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. இன்னொருவனோ சாந்தமாக மரத்தடியில் உட்கார்ந்தபடி எல்லாவற்றையும் சாட்சிபோல் நிதானமாகக் காண்கிறான். முதல் மனிதன் ஓடியபடி எல்லாவற்றையும் பார்த்தும் எதுவும் அவன் மனத்தில் பதியவில்லை. இன்னொருவன் ஒரேயிடத்தில் அமர்ந்து எதையும் பார்க்காததுபோல் தோன்றினாலும் பார்க்க வேண்டிய ஒன்றைப் பார்த்துவிடுகிறான்.

புத்தர்களின் சிலைகளைப் பார். சமணர்கள் வழிபடும் தீர்த்தங்கரர்களின் சிலைகளைப் பார். அவை நடப்பதைப்போல், நடனம் ஆடுவதைப்போல், வெவ்வேறு வகையான உடல் இயக்கங்களைக் காட்டுவதுபோல் செதுக்கப்படவில்லை. பெரும்பாலானவை அமர்ந்த நிலையிலும், சில நேராக நிற்கும் நிலையிலும் தயாரிக்கப்பட்டுள்ளன. அதாவது, யாரும் ஓடவில்லை. ஒரே இடத்திலேயே இருந்து தமக்குள் லயித்துள்ளனர் இதன் விளைவாக அவர்களுக்கு சத்தியத்தின் அனுபவம் கிடைத்தது.

'பற்றுவதில், ஈடுபடுவதில் விருப்பம்; கைவிடுவதில், துறப்பதில் பகை உணர்வு என்று ஏற்படுவதால் அறிவுள்ள மனிதன், முரண்பாடுகளை அறியாத கபடமற்ற சிறுவனைப்போல், இதுவரை சுபாவப்படி எப்படி இருந்தானோ, அப்படியே நீடிக்கிறான்.' **(சுலோகம் 153)**

**ம**னத்தில் அலைகள் வீசும்வரையிலும் உனது அறிவாற்றல் செயல்படாதிருக்கிறது. நீ அறியாமை இருட்டால் சூழப்படுகிறாய். கண்ணுக்கு எதுவும் தெரியவில்லை. கண்களில் தெளிவில்லை,

தூய்மையில்லை, இளமையில்லை, பசுமையில்லை, அவை களங்கப்பட்டுள்ளன, விகாரப்பட்டுள்ளன, எல்லாம் நிழலாகத் தெரிகிறது. சத்தியம் கண்ணுக்குத் தெரியவில்லை. எங்கும் ஒலி கேட்கிறது. ஆனால் இரைச்சலாக இருக்கிறது. இசை கேட்க வில்லை.

இசைக்கும் இரைச்சலுக்குமிடையே மிகுந்த வேறுபாடுண்டு. இரைச்சலில் எவ்விதமான ஒழுங்குமுறையும் கிடையாது. இசையோ விதிகளுக்குக் கட்டுப்பட்டது. இரைச்சலில் ஓர் ஒழுங்குமுறை இருந்தால்-உதாரணமாக, கோஷம் போடும் சமயம்-அதில் இசையின் சாயல் தெரிகிறது. இசையில் குரல், ராகம், தாளம் தவறினால் காட்டுக்கத்தலாகத் தெரியும். சப்த ஸ்வரங்களும் சீராக ஒலிக்கப்பட்டால்தான் இசை தோன்றும். ஸ்வரங்களிடையே மோதல் நிகழ்ந்தால் வெறும் கூச்சலாக இருக்கும்.

உலகம் ஒலிமயமானது. ஆனால் கட்டுப்பாடுகள் கிடையாது. ஆகவே பேரிரைச்சலே கேட்டுக் கொண்டிருந்தது. அந்த எதிரும் புதிருமான ஒலிகளை ஒழுங்குபடுத்த இறைவன் இசை பிறக்கச் செய்தார்.

ஆசை நீடிக்கும்வரை அவிவேகமும் இருக்கும். அப்போது எதையும் பிரித்தே பார்க்கும் புத்தியும் தொடரும். எது சரி-எது தவறு என்று புத்தி தீர்ப்பு வழங்கும்.

அறநெறியும் ஆன்மிக நெறியும் ஒரு முக்கியமான விஷயத்தில் வேறுபடுகின்றன. 'இது சரி-அது தவறு' என்று சொல்வது அறம் அல்லது உலக நீதி. ஆன்மிகம் 'எது எப்படியோ அது அப்படியே இருக்கும். நல்லது, கெட்டது என்று எதுவுமில்லை' என்கிறது.

அறநெறிகளின்படி வாழ்கின்றவன் ஆன்மிகவாதியாகவும் இருப்பான் என்பது நிச்சயமில்லை. அறத்தைக் கடைப்பிடிப்பவன் நல்ல மனிதன் மட்டுமே ஆவான். அவனை மகாத்மா என்று கூற முடியாது. நல்லவன் எதெல்லாம் சரியோ, நியாயமானவையே அவற்றை மட்டுமே செய்வான். மகாத்மா எனப்படுபவர் நல்லது-கெட்டது என்று எதையும் பிரித்துப் பார்க்காமல், எது எவ்விதம்

நடைபெறுகிறதோ அதை அப்படியே நடக்க விடுகிறார். அவர் நடுவில் குறுக்கிடுவதில்லை. அறத்தைக் கடைப்பிடிப்பவன் கர்த்தா முறையில் இயங்குகிறான். மகாத்மா தன்னை கர்த்தாவாக நினைப்பதேயல்லை. நல்லவர்களை நீ மகாத்மா என்கிறாய். மகாத்மா என்பது பெரிய விஷயம்.

ஐரோப்பிய தத்துவ அறிஞரான லென்ஜா தெல்வாஸ்தோ குருவைத் தேடி இந்தியா வந்தவர் ரமண மகரிஷியை தரிசித்தார். ஆனால் ரமணரின் பேச்சு அவருக்குப் பிடிபடவில்லை. இது குறித்து அவர் தன் நினைவுகளின் தொகுப்பில் எழுதியிருக்கிறார். 'ரமணரின் ஆசிரமத்தில் நல்லது எது-கெட்டது எது என்று வேறுபாடு காணப்படவில்லை. எது எப்படி நடக்க வேண்டும். எப்படி நடைபெறக்கூடாது என்றும் பிரித்துப் பார்க்கப் படுவதில்லை. நான் என்ன செய்ய வேண்டும்-என்ன செய்யக் கூடாது என்று ரமணரையே நேரில் கேட்டேன். அவர் விசித்திரமாகப் பதில் சொன்னார். "இதோ பாரப்பா, எதையும் செய்வது என்பதில் மாட்டிக்கொள்ளாதே. சாட்சியாகிவிடு. பார்ப்பதுடன் நிறுத்திக்கொள். ஆய்வுசெய்யாதே," என்றார்.

'அடுத்து, நான் ஏதாவது சரியான வழியைச் சொல்லுங்கள். நான் எனது குணத்தை எப்படி மேன்மைப்படுத்திக் கொள்வது? சுபமான எண்ணங்களே நிறைந்த மனப்போக்கு எவ்வாறு அமையும்? எண்ணங்கள் நல்லவையாக இல்லாவிடில் கடவுளை அடைய முடியாதல்லவா? என்று கேட்டேன்.

'அதற்கு ரமணர், "நீ கடவுளை அடைவதைப் பற்றிய கவலையைவிடு. நீ அவரிடம் போய்ச்சேர்ந்துதான் உள்ளாய். சுபமும் சரி, அசுபமும் சரி, இரண்டும் அங்கே சென்றடைகிறது. இந்த இரண்டுமே அவரின்றி இருக்க முடியாது. ராவணனும் அவரிடம்தான் போய்ச் சேருகிறான். நீ சாட்சியாகிவிடு. கர்த்தா மனப்பான்மையைக் கைவிடு," என்றார்.'

இந்த ஐரோப்பிய அறிஞரின் மதிப்பீட்டின்படி ரமணர் புனிதமானவர்தான். ஆனால் அவர் சொன்னது மனத்தில் பதியவில்லை என்கிறார். பிறகு அவர் வர்தா சென்று காந்தியடிகளைச் சந்தித்தார். அவருக்கு திருப்தி ஏற்பட்டது.

இவரல்லவா சரியான குரு என்று அவர் நினைத்தார். ஏனெனில் காந்திஜி திட்டவட்டமான அறிவுரைகள் கூறுகிறார். எத்தனை மணிக்குக் கண்விழிக்க வேண்டும்; தேநீர்-சிகரெட் கூடாது; எத்தனை ஆடை அணியலாம்; எத்தகைய உணவை எப்பொழுது, எந்த அளவு சாப்பிடலாம்; எந்த உணவு வகைகளைத் தவிர்ப்பது என்றெல்லாம் காந்திஜி தெரிவிக்கிறார். சட்னியிலிருந்து பிரம்மம்வரை அலசிப் பேசுகிறார். சட்னி என்றாலும் வேப்பிலை சட்னியை மட்டுமே தொட்டுக்கொள்ள வேண்டுமாம். அப்போதுதான் ருசி மரத்துப் போகும் என்கிறார். மொத்தச் சாப்பாட்டிலும்கூட ருசி பார்க்கக்கூடாது என்றும், எப்பொருளிலும் சுகம் தேடக்கூடாது என்றும் எச்சரிக்கிறார். உப்பில்லாமல் சாப்பிடச் சொல்கிறார். அப்படியும் சுவை தெரிந்தால் வேப்பிலை சட்னியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இப்படி காந்திஜி 'செய்க-செய்யற்க' (do's and don'ts) என்று ஒரு நீண்ட பட்டியலே தயாரித்திருக்கிறார். இந்த அணுகுமுறை ஐரோப்பிய மூளைக்கு திருப்தி தரக்கூடியதாகும்.

ஆகவே லெனஜா தெல்வாஸ்தோ மகரிஷியாகிய ரமணரை குருவாக ஏற்காமல் அரசியல்-சமூகத் தலைவரான காந்திஜியைத் தன் குருவாக ஆக்கிக்கொண்டார். இது குறித்து நீ வியக்க வேண்டாம். உன் விஷயத்திலும் இப்படித்தான் நடக்கும். உனது புரிந்துகொள்ளும் ஆற்றலும்கூட இந்த அறிஞரின் அணுகு முறையிலிருந்து வேறுபட்டதன்று. உன்னாலும் ரமணரை எளிதில் புரிந்துகொள்ள முடியாது. ரமணரின் படத்தை வெகுசிலரின் வீட்டில்தான் காண முடிகிறது. ரமணரைப் பற்றி அக்கறை, யாருக்குள்ளது? காந்திஜியின் படமில்லாத வீடோ, அலுவலகமோ உண்டா? காந்திஜி மிக உயர்ந்த மனிதர்; நல்ல ஆத்மா. ஆனால் அவரை மகா ஆத்மா என அஷ்டாவக்ரர் ஒப்புக் கொள்ள மாட்டார். மகாத்மா என்பவர் தீயதை மட்டுமின்றி நல்லதையும் கடந்திருக்க வேண்டும்.

வேடிக்கை என்னவென்றால் யாரோ ஒருவர் ரமணர் வழக்கமாக அமரும் இடத்தின் பின்புறம் சுவரில் காந்திஜியின் படத்தைத் தொங்கவிட்டிருந்தார்! ரமணர் தடுக்கவில்லை. அந்தப் படம் இருந்துவிட்டுப் போகட்டும், கழற்ற வேண்டாம் என்றாராம்.

நல்லோர் அல்லது சான்றோரை நாம் புரிந்துகொள்ள முடியும். நமக்குப் புரியும் விதத்தில்தான் நல்லவர் பேசுகிறார். உனக்கு உணவில் ருசி; உனக்குப் பெண்களிடம் கவர்ச்சி; உனக்குப் பணத்தாசை. ஆனால் அவர் 'உணவில் ருசி பார்க்காதே; பெண்களிடம் மயங்காமல் பிரம்மசரியத்தைக் கடைப்பிடி; பண ஆசை கொள்ளாமல் கையிருப்பையும் தியாகம் செய்' என்று உபதேசிக்கிறார். நீ பேசுவது தீயமொழி. அவர் பேசுவது நன்மொழி. ஆனால் மொழி ஒன்றுதான் நீ இப்பக்கம் போகிறாய். அவர் அப்பக்கம் போகிறார். ஆனால் பாதை ஒன்றுதான். நீ ஏணியிலிருந்து கீழே இறங்குகிறாய். அவர் படிகளில் ஏறி மேலே போகிறார். ஆனால ஏணி ஒன்றுதான் இதனால் உண்மையான மகாத்மா அல்லது ஞானியை நம்மால் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியவில்லை.

மக்கள் முதலில் செய்தல், பெறுதலில் ஈடுபடுகிறார்கள். எதையெதைச் செய்தால் சுகம் கிடைக்குமென நம்புகிறார்களோ, அவற்றை விரட்டிச் செல்கிறார்கள். பிறகு இந்த முயற்சிகளால் சுகம் கிடைக்கவில்லை என்பது தெரிந்ததும் எல்லாவற்றையும் துறக்கத் தொடங்குகிறார்கள். மக்களின் வாழ்க்கையை இவ்வாறு 'எடு-விடு' என்னும் இரண்டு சொற்களில் அடக்கிவிடலாம். முதலில் போகத்தில் ஈடுபடுகின்றனர். அதனால் திருப்தி கிடைக்காமல்போய், தியாகத்தில் இறங்குகின்றனர். தியாகத்தை அனுபவிப்பதும் ஒருவகை போகம்தான்.

இந்த நிலையில் ஒருவன் சந்நியாசியாகிறான். முன்னர் பெண்களைத் துரத்தியவன், இப்போது பெண்களைக் கண்டாலே அலறி எதிர்திசையில் ஓடுகிறான். முன்பு விதம்விதமாக உணவுகளை ரசித்துச் சாப்பிட்டான். ஆனால் சுகத்திற்குப் பதில் ஆரோக்கியம் குறைந்தது. இதனால் பிறகு முடிந்தவரையிலும் உபவாசம் இருந்து பார்க்கிறான்.

பற்றுடன் இருந்த காலத்தில் எவையெல்லாம் பிடித்திருந்ததோ அவை திருப்தி தராத நிலையில் மனத்தில் கசப்பு மண்டுகிறது. வாழ்க்கை சுவை இழக்கிறது. மனத்தில் பகைமை (துவேஷம்) உணர்வு எழுகிறது.

சாமியார் பெண்ணை மாயப் பிசாசு என்று திட்டுவார். சுவையறிந்து சப்புக்கொட்டிச் சாப்பிடுவதை ஏசுவார். எல்லா இன்பங்களையும் கண்டிப்பார். அவரது செய்கையில் தீவிரமான பகைமை உணர்ச்சி காணப்படுகிறது. அன்பு இருந்த இடத்தை வெறுப்பு பிடித்துக் கொண்டது. முதலில் நெருப்பருகே கைகளைக் கொண்டு போனபோது இதமாக இருந்தது. தவறுதலாக ஒருமுறை சுட்டுவிட்டால் நெருப்பிடம் பகைமை உண்டாகிறது. கவர்ச்சி அருவருப்பாக மாறுகிறது. உறவு மறைந்து துறவு தலைதூக்குகிறது.

மகாத்மா வேறுவிதமானவர். அவருக்கு எதனுடனும் ஒட்டுதலும் எதையும் விடுதலும் இல்லை. போகத்திலிருந்து தியாகத்துக்குத் தாவுபவர் சந்நியாசி. தியாகத்தையும் கடப்பவர் மகாத்மா. நீதி-அநீதி, சுபம்-அசுபம் என்பவை ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. மகாத்மா இந்த இரட்டைகளைக் கடந்தவர். நல்லவனும் கெட்டவனும் அருகருகேதான் நிற்கின்றனர். அவர்களிடையே ஒத்துழைப்பு உள்ளது. அவர்கள் ஒரு கடையின் இரண்டு கூட்டாளிகள் (பாகஸ்தர்கள்) போன்றவர்கள்.

கெட்டவன் என்று எவருமே இல்லாத ஓர் உலகத்தைக் கற்பனை செய்து பார். அப்படியானால் அங்கே நல்லவர்கள் என்பவர்களே இருப்பார்கள். ஆனால் ராவணன் இல்லாத உலகத்தில் ராமனுக்கு மதிப்பு ஏது? ஆக, ராவணனை நம்பித்தான் ராமன் இருக்கிறார்! அதேசமயம், ராமனின்றி ராவணன் அதிகமாக அறியப்பட்டிருக்க மாட்டான். ராமலீலா திருவிழா நடத்துவதற்கு ராமன், ராவணன் இருவருமே கட்டாயமாகத் தேவைப்படுகின்றனர்.

ராவணன் இல்லாமல் ராம்லீலா கூத்து நடக்காது. ஓர் அங்குலம்கூட கதை முன்னேறாது. ஆரம்பத்திலேயே கதை படுத்துவிடும். பார்வையாளர்கள் உடனே எழுந்துசென்று விடுவார்கள். சீதை அபகரிக்கப்பட வேண்டும். போர் நிகழ வேண்டும். இல்லாவிடில் கூத்துமேடையில் ராமன் சும்மா உட்கார்ந்திருக்க நேரிடும். ராமபக்தர்கள் சிலர் சிறிது நேரம் காத்திருந்து, ராமனால் எதுவும் செய்ய முடியாமல் போவதைப் பார்த்து, கலைந்து சென்றுவிடுவார்கள். ஒருவர் இயங்குவதற்கு

இன்னொருவர் தேவைப்படுகிறார். அவர் நண்பராகவும் இருக்கலாம், எதிரியாகவும் இருக்கலாம். ஓரிடத்தில் எதிரியாக இருப்பவர் இன்னோர் இடத்தில் நண்பராக இருக்கலாம். மேடைமேல் பிறவிப் பகைவர்கள் போல ஆக்ரோஷமாகப் போரிடும் ராமனும் ராவணனும் திரை இறக்கப்பட்டிருக்கும் சமயம் மேடையின் பின்னால் ஒன்றாக டீ குடித்துக் கொண்டிருப்பார்கள்! அரட்டையடித்துக் கொண்டிருப்பார்கள். ஏனெனில் இருவரும் ஒரே நாடக மண்டலியின் உறுப்பினர்கள்.

அஷ்டாவக்ரரின் சூத்திரத்தின்படி பார்த்தால், நீ நாடக சூழ்நிலையைவிட்டு வெளியேற விரும்பினால், நீ மண்டலியின் உறுப்பினர் பதவியிலிருந்து விலக நேரிடும். நீ ராமனாகவோ, ராவணனாகவோ உன்னை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் எழாது. இந்த இருவரையும் கடந்த நிலைக்கு நீ செல்ல வேண்டும்.

பகைமை காரணமாக ஒன்றை விடுவதும் நம்மை நுணுக்க மாகக் கட்டிப்போடுகிறது. அதை நாம் மறக்க முடிவதில்லை. எதிர்மறையாக நாம் அதனுடன் சேர்ந்து தொங்குகிறோம்.

கபீர்தாசரின் வாழ்க்கையில் நடந்ததாக ஒரு விசித்திரமான சம்பவம் கூறப்படுகிறது. அவரது வீட்டில் தினமும் பஜனை நடைபெறும். உணவு வேளை நெருங்கியதும் கபீர் மனைவியை அழைத்து எல்லோருக்கும் சாப்பாடு ஏற்பாடு செய்யச் சொல்வார்.

கபீரோ ஏழை. நெசவு வேலை செய்பவர். அவ்வேலையைக் கூட பஜனை இல்லாத சமயம்தான் செய்வார். பிறகு எப்படி பஜனைக்காரர்களுக்கு தினமும் சோறு போட முடியும் என்று மனைவி தவித்தாள். கடன் வாங்கிச் சமாளித்தாள். திருப்பித் தராத நிலையில் கடன் கிடைப்பதும் நின்றுபோனது.

அவள் மகன் 'கமாலை அழைத்துச் சொன்னாள், "போய் உன் அப்பாவுக்கு உறைக்கும்படி சொல். 'பஜனைக்காரர்களே நம் நிலையைப் பார்த்து இங்கு சாப்பிட விரும்பாமல் எழும்போது நீங்கள் ஏன் கையைப் பிடித்துத் தடுத்து, சாப்பிட்டுப் போகும்படி வற்புறுத்துகிறீர்கள்?' என்று கேள். இனிமேலும் இவர்களுக்குச்

சாப்பாடு போட நமக்குக் கட்டுப்படியாகாது. பஜனைக்காரர்கள் வரட்டும், பாடட்டும், போகட்டும்,' என்று அப்பாவிடம் உறுதியாகச் சொல்லிவிடு.''

அவ்வாறே கமால் தந்தையிடம் சென்று தெரிவித்தான். பலமுறை நினைவூட்டினான். கபீர் தமது பழக்கத்தை மாற்றிக் கொள்ளவில்லை. ஒருநாள் கமாலுக்குக் கோபம் வந்துவிட்டது. ''உங்கள் விருந்துபசாரத்தை நிறுத்தப் போகிறீர்களா, இல்லையா? தலைக்குமேல் கடன் ஏறிவிட்டது. இதனால் புதிதாகக் கடன் கிடைப்பதில்லை. உங்கள் பக்தர்களுக்குச் சாப்பாடு போடுவ தானால் பணத்திற்கு எங்கே போவது? இனி திருடி வந்தால்தான் பணத்தைக் கண்ணால் பார்க்கலாம்,'' என்று வெறுப்புடன் கூறினான்.

கபீர் துள்ளிக் குதித்தார். ''ஏ பைத்தியமே! ஏன் இத்தனை நாளாக இந்த விஷயத்தைச் சொல்லாமலிருந்தாய்? நானும் உன் அம்மாவும் ஏன் பணத்திற்கு கஷ்டப்படும்படி விட்டாய்? பணத் தேவையைச் சமாளிக்க இப்படி ஒரு வழி உள்ளதை முன்பே நீ சொல்லியிருக்கலாமே,'' என்றார்.

கமால் திகைத்துப் போனான். திருடலாம் என்கிறாரே இவர் என ஆச்சரியப்பட்டான். பிறகு அவன் சமாளித்துக்கொண்டு, ''சரிப்பா, இன்றிரவு திருடப் போகிறேன். நீங்களும் என்னுடன் வந்தாக வேண்டும்,'' என்று கட்டளையிட்டான். தந்தை தமாஷ் செய்கிறார் என நினைத்தார். திருடக் கூப்பிட்டதும் அது பாவச் செயல் என்று மறுத்துவிடுவார் என்று எதிர்பார்த்தான். அவரோ, ''அதற்கென்ன, ரெண்டு பேரும் சேர்ந்தே திருடப்போகலாம்,'' என்று ஒப்புக் கொண்டுவிட்டார்!

நள்ளிரவு ஆனதும் கமால் தந்தையை எழுப்பி, ''திருடக் கிளம்பலாமா?'' என்று கேட்டான். 'கபீர்தாசரா திருடப் போவார்?' என்று தந்தை மறுத்துத் தூங்கிவிடுவார் என்று நினைத்தான். ஆனால் அவரோ முகத்தைக் கழுவிக்கொண்டு மகனுடன் கிளம்பிவிட்டார்!

கமால் ஒரு வீட்டுச் சுவரில் கன்னம் வைத்தான். ''நான் உள்ளே நுழையட்டுமா?'' என்று கேட்டான். இப்போதாவது தந்தை.

"போதும் கமால், உன்னைச் சோதித்துப் பார்த்தேன். உள்ளே நுழைய வேண்டாம். பஜனைக்காரர்களுக்குச் சாப்பாடு போடுவதை நிறுத்திவிடலாம்," என்று சொல்லிவிடுவார் எனக் காத்துக் கொண்டிருந்தான். அவரோ கமாலைப் பார்த்து ஆசி கூறுவதுபோல் கையை உயர்த்தி, "பேஷா, உள்ளே போ பிறகு எதற்காக நள்ளிரவில், கொட்டும் பனியில், தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு நாம் வந்திருக்கிறோம்? சீக்கிரம் வேலையை முடி. விடிவதற்குச் சற்று முன்பே பஜனை கோஷ்டி பாடியபடியே இவ்வழியாக வந்துவிடும்," என்று அவசரப்படுத்தினார்.

கமால் உள்ளே நுழைந்தான். தான் பணம் திருடி வெளியே வந்ததும் தந்தை அதை வாங்க மறுத்துவிடுவார் என எண்ணினான். தந்தை எந்த அளவிற்குப் போவார் என்று பார்க்கவும் விரும்பினான். பொற்காசுகளைத் திருடி, கையில் கொண்டுபோன பையில் போட்டு, வெளியே தலைநீட்டிய சமயம், "கமால், உள்ளே தூங்கிக் கிடந்தவர்களை எழுப்பி, விஷயத்தைச் சொன்னாயா, இல்லையா," என்று கபீர் கேட்டார்.

கமாலுக்குக் குழப்பமாகிவிட்டது. "அப்படிக்கூட எந்தத் திருடனாவது செய்வானா?" என்று கேட்டான்.

"ஏன் சொல்கிறேன் என்றால், பாவம், நாளை பணத்தைக் காணோமே என்று வீட்டிலுள்ளவர்கள் கவலைப்படுவார்கள்; அங்குமிங்கும் தேடி அலைவார்கள். திருட்டுப் போய்விட்டது என்று தெரிந்தால், வீட்டில் தேடி சிரமப்படுவது நின்றுவிடும், அரசாங்கத்திற்குத் தெரிவிப்பார்கள் அல்லது தலைவிதி என்று விட்டுவிடுவார்கள்," என்று கபீர் விளக்கினார்.

தந்தை சொல் தட்டாத கமால் சப்தம் போட்டான். வீட்டிலிருந்தவர்கள் எழுந்து ஓடிவந்தார்கள். கமால் தான் செய்த சந்து வழியாக ஊர்ந்து வெளியேற முயன்றான்; வீட்டிலிருந்த வர்கள் அவன் கால்களைப் பிடித்துக் கொண்டனர். கமால் இதைத் தெரிவித்ததும் கபீர்தாசர் 'உடம்புக்குத் தலையே பிரதானம்' என்று கூறி, கையில் கொண்டுவந்திருந்த கத்தியால் அவன் தலையை வெட்டிக் கொண்டு போய்விட்டார்! வீட்டிலிருந்தவர்களுக்குத் தலையற்ற உடல் மட்டுமே அகப்பட்டது. ஆகவே திருடன் யாரென அவர்களால் அடையாளம் காண முடியவில்லை.

ஆனால் தலையற்ற உடலிலும் அழகு தெரிந்த்து. ஒருவர் அந்த உடல் கமால் ஆக இருக்குமென நினைத்தார். அவர் தெருக்கம்பத்தில் உடலைக் கட்டிவைக்கச் சொன்னார். விடியலில் வரும் பஜனை கோஷ்டியில் யாராவது அந்த உடலை அடையாளம் காண்கிறாரா என்று பார்ப்போம் என ஆலோசனை கூறினார். பஜனை கோஷ்டி பாடியபடி வந்தது. கமால் உடல் அடையாளம் காணப்பட்டது. ஆனால் பஜனை செய்தவர்களால் அல்ல. பாட்டைக் கேட்டதும் கமாலின் உடலில் மிஞ்சியிருந்த கைகள் உற்சாகமாகத் தாளம்போட ஆரம்பித்தனவாம்!

கபீர்தாசரின் கண்ணோட்டம் என்ன? திருடவும் கிளம்பி னார்; மகன் தலையை வெட்டவும் செய்தார்! நம்பமுடியவில்லை அல்லவா? அதுவும் சரிதான். இதைக் கதையென வைத்துக் கொண்டு, பின்னணியில் உள்ள செய்தியைக் கவனிக்க வேண்டும்.

சான்றோன் என்னும் நிலையையும் கடந்த மகாத்மாவின் மனத்தில் திருடுதல்-திருடாமை, வன்முறை-அகிம்சை போன்ற சஞ்சலமான அலைகள் எழுவதில்லை. நல்லது-கெட்டது, சுபம்-அசுபம் என்னும் பரஸ்பர மோதல்கள் எழாத மனநிலை மகாத்மாவினுடையது. பிரிவுகள், மாறுபாடுகளற்ற அத்வைத நிலையை அவர் அடைகிறார். கபீர்தாசர் அத்தகையவரே.

ஞானம் பெற்றவன் முரண்பாடுகளற்ற சிறுவனைப் போன்ற மனநிலை பெற்றிருப்பான். எப்படி அவன் உள்ளானோ அதிலேயே அவன் திருப்தியுடன் விளங்குவான். வலிந்து ஏதாவது ஆகவேண்டுமென அவன் முயலமாட்டான். சிறுவனுக்குக் கோபம் வந்தால் அதை முழுமையாக வெளிப்படுத்துகிறான். அன்பிருந்தால் அதையும் இப்படியே வெளிக்காட்டுகிறான். அவன் எதையும் மறைப்பதில்லை. அவனிடம் நடிப்பு கிடையாது. மகாத்மாவும் அப்படித்தான் உள்ளும் புறமும் ஒரேமாதிரி இருப்பார். ஆகவேதான் அவரிடம முரண்பாடுகள் கிடையாது எனப்படுகிறது.நல்லவரிடம் நன்னடத்தை உண்டு. கெட்டவரிடம் தீயநடத்தை உண்டு. மகாத்மா எனப்படுபவர் நடத்தை நிலைக்கு அப்பாற்பட்டவராகிறார்.

மகாத்மாவிடம் எதிரெதிரான தன்மைகள் கிடையாது. இது சரி; இது உண்மை; இது தவிர்க்கப்பட வேண்டியது; இது பயனளிப்பது; இது சுபம்-அது அசுபம்; இது மாயை-அது பிரம்மம் என்றெல்லாம் அவர் கூறுபோட்டுப் பார்க்கமாட்டார். எது எப்படியோ அதை அப்படியே ஏற்பார். சுருக்கமாகச் சொல்வதானால் மகாத்மா எனப்படுபவர் சகஜமாக, இயற்கையாக இருப்பார்.

சமாதி விஷயத்திலும் 'சகஜ' என்னும் சொல் வருகிறது. சமாதி நிலை மூன்று வகையானது-ஸவிகல்ப சமாதி, நிர்விகல்ப சமாதி, சகஜ சமாதி. ஸவிகல்ப சமாதியில் மனத்தில் எண்ணங்கள் தோன்றி மறைகின்றன. நிர்விகல்ப சமாதியில் எண்ணங்கள் நீங்கிவிடுகின்றன. ஆனாலும் அவ்வாறு எண்ணங்கள் நீங்கின என்பது நினைவில் நீடிக்கிறது. சகஜ சமாதியில் எந்த நினைவுகளும் மிஞ்சுவதில்லை. அச்சமயம் எண்ணங்கள் இருப்பதில்லை; அவை இல்லை என்னும் நினைப்பும் இருப்பதில்லை. சகஜ சமாதி உன் வீட்டிற்கு நீ வந்துசேர்ந்துவிட்டது போன்ற நிலையாகும்; உன் இயற்கையான சுபாவத்திற்கு (சுபாவம்=சுய பாவம்=சொந்தமான உணர்வுநிலை) திரும்பி வந்துவிட்ட நிலையாகும். எது உள்ளதோ, அது எப்படி உள்ளதோ, அதை அவ்வாறே ஏற்றுக்கொள்கிறாய். எதையும் மாற்றியமைக்க வேண்டுமென்ற விருப்பமோ, கோரிக்கையோ தெரிவிப்பதில்லை. பிறகு ஆசை எழுவதற்கு வாய்ப்பில்லை.

**நான் அறிந்த உலகம் இஃதே,**
**உலகமென்னும் நாடக மேடையில்**
**எப்படி, என்னவாக வருவேனென**
**எப்படி, என்னவாகத் திரும்புவேனென**
**நான் அறிந்திருக்கவில்லை**
**சுயமாய் இயங்குவதாய் நினைத்த நான்**
**தலைவிதிதான் நாடக இயக்குநராய்**
**என்னை ஆட்டுவிப்பதைப் புரிந்துகொண்டேன்.**
**எல்லாம் நாடகம் என்பதை மறந்துபோனதே**
**வாழ்க்கையில் நான் செய்த பெருந்தவறு.**

நல்லதைக் கண்டான்; அது நாடகமென மறந்தான். தீயதைக் கண்டான்; அது நாடகமென மறந்தான். தீயதில் லயித்தவன் ராவணன் ஆனான். நல்லதில் ஆழ்ந்தவன் ராமன் ஆனான். தீயதைப் போர்த்திக் கொண்டவன் பாவி எனப்பட்டான். நல்லதைப் போர்த்தியவன் புண்யாத்மா என்று அழைக்கப்பட்டான்.

ஆனால் இந்த இருவகையினரையும் கடந்தவரும் உண்டு. அவர் எல்லாம் நாடகம் என்பதை அறிந்துள்ளார். நல்லது-கெட்டது, ராமன்-ராவணன் என்று வாழ்க்கையில் எல்லாமே நாடகம் என்பது அவரது முடிவு. ஆகவே சாட்சியாக அவர் கரையிலேயே நின்று வாழ்க்கை நதியின் ஓட்டத்தைப் பார்க்கிறார். ராமனையும் ராவணனையும் அவர் கடந்தவராக இருக்கிறார்.

சிலர் எனக்கு எழுதிய கடிதத்தில் ராமனைப் பற்றியோ, ராமாயணம் இயற்றிய துளசிதாசரைப் பற்றியோ நான் என் சொற்பொழிவில் ஏன் குறிப்பிடுவதில்லை என்று கேட்கிறார்கள்.

ராமன் வாழ்க்கை முழுவதும் சமூக அறநெறிகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்கிறார். எல்லாவற்றையும் நல்லது-கெட்டது என்று பிரிக்கிறார். நல்லதை நாட்டி, தீயதை ஓட்டுகிறார். அவரை மனிதர்களில் கண்ணியம் நிறைந்த உத்தமர் (மர்யாதா புருஷோத்தம்) என்று புகழ்கிறார்கள்.

ஆனால் நல்லது-கெட்டவைகளைக் கடந்த மகாத்மாக்களிடமே எனக்குப் பிடிப்பு உள்ளது. கிருஷ்ணரை எனக்குப் பிடிக்கும். அவர் கட்டுப்பாடுகளை ஏற்காதவர். சுதந்திரமான போக்குடையவர். அவரை முழுமையாக நம்ப முடியாது. அவர் சிறுவர்களைப்போல் நடந்துகொள்பவர். சிறுவர்களைப் போலவே, செய்யும் சபதங்களை மறக்கிறார். ஆயுதம் ஏந்தமாட்டேன் என்று சபதம் செய்த அவர் ஆயுதத்தை பிரயோகிக்கிறார். கோபிகைகளுக்குச் செய்த சபதங்களை மறந்துவிடுகிறார்.

இதன் பின்னணியை ஆராய்வோம். குறிப்பிட்ட சூழ்நிலையில், குறிப்பிட்ட நேரத்தில் ஒரு சபதம் செய்கிறார். அக்கணம் நீங்குகிறது. புதிய சூழ்நிலை உதிக்கிறது. இதற்கேற்ற புதிய பதில் தேவைப்படுகிறது. பழைய சபதத்தைக் கடைப்

பிடிப்பதால் மரியாதை காப்பாற்றப்படுகிறது. ஆனால் புதிய வாழ்க்கை முறைக்கு ஏற்ப நம்மையும் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். இதுவே முன்னேற்றம்.

ஆனால் தேவைப்பட்டால் பின்வாங்கவும் வேண்டும். அதுதான் சூழ்நிலைக்குப் பொருந்தும் என்றால் பிடிவாதம் செய்யாமல் பின்வாங்குவதே புத்திசாலித்தனம். கிருஷ்ணர் பின்வாங்கியதுண்டு. அதனால்தான் பக்தர்கள் ரண்சோட்தாஸ்ஜி (போர்க்களத்தை விட்டு ஓடுபவர்) என்னும் பெயர் வைத்திருக்கிறார்கள்.

கிருஷ்ணர் கட்டுப்பாடுகளைக் கடந்து ஒளிவீசுகிறார். அவரை சமூகம் வகுத்துள்ள நெறிகளின் அடிப்படையில் புரிந்துகொள்வது கடினம். ராமனின் சித்திரம் தெளிவாக இருக்கிறது. ஆனால் கட்டுப்பாடுகளைக் கடந்த விசேஷத் தன்மை அவரிடம் இல்லை. இதனால்தான் ராமனை அம்சாவதாரம் (நிறைவற்ற அவதாரம்) என்கிறோம். கிருஷ்ணரை பூர்ணாவதாரமாகக் கொள்கிறோம் அதாவது அவர் முழுக்கடவுள். ஆகவே அவர் வழக்கமான கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவர். மரியாதையாக நடந்துகொள்வது மனித குணம். அப்படி நடந்துகொள்வதில் முதலிடம் பெற்றவர் ராமன். எனவே அவர் மர்யாதா-புருஷோத்தம் எனப்படுகிறார். அவர் எல்லை மீறாதவர்; கிழித்த கோடு தாண்டாதவர். இதற்காகவே சீதை புனிதமானவள் என அறிந்திருந்தும் அவர் அவளுக்கு அக்னி பரீட்சை வைக்கிறார். அத்துடன் நிற்காமல், அயோத்தி திரும்பிய பின், ஒரு சலவைக்காரரின் மனத்தில் சீதையின் ஒழுக்கம் குறித்து சந்தேகமுள்ளது என்பதற்காக கர்ப்பவதியான அவளைக் காட்டுக்கு அனுப்பிவிடுகிறார். ஏனெனில் அரசருக்குரிய மரியாதையைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும்.

ராமன் நாம் போய்ச்சேர வேண்டிய இறுதி இடம் இல்லை. பயணத்தின் நடுவில் தங்கும் கூடார முகாம் போன்றவர். கிருஷ்ணரைப் புரிந்துகொள்ள முடியாவிடில் ராமரிடம் தங்கு. இரவில், வெட்டவெளியில் கிடப்பதற்குப் பதிலாகச் சத்திரத்தில் ஒதுங்கினால் பாதுகாப்புதானே. ஆனால் சத்திரம் நாம் போய்ச்சேர வேண்டிய வீடன்று.

துளசிதாசர் தமது இஷ்டதெய்வமாகிய ராமனைப் போலவே வரம்பு மீறாதவர். பரம்பரையான அணுகுமுறையைத் தொடர்ந்தவர். நிறைமொழி மாந்தர்களாகிய முன்னோர்கள் கூறியதையே மந்திரம்போல் திருப்பிச் சொன்னவர். அவரிடம் புதுமைக்குரல், புரட்சிக்குரல் ஒலிக்கவில்லை. ஆன்மிகத்தில் புரட்சிக் குரலைக் கேட்க வேண்டுமானால் கபீர்தாசர், குரு நானக் அல்லது அஷ்டாவக்ரரிடம்தான் போக வேண்டும். பிற்காலத்தில் விளைந்த ஆன்மிகப் புரட்சிகளுக்கெல்லாம் தோற்றுவாய்போல் விளங்கும் செய்திகளை அஷ்டாவக்ர சூத்திரங்களில் காணலாம். அஷ்டாவக்ரர் என்னும் ஆன்மிக இமயத்திலிருந்து புரட்சி கங்கை பெருக்கெடுத்து ஓடுகிறது.

'ஆசைகள் நிறைந்த மனிதன் அவற்றிலிருந்து தப்பிக்க உலக வாழ்க்கையைக் கைவிட விரும்புகிறான். ஆனால் பற்றுகளைக் கடந்தவன் துக்கத்திலிருந்து விடுபட்டு, உலகின் நடுவில் வாழ்ந்தபோதும் துன்பம் உணர்வதில்லை.' **(சுலோகம் 154)**

**ஆ**சைகள் நிறைந்த மனிதன் துன்பங்களிலிருந்து தப்பிக்க முதலில் உலகத்தை, செல்வத்தை, நண்பர்களை, உறவுகளைப் பற்றிக் கொள்கிறான். ஆனால் இந்த முயற்சிகளால் துன்பம் குறைவதற்குப் பதிலாக, வாழ்க்கையில் சிக்கல்கள் ஏற்பட்டு, துன்பம் பலமடங்கு அதிகமாவது கண்டு திகைக்கிறான். சிறிது யோசனை செய்து உலகப் பொருட்களையும் தொடர்புகளையும் கைவிடத் தொடங்குகிறான். இந்த முயற்சிகளுக்கான காரணமும் துன்பம் நீங்க வேண்டும் என்ற ஆசைதான். முதலில் பிடித்தான். பிறகு துறந்தான் ஆனால் துன்ப நீக்கம்தான் இரண்டின் அடிப்படையுமாகும்.

ஆசைகள் நிறைந்தவன் துன்பத்திலிருந்து தப்ப கோயிலுக்கு ஓடுகிறான்; கடையில் வியாபாரத்தில் ஈடுபடுகிறான், பற்பல இடங்களுக்குச் செல்கிறான். ஆசைகளைக் கடந்தவன் சாட்சி நிலையில் இருந்துகொண்டு துன்பங்களிலிருந்து விடுபடுகிறான். துன்ப சூழ்நிலையில் அவன் தப்பித்து ஓடுவதில்லை. கண்ணை விசாலமாக்கி சாட்சியாகி துன்பத்தைக் காண்கிறான். துன்பம் மறைந்துவிடுகிறது.

முல்லா நஸ்ருத்தீனை முதலாளி ஒருநாள் விடியற் காலையில் சூரியன் உதித்துவிட்டதா என்று பார்க்கச் சொன்னார். முல்லா லாந்தர் விளக்கை எடுத்துச் செல்வது கண்டு காரணம் கேட்டார். “வெளியே இருட்டாக இருப்பதால் எதுவும் தெரிய வில்லை. ஆகவே விளக்கு தேவைப்படுகிறது.” என்றார் முல்லா!

சூரியன் பிரகாசித்ததும் இருள் தானாகவே அகல்வதுபோல், துன்பத்தை சாட்சியாகப் பார்த்தால் அது நீங்கிவிடும். துன்பம் உண்டாவதன் காரணம் பிறவற்றுடன் நம்மை இணைத்துக் கொள்வதுதான்.

‘நான் உடல், நான் மனம், நான் இது, நான் அது’ என்றெல்லாம் உரிமை கொண்டாடுவதால்தான் நாம் கஷ்டப் படுகிறோம். நம்மிடம் சாட்சி மனப்பான்மை தோன்றியதும், ‘நான் உடலில்லை, நான் மனமில்லை, நான் ஆன்மவடிவினன்’ என்று உணருவோம். உடனே துன்பம் நீங்கிவிடும். அது உடலையோ, மனத்தையோ பாதிக்குமே தவிர நிஜமான நம்மையல்ல.

இப்படிப் பற்றறுத்தவன் உலகச் சந்தையில் வசித்தாலும், சமூகத்தைவிட்டு வெளியேறினாலும் ஒன்றுதான். உலகைவிட்டு எங்கே ஒருவன் ஓடிவிட முடியும்? ஆசிரமம், கோயில், இமயமலை என்று எங்கும் உலகம் பரவியிருக்கிறது. ஓடுவதால் வழி பிறக்காது. நீ இருக்குமிடத்திலேயே விழிப்பதுதான் வழியை உண்டாக்கும்.

‘மோட்சம் பெறுவதை உரிமையாக நினைத்து அகங்காரம் கொள்பவனும், உடலின் மீது பற்றுக் கொண்டிருப்பவனும் ஞானி அல்லன்; யோகியும் அல்லன். அவன் துன்பங்களை அனுபவிப்பவன் ஆவான்.’ **(சுலோகம் 155)**

உடலுடன் தன்னை இணைத்துப் பார்ப்பவன், செல்வத்தைத் தனதென நினைப்பவன், குறிப்பிட்ட மதம் சார்ந்தவன் எனப் பெருமை கொள்பவன், உலகை வெல்வேன் என முழங்குபவன், கடவுளை அடைந்தே தீருவேன் என்பவன்- நிச்சயமாகத் துன்பப்படுவான். அகங்காரம் துன்பத்தின் ஆணிவேராகும். ஈசனோடு ஆயினும் பற்று கொள்ளக்கூடாது.

அஷ்டாவக்ரர் உடல் பற்றை விடுவதுடன், உலகத்தில் ஓடியாடி அலைவதையும் விடச் சொல்கிறார், மோட்சம் பெறுவதற்கான ஆசையையும் மனத்தில் வளர்த்துக்கொள்ளாதே. ஆசைகளால் ஆனந்தம் கிடைக்குமென நினைக்கிறாய். ஆனால் எல்லா ஆசைகளையும் துறப்பதால் பரமானந்தமே விளையும். இப்போதும் பேரானந்த மழை உன்மீது விழுகிறது. ஆனால் ஆசை என்னும் குடையை விரித்து வைத்திருப்பதால் அந்த ஆனந்தத்தில் நீ நனையாமலிருக்கிறாய்.

'உன் குரு அல்லது உனக்கு உபதேசிப்பவர் பிரம்மா, விஷ்ணு, சிவன் என யாராக வேண்டுமானாலும் இருக்கட்டுமே. இவர்கள் எல்லோரையும் மறக்காமல் உனக்கு ஆன்மிக ஆரோக்கியம் கிடைக்காது.' **(சுலோகம் 156)**

**இ**து எத்தகைய புரட்சிகரமான சுலோகம், பாருங்கள். பூவுலக சிறிய குரு முதல் தேவர்கள் என்ன, மும்மூர்த்திகளில் யார் வேண்டுமானாலும் உனக்கு குருவாக அமையட்டுமே, நீ சுயமாக ஞான விழிப்புப் பெறாவிடில் அவர்களால் எதுவும் செய்ய முடியாது. ஞானம் என்பது வெளியிலிருந்து வருவதன்று. ஆகவே கடவுளே எதிர்ப்பட்டாலும் அவர் உனக்கு ஞானத்தை எடுத்துத் தரமாட்டார். நீயே அதைச் சம்பாதிக்க வேண்டும். ஞான விதை உனக்குள் விதைக்கப்பட்டிருக்க வேண்டும். வெளியிலிருந்து ஒருவர் அதை உனக்குள் பதிக்க முடியாது.

விழித்திருக்கும் மனிதன் தூங்குவதாகப் பாசாங்கு செய்வதுபோல் உனது நிலைமை உள்ளது. அவனை அசைத்தால், எழுந்திருக்காமல் புரண்டு படுக்கிறான். நிஜமாகத் தூங்குபவனை எழுப்பலாம். ஆனால் தூங்குவதுபோல் நடிப்பவனை, எழுந்திருக்க விரும்பாதவனை, நீ எப்படி எழுப்புவாய்?

உனக்குள் இருக்கும் மையம் விழித்த நிலையில்தான் உள்ளது. அது ஒருகாலத்திலும் உறங்கியதில்லை. உறக்கம் என்பது அங்கு நிகழ்வதில்லை; நிகழவும் முடியாது. விழித்திருப்பதே அதன் சுபாவம். சைதன்யம் அல்லது சேதன் என்றால் விழிப்பு என்றே பொருள்படும். அதில் உயிர்த்துடிப்பு இருக்கும். உன்

பாசாங்கைத் தொடர்வதா அல்லது ஞான விழிப்புப் பெறுவதா என்பது உன் கையில்தான் உள்ளது.

வெளியிலிருந்து கற்றுக்கொண்டதையெல்லாம் நீ மறக்காத வரையிலும் (**unlearn**), உனக்கு ஆன்ம ஆரோக்கியம், சாந்தி, சத்தியம் ஆகியவற்றின் அனுபவம் கிடைக்காது.

சிவபெருமான் உலகை அழிக்கும் ஆற்றலுடையவர். விஷ்ணுவின் கையில் உலகை நிர்வகிக்கும் சாமர்த்தியம் உள்ளது. பிரம்மாவிடம் உலகைப் படைக்கும் சக்தி இருக்கிறது. ஆனால் உலகைப் படைத்தவனாலும் உனக்காக சத்தியத்தை சிருஷ்டிக்க முடியாது. உலகம் ஒரு மாயை, பிரம்மா உண்டாக்கிய அளவு. அவரால் சத்தியத்தைப் படைத்தளிக்க முடியாது. உலகமெனும் பெருங்கனவை நிலைநிறுத்தி லீலைகள் புரிகின்ற விஷ்ணுவால் உனக்குள்ளிருக்கும். சத்தியத்தைத் தட்டி எழுப்ப முடியாது. உலகை அழித்து நீக்க வல்ல சிவபெருமானாலும் உனது அறியாமையை அழிக்க முடியாது. ஆகவே அஷ்டாவக்ரர் நீ எல்லா வகையிலும் விடுபட்டவனாக (முக்தனாக) விளங்க, நீ வெளியே உதவி எதிர்பார்க்கக்கூடாது, நீ உன்னையே சார்ந்திருக்க வேண்டும் என்பதை உனக்கு உணர்த்த குரு தேவைப்படுகிறார்.

சத்குரு எனப்படுவதற்குத் தகுதியுடையவர் யார்? அவர் உன்னை வெளியுலகைச் சார்ந்திருப்பதிலிருந்து விடுவிப்பார். உன்னை உன் மீது எறிந்து உன்னைத் தாங்கிக் கொள்ள வைப்பார். உன்னை உன் சொந்தப் பொறுப்பில் தள்ளிவிடுவார். நீ வெளியுலகில் கற்றதையெல்லாம் மறக்கச் சொல்வார். வெளியுலகில் கற்பிக்கப்பட்ட சாஸ்திரங்களையும், தத்துவக் கோட்பாடுகளையும் விட்டுவிட வேண்டும். இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர், சமணர், பௌத்தர் என்றெல்லாம் உன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளக் கூடாது. நீ உனக்குள் இறங்கு. உள்முகச் சிந்தனையில் ஈடுபடு. அங்கே சாஸ்திரங்கள், சித்தாந்தங்கள் கிடையாது. அங்கு சொற்களுக்கே இடமில்லை. அங்கே நீ விழிப்புப் பெறு.

ஜே. கிருஷ்ணமூர்த்தி இதையே அஷ்டாவக்ரரின் எதிரொலி போல் சொல்கிறார். அவர் யாரும் யாருக்கும் குரு இல்லை

என்கிறார். அவ்வாறு அவர் கூறுவது சாஸ்திர விரோதமாயிற்றே என்று மக்கள் நினைப்பார்கள். ஆனால் சாஸ்திரங்களுக்கெல்லாம் சாஸ்திரமாகிய அஷ்டாவக்ரரின் கீதையோ மனித குருக்களை மட்டுமல்ல, திரிமூர்த்திகளும் கூட குரு ஆக முடியாது என்கிறது. அஷ்டாவக்ர கீதை சாஸ்திரமில்லையா என்று கேட்கலாம். ஆம், சாஸ்திரம் தான். ஆனால் அது உன்னை குறுகிய சாஸ்திரங்களின் பிடியிலிருந்து விடுவிக்கும் மகா சாஸ்திரமாகும். அதுபோல் உண்மையான குரு உன்னை குருமார்களின் பாதிப்பிலிருந்து விடுவிப்பவராய் இருப்பார்.

ஜரதுஸ்த்ரர் * இறக்கும் சமயம் சீடர்களிடம் சொன்னார்: "நான் சொல்ல வேண்டிய கடைசிச் செய்தியையும் சொல்லி முடித்தாகிவிட்டது. உங்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டியதை எல்லாம் கற்பித்தாகிவிட்டது. கடைசியாகச் சொல்லும் விடியத்தை நினைவில் வைத்திருங்கள். இந்த மகா மந்திரத்தை ஒருபொழுதும் மறக்காதீர்கள். அது என்ன? என்னிடம் ஜாக்கிரதையாக இருங்கள் என்பது தான்!" (Beware of Zarathustra!)

சீடர்கள் திடுக்கிட்டனர். 'என்னிடம் சுாக்கிரதையாக இரு' என்று எச்சரிப்பது தான் சத்குருவின் லட்சணமாகும். தான் கற்றுக்கொடுத்ததைச் சீடன் மறந்தாலும் பரவாயில்லை என நினைக்கும் அவர், சீடன் மறந்தும் குருவிடம் பற்று பாசம் கொண்டுவிடக்கூடாது என்கிறார். இந்த ஒட்டுதல் உன்னை மறுபடியும் வெளியுலக பந்தத்தில் சிக்கச்செய்யும். ஒருவன் வெளியுலகப் பெண்ணிடம், வெளியுலகப் பணத்திடம், வெளியுலகக் கடவுளிடம், இதேபோல் வெளியுலக குருவிடம் மாட்டிக் கொள்ளக்கூடும். யாரிடம் மாட்டிக் கொண்டாலும் பிரச்சினைதான் விளையும்.

முக்தி (விடுதலை) உள்ளே இருக்கிறது. முக்தி உன்னில் இருக்கிறது. உன் இயற்கைப் பண்பே முக்தி தான். நீயாக

---

* Zarathustra (Zoroaster) (628 — 551 BC) ஈரான் நாட்டு ஞானி. பார்சி மதத்தை நிறுவியர். அக்னி வழிபாட்டைக் கட்டாயப்படுத்தியவர். பாரசீகத்திலிருந்து ஏராளமானவர்கள் இந்தியாவிற்கு 8-10ஆம் நூற்றாண்டுகளில் வந்து மும்பை, பெங்களூருவில் குடியேறி பார்சிக்கள் என அழைக்கப்படலாயினர்.

உன்னைக் கட்டிப் போட்டுக் கொண்டால் தவிர, உன்னை எதுவும் கட்டுப்படுத்த முடியாது.

மும்மூர்த்திகளே குருவாகக் கற்பித்தாலும் நீ கற்றதையெல்லாம் மறந்து, கேட்ட உபதேசங்களை மறந்து, சித்தாந்தங்களை மறந்து, சிந்தனையில் தோன்றியவற்றை மறந்து, எண்ணச் சலனமற்ற நிலையில், சொற்களற்ற மௌனத்தில் உன்னை நிறுவிக்கொண்டால் தான் ஆன்ம ஆரோக்கியம் உனக்கு வசப்படும். அந்த ஆரோக்கிய நிலை உன்னை மோட்சம், நிர்வாணம், கடவுள் தன்மை என்று கூறப்படும் நிலைகளுக்கு உன்னை உயர்த்தும். பெயர் முக்கியமில்லை.

உனக்கு உள்ளே இருப்பதை வெளியுலகம் அழுத்தி அமுக்கி வைத்துள்ளது. அந்த வெளிப்புறச் சுமையை அகற்று. உள்ளே அமுங்கிக் கிடந்த மலர் வெளிப்பட்டுத் தலையைத் தூக்கும். வெளிச் சேற்றில் புதைந்து கிடக்கிறது உன் செந்தாமரை. சகதியை அகற்று. பூ மலரட்டும்.

அப்படி ஆத்மாவாகிய பூ, வெளியுலக அழுத்தத்திலிருந்து தப்பி, மலர்வது தான் மகா திருப்தி, பூரண சந்தோஷம்.

**ஹரி ஓம் தத்ஸத் !**

முதல் கேள்வி

> **ஓஷோ அவர்களே! இயேசுநாதரின் பேரன்பு, புத்தரின் மகா கருணை, அஷ்டாவக்ரரின் சாட்சி மனப்பான்மை, உங்களின் திருவிழாக் கண்ணோட்டம் ஆகிய இந்த நான்கில் என்ன வேறுபாடு உள்ளது? இவற்றை ஆன்மிகத்தில் தனித்தனியான நான்கு வழிகள் என்று கருதலாமா?**

**இ**வைத் தனித்தனியான வழிமுறைகள் அல்ல. இவை ஒரே நிகழ்ச்சியின் நான்கு கட்டங்கள்; ஒரே கதவை நோக்கி இட்டுச் செல்லும் நான்கு படிகள் ஆகும்.

இயேசுநாதரின் அன்பு முதல் கட்டம். புத்தரின் கருணை அதற்கடுத்த உயர்ந்த கட்டம். இயேசுவின் அன்பு இலக்கை நோக்கித் திரும்பும் அன்பு போன்றது. தீனமானவன், தரித்திரன், பார்வையற்றவன், பசியால் வாடுபவன், தாகத்தால் வருந்துபவன் ஆகியோரிடம் இயேசுவின் அன்பு, தொண்டாக, சேவையாக வெளிப்படுகிறது. பிறர்க்குச் செய்யும் சேவை பரமாத்மாவிடம் கொண்டு செல்லும் பாதையாக அமைகிறது. ஏனெனில் கஷ்டப்படுபவர்களிலும் கடவுள் நிறைந்துள்ளார். ஆனால் கவனம் பிறரை நோக்கியே செல்கிறது. எனவே கிறிஸ்தவ மதம் தொண்டிற்குப் பெயர்பெற்ற மதமாக விளங்குகிறது.

புத்தரின் கருணை, சேவை உள்ளத்திற்கு ஒரு படி மேலாக உள்ளது. இதில் பிறர் மீது கவனம் செல்வதில்லை. புத்தரின் கருணையில் சேவைக்கு வாய்ப்பில்லை. கருணை ஓர் உணர்வாக மட்டும் இருக்கிறது. புத்தரின் கருணை தன்னையே குறிவைத்துத்

திருப்பும் அம்பு போன்றது. இந்த அம்பு பிறரை நோக்கி அமைவதில்லை. ஒருவருமே இல்லாவிடிலும் புத்தரின் கருணை நீடிக்கிறது.

நீ செல்லும் வழியில் பிச்சையெடுக்கின்ற பார்வையற்ற மனிதனுக்கு நீ காசு போட்டால் அது கருணையன்று, சேவை யாகும். அவன் உன் கண்ணில் படாதவரையிலும் உன் மனத்தில் கருணை உதயமாகி இருக்கவில்லை. அவனை நீ பார்த்தது தற்செயலான நிகழ்ச்சி. அவனைப் பார்த்திராது போனால் உனக்கு சேவை உணர்வு தோன்றியிருக்காது; அவன்மீது அனுதாபம் பிறந்திருக்காது. இந்த அன்பு வெளிப்பட இன்னொருவன் தேவைப்படுகிறான். இதை இரக்கம் எனலாம். இன்னொருவன் இல்லாதபோதும் கருணை உணர்வு ஏற்படக்கூடியது என்கிறார் புத்தர். உன் மனத்தில் கருணை அலைகள் எழுந்த வண்ணம் உள்ளன. பார்வை இழந்தவனையும், நோயாளியையும், ஏழையையும் மட்டுமல்ல; பார்வை உள்ளவனை, ஆரோக்கியமானவனை, பணக்காரனைப் பார்த்தும் கருணை அலை எழுகிறது. அதெப்படி எனக் கேட்கலாம். அவர்கள் வேறு வகையில் கருணைக்குரியவர்கள்.

கிழக்கு நாடுகளில் நிலவும் மதங்கள் ஏன் சேவைக்கு முதலிடம் தருவதில்லை என்பது கிறிஸ்தவர்களுக்குப் புரிவ தில்லை. இயேசுநாதர் பார்வையற்றவர்களைப் பார்க்கவைத்தார்; குஷ்டரோகிகளுக்குக் கால்பிடித்து விட்டார்; ஏழைகளுக்கு ரொட்டி அளித்தார். இதுபோல் புத்தரும் மகாவீரரும் சேவை செய்யவில்லையே. ஆகவே கிறிஸ்தவர்கள் பிற மதங்களை ஏற்படுத்தியவர்களிடம் குறை காண்கிறார்கள்.

புத்தரும் மகாவீரரும் கருணை என்பதைப் பொதுவான மனித உணர்வாகப் பார்க்கிறார்கள். அதைக் குறைப்பிட்ட சூழ்நிலையில் மட்டுமே அல்லது குறிப்பிட்டவர்களுக்காகவே பொருத்திப் பார்க்கவில்லை. சூன்யமான சூழ்நிலையிலும் அவர்களின் உள்ளத்தில் கருணை சுரந்தது. காட்டுச் செடியில் பூக்கும் பூ யாரும் வராவிடிலும், ஓவியன் யாரும் அதைப் படம் வரையாவிடிலும், தனது நறுமணத்தை நாற்புறமும் பரப்பத்

தவறுவதில்லை. புத்தரின் கருணை தனிமையில் மலரும் பூ போன்றது. அந்த கருணையைப் பெற்றுக் கொள்ளாவிடினும் அது சுரந்தபடி இருந்தது. குறிப்பிட்ட நபர்களின் பெயர் — முகவரி எழுதப்பட்டு அவரது கருணை பரவவில்லை. குறிப்பிட்ட யாரை நோக்கியும் அது செலுத்தப்படவில்லை.

பிறருடன் சம்பந்தப்பட்ட கருணை ஆழமாக இருப்ப தில்லை. உதாரணமாக, உலகில் எவருக்கும் துன்பமில்லை என்றால், கிறிஸ்தவ சமயப் பரப்பாளர் என்ன செய்வார்? அவரது கருணை உணர்வு மறைந்துவிடும். அப்படியானால், அவர் கருணையுள்ளவராக நீடிக்க வேண்டுமென்பதற்காக உலகில் பார்வையற்றவர்களும் குஷ்டரோகிகளும் இருப்பது அவசியமாகிறது. இது நீ பிச்சை போடுவதற்காக ஏழைகள் தேவை என்று கோருவது போல் ஆகிவிடும். நீ மருத்துவமனை திறந்து சேவை செய்வதற்காகச் சிலர் நோயாளிகளாக வேண்டும் என எதிர்பார்ப்பது போல் ஆகிவிடும். இதன் பொருள் என்ன? நீ கடவுளைச் சென்றடைய வேண்டும் என்பதற்காக பிச்சைக் காரர்கள், பார்வையற்றவர்கள், முடமானவர்கள் ஏணிப்படிகள் போல் உதவுவதாக அல்லவா அர்த்தமாகும்? இந்த நிலையில், அடிப்படையில், நீ அவர்களுக்கு சேவை புரிகிறாயா? இல்லை அவர்கள் உனக்கு சேவை செய்கிறார்கள். நீ அவர்களுக்கு உதவுவது உடலளவில் தான் நன்மை தரும். அவர்களோ நீ மோட்சமே பெற உதவுகிறார்களே! இவ்வகை கருணையைவிட புத்தரின் கருணை உயர்தரமானது. அது பிறரது துன்பத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கவில்லை. அது யாருடனும் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. இது வெளிப்பட இன்னொருவர் தேவையில்லை.

பிறர் இருப்பது நமது பணிக்குத் தேவையென்றால் நாம் உலகிலேயே ஒட்டிக்கொண்டிருக்க நேரிடுகிறது. பிறருடன் உறவு நீங்கிய நிலையில், உலகுடனும் உறவு நீங்கி, நாம் விண்ணில் பறப்பதைப்போல் உணர்வோம். இது சற்று நுணுக்கமான விஷயம். புத்தரின் கருணை உடலைக் கடந்தது.

இயேசுவின் இரக்கம், அன்பு, கருணை எல்லோரும் புரிந்து கொள்ள முடிகிறது. கம்யூனிஸ்ட்டுகளும் புரிந்து கொள்கிறார்கள். உலகப் பொருட்களிலேயே இன்பம் காண்பவனும் இயேசுவைப் புரிந்து கொள்வான். இயேசுவின் கருணை உடலை, உலக வாழ்க்கையைச் சார்ந்தது. ஆகவே கிறிஸ்தவ போதகர்கள் மருத்துவமனைகள் ஏற்படுத்துகின்றனர்; மருந்து தருகின்றனர். கல்வி நிலையங்களைத் திறக்கின்றனர்.

புத்தபிட்சுவும் பகிர்ந்தளிக்கிறார். அது கண்ணுக்குத் தெரிவதில்லை. அது நுணுக்கமானது. அவர் தியானத்தை மக்களுக்கு அளிக்கிறார். சமாதி பற்றிய செய்தி தருகிறார். அவரும் உன் ஆரோக்கியத்தில் அக்கறை கொண்டவர் தாம். ஆனால் உனது உள் (அக) ஆரோக்கியத்தில் அக்கறை காட்டுகிறார். அதுதான் அசலான ஆரோக்கியமாகும்.

கிறிஸ்தவ பாதரி உடலில் நோயைக் கவனிக்கிறார். புத்தபிட்சு உடலையே நோயாகக் காண்கிறார். ஆகவே ஆரோக்கியமான உடலையும் சாவு கவர்ந்து செல்கிறது. இதனால் உடலுக்கு சேவை செய்வது தண்ணீரில் கோடிழுப்பதற்கு சமம். ஏதாவது எழுத வேண்டுமாயின் ஆத்மாவின் மீது எழுது. ஆத்மாவில் தியானத்தின் கோடுகளை இழு. அவற்றைச் சாவு அழிக்க இயலாது.

இவ்வாறு இயேசு கூறும் அன்பு என்பது ஆன்மிகத்தில் முதுல் படி. புத்தர் கூறும் கருணை இரண்டாம் படி. ஆனால் கருணையின் சுகந்தம் பரவலாகத் தெரியவில்லை. ஆயினும் அந்த நறுமணம் நிச்சயம் எங்கோ போகிறது. எங்கோ அது சென்றடைவதும் நிச்சயம்.

அஷ்டாவக்ரர் கூறும் சாட்சி மனப்பான்மை அதற்கும் ஒரு படி மேலே. எதுவும் எங்கும் வருவதும் போவதுமில்லை. எல்லாம் அப்படியே தங்கிவிட்டது. எல்லாம் அமைதியாகிவிட்டது. ஆத்மா எங்கும் போவதோ, வருவதோ இல்லை என்னும் அஷ்டவக்ரர், சுகந்தம் தன்னிலேயே லயித்து விட்டது என்கிறார். இதுவே ஆத்ம லயிப்பு.

இயேசுவின் கருணை பிறருக்குக் காட்டப்படுவதற்காக வெளிப்படுகிறது. புத்தரின் கருணை யாரையும் நோக்கியதன்று. எனினும் அதன் மணம், பாதிப்பு, யாரையாவது சென்றடைவது நிச்சயம். அப்படியில்லா விட்டாலும் சூழ்நிலையில் பரவிக் காணப்படும். சாட்சி மனப்போக்கு எங்கும் செல்வதில்லை. தங்கிவிட்டது. சூழ்நிலை சூன்யமாகத் தெரிகிறது.

இயேசுவின் அன்பில் இன்னொருவன் முக்கியம். புத்தரின் கருணையில் தான் என்றொருவன் இருப்பது அவசியம். சாட்சி மனப்பான்மையில் மற்றவரும் கிடையாது; தானும் கிடையாது. நான் — நீ இரண்டும் சரிந்துவிடுகின்றன. விழித்துப் பார்த்தால் நான் என்பதும் பொய், நீ என்பதும் பொய் எனத் தெரியவருகிறது.

நான் கூறும் திருவிழா மனப்பான்மை கடைசி விஷயம். சாட்சி மனப்பான்மையில் எல்லாம் நின்று போய் விடுகிறது. இப்படி நின்றுவிடுவதுதான் இறுதிக் கட்டம் எனில் கடவுள் ஏன் படைக்கும் தொழிலில் ஈடுபட்டார்? அப்படியே நின்றுவிடுவது தான் கடவுளின் நிலைப்பாடு. பிறகு அவர் ஏன் விரிவான லீலைகளில் ஈடுபட்டார். மயிலின் நடனம், குயிலின் கானம், செடிகளில் மலர்கள், சந்திரன் — தாரகைகள், இந்த அண்ட பெருவெடிப்பு (big bang) எல்லாம் ஏன்?

சாட்சி நிலையுடன் நின்றுவிடுபவன் கோயிலுக்குள் இன்னும் நுழையவில்லை. எல்லாப் படிகளையும் கடந்துவிட்டான். இன்னும் ஏதோ மிஞ்சியுள்ளது. இப்போது நீயும் இல்லை, நானும் எஞ்சவில்லை. இதுவரை 'நீ' இருந்ததால் ஆடத்தயங்கினாய். 'நான்' இருந்ததாலும் ஆடத் தயங்கினாய் இருவரும் இல்லாது போன நிலையில், நீ ஆடினால் தடுக்கப் போவது யார்? இப்பொழுது என்ன கட்டுப்பாடு உள்ளது? உன்னைச் சுற்றிலும் சிறையின் சுவர்கள் போலவா உள்ளது? ஏன் உட்கார்ந்திருக்கிறாய் ? எழுந்து ஆடு. திருவிழா நடைபெறட்டும்.

திரும்பிச்செல். கடைத்தெருவின் சந்தைக் கூச்சலுக்குத் திரும்பிச் செல். ஆனால் இப்போது சூன்ய மனநிலையில் திரும்பி வருகிறாய். உனக்குள்ளே சாட்சி மனப்பான்மை வந்துவிட்டது.

புத்தரின் கருணையும், இயேசுவின் அன்பும் நுழைந்துவிட்டது. புதிய மாறுதல் உண்டாகிவிட்டது. உனக்குள் இப்போது துக்கம் துளிக்கூட இல்லை. அசாந்தி இல்லை. ஆகவே சுதந்திரமாக, பாரம் ஏதுமின்றி ஆடு.

முன்பும் ஆடினாய். ஆனால் விரைவில் களைத்துப் போனாய். காய்ச்சல் வந்தவன் போல் சூடாக ஆடினாய். இப்போது நிலைமை மாறி விட்டது. எல்லாம் குளிர்ந்துவிட்டது; சந்தனம் போலானது. இனி நீ இறுக்கமின்றி ஆடலாம். கடவுள் முன்னிலைப்படுத்தும் விரிவான நடனத்தில் நீயும் கலந்துகொள். ஏன் கரையிலேயே உட்கார்ந்துவிட்டாய்? முன்பு தயக்கமிருந்தது. சரிதான். இப்போது நீ அனைத்திலிருந்தும் விடுபட்டவனாயிற்றே. இனியும் ஆடத் தயங்குவது ஏன்?

மதங்கள் தமது வளர்ச்சி நிலையில் ஆங்காங்கே நின்றுவிட்டன. கிறிஸ்தவம் இயேசுவின் அன்புக் கொள்கையுடன் நின்று போனது. அதிக ஆழத்தில் செல்லவில்லை. புத்தரின் மதம் கருணை என்ற கட்டத்தில் நின்றுவிட்டது. ஜைனர்கள் மாறுபாடற்ற, சலனமற்ற நிலையைக் குறிப்பிடுகிறார்கள். ஜைனர்களின் மோட்ச உலகில் என்ன நடக்கிறது? அந்நிலையை அடைந்த சித்தர்கள் தத்தம் பீடத்தில் நிலைபெற்று விட்டனர்.

'இப்படி முடிவு இல்லாமல் என்றும் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்க வேண்டுமானால் நான் மோட்சத்திற்கு வரவில்லை' என்று பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கேலி செய்கிறார். சித்த நிலையில் உட்கார்ந்த பின் என்ன நடக்கிறது? ஓர் அசைவும் இல்லை. பாட்டொலி இல்லை. நடனம் இல்லை. வீணை இசை கிடையாது. 'இதைவிட நரகத்திற்குப் போவதையே நான் விரும்புவேன்' என்கிறார் ரஸ்ஸல். 'அங்கே கலகலப்பாக இருக்கும். அங்குள்ளோருடன் அரட்டையடித்து மகிழலாம். வம்புச் செய்திகள் அடங்கிய செய்தித்தாள்கூட அங்கே வெளியாகிக்கொண்டிருக்கும். மோட்சமோ ஜட உலகமாக, மயான பூமிபோல் இருக்கும் ' என்று தொடர்கிறார் அவர்.

இதனால்தான் நான் மோட்சத்துக்கு அப்பாலும் ஒரு நிலை உண்டு என்று கூறுகிறேன். அதுவே கடவுள்நிலை. அங்கே

திருவிழாக் கொண்டாட்டமாக இருக்கிறது. போகி என்பவன் எல்லாவற்றையும் அனுபவித்தும் நிரந்தரமான சுகம் பெறுவ தில்லை. யோகி என்பவன் எல்லாவற்றிலிருந்தும் ஓடுகிறான். நின்றால் உலகம் பிடித்துக்கொண்டு விடுமென அஞ்சுகிறான். அவன் உலகத் துன்பத்திலிருந்து, உலகக் குழப்பத்திலிருந்து தப்பியிருக்கலாம். ஆனால் அவனது வாழ்க்கை தேங்கி ஜடமாகிவிடுகிறது. அவனது வாழ்க்கையில் இயக்கம் இல்லை; பிரவாகம் இல்லை.

இயேசு, புத்தர், அஷ்டாவக்ரர் கூறிய நிலைகளை நீ கடந்து விட்டால், பிறகு களிநடனத்துக்கான ஒரு நிலை உருவாகிறது. அந்த உயரிய தரமான நடனத்தை போகியால் ஆட முடிவதில்லை. யோகியோ நடனம் என்றாலே போக உணர்வைத் தூண்டிவிடுமோ என அஞ்சுவதால் ஆடத் தயாராக இல்லை. நான் கூறும் நான்காம் நிலையில் போகி — யோகி இருவர் விருப்பமும் நிறைவேறுகிறது.

போகி சுரம் பிடித்தவனைப்போல் பதற்றத்துடன் இன்பங்களைத் துரத்துவதால், நின்று நிதானமாக ஆட முடிய வில்லை. யோகி சலனமற்ற நிலையிலேயே இருக்க விரும்பு வதால் கை — காலையும், கூச்சத்தையும் உதறி ஆடத்தயாராக இல்லை.

நான் கூறும் திருவிழா நிலையில், நீயும் இல்லை, நானும் இல்லை. உயிர் சக்தி மட்டுமே ஓங்கியெழுந்து நிற்கிறது. இந்த சக்தியை நடனமாடுவதிலிருந்து யார் தடுக்க முடியும்? ஏன் தடுக்க வேண்டும்? இது விநோதமான நடனம். ஆடுபவர் என்று யாருமே கிடையாது! ஆடுதல் மட்டுமே நிகழும். இதை அனுபவிப்பவன் என்று யாரும் கிடையாது. அனுபவித்தல் மட்டுமே நிகழும். சுத்தமான நடன சுகம் ரசமாகப் பெருகும். அந்த சுகம் தான் இறையனுபவம் என்பதும்.

நான் சொன்ன நான்கு கட்டங்களும் அல்லது படிகளும் ஒன்றுடன் ஒன்று இணைந்துள்ளன. உன்னிடம் எவ்வளவு ஆற்றல் உள்ளதோ அதற்கேற்ப முன்னேறு.

முதல் கட்டமான கிறிஸ்தவ அன்புக் கோட்பாடு மற்ற மூன்றையும்விட பலகீனமானது. கிறிஸ்தவத் தொண்டர் நோயாளிகளுக்குக் கால் — கை பிடித்துவிடுகிறார்; ஏழைகளுக்கு அன்னதான ஏற்பாடு செய்கிறார், இவ்வாறு பலவகையான ஊழியங்கள் ஆற்றுகிறார். ஆகவே கிறிஸ்தவம் அரசியலிலிருந்து அதிகத் தொலைவிற்குப் பிரிந்து செல்ல முடியவில்லை. அது உலகத்துடன் மிகவும் ஒட்டியிருக்கும் மதம். கிறிஸ்தவ அரசியல் என்றே சொல் உருவாகியுள்ளது. 'கிறிஸ்தவம் பணம் தருகிறது; மருந்து தருகிறது; மக்கள் தொண்டு புரிகிறது. இந்தத் தளத்தில் அது நீடித்து நிற்கிறது. கிறிஸ்தவம் தியானம் போன்ற ஆன்மிக முயற்சிகளில் ஈடுபடுவதில்லை. சமூக சேவை தவறில்லை. ஆனால் அம்மதம் சமூக சேவையுடன் நிறுத்திக்கொண்டது வருத்தத்திற்குரியது. அம்மதம் மேலும் பெரிய சாதனைகளை நிகழ்த்தியிருக்க முடியும். ஆனால் அற்ப வெற்றியுடன் அது திருப்தியடைந்துவிட்டது.

இவ்வாறு சேவை செய்பவர்கள் உனக்கு மகாத்மாக்களாகத் தெரிவர். அவர்கள் எவ்வளவு சேவை செய்கிறார்கள்; ஏழைகளை முன்னேற்ற எத்துணை பாடுபடுகிறார்கள்; நோயாளிகளுக்காக மருத்துவமனைகளை ஏற்படுத்துகிறார்கள்; பள்ளிக்கூடங்களைத் திறந்து கல்வியறிவைப் பரப்புகிறார்கள். தாகம் தீரக் குழாய்கள் பதிக்கிறார்கள்.

நிச்சயமாக இவை நல்ல பணிகள் ஆகும். ஆனால் ஆன்மிகம் என்பது நற்பணிகளுடன் முடிந்து போவதில்லை. ஆன்மிகம் என்பது சேவைக்கும் மேற்பட்ட பரப்பில் பறக்கிறது. நல்லதையும் கடந்து பறக்கிறது. மகாத்மா என்பவரை சமூக சேவை செய்பவராக மட்டும் நீ பார்த்தால் அவர் கிறிஸ்தவ மிஷனரிகளிலிருந்து வேறுபட்டவராகத் தெரியமாட்டார். இந்தப் பின்னணியில்தான் மக்கள் காந்திஜியை மகாத்மா என்று அழைத்தனர். அவரது ஆன்மிக முயற்சிகளைக் கருத்தில் கொள்ளாமல் சமூக சேவை செய்ததன் அடிப்படையில் அவருக்கு மகாத்மா என்ற புகழ் கிடைத்தது.

காந்திஜியே கூட கிறிஸ்தவ மதத்திற்கு மாறிவிடலாமா என்று யோசித்துண்டு அவர் ஆப்பிரிக்காவில் வசித்த போது

அவருக்கு இந்த ஆர்வம் மிக அதிகமாக இருந்தது. அவர் தம் குரு என்று குறிப்பிட்ட டால்ஸ்டாய், ரஸ்கின், தோரோ* மூவருமே கிறிஸ்தவர்கள்தாம்.

கிறிஸ்தவத்தில் கெடுதலான அம்சம் எதுவும் கிடையாது. ஆனால் ஆன்மிகப் பயணம் என்பது கிறிஸ்தவத்துடன் முடிந்து போவதில்லை. கிறிஸ்தவம் ஆரம்ப நிலைதான். நிறைய சேவை செய்யலாம். தப்பில்லை. ஆனால் தொண்டனாக மட்டும் நீ நின்று விட்டால், உனக்கு ஆன்மிகப் பயன் எதுவும் கிடைப்பதற்கில்லை. நீ எப்பொழுதுதான் தியான நிலைக்குப் போவது?

காந்திஜியின் முதன்மைச் சீடரான வினோபா 'சேவையே ஆன்மிகம்' என்றார். ஆனால் இவை 'ஒரு பொருள் இரு சொல்' (Synonym) அல்ல; சரியான இணைகள் அல்ல. இது தப்பான கணக்கு. நான் சொல்வது — ஆன்மிகம் சேவை; ஆனால் சேவை ஆன்மிகமன்று. ஆன்மிகவாதி சமூக சேவையும் செய்யக்கூடும். ஆனால் சமூக சேவை செய்வதாலேயே ஒருவன் ஆன்மிகவாதியாகிவிட மாட்டான்.

சேவை புரிதல் சிறிய விஷயமாகும். ஆன்மிகவாதியின் வாழ்க்கையில் சேவைக்கும் இடமிருந்தால் சரிதான். சேவை செய்வதால் ஒருவனை ஆன்மிகவாதி என்று கருதுவது ஆன்மிகத்தைக் குறுகியதாக நினைக்கத் தோன்றும். அப்படியானால் சேவை புரிகின்ற நாத்திகனையும் ஆன்மிகவாதி என்றா சொல்வது? ஏனெனில் சேவை மனப்பான்மை இருப்பதற்கு கடவுள் நம்பிக்கை இருக்க வேண்டியது. அவசியமில்லை. நோயாளியின் காலைப் பிடித்து விடுவதற்குக் கடவுளின் ஒப்புதல் தேவையில்லை. மக்களுக்கு சேவை புரிவது ஒன்றே குறிக்கோளாகக் கொள்பவர்கள் எல்லாம் ஆன்மிகவாதிகள் என்றால் கம்யூனிஸ்ட்டுகள் சிறந்த ஆன்மிகவாதிகளாகிவிடுவர்.

---

* Leo Tolstoy (1828-1910) ருஷ்ய எழுத்தாளர். கடைசிக் காலத்தில் துறவி போல் வாழ்ந்தவர்.

  John Ruskin ( 1819-1900) ஆங்கிலேய கலை விமரிசகர். சொத்தை சமூக நலனுக்காகச் செலவழித்தவர்.

  Henry David Thoreau ( 1817 — 1862 ) அமெரிக்கச் சிந்தனையாளர். குடிசை வாழ்வு நடத்தியவர்.

அவர்களில் மார்க்ஸ், ஏங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின், மாவோ முதலிடம் பெறுவர்.

சேவையுடன் ஆன்மிகம் முடிந்ததாக நினைப்பது தவறான கண்ணோட்டமாகும். ஆன்மிகம் என்பது மிகவும் பெரிய விஷயம். சேவை அதில் சிறியதோர் உறுப்புதான். மிக விசாலமான ஆன்மிகத்துடன் சேவையும் சேர்ந்தால், சேவை தனியானதொரு மணம் பெறுகிறது. பெரியதுடன் சிறியது சேர்ந்தால் சிறியதும் பெருமை பெறுகிறது.

புத்தரின் கருணை சேவையைவிடப் பெரியது. அது ஓரடி முன்னாலும் உள்ளது. இந்நிலையில் நீ பிறருடன் சேர்த்துக் கட்டப்படவில்லை. நீ சுதந்திரமானவனாக உணர்வாய். ஆனால் ஆன்மிகம் இதனுடன் நிறைவு பெறுவதில்லை. பாதிப் பயணம் முடிந்தது எனலாம்.

பிறகு மூன்றாவது கட்டம். ஆன்மிகத்தின் இறுதியை ஏறத்தாழ அடைந்து விட்டது போன்ற உணர்வு இக்கட்டத்தில் எழுகிறது. ஆனாலும் சாட்சி மனப்பான்மையென்னும் இக்கட்டம் பயணத்தின் முடிவு அன்று. இப்போது இன்னொருவன் இல்லை. நானும் இல்லை. இருவரையும் பார்க்கின்றவன், இருவரையும் கடந்து செல்பவன், அனுபவத்திற்கு அப்பாற்பட்டவனான சாட்சி, அவன் மட்டுமே மிஞ்சியிருக்கிறான். இதுதான் ஆன்மிகத்தின் எல்லைபோல் தோன்றினாலும் மேற்கொண்டு ஓரடி எடுத்து வைக்க வேண்டியது பாக்கி இருக்கிறது. இன்னும் வட்டம் பூரணமாகவில்லை. எங்கேயிருந்து புறப்பட்டோமோ, அவ்விடத்திற்கு நாம் இன்னும் திரும்பவில்லை. ஆகவேதான், வட்டம் பூர்த்தியாகவில்லை. ஆரம்பம் தான் இங்கு முடியும் இடமும் ஆகும். விதை விதைக்கப்பட்டது. செடி வளர்ந்து. மரமானது. பூக்கள் தோன்றின. பழங்கள் கனிந்தன. மீண்டும் விதை வந்தது. வட்டம் முழுமையடைந்தது. பயணம் முடிந்தது. குழந்தை — இளமை — முதுமை — மரணம் — மீண்டும் குழந்தை என்று வாழ்க்கை வட்டமும் முழுமையாக அமைந்துள்ளது.

ஆரம்பமே முடிவு! முதல் கட்டமே கடைசிக் கட்டமும். எங்கேயிருந்து தொடங்கினாயோ அங்கேயே போய்ச்சேர

வேண்டும். எங்கிருந்து பயணம் தொடங்குகிறது? உலகிலிருந்து, கடைத்தெருவிலிருந்து, முண்டியடிக்கும் கூட்டத்திலிருந்து ஆரம்பம். பிறகு ஒரு சமயம் நீ அதே கூட்டம் - கும்பலுக்குத் திரும்பிவா. கூட்டம் குறையவில்லை. அதே கூட்டம் நீடிக்கிறது. ஆனால் நீ பழைய ஆளில்லை. கச்சாப் பொருளாக இருந்த நீ உன் ஆன்மிக முயற்சிகளால் பக்குவப்பட்டு புது மனிதனாகத் திரும்பி வந்துள்ளாய். இனி நீ சுதந்திரமாக, ஆனந்தமாக ஆடு.

இதையே நான் திருவிழாக் கொண்டாட்டம் என்று அழைக்கிறேன். கடவுள் சச்சிதானந்த நடனம் ஆடுகிறார். சாட்சி நிலை போதும் என்று கடவுள் நிறுத்திக்கொண்டிருந்தால், படைப்பு முழுதும் நடனத்தில் ஈடுபட்டிருக்காது. சந்திரன் ஆடுகிறது. சூரியன் சூழல்கிறது. உலகம் சுழல்கிறது. நட்சத்திரங்கள் ஆடுகின்றன. பிரபஞ்சம் முழுதும் நளினமாக அசைந்தாடுகிறது. அந்தக் குலுங்கலின் ஒலியைக் கேள். சதங்கை ஒலியின் சங்கீதத்தைக் கேள். இதை உணர்ந்திருந்ததால் மீராபாய் தான் மகாராணி என்பதை மறந்து, சதங்கை அணிந்து, பக்தர்கள் நடுவில் மெய்ம்மறந்து ஆடுகிறாள்.

இது நாலாவது கட்டம். சைதன்ய மகாபிரபு ஆடியே பக்தியை வெளிப்படுத்தினார். மீராவின் கிருஷ்ண பக்தி நடனம் மூலம் வெளிப்பட்டது. பாவுல் எனப்படும் வங்காள நாடோடி பக்தர்கள் எல்லாச் செயல்களையும் நடனமாடியே செய்கின்றனர். சாட்சி மனப்பான்மை என்னும் மூன்றாம் கட்டம் உன்னை சூன்யத்திற்குக் கொண்டு வரும். உன்னை வெற்றிடமாக்கி விடும். இப்போது நீ ஆடினால் பூரணமாகுவாய். கடவுளும் நீயாகிய வெற்றிடத்தில் இறங்கிவந்து ஆடுவார், பாடுவார், லீலைகள் புரிவார். இதெல்லாம் அவரது சுபாவம். அவர் மாயைகள் செய்வார். மாயை என்பது கடவுளின் நிழல் ஆகும்.

சாட்சி மனப்பான்மையில் ஒருவிதமான வறண்ட தன்மை உள்ளது. அதில் அமைதி உண்டெனினும் இனிமை பெருக்கெடுத்து ஓடுவதில்லை. சாட்சி நிலையை ஒருவிதமான இலையுதிர்காலம் எனலாம். மீண்டும் வசந்தம் வரட்டும். இலையுதிர் காலத்திலும் நிர்வாணமாக நிற்கும் மரங்களின்

அழகுண்டு. ஆனால் அந்த அழகிலேயே நின்றுவிடாதே. மீண்டும் இலைகள் துளிர்க்கட்டும். மீண்டும் பசுமை படரட்டும். பறவைகள் அமர்ந்து பாடட்டும்; கூடுகட்டி வாழட்டும். சாட்சி மனப்பான்மை ஏற்பட்ட பிறகு வரும் வசந்தகாலத்தை நீ அனுபவித்து உணருவாய். முந்திய வசந்த காலங்களைப் போல் இறுக்கம் இன்றி, கவலை இன்றி, எல்லாம் சகஜமாக இருக்கும்.

**எனது எல்லையைச் சொல்லிவிடு**
**எல்லையற்ற நீலவானம்**
**மௌனமாய் அழைப்பு விடுக்கிறது**
**படபடக்கும் என் இறக்கைகளுக்கு**
**அவற்றின் எல்லையைச் சொல்லிவிடு**

மனிதன் எப்பொழுதும் எல்லைகளை விரும்புகிறான். இந்த விருப்பம் அவனது முன்னேற்றத்தைத் தடுத்துவிடுகிறது. ஆனால் நீ எல்லையற்றவன். ஆகாயத்தின் எல்லைதான் உனது எல்லையும்: ஆனால் அதற்கோ எல்லைகள் கிடையாது. உனக்கும் அப்படித்தான். எங்கும் நிற்காதே. நீ நின்றால் அந்த இடம் உனது எல்லையாகிவிடும். நீ போய்க்கொண்டே இரு. பிரவாகித்தபடியே செல். எல்லையுள்ள நிலையிலிருந்து எல்லையற்ற நிலைக்கு, அபூரணமான நிலையிலிருந்து பூரண நிலைக்கு நீ முன்னேறிக் கொண்டே இரு.

இந்த ஆன்மிக யாத்திரை முடிவற்றது. வழியில் தங்க ஆங்காங்கே கூடாரங்கள். ஆனால் பயணம் முடிவதில்லை. கடைசிப் புள்ளியை நீ அடைந்ததும் எல்லாம் லீலையெனத் தெரிந்து கொள்வாய். அப்போது உன் மன அழுத்தம் நீங்கிவிடும். பிறகு நீயும் அதில் சேர்ந்து கொள்வாய். இதனால் இலேசாகி விடுவாய், இலகுவாகி விடுவாய்.

சாட்சி மனப்பான்மையை நான் பெரிய அளவில் பாராட்டிய போதிலும் அதில் ஓர் ஆபத்தும் உள்ளது. கடைசிப் புள்ளியை அடைந்தாய் விட்டது என்று அப்போது எண்ணம் தோன்றும். அது அகங்காரத்தைத் தூண்டிவிடும்.

உலகப் பிரச்சினைகளால் கலக்கமுற்ற ஒருவன் சாந்தியைத் தேடி ஒதுக்குப்புறமாக, காட்டுப்புறமாகச் செல்கிறான். அப்படிக்

கிடைக்கும் சாந்தி ஆன்மிக சாந்தநிலையன்று. வீட்டை விட்டு மடம் அல்லது ஆசிரமத்தில் சேர்ந்துவிட்டாலும் இதே நிலை தான். ஓடுவதால் சாந்தி கிடைப்பதில்லை. எந்தச் சூழ்நிலையிலும் பதற்றப்படாமலிருப்பவனின் அமைதி உண்மையானது; ஆன்மிகத்திற்கு நெருக்கமானது.

**தனியே புல்வெளியில் உட்கார்ந்துள்ள**
**உன்னை உலகம் அடையாளம் கண்டு**
**வாழ்த்திடும் என்றா நினைக்கிறாய் ?**
**ஊக்கம் ஏதும் அளிக்காமல்**
**சோகம் மட்டும் வழங்கிடும்**
**தனிமையை விட்டு எழுந்திடு.**
**செயற்கை அமைதியைக் கைவிட்டு,**
**கலகலவென்ற கடைத்தெருவில்**
**அங்கே மக்கள் வீரத்துடன்**
**பிரச்சினைகளைச் சமாளிப்பதைப் பார்.**
**மக்களின் நடுவில் வாழ்வது தான்**
**உண்மையான வாழ்க்கையாகும்.**

ஆசிரமங்களிலும், மடங்களிலும், குகைகளிலும் வாழ்ந்து துறவிகள் பெறுவதாகச் சொல்லும் சாந்தி உயிரோட்டமுள்ளது அன்று. அதைச் சுடுகாட்டு சாந்தியெனலாம். ஏனெனில் இந்த சாந்தியில் சோகமே பிரதிபலிப்பாகிறது.

கன்ஃபூஷியஸ்ஸிடம்* ஒரு சீடன் சாந்தி பெறும் வழியைக் கேட்டான். குரு சொன்னார்: "எந்த விதமான அமைதி உனக்கு வேண்டும்? மயானபூமியின் அமைதியா தேவை? அதை நீ இறந்தால் தான் சரியாக அனுபவிக்க முடியும். இறப்பதற்கு இப்போதே என்ன அவசரம்? அந்த அமைதி ஒருநாள் உனக்குக் கிடைத்தே தீரும். வேறு வகையான அமைதியை, உயிர்த் துடிப்புள்ள அமைதியைத் தேடு."

ஆம், பிணத்தின் அமைதி வாஸ்தவமான அமைதி இல்லை. அது உணர்வற்ற (ஜட) அமைதி. அது உனக்கு ஏற்படுத்தும் அமைதி வாழ்க்கையின் நிலையாமை குறித்த ஆன்மிக

* Confucius (551-479 BC) சீன தத்துவஞானி. சுபாவத்தில் விசுவாசத்தை (loyalty to one's true nature ) வலியுறுத்தினார்.

அமைதியில்லை. பிணத்தைக் கண்டு சோகத்தாலோ, பயத்தாலோ நீ அமைதியாக இருக்கிறாய். உன் உடம்பு கூட அப்போது சுருண்டு விடுகிறது. நீ அசைவது கூட இல்லை. அந்த அமைதி செயற்கையானது. எப்பொழுது அந்த இடத்தை விட்டுக் கிளம்புவது என்று நீ தவிப்பாய்.

சாது — சந்நியாசிகள் உலகைக் கண்டு பயந்து, அதன் பாதிப்பிலிருந்து தப்ப, பத்மாசனம் போடுகிறார்கள். என் விருந்தாளியாகத் தங்கிய ஒரு சந்நியாசி அதிகாலை மூன்று மணிக்கே பத்மாசனத்தில் உட்கார்ந்துவிடுவார். நான் இந்த ஆசனத்தின் பெயரே தவறு என்பதைச் சுட்டிக்காட்டினேன். "தாமரை ஆசனம் போட்டு அமர்ந்திருப்பதை நீங்கள் பார்த்ததுண்டா ? அது காற்றில் அசைந்தபடியே இருக்கும். சூரிய ஒளி பட்டதும் மலரும். உயிர்த் துடிப்புப் பெறும். பாறை வேண்டுமானால் ஒரேயிடத்தில் இருப்பதை ஆசனம் போடுவதாகச் சொல்லலாம். பூக்களை ஆசன நிலையில் பார்க்க முடியாது. நீங்கள் பத்ம ஆசனம் போடவேண்டுமென்றால் பத்மம் (தாமரை) போலவே இலேசாக அசையுங்கள்; தாமரையில் உட்காரும் வண்டுபோல் ஏதாவது பாட்டை முணுமுணுத்தபடி இருங்கள். குத்துக்கல்போல் ஜடமாக உட்கார்ந்திராதீர்கள். ஜடம்போல ஆடாமல் — அசையாமல்தான் உட்காருவேன் என்று பிடிவாதம் பிடித்தால், இதை பத்மாசனம் என்றாவது சொல்லாமலிருங்கள். இதை ஜடாசனம் என்று அழையுங்கள்." என ஆலோசனை கூறினேன்.

மரங்களை ஜடம் என்கிறோம். ஆனால் காற்று கிளைகளை ஊடுருவிச் செல்லும் போது அவை ஆடுவது நடனம் போலுள்ளது.

யோகாசனம் போட்டது போல் மரம் ஒரே இடத்தில், ஒரே நிலையில் உள்ளது. ஆனால் அதை ஜடாசனம் என்று சொல்ல முடியாது. ஏனெனில் அது அவ்வப்பொழுது அசைந்தாடுகிறது.

சந்நியாசி சமூகத்தைவிட்டுச் செல்கிறார். விரும்பும் காலம் வரைச் சிந்தித்தபின் அவர் மீண்டும் சமூகத்திற்குத் திரும்ப வேண்டும். சமூகத்தின் நடுவில் வாழ வேண்டும். தன்னை மற்றவர்

களிடமிருந்து வித்தியாசமான உயர்ந்தவனாக நினைக்கக்கூடாது. சமூக வாழ்வின் கூச்சலின் நடுவே அமைதியைப் பயிற்சி செய்ய வேண்டும். அதில் தான் சிறப்பு அடங்கியுள்ளது. காட்டில் வசித்து அமைதியைப் பெறுவதில் என்ன சிறப்பைக் காணமுடியும்? சந்தைக் கூச்சலில் சாந்தமாக வாழும் சந்நியாசியே உண்மையான சந்நியாசி, பரம சந்நியாசி.

காட்டில் அல்லது ஆசிரமத்தில் வாழும் சந்நியாசி சிக்கலானவர். அங்கே அவர் 'உலகத்தை வென்றேன்' என்ற திமிருடன் உட்கார்ந்திருக்கிறார். இது அகங்காரம் தவிர வேறென்ன? லட்சியவாதியான சந்நியாசியோ எளிமையான, சாதாரணமான மக்கள் நடுவில் வசிப்பதையே விரும்புவார்.

மனிதன் சமூகத்தில் சிறப்பிடம் பெறுவதை மிகவும் விரும்புகிறான். கோடிக்கணக்கில் பணம் சேர்த்து சமூகத்தில் கவனிக்கப்பட வேண்டுமென எண்ணுகிறான். உலகில் கோடீஸ்வரர்களின் எண்ணிக்கை குறைவு. அவர்களிலும் முதலிடம் பெறுவதற்குப் போட்டியுள்ளது.

**ஆ**ண்ட்ரூ கார்னேகி* அமெரிக்கப் பணக்காரர்களில் முதலிடம் பெற்றவர். அவர் ஒருநாள் தன் செயலாளரை அழைத்து, "இந்தியாவில் ஹைதராபாத் நிஜாம் தான் உலகப் பணக்காரர்களில் முதலிடம் என்கிறார்கள். இது எனக்கு சவால் விடுவதுபோல் இருக்கிறது. நிஜாமிடம் உள்ள மொத்தச் செல்வம் எவ்வளவு என்று விபரம் திரட்டி எனக்குத் தெரிவிக்கவும்" என்று கட்டளையிட்டு அனுப்பினார்.

இது கடினமான விஷயம். ஹைதராபாத் நிஜாம் ரூபாய் — நாணயமாக ஓரளவுதான் செல்வம் வைத்திருந்தார். வைரங்களும் ரத்தினங்களும் தான் அவரிடம் பெரும் எண்ணிக்கையில் இருந்தன. அவை எத்தனை என்றும், அவற்றின் மொத்த மதிப்பு எவ்வளவு என்றும் நிஜாம் அரண்மனையில் கணக்குப் போட்டு வைத்திருக்கவில்லை. இதனால் ஆண்ட்ரூ நிஜாமைவிட தான்

---

* Andrew carnegie ( 1835-1919 ) நெசவாளியின் மகன். அமெரிக்காவின் மாபெரும் தொழிலதிபராக முன்னேறி, பிறகு மாபெரும் வள்ளலென்றும் பெயரெடுத்தவர்.

பெரிய பணக்காரரா என்ற முடிவிற்கு வரமுடியவில்லை. இறக்கும்போது பத்து பில்லியன் ரூபாய் விட்டுச் சென்ற ஆண்ட்ரு இந்த மனக்குறையுடனேயே இறந்தார். ( ஒரு பில்லியன் = 100 கோடி ).

சிலர் பதவி மூலம் சமூகத்தில் விசேஷ இடத்தைக் கைப்பற்ற ஆசைப்படுகிறார்கள். உதாரணமாக, ஒருவர் ஜனாதிபதியாக ஆசைப்படலாம். கோடி கோடி மக்களில் குடியரசுத் தலைவராக — நாட்டின் முதல் பிரஜையாக — ஆவது என்பது சாதாரண விஷயமா ?

ஒருவன் அறிவின் மூலம் சமூகத்தில் தனி இடம், முதல் இடம் பெற ஆசைப்படுகிறான். உழைத்து நோபல் பரிசு வாங்குகிறான். சமூகத்தில் என்ன, உலக அரங்கிலேயே அவனுக்குச் சிறப்பிடம் வாய்த்துவிடுகிறது.

இந்தியாவில் சமூகத்தின் கவனத்தைத் தன்பால் ஈர்க்க சுலபமான வழி ஒன்றுள்ளது. பணம் சேகரிப்பது, பதவிக்கு முயலுவது, அறிவை வெளிப்படுத்த எழுதுவது போன்ற நீண்டகால சிரமமான முயற்சிகள் தேவையில்லை. நீ ஒரு குன்றில் வசதியான குகை ஒன்றைத் தேர்ந்தெடு. அங்கே போய்க் கண்களை மூடி பத்மாசனத்தில் அமர்ந்து கொள். இவ்வளவு உன்னால் செய்யமுடியும் தானே! இதுபோதும். நீ விசேஷமான மனிதனாகக் கருதப்படுவாய். கோடீஸ்வரர்களும், குடியரசுத் தலைவரும் கூட உன் கால் தொட்டு வணங்குவார்கள்.

சாட்சி மனப்பான்மை ஏற்பட்டுவிட்டவனும் தன்னை விசேஷமானவனாக நினைக்கக் கூடாது. அதே மனப்பான்மை யுடன் சமூகத்தில் கலந்து பழகு. உனக்குப் பாதிப்பு ஏற்படுமோ என்று பயப்பட வேண்டாம். சமூகத்திற்குத் திரும்பிவந்தாலும் இனி உன்னால் தீச்செயல் செய்ய முடியாது. ஏனெனில் உனக்கு ஏற்கெனவே ஆத்ம தரிசனம் கிடைத்துவிட்டது. ஞானம் பெற்ற பின் மீண்டும் சமூகத்திற்கு வருபவனே பரமஞானி. புத்தர் அப்படித்தான் செய்தார். போதி மரத்தடியிலேயே ஆயுளைக் கழிக்கவில்லை.

ஜப்பான் நாட்டு சக்கரவர்த்தி ஒருவர் தமக்கு குருவாக வழிகாட்டக்கூடிய ஞானி ஒருவரைத் தேடி அலைந்தார். பலரை தரிசித்தார். எவரும் அவருக்கு திருப்தி தரவில்லை. அவருக்கு உதவியாக ஓர் அமைச்சரும் அவருடன் சேர்ந்து எல்லா இடங்களுக்கும் சென்றார்.

அந்த அமைச்சர் கூர்மையான அறிவு படைத்தவர். அவர் சக்கரவர்த்தியுடம், "இப்படியே நீங்கள் வாழ்க்கை பூராவும் தேடி அலைய வேண்டியிருக்கும். ஏனெனில் சமூகத்தால் ஞானிகளென அழைக்கப்படுபவர்களிடம் இன்னமும் திமிர் உள்ளது. சமூகத்திற்குத் திரும்பி மக்களுடன் பழகுவதில் பயமுள்ளது. எனக்கு ஒருவரைத் தெரியும். அவரைப் பற்றி இதுவரை நான் உங்களிடம் கூறியதில்லை. அரண்மனைக்கு மக்களுடன் கலந்து வந்து உங்களைப் பார்த்திருக்கிறார். எளிமையான தோற்ற முடையவர். இவர் உங்களுக்கு குருவாக அமைவதற்கு ஏற்றவர்," என்று அமைச்சர் தெரிவித்தார்.

"அப்படி ஒருவர் நம் தலைநகரில் இருப்பது எப்படி எனக்கோ, மக்களுக்கோ தெரியாமல் போனது?" சக்கரவர்த்தி கேட்டார்.

"அவர் ஞானம் பெற்றபின் திரும்பிவந்து மக்களுடன் கலந்து விட்டார். தேவைப்படுபவர்களுக்கு வழிகாட்டுகிறார். எளிமை காரணமாகவும், அவர் சகஜமாக எல்லோருடனும் பழகுவதாலும் மக்களுக்கு அவர் விசேஷமானவர் என்று தெரியவில்லை" என்று கூறிய அமைச்சர், சக்கரவர்த்தியை அழைத்துச்சென்று, சற்றுத் தொலைவிலிருந்து அந்த மனிதரைக் காட்டினார்.

"இவர் மிகவும் சாதாரணமானவராகத் தெரிகிறாரே. இவரிடம் அப்படியென்ன விசேஷத் தன்மை உள்ளது?" என்று அமைச்சரிடம் கேட்டார்.

"அந்த சாதாரணத் தன்மைதான் அவரது சிறப்பு. சாதாரண மனிதர்கள் அபூர்வமாகத்தான் தென்படுகிறார்கள். ஏனெனில் ஒவ்வொரு சராசரி மனிதனும் தன்னை விசேஷமானவனாகவே

நினைக்கிறான். அற்பமானவனும் தான் விசேஷமானவன் என்று கர்வப்படுகிறான். நான் காட்டிய மனிதரோ மனத்தின் ஆழம்வரை தன்னை சாதாரணமானவர் என்றே கருதுகிறார். தான் ஞானம் பெற்று விசேஷமானவர் என்ற நினைப்பே அவருக்கு இருப்பதில்லை. அதில் தான் — தன்னை மறைத்துக் கொள்வதில் தான் — அவரது புனிதத்துவம் அல்லது திவ்வியத் தன்மை அடங்கியுள்ளது" என்று அமைச்சர் விளக்கினார்.

கரையிலேயே உட்கார்ந்திருப்பதிலும் ஒருவகையான இன்பம் உள்ளது. அதை அனுபவிக்காதே என்று நான் சொல்ல மாட்டேன். ஆனால் அப்படியே ஆயுள் முழுதும் உட்கார்ந் திருக்காதே. அப்படி ஓய்வாக உட்கார்ந்திருக்கையில் சுயசிந்தனையில் இறங்கு. உனது இயல்பான தன்மையைத் தெரிந்துகொள். பாரபட்சமின்றி உன்னை ஆராய்ந்த பிறகு மீண்டும் இறங்கு தண்ணீரில். துடுப்புப் போடு. வாழ்க்கைப் படகைச் செலுத்து.

**கைகளால் துடுப்புப் போட முடியுமானால்,**
**வாயால் 'ஐலசா' பாட முடியுமானால்,**
**கரையிலேயே கிடப்பது அவமானம்.**

அன்பெனும் புள்ளியிலிருந்து பயணம் தொடங்கு. கருணைக் கரையில் சிறிது காலம் தங்கு. பிறகு சாட்சி கட்டம் வரை முன்னேறு. சாட்சி நிலையிலேயே தங்கிவிட்டாலென்ன என்று தீவிர ஆசை மூளும். ஏனெனில் இந்த நிலை அமைதியும் சுகமும் தரும். மனத்தில் கொந்தளிப்பு அலை எழாது. நீண்ட காலமாக வாழ்க்கையில் அவதிப்பட்டவன் பயிற்சியின் மூலமும், முயற்சியின் மூலமும் சாட்சி நிலைக்கு வந்து சேர்ந்ததும் கரை சேர்ந்ததாக நினைக்கிறான் உண்மையில் நீ இன்னும் கரை சேரவில்லை.

சிறிது காலம் சாட்சி மனப்பான்மையின் நிழலில் ஓய்வெடு. மறுபடியும் சக்தி நிரம்பும். ஓய்வு என்பதன் அர்த்தமே நீ மீண்டும் உழைப்பதற்காக தயாராகி வருகிறாய் என்பது தான். மீண்டும் உழைக்கும் ஆற்றல் எழாவிடில் உன் ஓய்வு பூரணமானதன்று. இரவு நன்கு தூங்கிய பின் சுறுசுறுப்பாக எழுகிறாய். மனத்தாலோ

உடலாலோ உழைக்கத் தினவு எடுப்பதாகக் கூறுகிறாய். உன் ஓய்வு முழுமையானது.

சாட்சி மனப்பான்மையை ஓய்வுகாலமாக நினைக்கலாம். அதை எப்படி நிருபிப்பது? நீ மறுபடியும் சமூகத்தின் நடுவில் வருவதை வைத்து உன் ஓய்வு பூரணமானது என்று கருதலாம். முன்பும் நீ சமூகத்தில் வாழ்ந்தாய். இப்போது இரண்டாம் முறை நீ வாழ்வது வேறு விதமாக இருக்கும். சமூகத்தில் இருந்தாலும் சமூகத்தின் கறைபடாமல் வாழ்வாய் (in the society but not of the society.)

**இரண்டாவது கேள்வி**

**ஓஷோ அவர்களே! அறியாமை, அறிவுடைமை, இயல்பறிவு ஆகிய மூன்றையும் விளக்கிக் கூறினால் மகிழ்வோம்.**

**சி**று வயதில் அறிவு, விதை நிலையில் இருக்கிறது. இந்நிலையை அறியாப் பருவம் என்கிறோம். ஆனால் நீண்ட காலம் — நடு வயது வரை — இப்பருவம் தொடர்வது விசித்திர மாகும். சுயசிந்தனை இல்லாமல் மற்றவர்களைப் போலவே பணம் — பதவி, காதல் — கல்யாணம் — குடும்பம், வீடு — நிலம் என்றெல்லாம் ஓடி — ஓடி, ஒரு கட்டத்தில் ஓய்ந்துபோகிறோம்.

இன்னும் அலைகள் ஓயவில்லை. ஆனால் அவற்றின் எழுச்சியும் வேகமும் தணிந்துவிட்டது. முதல் முறையாக நாம் வாழ்க்கையைப் பற்றி சிந்திக்கத் தொடங்குகிறோம். மனம் பக்குவமடைகிறது. என்ன செய்தால் வாழ்க்கையில் பிரச்சினை உதிக்கிறதுஎன்றும், என்ன செய்யாவிடில் பிரச்சினை குறைகிறது என்றும் புரிகிறது. எதைச் செய்வது எதைச் செய்யாமலிருப்பது; எது சுபம் — எது அசுபம்; எது சரி — எது தவறு என்ற வித்தியாசம் தெரிகிறது. எதன் காரணமாக உபத்திரவம் அதிகமாகாமல், வாழ்வில் அமைதியும் சாந்தியும் சூழ்கிறதோ, அதுவே சரியான நடவடிக்கை. எதன் காரணமாக வாழ்வில் தொந்தரவு அதிகமாகிறதோ, அமைதி கெடுகிறதோ, அன்பு நீங்குகிறதோ, அது தவறான நடவடிக்கையாகும்.

இந்த அறிவுடைமை நிலை வளர்ந்தபின், 'இதுவா — அதுவா' என்ற கேள்விகள் எழுவதில்லை. ஒன்றைத் தெரிந் தெடுத்து, இன்னொன்றை நிராகரிக்க வேண்டியதில்லை. சகஜமாக, இயற்கையாக மனம் சரியான வழியில் செல்கிறது. செயல்கள் தாமாகவே சரியாக அமைகின்றன. மேற்கொண்டு தவறே நடப்பதில்லை.

சரி எதுவென்று தேர்ந்தெடுக்க முடியாத காலம் அறியாப் பருவம். சரி — தவறு எதுவென ஆராய்ந்து, சரியான பாதையைத் தேர்ந்தெடுப்பது அறிவுடைமை நிலை. எந்த ஆராய்ச்சியும் தேவைப்படாமல் எல்லாம் தானாகவே, சுபாவமாகவே சரியாக அமையுமானால், அது சுய அறிவு (சுயபோதம்) என்னும் இயல்பாகவே ஆகிவிடும் அறிவு நிலை.

சிற்றறிவு நிலையில் எது சரி — எது கூடாது என்று தெரிவதில்லை. அறிவுடைமை நிலையில் மனப் பக்குவம் பெற்று எது சரி — தவறு எனப் பிரித்து, சரியான பாதையில் செல்கிறோம். சகஜ அறிவில் ஞான விழிப்பு ஏற்பட்டு, எது நடக்குமோ அதுவே நடக்கிறது; எது நடக்கிறதோ அது சரியாகவே நடக்கிறது என்று இயல்பாகவே நாம் உணர்கிறோம்.

உன் எதிரே கதவு இருப்பதைப் பார்க்கிறாய். சட்டென்று அதன் வழியாக வெளியேறுகிறாய். கதவு வழியே வெளியேறுவதா அல்லது அதன் பக்கமாக உள்ள சுவரின் வழியே வெளியேறுவதா என்றெல்லாம் அசட்டுத்தனமாக யோசிக்க மாட்டாய் அல்லவா? சுவரின் வழியாக வெளியேறுவதானால், முதல் விஷயம், நீ முட்டிக் கொள்வாய். இரண்டாவது, நீ வெளியேறவும் இயலுவதில்லை. கதவைப் பயன்படுத்தினால் நீ வெளியே போகவும் முடியும், முட்டிக்கொள்ளவும் நேராது. ஆனால் நீ இப்படி ஒவ்வொரு முறையும் கணக்குப் போட்டுப் பார்ப்பதில்லை. அப்படி எவனாவது கணக்குப் போட்டால் அவன் மனத்தில் சுவர் வழியாக வெளியேறும் ஆசை இருக்கும்.

அறிவுடைமை நிலையில் மனிதன் கோபம் மிகக் கெடுதி, பாவம், நரகத்திற்குப் போக நேரிடும் என்பான். இறுதியான சகஜ அறிவு பெற்றவன் இப்படியெல்லாம் சொல்வதில்லை. அவன்

கோபப்படுவதே இல்லை. இன்னும் நுணுக்கமாகப் போகலாம். புத்தர் கோபித்துக்கொண்டதே இல்லை, மகாவீரர் கோபித்துக்கொண்டதே இல்லை என்றெல்லாம் சொல்கிறோம். ஆனால் இதன் பொருள், புத்தருக்கும் மகாவீரருக்கும் கோபம் வந்தது என்றும், அதை அடக்கிக்கொண்டனர் என்றும் ஆகிறது. ஆனால் உண்மை என்ன? இந்த மாதிரியான புனிதர்களின் மனத்தில் கோபம் என்றோர் உணர்ச்சியே கிடையாது!

ஆரம்பகால அபோத நிலை அஞ்ஞான நிலை; மத்தியிலுள்ள அறிவுடைமை நிலை அக்ஞானமும் ஞானமும் கலந்த நிலை; சகஜ அறிவு ( போதம் ) சுத்த ஞானநிலையாகும்.

ஏறத்தாழ நடுத்தர வயதைத் தொடும்வரை எதைவிட்டும் ஓடாதே. விழித்துப் பார். அனுபவம் பெறு. எதிலிருந்து தப்பி ஓட முயலுகிறாயோ அதிலிருந்து நீ விடுதலை பெற முடியாது. ஏனெனில் அப்போது உனக்கு அரைகுறை அனுபவமே கிடைக்கும். வாழ்க்கை காண்பிப்பதையெல்லாம் நீ முழுதுமாகப் பார்த்துவிடு. பிறகு நீ திரும்பி வந்து பார்க்கத் தேவையெழாது. வாழ்க்கையில் எதுவும் மிஞ்சவில்லை. எல்லாவற்றின் சாரத்தையும் உறிஞ்சிவிட்டாய்.

இதன் விளைவாக வாழ்க்கையைச் சரியாகப் பார்க்கும் பழக்கம் ஏற்பட்டுவிடும். இவ்வாறு சரியாக மதிப்பிடும் கலைதான் அறிவுடைமை என்பது. ஒன்றைச் சரியென்னும் போது அது தவறாகவும் போகக்கூடிய ஆபத்து இருந்ததை ஒப்புக் கொள்வதாகத் தோன்றுகிறது. சரி — தவறு என்னும் பேத புத்தி நீங்கி, நடப்பவை நிகழ்ச்சிகள் மட்டுமே என்ற நிலைக்கு வந்துவிட்டால் அதுவே சகஜ அறிவு. அது சகஜ சமாதிக்கு இட்டுச் செல்கிறது.

**மூன்றாவது கேள்வி**

**நம் நாட்டில் ராமன் திருவிளையாடலை ராம்லீலா [ராமலீலை] என்கிறோம். கிருஷ்ணனின் திருவிளையாடலை ராஸ லீலா என்கிறோமே. ஏன் கிருஷ்ணலீலை என்று கூறுவதில்லை?**

**ரா**மலீலையில் ராமன் முக்கியம். ராஸலீலையில் யாரும் முக்கிய பாத்திரம் இல்லை. ராமனின் வாழ்க்கை விவரம் (சரிதம்) ராமலீலையாகும். அதில் ராமனின் பெருமை முக்கியப் பங்கு வகிக்கிறது. ராமன் மையத்தில், நடுநாயகமாய் இருக்கிறார். அவர் பரம்பரை மரியாதை, கட்டுப்பாடுகள், அறம், கலாச்சாரம், நன்னடத்தை முறைகளால் சூழப்பட்டு நடுவில் நிற்கிறார்.

கிருஷ்ணலீலையில் கிருஷ்ணன் இல்லை; யாருமே இல்லை. மையத்தில் பரமாத்மா இருக்கிறார். ஆகவே அவரது முடிவற்ற ரசம் பெருகிக் கொண்டிருக்கிறது. இதன் வர்ணனையே ராஸலீலை. கடவுளின் முடிவற்ற நடனம் நடந்து கொண்டிருக்கிறது. இதில் ராமனுக்குப் பிடித்தவை — பிடிக்காதவை உண்டு. கிருஷ்ணனுக்கு அப்படி எதுவும் கிடையாது.

ராமனுக்கு என்று அவர் கடைப்பிடித்த நடத்தை நெறிகள் சில உண்டு. கிருஷ்ணனின் நடத்தை குறித்துத் திட்டவட்டமாகக் கூற முடியாது. அவரது வாழ்க்கையில் முரண்பாடுகள் நிறைய உண்டு. நடத்தை என்பது திட்டம், ஒழுங்குமுறை, தெரிந்தெடுத்துச் செயல்படுதல் என்றெல்லாம் பொருள் தரும்.

ராமன் குறிப்பிட்ட விதமாக வாழ்க்கையை அமைத்துக் கொள்ள விரும்பினார். அதில் அவர் வெற்றி பெற்றார். ஏராளமான பிரச்சினைகள், நிறைய தியாகங்கள், தந்தையின் கட்டளைப்படி அரண்மனையைவிட்டு நீங்குதல், தனக்கு இழைக்கப்பட்ட அநியாயத்திற்காக எவரையும் பழிவாங்காமலிருத்தல் என்று அவரது வாழ்க்கை அமைந்திருந்தது.

ராமன் மரபுவழி வாழ்க்கை நடத்தினார். 'ரகு குலத்தின் ரீதி அது — வாக்குத் தவறாமை நீதி அது.' கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டிய கட்டாயம் ராமனுக்கு இருந்தது. இதனால், தசரதன் மரணமும், வாலி வதமும் சம்பவித்தாலும் அவர் கைகளைக் கட்டிப்போட்டது போன்ற நிலையில் இருந்தார். குல வழக்கத்தையே அவர் தொடர வேண்டியிருந்தது.

ராமனிடம் கம்பீரமான ஆளுமை உள்ளது. பரம்பரையால் (tradition) செதுக்கப்பட்ட அவரது ஆளுமையில் புரட்சிக் கனல்

கிடையாது. எதை எப்படிச் செய்ய வேண்டுமோ அதை அப்படியே செய்தார். சமூகத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட விதத்திலேயே செயல்பட்டார். சமூகத்தின் எதிர்பார்ப்பை நிறைவேற்றச் சொந்த வாழ்க்கையில் அவலங்களைப் பொறுத்துக்கொண்டார். அதனால் சீதையைக் காட்டுக்கு அனுப்பினார். சமூகம் இதற்காக அவரை மதித்தது. இன்றும் சமூகத்தில் ராமனுக்குக் கிடைக்கும் மரியாதை வேறெந்த அவதாரத்திற்கும் கிடைக்கவில்லை. ராமன் சமூகத்திற்கு மரியாதை கொடுத்து, சமூகத்திடமிருந்து மரியாதை திரும்பப் பெற்றார்.

கோடி — கோடி மக்கள் ராமனிடம் பக்தி கொண்டுள்ளனர். ஏனெனில் ராமன் சமூகத்தைக் கூட்டம் தானே என்று அலட்சியப்படுத்தவில்லை. இது கொடுக்கல் — வாங்கல் போன்றது. கணக்கு நேர்செய்யப்பட்டுவிட்டது. இதில் விசேஷம் ஒன்றுமில்லை. சரியா — தப்பா என்று வாதம் செய்யாமல் ராமன் தன்னை சமூகத்தின் விருப்பத்திற்கு சமர்ப்பித்தார். சமூகத்தை எதிர்த்துக் கேள்வி கேட்டால், கேட்டவர் மீது சமூகம் கோபப்படும், சந்தேகப்படும். ராமன் அதற்கு இடம் கொடுக்கவில்லை.

ஆகவே ராமலீலையில் ராமனுக்குத் தான் அதிகம் மதிப்பு. துளசிதாசர் தமது ராமாயணத்திற்கு 'ராமசரிதமானஸ்' என்று பெயர் சூட்டியமை கவனிக்கத் தக்கது. சரிதம் என்றால் நடத்தை. நடத்தை என்றால் மக்களின் எதிர்ப்பார்ப்பின்படி செயல்படுவது.

கிருஷ்ணனிடம் வரையறுக்கும்படியான, திட்டவட்டமான நடத்தை இல்லை. அவர் சமூக விழுமியங்களுக்கு எதிராகவே நடப்பது போல் தெரிகிறார். ராமன் தமது ஒரே மனைவியையும் காட்டுக்கு அனுப்பிவிட்டார். கிருஷ்ணர் மற்றவர்களின் மனைவிகளையும் தம்மிடம் சேர்த்துக் கொண்டார். சமூகம் இந்த லீலைகளை மறக்கவில்லை. மன்னிக்கவில்லை. இதனால் கிருஷ்ணன் இந்திய வாழ்க்கையின் அஸ்திவாரமாக ஆக முடியவில்லை. கிருஷ்ணனுக்கும் கூட்டம் சேர்கிறது என்றால் அதற்குக் காரணம் ராமனின் கம்பீரம் அவரது தோள்மீது நாம் கைபோட முடியாதபடி தடுக்கிறது. ராமனின் வாழ்க்கை சமூகத்திற்கான லட்சியப் பாதையாக, ராஜபாதையாக அமைந்துவிட்டது.

சராசரி மக்களால் அவரை நெருங்க முடிவதில்லை. கிருஷ்ணன் காட்டில் ஆங்காங்கு தோன்றி. மறையும் ஒற்றையடி பாதை போன்றவர். சிலசமயம் பின்பற்றலாம்; சில சமயம் பின்பற்ற முடியாது; பின்பற்றக்கூடாது.

கிருஷ்ணர் சமூகம் விதித்த நடைமுறைகளைப் பின்பற்றவில்லை. மனம் போன போக்கில் வாழ்ந்தார். ஆகவே கிருஷ்ண பக்தர்களும், அவரை வழிபடுகிறார்களே தவிர, அவரைப்போல் நடந்துகொள்ள விரும்புவதில்லை. ஒவ்வொரு வரும் இஷ்டத்திற்குச் செயல்பட்டால் சமூகம் என்னும் அமைப்பே கலகலத்துப் போகும். ராமன் நம் வீட்டிற்கு வந்தால் எல்லோரும் தைரியமாக வரவேற்பார்கள். கிருஷ்ணரை கோயிலில் வணங்குவதுடன் சரி. வீட்டிற்கு வரவிடமாட்டார்கள். வந்தால் நம் வீட்டிலும் அக்கம்பக்கமும் எத்துணை விஷமம் செய்வாரோ என்று பயப்படுவோம். 'என் வீட்டில் வசதியில்லை. ஹோட்டலில் தங்குங்கள். அதற்கான செலவை நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று அவரை அனுப்பிவிடுவோம்.

ராமனுடன் நமக்கு ஒத்துப்போகிறது. ராமனை பூஜை செய்வதும் மனத்திற்கு உகந்ததாய் இருக்கிறது. ராமன் சமூகத்திற்காக, சமூக மரபுகள் உடையாமல் இருப்பதற்காக, தன் சுகசௌகரியங்களை விட்டுக்கொடுத்தார். இவ்வாறு சமூகத்தை மதிப்பவரை சமூகமும் உயர்த்தி மதிப்பது நியாயம் தானே. உனக்காக உயிரையும் கொடுப்பவனை இயற்கையாகவே நீ மகாதியாகி (ஷஹீத்) என்று தான் அழைப்பாய். நீ அந்த மகாதியாகியின் நினைவைப் போற்றி ஆண்டுதோறும் விழா எடுப்பாய்.

ஆனால் கிருஷ்ணர் தியாகியில்லை. அவர் உனக்காக எந்த தியாகமும் (குர்பானி) செய்ததில்லை. மேலும் அவர் மரபுக் கட்டுப் பாடுகளைப் பற்றிக் கவலைப்படாமல் இஷ்டப்படி வாழ்ந்தார். அவர் மக்களின் கண்ணோட்டத்தை மதித்து வளைந்து கொடுத்ததில்லை. சமூகம் போட்ட கோட்டிலேயே பிறழாமல் நடக்க அவர் முயன்றதில்லை. அவர் செய்தவற்றை மனிதனின் லீலைகளாகக் கருதினால் அவரைப் பற்றித் தப்பாக நினைக்கத்

தோன்றுகிறது. அவருடைய செய்கைகளைக் கடவுளின் லீலைகளாகக் கருதவேண்டும்.

கிருஷ்ணன் சமூகக் குற்றவாளி அல்லது கடவுள். இவ்விரண்டிற்கும் நடுவில் அவரை மதிப்பிட முடியாது. அந்த நடு இடம் தான் ராமனுடையது. அவர் குற்றவாளியல்ல. ஆனால் முழுக்கடவுள் எனப்படுவதற்கு பூரண அவதாரம் என்று இந்துக்கள் அவரைக் கூறுவதில்லை. பூரண அவதாரம் எனப்படுபவர் மக்கள் நிர்மாணித்துள்ள சமூகக் கட்டுப்பாடுகளை, ஒழுங்குமுறைகளைப் பின்பற்ற வேண்டிய கட்டாயமில்லை. பூரணத்திற்கு எல்லையில்லை. நாம் நமது கட்டமைப்பை பூரணத்தின் மீது திணிக்க முடியாது. பூரணம் நாம் வகுத்துள்ள எல்லைகளை உடைத்துக்கொண்டு பாயும். அது சிறிய கால்வாயன்று; மாபெரும் கங்கை வெள்ளம்.

ராமன் கால்வாய் போன்றவர். அரசாங்கம் திட்டமிட்டுக் கட்டிய கால்வாய். எவ்வளவு தண்ணீர் வேண்டுமானாலும் அதன் வழியே பாய முடியும். அரசுக்கும் மகிழ்ச்சி, சமூகத்திற்கும் சந்தோஷம். கிருஷ்ணரைப் புரிந்துகொள்ள சுபம் — அசுபம் என்று பிரிப்பதைக் கைவிட்டு, வாழ்க்கையை உள்ளபடியே பார்க்க நீ பயில வேண்டும். ஆகவே கிருஷ்ண லீலையை ராஸலீலா என்கிறோம். ராஸ என்றால் ரகசியம் நிறைந்த என்றும் பொருளுண்டு. கிருஷ்ணருடைய லீலைகளின் உண்மை அர்த்தத்தை சாமானிய அறிவு கொண்டு கண்டுபிடிக்க முடியாது.

ராமனது வாழ்க்கை முறை நமது அறிவிற்கு உட்பட்டது. கணக்கு அல்லது தர்க்கவியல்படி அவரது வாழ்க்கை தெளிவாக உள்ளது. ஓர் அங்குலம் கூட சமூக எதிர்பார்ப்பிலிருந்து அவர் நழுவியதில்ல. ராமரின் கதை புகை மண்டியிராமல் தூய்மையாய் உள்ளது. கிருஷ்ணனின் கதையில் ஏராளமான சிக்கல்கள், அவிழ்க்க முடியாத புதிர்கள். கடவுளின் அணுகுமுறைகளும் நடவடிக்கைகளும் இப்படிப் புதிராகத்தான் இருக்கும்.

**பா**யஜீத் என்றொரு சூஃபி துறவி இருந்தார். அவரது ஊரில் முரட்டுப் போக்கிரி ஒருவன் வாழ்ந்துவந்தான். மக்களுக்கு அவனால் மிகுந்த துன்பம் ஏற்பட்டது. குறிப்பாக, சாது —

சந்நியாசிகளை அவன் மிகவும் துன்புறுத்தினான். இதையெல்லாம் பார்த்து வருந்திய துறவி பாயஜீத் ஒருநாள் கடவுளை நினைத்து, "இறைவா! எதற்கும் ஓர் எல்லையுண்டு, நீ எத்தனையோ பேரை உன்னிடம் எடுத்துக்கொண்டாய். சுவர்க்கத்திற்கோ, நரகத்திற்கோ அவர்களை அனுப்பினாய். இந்த துஷ்டனை மட்டும் பூமியிலேயே ஏன் தடுத்து நிறுத்தி வைத்துள்ளாய்? இவனால் நல்லவர்கள் தொல்லைப்படுகிறார்கள். இவனோ வளமாக இருக்கிறான். இது என்ன புதிர்?" என்று பிரார்த்தனை செய்தார்.

அப்போது பாய்ஜீதின் காதில் கடவுளின் குரல் கேட்டது: 'நான் அவனை 60 வருஷமாகப் பொறுத்துக்கொண்டு வருகிறேன். இந்த நிலையில் அவனைப் பற்றி குறைகூற இடையீட்டு உரிமை (locus standi) உனக்கு உள்ளதா? என்னைப் போலவே நீயும் அவனை ஏற்றுப் பொறுத்துக்கொள்.'

கடவுள் கெட்டவர்களுக்கு எதிரானவர் என்றால் அவர்கள் என்றோ அழிந்து போயிருப்பார்கள். அவர் நினைத்ததும் அவர்கள் அழிந்து போயிருப்பர். அவரது ஆணையின்றி ஓர் இலை கூட அசைய முடியாது என்று நீ கூறுகிறாயல்லவா? அப்படியானால் ராவணன் எப்படி சீதையைத் தூக்கிச் சென்றான்? அவரது மறைமுகமான தூண்டுதலின் பேரில் அவன் சென்றிருக்கக் கூடும். என நினைக்கத் தோன்றுகிறது. கடவுளின் விருப்பத்தை மீறி எதுவும் நடைபெறாதெனில் கெட்டதும் அவரால் தானே நடக்கும் வாய்ப்பு உள்ளது?

இத்தகைய சங்கடமான கேள்விகளைத் தவிர்க்க மதங்கள் பலவித உபாயங்களைக் கண்டுபிடித்துள்ளன. பார்சி மதத்தில் சுப அம்சம் கடவுள்,[1] அசுப தத்துவம் கடவுளின் எதிரி.*[2] ஆனால் இந்த எதிரி கடவுளை மீறிச் செயல்பட முடியுமா? அப்படிச் செயல்பட்டால் கடவுள் சர்வ வல்லமை உடையவர் என்னும் வாதம் அடிபட்டுவிடுகிறதே.

கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களும் கெட்ட செயல்களை சாத்தான் செய்வதாகச் சொல்கிறார்கள். எடுத்துக்காட்டாக, நீ திருடினால், அந்த எண்ணத்தை சாத்தான் உன் மூளையில்

---

* 1. Ahura Mazda ( Ormizd ) 2. Angra Mainyu ( Ahriman).

தோற்றுவித்தான் என்று அர்த்தமாகிறது. உன் மூளைக்குள் சாத்தான் எப்படி வந்தான்? அவனைவிட வலிமை மிகுந்தவரான கடவுள் அவன் உன்னைக் கெட்டவனாக்குவதை ஏன் தடுக்கவில்லை?

இந்தக் கேள்வியிலிருந்து தப்பித்து ஓட முடியாது. நிகழ்கின்ற அனைத்திற்கும் கடவுள்தான் இறுதிப் பொறுப்பு என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். அப்படியில்லையெனில் சில சந்தர்ப்பங்களில் அவரது சக்தி பலிக்காது என எடுத்துக் கொள்ள நேரிடும். அந்த மாதிரி நிலைமையில் எதற்கெடுத்தாலும் அவரை பூஜை செய்வதை நிறுத்திவிடு. சாத்தானே ஆட்சி செய்யட்டும். கடவுள் தோன்றிய காலத்திலிருந்தே சாத்தானும் தொடர்ந்து நீடித்துவருவதால் அவனை அவரால் முற்றிலுமாக அழிக்க முடியவில்லை என்று அர்த்தம் எடுத்துக்கொள்ள நேரிடுகிறது. உண்மையில், கடவுளைவிட, சாத்தானைப் பின்பற்றுவோர் தாம் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். கடவுள் வேறு, சாத்தான் வேறு என்றால், கடவுள் சர்வ வல்லமை கொண்டவராகத் தெரியவில்லையே. கடவுள்தான் சர்வ வல்லமை படைத்தவர் எனில் உலகில் நிகழும் தீய செயல்களின் பின்னணியிலும் அவர்தான் காரணம் என்ற முடிவிற்கு வருகிறோம். அந்தச் செயல்களுக்கு சூட்சுமமான அல்லது ரகசியமான விளக்கம் உண்டு என்பது வேறு விஷயம்.

நல்லதை வளர்ப்பவரும் அவரே. தீயதை வாழ்விப்பதும் அவரே. காலைப் பொழுதை வருவிப்பரும் அவரே. இரவு வருவதும் அவராலே. பிறப்பைக் கொடுப்பவரும் அவரே. இறப்பால் அதை முடித்துவைப்பவரும் அவரே. சுகத்தை பொழிபவரும் அவரே. துன்பத்தால் வாட்டுவதும் அவரே. மலர்களைப் படைத்தவரும் அவரே. அவற்றில் முள்களைச் செருகியவரும் அவரே. அனைத்தும் அவரே. இதை ஒப்புக் கொள்கிறாயா? 'ஆம்' எனில் நீ எதையும் நல்லது — கெட்டது என்று இப்படி இரண்டிரண்டாகப் பிரிப்பதே தவறாகிவிடுமே. இந்தப் பிரிவுகள் உன் கற்பனையே தவிர, உன் மதிப்பீடே தவிர, கடவுள் இரண்டாகப் பிரிக்காமலேயே எல்லாச் செயல்களையும் செய்கிறார்.

இதை உணர்ந்து வாழ்க்கையை மறுபார்வையால் பார்த்தால், எது நிகழ்கிறதோ அதுவே சரி என்று உணர்வாய். கெட்டதும் அந்த சூழ்நிலைக்குப் பொருத்தம் எனத் தெரியவரும். கெட்டதும் தேவை தான். கெட்டது குறுக்கிடாவிடில் வாழ்க்கை சலித்துவிடும். மலர் கவர்ச்சியாகத் தெரிய முள்ளும் தேவை. அழகுக் குறைவும் தேவை. அப்போது தான் அழகின் மதிப்புத் தெரியும். உலக வாழ்க்கை முழுவதும் இன்பமாக அமைந்து போனால் மோட்சத்திற்கு யார் ஆசைப்படுவார்கள்?

**கா**ந்திஜி பகவத்கீதையை 'தாய்' என்றார். ஆனால் அவரால் கிருஷ்ணரை முழுமையாக ஏற்க முடியவில்லை. கீதையைக் குறிப்பிடும் சமயம் தவிர மற்ற வகைகளில் அவர் கிருஷ்ணர் பெயரை எடுத்ததில்லை. அவரால் ஸ்ரீமத் பாகவதத்தில் வரும் கிருஷ்ணரை ஏற்க முடியவில்லை. அதில் வரும் கிருஷ்ண லீலைகளை ஆமோதிப்பது காந்திஜிக்கு சங்கடமாகப் போயிருக்கும். மயிலிறகு மகுடமணிந்து உதட்டில் புல்லாங்குழல் தரித்து மோகனமாய்க் காட்சி தரும் கிருஷ்ணருக்கும் காந்திஜிக்கும் எவ்வகையில் பொருத்தம் இருக்க முடியும்? காந்திஜியால் கிருஷ்ணரின் சுதந்திரப் போக்கை ஏற்றுக்கொள்ள வாய்ப்பில்லை. இதனால் தான் கீதையைத் 'தாய்' என்று போற்றி விளக்கவுரை எழுதியபோதிலும், இறக்கும்போது அவரது வாயிலிருந்து கிளம்பிய சொல் 'ஹேராம்!' என்பதாகும். ஏனெனில் சமூகக் கட்டுப்பாடுகளை மதித்து வாழ்ந்த ராமனே காந்திஜியின் நெஞ்சத்தில் கொலுவிருந்தார். 'ஈஸ்வர் அல்லா தேரே நாம் (உன் திருப்பெயர்) என்று வாழ்க்கை முழுவதும் கூறியவர் வாயிலிருந்து, 'ஈஸ்வர், அல்லா' என்பதற்குப் பதிலாக ராமன் பெயரே வாழ்க்கையின் கடைசிச் சொல்லாக அமைந்தது.

மனிதன் நோய்வாய்ப்பட்டு, கட்டிலிலேயே கிடந்து கொஞ்சம் கொஞ்சமாக இறக்க நேர்ந்தால், அவன் பல தெய்வங்களையும், பிற மதங்களின் தெய்வங்களையும் கூட பெயர் சொல்லி அழைக்க முடியும். ஆனால் திடீரென்று குண்டடிபட்டு ஒருவர் சாக நேர்ந்தால், அவரது உள்ளத்தின் ஆழத்தில் புதைந்துள்ள தெய்வத்தின் பெயர்தான் உச்சரிக்கப்பட வாய்ப்புள்ளது.

ஆகவே காந்திஜியின் ஆத்ம தெய்வம் ராமன்தான். ஆகவேதான் காந்திஜி சிறு விஷயங்களிலும் முழுக்கவனம் செலுத்தினார். அவருடைய செயலாளர்கள் எந்த விஷயத்தையும் அலட்சியப்படுத்தாமல் எப்பொழுதும் விழிப்புடன் இருக்க நேர்ந்தது. தொண்டர் துணிகளை உலரப்போடுவது எப்படி என்று கற்றுக்கொடுப்பார். சமையலறையில் நுழைந்து காய்களை எப்படி வெட்டுவது என்று செய்துகாட்டுவார். உதாரணமாக, தக்காளியை நேர் குறுக்காக, செடியுடன் ஒட்டியிருந்த பகுதியை, வெட்டக் கூடாது என்பார்! கடிதங்களின் உறையைத் தூக்கி எறியாமல், பிரித்து உள் பக்கக் காலியிடத்தை எழுதுவதற்கு பயன்படுத்துவார். சிறியதாகிவிட்ட ரப்பரையும் பென்சிலையும் கூட பாதுகாத்து உபயோகிப்பார். கட்சித் தொண்டர்கள் கணக்கு அல்லது புள்ளிவிபரம் தருகையில் கறாராகச் சொல்ல வேண்டும் என்பார். 'சுமாராக, ஏறத்தாழ' என்ற வார்த்தைகள் அவருக்குப் பிடிக்காது. அவர் எதிலும் துல்லியத்தை எதிர்பார்த்தார்.

ஆகவே காந்திஜி தர்க்கத்தின்படி எதுவும் செய்தார் சட்டவியல் படித்தவராயிற்றே. அவர் ராமன் என்ற சங்கிலித் தொடரில், ராம பக்தர்களின் பரம்பரையில் 'வந்தவராகிறார். நீ கிருஷ்ணரைப் புரிந்து கொண்டால் வாழ்க்கையை சம்பூரணமாகப் புரிந்து கொண்டவன் ஆகிவிடுவாய். ராமனைப் புரிந்து கொண்டால் நல்லவனின் வாழ்க்கை எப்படி அமையுமென்றும், ராவணனைப் புரிந்து கொண்டால், தீயவனின் வாழ்க்கை எப்படி அமையுமென்றும் தெரிந்துவிடும்.

உலகில் நல்லது, கெட்டது இரண்டும் உண்டு. இவை எதிரெதிர்க் கரைகள் போன்றவை. கடவுள் என்னும் நதி இந்தக் கரைகளின் நடுவில் பாய்கிறது. இரு கரைகளையும் அது தொட்டபடியே செல்கிறது. கிருஷ்ணரின் வாழ்வில் நமது உலகியல் கண்ணோட்டப்படி நல்லதையும் காணலாம்; தீயதையும் காணலாம். கிருஷ்ணரின் வாழ்க்கை முழுமையானது.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ அவர்களே! உங்களை நான் சந்தித்தேன். பிறகு ஆனந்தமாக, பரமானந்த மாக உணர்கிறேன். இதை நீங்கள் எப்படி விளக்குவீர்கள்?**

**இ**து ஆரம்பக் கட்டம்தான். நீ உணர்வது ஆனந்தத் துளிதான். இதிலேயே முன்னேறினால், சிறு துளி பெருவெள்ளமாகும்; விரைவில் கடலளவினதாகும். இப்போதுள்ள நிலைமையுடன் திருப்தி அடைந்துவிடாதே. இப்போதுள்ள கட்டம் முன்னுரை போன்றது. புத்தகத்தைப் பயில்வது இனிமேல்தான் ஆரம்பமாகும். அந்த புத்தகம் காகிதங்களால் அல்ல, அனுபவங்களால் உருவாக்கப்பட்டதாகும்.

ஒருமுறை என் சொற்பொழிவைக் கேட்ட பின் நீ என்ன நினைக்கிறாய்? 'சரி, இந்த ஆளுடன் சேர்ந்து, கொஞ்ச தூரம் நடந்து பார்ப்போம், இந்த ஆளின் கண்வழியே இவர் கூறும் விதத்தில் காட்சிகளைப் பார்த்து அவற்றின் உண்மைத் தன்மையைச் சோதிப்போம்.' இந்த அளவிற்கு என் பேச்சைப் பரிசோதித்தாலும் நீ ஆனந்தமாக உணர்வாய். ஏனெனில் உனக்குள் ஓர் ஆன்மிக கிரணம் இறங்கிவிட்டது; ஓர் ஆன்மிகத் துளி கசிந்துவிட்டது.

ஆனால் என் சொற்பொழிவைக்கேட்பதே போதும் என்று உன்னை மூடிக்கொண்டுவிடாதே. என் பேச்சைக் கேட்பவர்களில் பலர் சொற்களிலேயே சிக்கிக்கிடக்கின்றனர். அவர்கள் என்னிடம் வெளிப்படையாகவே, "உங்கள் பேச்சு கேட்பதற்கு சுவாரசியமாக இருக்கிறது. ஆனால் தியானம் முதலிய பயிற்சிகளில் ஆர்வம் எழவில்லை" என்கின்றனர்.

இது வேடிக்கையான வாக்குமூலமாகத் தோன்றுகிறது. நீ உடல்நலக் குறைவால் டாக்டரிடம் செல்கிறாய். அவர் மருந்துகள் எழுதிச் சீட்டுத் தருகிறார். நீ அவரிடம், "டாக்டர், உங்கள் கையெழுத்து அழகாக உள்ளது. மருந்துகளின் பெயர்கள் இனிமையாய் ஒலிக்கின்றன. உங்கள் மருந்துச் சீட்டைக் கோப்பில் வைக்கப்போகிறேன். மருந்துக்கடையில் கொடுத்தும், தினமும்

எடுத்துப் பார்த்தும் இது கசங்கி அழுக்காவதில் எனக்கு சம்மதமில்லை. இதைக் காண்பித்து நான் மருந்து வாங்கப் போவதில்லை." என்று சொன்னால் டாக்டர் மேஜைமேல் தலையை முட்டிக்கொள்வார்.

டாக்டர் சீட்டு எழுதித் தருவது அதில் குறிப்பிட்ட மருந்துகளை வாங்கி நோய் குணமடைய வேண்டும் என்பதற்காகவே, அதுபோல் நான் சுவையாகப் பேசுவது நீ தியானம் முதலிய ஆன்மிகப் பயிற்சிகளில் ஈடுபட வேண்டும் என்று தூண்டுவதற்காகவே. உனக்குப் பொழுது போவதற்காக நான் பிரசங்கம் செய்யவில்லை. நோயுடன் செல்லும் ஒருவர் மருத்துவரைப் பார்த்ததுமே 50 சதவிகிதம் குணம் பெற்று விடுகிறார் என்று சொல்வதுண்டு. ஏனெனில் நோயாளி தன் மீது அக்கறை கொண்டு நோயை நீக்கும் ஒரு வல்லுநர் உள்ளார் என்றறிந்ததும். அவர் மனம் நம்பிக்கை பெறுகிறது. இதுபோலவே, குருவை தரிசித்ததுமே உன் குழப்பத்தில் பாதி நீங்கிவிடுகிறது. ஆனால் தரிசன மாத்திரத்துடன், உபதேசச் சொற்களைக் காதில் வாங்கிக்கொள்வதுடன், நின்றுவிடக் கூடாது. சொற்களின் ஒலிநயத்திலேயே, பொருள் இன்பத்திலேயே, ஆழ்ந்துவிடக் கூடாது. ஆன்மிகப் பயணம் தொடர வேண்டும்.

**சின்னஞ் சிறு கிரணம்தான்**
**அதிலே ஒளிந்து நிற்பதோ**
**உதயசூரியனின் செம்மைப் பொலிவு**
**பின்பு பகலின் வெண்ணொளியில்**
**உலக இயக்கத்தின் தீவிரம்.**
**சின்னஞ்சிறு நீர்த்துளிதான்**
**அதில் ஒளிந்து நிற்பதோ**
**மேகத்தைப் படைக்கும் பேராற்றல்.**
**அதனுடன் சேர்ந்து ஜொலிக்கின்ற**
**மின்னல் பெண்ணின்**
**இடியொலிப் பாட்டுடன்**
**பாரெங்கம் பசுமை பரவிடும்.**

கண்ணில் தெரிவது ஒரு துளி. அது அடையாளம் காட்டுவது மாகடல். அச்சிறு துளி ஓர் அழைப்பின் சின்னம். இந்த அழைப்பை உணர்ந்தால் துள்ளியாடியபடி கடலை நோக்கி

நடைபோடு. நான் சொல்வது ஆன்மிகம் என்னும் கடல். அந்தக் கடலை உன்னால் சமாளிக்க முடியாது. நீ அதில் மிதந்துசெல்வாய். நீ அதிலிருந்து தப்ப முடியாது.

ஒரு மழைத்துளிகூட சுகம் தருகிறது. கோடை வெயிலால் பூமி பிளந்து காணப்படுகிறது. ஆகாயத்தில் மேகங்கள் திரளுகின்றன. மழைத் துளிகள் சில விழுகின்றன. உடனே திருப்தி உணர்வு தோன்றுகிறது. சிறு துளிதான்; அது இன்னமும் தூசியை நனைக்கக்கூட இல்லை. பரவாயில்லை. விரைவில் மழை வரப்போகிறது என்று அது கொண்டு வரும் செய்தி மகத்தானது.

**இந்த பூமி மிக நல்லது**
**வெயிலால் சூடேறிக் கிடக்கிறது**
**இது இனியும் தவிக்கலாகாதென**
**நீரைப் பொழிந்தது மேகக் கூட்டம்**
**எங்கும் பரவியது இனிய மண்வாசனை**
**மலையும் வயலும் நனைந்தன**
**வீடும் குடிசையும் நன்னீராடின.**

உபதேசம் என்னும் ஒரு துளியுடன் நின்றுவிடாதே. அதைத் தொடர்ந்து மேகங்கள் வரும். மழைபொழியும். முதல் துளியின் ஒலி கேட்டதும் நீ ஆன்மிக மழையில் நனைய உன்னைத் தயார் செய்து கொள்.

**பாதங்களில் படைப்பதற்காகக்**
**கொண்டுவந்த பூக்களெல்லாம்**
**பாதி வழியிலே வாடிவிட்டன.**
**கண்ணீரால் நனைத்துப் பார்த்தும்**
**பயனின்றி அவை முடங்கியே கிடந்தன.**
**மலர்களாலான பாதைபோல்**
**வழியெங்கும் உலர்ந்த மாலைகள்**

**ஆயினும் பூக்கள்கொண்டு அருச்சிக்கும்**
**எனது ஆசை நீங்கவில்லை.**
**தொடர்ந்து பூக்கள் பறிக்கின்றேன்,**
**திருப்பாதங்களை அவை சேராவிடினும்**
**உலகம் என் பக்தியை உணரும் என**
**உறுதியாக நம்புகிறேன்.**

எத்தனையோ பிறவிகளாக நீ எண்ணற்ற பூக்குடலைகளை நிரப்பி நீ சென்றுகொண்டே இருக்கிறாய். ஏதேனும் கோயில் தெரிந்தால், கோயில்மணி ஓசை கேட்டால், சாம்பிராணி மணம் உன்னையடைந்தால் நீ ஆனந்தத்தால் துள்ளுகிறாய். இறைவனை அருச்சிக்கும் ஆசை மீண்டும் துளிர்விடுகிறது.

ஆனால் இந்தக் கட்டத்திலேயே நின்றுவிடாதே. எத்தனையோ பேர் கோயிலின் படிக்கட்டுவரை வந்து நின்றுவிட்டனர். அவ்வாறில்லாமல் நீ கோயிலுக்குள் நுழை. வெளியிலேயே தெய்வீக சூழ்நிலை ஏற்பட்டுவிட்டால் சந்நிதியில் எத்துணை புனிதத்தை உணர்வாய்! சொற்களிலேயே நிறைந்த அர்த்தம் கிடைக்குமானால், நிசப்தம் என்பது எத்துணை ஆழமான அர்த்தம் கொண்டிருக்கும்! நான் மிகவும் துல்லியமாகவும், தேர்ந்தெடுத்தும் சொற்களைப் பயன்படுத்தினாலும் நான் விரும்பும் அர்த்தம் உன்னைச் சேராது. சொற்கள் அர்த்தத்தைக் கொன்று விடும்.* எல்லையற்ற ஒன்றைக் குறுகியதாக்கும்; சத்தியத்தைச் சுருக்கிவிடும். ஆகவே எனது சூனியம் (நிசப்தம்) உனது சூனியத்துடன் இணைந்துவிட்டால், அதன் விளைவாக உனக்குள் ஆனந்தம்-மகா ஆனந்தம்-சச்சிதானந்தம் பொங்கும்.

சிறிய வெற்றிகளுடன் திருப்தி அடைந்துவிடாதே. ஒரு சூத்திரம் (ஃபார்முலா) சொல்கிறேன்-உலகில் திருப்தி எனில் பரமாத்மா விஷயத்தில் அதிருப்தி ஆன்மிகவாதியின் குணம். உலகில் எது கிடைக்கிறதோ அதனுடன் சமரசம் செய்துகொள். ஆனால் ஆன்மிகத்தில் எவ்வளவு கிடைத்தாலும் போதுமென்று தொடர்ந்து முன்னேறுவதை நிறுத்திவிடாதே. ஏனெனில் இறையுணர்வினால் கிடைக்கும் இன்பத்திற்கு முடிவே கிடையாது.

பெரும்பான்மையானவர்கள் கடவுளுடன் உறவு குறித்து திருப்தியாக, தெளிவாக இருப்பதாகத் தோன்றுகிறது. அதாவது, பெரும்பான்மை மக்கள் 'கடவுள் அவருலகத்திலேயே இருக்கட்டும். நாங்கள் எங்கள் உலகில் சௌக்கியமாக உள்ளோம். மேலே கடவுள், கீழே நாம். அப்படியே இருப்போம். நெருங்க முயல வேண்டாம்' என்று கருதுவதுபோல் தோன்றுகிறது.

---

* The letter killeth, but the spirit giveth life-The Bible

தேவைப்பட்டால் கோயிலில் அர்ச்சனைக்கு ஏற்பாடு செய்து, பூசாரி மூலம் நமது கோரிக்கையைக் கடவுளுக்கு அனுப்பி விடலாம். கடவுளின் கருணை துளித்துளியாக விழுந்தால் போதும் என்றும், கடல் அளவு அன்பைத் தாங்க முடியாது என்றும் மக்கள் நினைக்கிறார்கள். ஆகவே பூஜை ஒரு சடங்காகி விட்டது; பக்தி மேலோட்டமாகிவிட்டது.

சாதாரண மக்கள் உலக இன்பங்களின் விஷயத்தில் எவ்வளவு கிடைத்தாலும் திருப்தி அடைவதில்லை. கடவுள் விஷயத்திலோ திருப்தியுடன் தெரிகிறார்கள். மந்திரம் சொல், வீட்டில் பூஜை செய், கோயிலுக்குள் போ, தேங்காய் உடை, உண்டியலில் காசு போடு, மணி அடி, பிரகாரம் சுற்று, விழுந்து கும்பிடு, பிரசாதம் வாங்கு — கடவுளுடனான உனது கடமை முடிந்துவிட்டதாக நீ திருப்தி பெறுகிறாய்.

உலகைப் பொறுத்தவரையில் கிடைத்தது போதுமென்றும், கடவுள் விஷயத்தில் எவ்வளவு கிடைத்தாலும் திருப்தியுறாமல் இன்னமும் வேண்டும் என்றும் ஏங்குபவனே உண்மையான பக்தன் ஆவான். அத்தகையவனிடமிருந்து கடவுள் அதிகத் தொலைவு விலகியிருக்க மாட்டார். அவனை ஆட்கொள்ள அதிக காலதாமதமும் செய்ய மாட்டார்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

தேன ஞானபலம் ப்ராப்தம் யோகாப் யாஸபலம் ததா|
த்ருப்த: ஸ்வச்சேந்த்ரியோ நித்யமேகாகி ரமதேது ய:|| 157

நகதாசிஜ்ஜகத்யஸ்மிஸ்தத்த்வக்ஞோ ஹந்த கித்யதி|
யத ஏகேன தேனேதம் பூர்ணம் ப்ரஹ்மாண்டமண்டலம்|| 158

ந ஜாது விஷயா: கே அபி ஸ்வாராமம் ஹர்ஷயந்த்யமி|
ஸல்லகீ பல்லவ ப்ரீதிமிவேமம் நிம்பபல்லவா:|| 159

யஸ்து போகேஷு புக்தேஷு ந பவத்யாதிவாஸித:|
அபுக்தேஷு நிராகான்க்ஷீ தாத்ருஷோ பவதுர்லப:|| 160

புபுக்ஷீநிஹ ஸன்ஸாரே முமுட்சுரபி த்ருஷ்யதே|
போகமோட்ச நிராகான்க்ஷீ விரலோ ஹி மஹாஷய:|| 161

தர்மார்த்தகாமமோ க்ஷேஷு ஜீவிதே மரணே ததா|
கஸ்யாப்யுதாரசித்தஸ்ய ஹேயோபாதேயதா ந ஹி|| 162

வான்ச்சா ந விஸ்வவிலயே ந த்வேஷஸ்தஸ்ய ச ஸ்திதௌ|
யதா ஜீவிகயா தஸ்மாத்தன்ய ஆஸ்தே யதா ஸுகம்|| 163

**வா**ழ்க்கையில் கிடைத்த வசதிகளுடன் திருப்தியடைந்து, புலன்களைத் தூய்மையாக வைத்துக்கொண்டு, தனிமையில் மகிழ்வுடன் உள்ளவனுக்கே ஞானம் மற்றும் யோகப் பயிற்சியின் பலன் கிடைக்கிறது. **(சுலோகம் 157)**

ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். தனிமை வாசத்தால் ஞானம் கிடைத்துவிடாது. ஞானம் பெற்றபின் தனிமையிலும் சாரம் தெரிகிறது. காட்டுக்கு ஓடிப்போவதால் ஞானம் கிடைக்காது. இமயமலைக் குகைகளில் வசிப்பதால் ஞானம் வசமாகாது. நீ

நீயாகவேதான் இருப்பாய். சபையில் திண்டு போட்டு உட்கார்ந்திருந்தவன்தான் திண்டில்லாமல் குகையில் அமர்ந்திருக்கிறான். வெளிச்சூழ்நிலை மாறினால் உள்ளேயும் புரட்சி நடக்கும் என்று கட்டாயமில்லை. மனம் மாறாதபோது மனிதன் வீட்டிலிருந்தால் என்ன, காட்டிலிருந்தால் என்ன, கோயிலில் இருந்தால் என்ன? அவன் தனியாக இருந்தால் என்ன, கூட்டத்தில் இருந்தால் என்ன? உலகியலான வாழ்வை விடுவதால் உன்னிடம் மாற்றம் ஏற்படும் என்று நினைக்கிறாய். அப்படியல்ல, உன்னிடம் மாற்றம் ஏற்பட்டால் உலகம் தானாக உன்னைவிட்டு நழுவிவிடும்.

மக்கள் முரணாகப் பார்க்கிறார்கள். போகம் நீங்கினால் தியாக வாழ்வு கிடைக்கும் என நினைக்கிறார்கள். அப்படியல்ல, தியாக உணர்வு பக்குவப்பட்டதும் போகம் தானாக நீங்கிவிடும். தியாக ரசத்தின் சுவையை உணர்ந்ததும் போக ரசம் சுவையிழக்கும். ஆத்மஞானம் என்னும் வைரம் கைக்குக் கிடைத்துவிட்டால், சாலையில் கிடக்கும் கல்லை யார் பொறுக்கு வார்கள்? இதை மாற்றி, ‘இனி நான் கல் பொறுக்கவில்லை. எனக்கு ஞானமாகிய வைரம் கிடைக்கட்டும்’ என்று சொல்வது பொருந்தாது.

சமயத் தலைவர் சொல்கிறார், ‘பண ஆசையைக் கைவிடு. ஞானம் பிறக்கும்.’ அவர் கூற்றுப்படி பணம்தான் ஞானம் பெறுவதற்கு முட்டுக்கட்டைபோல் தெரிகிறது. இன்னொரு சமயத் தலைவர், ‘கணவன்-மனைவி-பிள்ளைகள்-உறவுகளைக் கைவிடு. கடவுள் உனக்கு அகப்படுவார்.’ என்கிறார்.உண்மையில் இந்த அற்ப உறவுகளால் கடவுளின் இயக்கத்தைக் கட்டுப்படுத்த முடியுமா? இதெல்லாம் வீண் சிந்தனைகள். மாற்றி யோசி. கடவுள் அனுபவம் கிடைத்துவிட்டால் உறவுமில்லை, பகையுமில்லை, ஒன்றுமே இல்லை. உள்ளதெல்லாம் கடவுள் மட்டுமே என்னும் தெளிவு ஏற்பட்டுவிடும். வலிந்து விடுதல் போலியான சந்நியாசம். சுயமாக நீங்குதலே துறவு.

மரங்களில் காய்கள் சுயமாகக் கனிந்து பழமாக வேண்டும். நீ கடையிலிருந்து பழம் வாங்கி மரத்தில் கட்டிவைத்தால், அதைப்

பார்த்து யாரும் ஏமாறுவார்களா? காட்டுக்குப் போனபிறகுதான் துறவி என்று அர்த்தமில்லை. முதலில் துறவி, பிறகு காட்டிற்குப் போனாலும், கடையில் வியாபாரம் செய்தாலும் ஒன்றே.

துறவி பாய்ஜீத்தை ஓர் இளைஞன் அணுகினான். "என்னை உங்கள் திருவடிகளில் சீடனாகச் சேர்த்துக் கொள்ளுங்கள். நான் எல்லோரையும் விட்டு உங்களிடம் தனி மனிதனாக வந்துள்ளேன்," என்று அவரிடம் தெரிவித்தான்.

"வாயை மூடு," என்று அதட்டினார் பாய்ஜீத். "ஏன் பொய் சொல்லுகிறாய்? ஊர் கூட்டம் மொத்தத்தையும் உன்னோடு அழைத்து வந்திருக்கிறாயே," என்றார்.

இளைஞன் அதிர்ச்சியடைந்தான். நாற்புறமும் பார்த்தான். ஒருவருமில்லாதபோது கூட்டம் என்பதற்கு அர்த்தமில்லையே, என்று குழம்பிய அவன் அவரிடமே கேட்டான்:

"சுவாமி! கூட்டம் என்றீர்களே. எந்தக் கூட்டத்தைப் பற்றிச் சொல்கிறீர்கள்? நான் எல்லாக் கூட்டத்தையும் உதறிவிட்டுத்தான் வந்திருக்கிறேன். ஊர் மக்கள் எல்லைவரை வந்து வழியனுப்பி னார்கள். என் குடும்பத்தினர் மிகவும் அழுதார்கள். என் மனைவி மாரில் அடித்துக்கொண்டு கதறினாள். குழந்தைகள் விஷயம் புரியாமல் தவித்தன. நான் உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு எல்லோரையும் துறந்து இங்கு வந்துள்ளேன்," என்றான் இளைஞன்.

பாய்ஜீத் நம்பவில்லை. "நீ சுற்றுப்புறத்தை ஏன் பார்க்கிறாய்? கண்ணை மூடிக்கொள். உனக்குள்ளே பார். கூட்டம் அப்படியேதானே இருக்கிறது," என்றார்.

இளைஞன் கண்ணை மூடி உள்ளே பார்த்ததில் மொத்தக் கூட்டமும் அப்படியே தெரிந்தது! மனைவி அழுகிறாள்; பிள்ளைகள் தடுமாறுகிறார்கள்; நண்பர்களின் முகம் அவனை இழுக்கிறது. இளைஞனுக்குக் குழப்பமாகிவிட்டது. அவன் உடலளவில்தான் ஊரைவிட்டு நீங்கினானே தவிர, மனத்தளவில் அவன் இன்னமும் ஊரில்தான், குடும்பத்தில்தான் தொடர்ந்து இருப்பது அவனுக்குப் புரிந்தது.

நீ காட்டுக்குப் போகலாம். ஆனால் கூட்டம் உன் உள்ளத்தில் இருந்தால் நீ எங்கு போனால்தான் என்ன? கூட்டத்தின் நடுவிலும் நீ தனியாளாய் உணரலாம். தனியாய் உட்கார்ந்திருக்கும்போது உன் மனத்தில் கூட்டம் அலைமோதலாம். ஆகவே எதையும் மேலோட்டமாக முடிவு செய்ய முடியாது.

யாருக்கு ஞானத்தின் பலன் கிடைக்கிறது? யாருக்கு யோகத்தின் பலன் கிடைக்கிறது? திருப்தி உள்ளவனுக்குக் கிடைக் கிறது. அவன் எல்லா வகையிலும் மனநிறைவு பெற்றிருப்பான். அதிருப்தி என்ற அபஸ்வரமே அவன் வாழ்க்கையில் ஒலிக்காது. அவன் மனத்தில் எப்பொருளின் மீதும் விருப்பம் இருக்காது. இந்த நிலை எப்பொழுது வாய்க்கும்?

திருப்தியுள்ளவன் எப்போதும் சுகமாக இருப்பான் என்ற பொன்மொழியைக் கேள்விப்பட்டிருப்பாய். சந்தோஷம் என்னும் சொல்லிலேயே விடையும் உள்ளது. தோஷம் எனில் துஷ்டி. திருப்தி என்று அர்த்தம். திருப்தியே சந்தோஷம். சுகமாக உணர்பவன் திருப்தியுள்ளவனாக இருப்பான் என்றும் சொல்லலாம்.

ஆனால் திணிக்கப்படுகின்ற திருப்தி போலியானது. அது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகும். நீ சுயமாகவோ, பிறர் உபதேசம் கேட்டோ நினைத்துக் கொள்கிறாய், 'உலகத்தில் அப்படி என்னதான் இருக்கிறது? எல்லாம் பொய்.' அப்படியானால் உன் மனம் உலகத்தில் ஏதோ மிஞ்சியுள்ளது என்று நினைப்பதாகவே அர்த்தம் எடுத்துக் கொள்ளப்படும்.

நீ நினைக்கிறாய், 'பெண்ணிடமும் பொன்னிடமும் (காமினி-காஞ்சன்) அப்படி என்ன அதிசயம் இருக்கிறது? எல்லாம் மண்ணாங்கட்டி.' ஆனால் அதை ஏன் கிளிப்பிள்ளைபோல் திருப்பிச் சொல்கிறாய்? இது உன் சுயமான ஆராய்ச்சியின் முடிவா? நீ அனுபவித்துப் பார்த்துத்தான் சொல்கிறாயா? நீ சுயமான முடிவிற்கு, இறுதியான முடிவிற்கு வந்திருந்தால், அதை ஏன் வெளியே சொல்லிக் கொண்டு திரிகிறாய்?

தூக்கத்தில் கனவு காண்கிறாய். விழித்தபின் உன் கனவை மற்றவர்களுக்குத் தெரிவித்து, 'நான் கண்ட கனவு பொய்' என்று

சொல்லியபடியா திரிகிறாய்? அப்படிச் சொன்னால், உன் மனத்தின் ஒரு மூலையில் நீ கண்ட கனவை நம்புவதாகப் பொருள்படும். அந்த நம்பிக்கையை நீக்கவே இப்படி கனவு பொய் என்று சொல்லித் திரிகிறாய்.

பெண் உடலில் அப்படி என்ன இருக்கிறது என்று கேட்கிறாய். எலும்பும் சதையும் ரத்தமும் அசுத்தங்களாலும்தானே பெண் உடல் நிறைந்திருக்கிறது என்கிறாய். ஏன் அதை வெளியே சொல்ல வேண்டும்? யாரிடம் நீ இவ்வாறு சொல்கிறாய்? ஏன் சொல்லுகிறாய்? நீ உனக்குள் ஆழ்ந்துபார். பெண் உடல் உன்னைத் தொந்தரவுபடுத்துகிறது. அவ்வுடல் மீது உனக்கு மிகையான பிடிப்பு (obsession) இருக்கிறது. அதன் கவர்ச்சி உன்னை இழுக்கிறது; உனக்கு அழைப்புவிடுக்கிறது. நீ பயந்துபோய் எதிர்மறையாகப் பெண்ணுடலை நிந்திக்கிறாய்.

ஆச்சரியமான விஷயம் என்னவெனில், சாஸ்திரங்களில் பெண் உடலை அசுத்தம் நிறைந்தது என்றும், பெண்ணாக வந்தவொரு மாயப் பிசாசு என்று ரிஷிகளும் முனிவர்களும் எழுதிச் சென்றார்கள். ஆனால் அவர்களின் உடல் எதனாலானது? எதனால் நிறைந்தது? அவர்களது உடம்பு தங்கத்தால் செய்யப்பட்டு அதில் ரத்தினங்கள் நிறைந்திருந்தனவா! இவர்கள் பிறந்தது எப்படி? நீண்ட காலம் அசுத்தங்களால் சூழப்பட்டு, அசுத்தப் பாதையின் வழியேதானே வெளியேறினார்கள். தனக்குப் பிறப்புத் தந்த உடலையா நிந்திப்பது? அடிப்படையில் ஆண் உடலும் பெண் உடலும் சில சிறு வெளி வேறுபாடுகள் தவிர ஒரே மாதிரியான கட்டமைப்பைத்தான் பெற்றிருக்கின்றன.

இந்த சாஸ்திரங்களை எழுதியவர்களுக்குப் பெண்ணுடல் மீது எதிர்மறையான கவர்ச்சி இருந்திருக்கிறது. அந்தக் கவர்ச்சியைப் போக்கிக் கொள்ளப் பெண்ணுடலைப் பழிப்பது என்ற உபாயத்தை அவர்கள் கடைப்பிடித்தார்கள். இந்த உபாயம் பலகீனமானது. இதன் மூலம் அந்தப் கவர்ச்சியைப் போக்கிக்கொள்ள முடியாது. அப்படிக் கவர்ச்சி நீங்கினாலும் அது தற்காலிகமாகவே இருக்கும். உன் ஆத்மாவில் புரட்சி நிகழாது. நீ அடிப்படையில் மாறிவிட முடியாது.

வாழ்க்கையை ஆழ்ந்து கவனித்தால் அதிருப்தி நிலவ காரணம் இருக்காது. இப்போதே, என் எதிரே உட்கார்ந்திருக்கும் போதேகூட, நீ உனக்குள்ளே அதிருப்தி எங்கேனும் உள்ளதா என்று எட்டிப்பார். உனக்கு வெளியேதான் புயல் வீசுகிறதே தவிர, உனக்குள்ளே சாந்தம்தான் நிலவுகிறது.

நீ எத்தனை பொருள்களால் திருப்தி அடையக்கூடும் என்று கடவுளுக்குத் தெரியும். அந்த அளவே அவர் உனக்கு வழங்குகிறார். உபரியாகவும் கொஞ்சம் சேர்த்துத் தந்துள்ளார். எதை எந்த அளவிற்குக் கொடுத்தால் உனக்கு ஆனந்தம் விளையுமோ, அதற்கான ஏற்பாடுகளைக் கடவுள் செய்து வைத்துள்ளார். ஆனால் நீ வேறெதையோ தேடிக்கொண்டு, வேறெங்கோ ஓடிக்கொண்டு, இருப்பதையும் அனுபவிக்காமல் போய்விடுகிறாய்.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சிலர், "நாங்கள் திருப்தி உணர்வைப் பெறுவது எப்படி?" என்று கேட்கிறார்கள். இது தவறான கேள்வி. திருப்தி என்பது தானாகச் சுரப்பது. அதைத் தனி முயற்சி செய்து பெற முடியாது. அதற்குமுன் ஒரு கேள்விக்கு விடை தெரிந்தாக வேண்டும். 'நீ யார்?' என்பதுதான் அந்தக் கேள்வி.

**பா**ல் பிரன்டன் என்ற ஆன்மிகவாதி ரமணரைச் சந்தித்தார். தான் கேட்கவிருந்த கேள்விகளின் பட்டியலைக் காண்பித்தார். ரமணர் அவரிடம், "நான் யார் என்னும் கேள்விக்கு முதலில் விடை கண்டுபிடி. பிறகு மற்ற கேள்விகளுக்கான விடைகள் சுயமாகவே கிடைத்துவிடும்," என்றார்.

பால் பிரன்டன் சட்டென்று, "நான் யார், சுவாமி?" என்று கேட்டார்.

ரமணர், "நீ என்னைப் போய்க் கேட்கிறாயே. நீ உன்னையே கேள் என்றல்லவா சொல்கிறேன். கண்ணை மூடிக்கொண்டு 'நான் யார்?' என்று உன்னையே கேள். தேடிக்கொண்டே உனக்குள் அமிழ்ந்து செல். ஒரு விஷயம் உறுதி. நீ இருக்கிறாய். உணர்வுடன் இருக்கிறாய், இல்லாவிடில் நீ இப்பொழுது கேள்வி கேட்டுக்

கொண்டிருக்க முடியாதல்லவா? உனக்கு உயிர் உள்ளது. உணர்வு உள்ளது. வேறு என்ன வேண்டும்? இந்த இரண்டு மகாசக்திகளான உயிரும், நீ உள்ளாய் என்ற ஆத்ம உணர்வும் சந்திக்கும் களமாக அல்லவா நீ இருக்கிறாய்? திருப்திக்கு வேறென்ன தேவை? வாழ்க்கையில் திருப்தி பெற என்ன செய்ய வேண்டும் என்னும் கேள்வியே விசித்திரமானது, முரணானது. வாழ்கிறோம்-இந்தக் கேள்வியைக் கேட்க உயிருடன் உள்ளோம்-என்பதே திருப்தியான அம்சம்தான்,'' என்று முடித்தார்.

சிகந்தர் (அலெக்சாந்தர்) இந்தியாமீது படையெடுத்தபின் தமது கிரேக்க நாட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தார். வழியில் ஒரு துறவியைச் சந்திக்க நேர்ந்தது. சிகந்தர் அவரிடம், "நான் யார் தெரியுமா? நான்தான் மாவீரன் சிகந்தர். உலகத்தையே வென்றவன்,'' என்று ஆணவமாகக் கூறினார்.

துறவி சிரித்தார். "நானும் ஒரு காலத்தில் இதேபோன்ற கனவுகளில் ஆழ்ந்திருந்தேன். ஆனால் ஒரு கட்டத்தில் விழித்துக்கொண்டேன். நீ இன்னமும் விழிக்காமல் கனவு மயக்கத்தில் இருப்பதுபோல் தெரிகிறாய்,'' என்று சுட்டிக் காட்டினார். அவர் சொன்னதை சிகந்தரால் புரிந்துகொள்ள முடியவில்லை சிகந்தரின் முகத்தில் குழப்பம் நிலவியதைப் பார்த்துத் துறவி தொடர்ந்தார்:

"நீ பாலைவனத்தின் நடுவே மாட்டிக்கொண்டதாக வைத்துக்கொள்வோம். பலத்த தாகம், விக்கல் உண்டாகிறது. தவிப்புடன் சுற்றுமுற்றும் பார்க்கிறாய். ஒருவன் ஒரு கிளாஸ் தண்ணீருடன் வருகிறான். உன்னைப் பார்த்து, இந்தத் தண்ணீரை உமக்குத் தருகிறேன். அதற்கு விலையாக நீங்கள் உங்கள் சாம்ராஜ்ஜியத்தில் எவ்வளவு எனக்குத் தருவீர்கள்?' என்று கேட்டால் உன் பதில் என்ன?''

"இந்த ஒரு கோப்பைத் தண்ணீரின் விலையாக எனது பேரரசில் பாதியை அந்த ஆளுக்குக் கொடுத்துவிடுவேன்,'' என்று சிகந்தர் அறிவித்தார்.

"நீ பெருந்தன்மையானவன்தான். ஆனால் அந்த ஆளோ பிடிவாதக்காரன். உன் சாம்ராஜ்ஜியம் முழுவதையுமே தந்தால்தான்

இந்த ஒரு கிளாஸ் தண்ணீரைத் தருவேன், என்று அவன் கேட்டால் நீ என்ன செய்வாய்?'-துறவி கேட்டார்.

சிகந்தர் சற்று யோசித்தார். "பாலைவனத்தில் மாட்டிக் கொண்டு, தாகத்தால் உயிர் போய்விடுமோ என்ற நிலை ஏற்பட்டால் அந்த ஒரு கிளாஸ் தண்ணீருக்கு விலையாக என் மொத்த சாம்ராஜ்ஜியத்தையும் தருவேன்," என்று திட்டவட்டமாகக் கூறினார்.

அது கேட்டுத் துறவி கலகலவென்று சிரித்தார். "அப்படியானால் அலைந்து திரிந்து அல்லல்பட்டு இத்தனை நாடுகளை வென்று நீ சாதித்ததுதான் என்ன? நீ பாடுபட்டுச் சம்பாதித்ததெல்லாம் ஒரு கிளாஸ் தண்ணீர் அளவுதான் மதிப்புடையதா? தொண்டையைத் திருப்திப்படுத்தவே ஒரு பேரரசைக் கொடுக்க நேரிடுமானால், ஆத்மாவின் தாகத்திற்கு என்ன விலை வைப்பது?" என்று துறவி சிகந்தரை மடக்கினார்.

ஒரு கேள்விதான் வாழ்க்கையில் முக்கியமானது. அதைத்தான் கேட்க வேண்டும். 'நான் யார்?' என்பதுதான் அந்தக் கேள்வி. இதை ஜெபம் போல் வாயால் முனகிக்கொண்டிருந்தால் பதில் கிடைக்காது. இதைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருக்க வேண்டும். ஒரு கட்டத்தில், ஒரு நாள், திடீரென, கேள்வி கேட்பது நின்றுவிடும். அப்போது 'நான் யார்?' என்பதை அனுபவபூர்வமாக உணர்வோம்.

இப்படி 'நான் யார்?' என்று அறிந்தவனுக்கே ஞானத்தின் பலன் கிடைக்கும்; யோகத்தின் பலன் கிடைக்கும். அவனுடைய புலன்கள் பரிசுத்தமாக இருக்கும். சமூகத்தில் நாம் காணும் மதத் தலைவர்கள் 'புலன்களை அடக்கு, நசுக்கு, கொல்லு' என்று மிரட்டுகிறார்கள். இது 'வீடு குப்பைகூளமாக உள்ளது, வீட்டை இடித்துத் தள்ளு' என்று தூண்டுவதுபோலாகும்.

அஷ்டாவக்ரர் 'அப்படியெல்லாம் வன்முறை வேண்டாம். புலன்களைப் பயிற்சி மூலம் தூய்மைப்படுத்துவதே சரியான வழி என்கிறார். நல்லதையே காணக் கண்களைப் பழக்கினால், நல்லதையே கேட்கச் செவிகளைத் திறந்தால், சாத்துவீக

உணவையே ஏற்க வாயைப் பழக்கு என்றெல்லாம் நடவடிக்கை எடுக்கலாம்.

**சூ**ர்தாசரைப் பற்றிய கதை ஒன்றுண்டு. மாபெரும் இந்திக் கவிஞரான அவருக்குப் பிறவியிலேயே பார்வை கிடையாது என்று கூறுவார்கள். ஆனால் அவர் நிறங்களைப் பற்றியும், கண்ணனின் தோற்றம், ஆயர்பாடி சமூகம் பற்றியும் வர்ணிப்பதால் பிற்காலத்தில்தான் அவர் பார்வை இழந்திருப்பார் என்று கூறுவோரும் உண்டு.

ஏன் நடுவயதில் பார்வை இழந்திருப்பார் என்பதற்கும் அவர்கள் பதில் தயாராக வைத்திருக்கிறார்கள். எப்பொழுதும் கண்ணனின் உருவத்தையே நினைத்து வந்த சூர்தாசர் ஒரு சமயம் ஓர் அழகிய இளம்பெண்ணைப் பார்த்துச் சொக்கிப்போய், கண்ணனைச் சில நிமிடங்கள் மறந்துவிட்டாராம். தனது குற்றத்திற்கு தண்டனையாகத் தன் கண்களைப் பிடுங்கி விட்டாராம்.

இந்த விளக்கம் சூர்தாசருக்குப் பெருமை சேர்ப்பதாக இல்லை. ஒரு ஞானி இப்படி அவசரக்குடுக்கையாகச் செயல்பட மாட்டார். நம்மையே எடுத்துக் கொள்வோம். கண்ணை மூடிக்கொண்டால் அந்த அழகியின் உருவம் மறைந்துவிடுமா? அந்த உருவம் மனத்திரையில் அழுத்தமாகப் பதிந்துவிட்டதே. கனவிலும் அவள் வருவாளே! அப்போது என்ன செய்வது? கனவு சமயம் கண்கள் மூடியபடிதானே உள்ளன. ஆனால் அப்போதும் அவள் தெரிகிறாளே! நிஜ வாழ்க்கையில் காணப்படும் பெண்கள் கனவில் கூடுதலான அழகுடன் தெரிவது வழக்கம். கனவு என்பது மாய உலகம்; பிரும்மாண்ட உலகம். நாம் கண்முன் காணும் யதார்த்த உலகம் சிறியது. சுவையற்றது. கனவுகள் வண்ண மயமானவை. வானவில் போன்றவை. யதார்த்த வாழ்க்கையோ நிறமற்றது அல்லது கறுப்பு-வெள்ளைப் படம் போன்றது.

கண்ணை மூடிக்கொண்டால் உருவம் மறைந்துவிடுமா? புறக்கண்களை மூடிக்கொண்டாலும் கற்பனைக் கண்களை மூட முடியுமா? புலன்களைத் தான் எதுவும் செய்ய முடியுமே தவிர, புலனாசைகள் அப்படியேதான் இருக்கும். முதுமையால் காம

ஆற்றல் குறைந்தாலும், காம , ஆசை தணிவதில்லையே. கேசம் நரைத்தாலும் காமம் நரைப்பதில்லை. முதியவர்களைக் கேட்டுப்பார். முதுமையில் காமம் வாட்டியெடுப்பதைப்போல் இளமையில்கூட வாட்டுவதில்லை. ஏனெனில் இளவயதுக் காமம் தணிய வழியுண்டு. முதுமையில் காமம் நிறைவேற முடியாமல் மனத்தைப் பாதிக்கிறது.

உடலுக்கு வயதாகிக் களைத்துப்போகிறது. ஆனால் ஆசை எழுவது நீங்குவதில்லை. ஆசை என்றும் இளமையாகவே நீடிக்கிறது. ஆசை காரணமாகத்தான் நாம் பல பிறவிகள் எடுக்க நேரிடுகிறது என்று நம் முன்னோர்கள் கூறியுள்ளனர். ஆசை குறைந்து நீங்கியும்விட்டால் பிறகு மீண்டும் பிறக்க வேண்டிய அவசியமும் இல்லை.

முதுமையிலும் ஆசை இளமையாக இருப்பதால் அது தன்னை வெளிப்படுத்திக் கொள்ளப் புதிய தேகம் தேடுகிறது. நிறைவேறாத ஆசை எடுத்து வரும் தேகமே மறுபிறவி. அதுவும் சட்டென நிகழ்ந்துவிடுகிறது! இறந்த முதியவர் உடலை எடுத்துக்கொண்டு மயானத்திற்குச் செல்லும்போதே அவர் ஒருத்தியின் கர்ப்பத்தில் நுழைந்துவிட்டார். அவரது சிதை அடுக்கப்படும்போதே அவர் வேறோர் இடத்தில் பிறந்துவிட்டார். இறந்தவர் உடலை எடுத்துச்சென்று எரிப்பதற்குள் பல மணி நேர இடைவெளி ஏற்படுகிறது. ஆனால் அவர் உடலில் தங்கியிருந்த மிஞ்சியிருந்த ஆசை காத்திருக்கத் தயாராக இல்லை. நீ எரிப்பது அழுகிய உடலைத்தான். உயிரோட்டமான ஆசை எப்பொழுதோ ஒருத்தியின் கர்ப்பத்தில் வேறு சரீரம் எடுத்தாகிவிட்டது.

நீ கவனித்திருப்பாயே. ஒரு குறிப்பிட்ட உணர்வு உன்னை ஆக்கிரமித்தால், உன்னால் பொறுமை காக்க இயலுமா? உனக்குக் கோபம் மூண்டால் அதை மறுநாள் வெளிப்படுத்தலாம் என்று தள்ளிப்போட முடியுமா? கோபம் மூண்டதும் அக்கணமே நீ எரிமலையாக வெடித்து விடுகிறாயல்லவா? அதனால்தான் உடல் இறந்ததும் உயிர் சட்டென மறுபிறவிக்கு ஆயத்தமாகிறது.

**ம**காத்மா காந்தியின் ஆசிரமத்தில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த விரதங்களில் ஒன்றின் பெயர் அஸ்வாத் — சுவை

பாராட்டாமை, ருசி பார்க்காமை, ருசியைக் கொல்லச் சொன்னார்கள் அந்த ஆசிரமத்தில். அஷ்டாவக்ரரோ ருசியைத் தூய்மைப்படுத்தி மேம்படுத்து என்பார். சாப்பாட்டு ருசியில்கூட கடவுள் அனுபவத்தைப் பெற முடியும் என்பார்.

காந்திஜியைச் சந்திக்க பிரபல எழுத்தாளரான லூயி ஃபிஷர் வந்திருந்தார். அப்போது அவர் காந்திஜியைப் பற்றி ஒரு நூல் எழுதிக்கொண்டிருந்தார். காந்திஜி உணவு வேளையில் அவரைத் தம்மருகே அமர்த்தினார். காந்திஜி ருசி உணர்வை (நாக்கை) அடக்குவதற்காக வேப்பிலை சட்னி சாப்பிடுவது வழக்கம். லூயி ஃபிஷரின் தட்டிலும் வேப்பிலை சட்னி பரிமாறப்பட்டது. அவரையும் ருசி பார்த்துச் சாப்பிடக்கூடாது என்று கட்டுப் படுத்தலாமா? பாவம், அவர் லேசாகத் தொட்டு நாக்கில் வைத்ததும் பயங்கரமான கசப்பை உணர்ந்தார். ஆனால் அதை வெளிக்காட்டிக் கொள்வது நாகரிகமில்லையென நினைத்தார். அதைச் சாப்பிட்டுவிட்டால் பிரச்சினை தீர்ந்துவிடுமென்று வேகமாக அதை விழுங்கி முடித்தார். ஆனால் பாவம், காந்திஜி ஒரு தொண்டரைக் கூப்பிட்டு, "ஃபிஷருக்கு இந்த சட்னி மிகவும் பிடித்துவிட்டதாகத் தெரிகிறது. இன்னும் ஒரு கரண்டி சட்னி கொண்டுவந்து இவரது தட்டில் பரிமாறுங்கள்," என்று கட்டளையிட்டார்!

நீ ருசி காண்பதை அடக்கி ஒடுக்கிவிடலாம். ஆனால் அதில் என்ன சிறப்பு உள்ளது? காய்ச்சல் வந்தால் உனது நாக்கு தானாகவே 'செத்து' போகிறது. ஏனெனில் நாக்கில் ருசியை உணரும் நுணுக்கமான அமைப்புகள் காய்ச்சல் காரணமாகத் தளர்ந்துவிடுகின்றன. இந்நிலையில் நீ இனிப்புப் பண்டம் சாப்பிட்டாலும் கசப்பாகவே உணர்வாய். இப்போது ருசி நீங்கிவிட்டதால் உனக்கு ஆத்ம அனுபவம் ஏற்பட்டுவிட முடியுமா? வாய் ருசி இப்படி இயற்கையாக அடங்கினாலோ, வேப்பிலை சட்னி மூலம் அடக்கினாலோ, ஆத்ம அனுபவம் கிடைத்துவிடுமா? கிடைக்காது என்பதுடன் ருசி பார்ப்பதை-உடலுக்கு இயற்கையான ஒன்றை-எத்தனை காலம்தான் தள்ளிப்போட முடியும்?

பார்வை இழந்தாலும் கற்பனையில் அழகுருவின் நினைவு நீடிக்கத்தான் செய்கிறது. பலவந்தமாக வாய் ருசியைக் கட்டுப்படுத்தினாலும் கற்பனையில் அந்த ருசி நம்மைச் சப்புக்கொட்டத்தான் வைக்கிறது. ருசியை அழிப்பதற்குப் பதில் அதை ,வளர்த்து, தூய்மைப்படுத்தி, மேம்படுத்திக் கடவுளின் ருசியை அறிவதற்கு முயலவேண்டும். சாப்பிடும் பொழுது உணவின் ருசி வளர்ந்து, அதில் கடவுளின் ருசியை உணர்ந்து, 'அன்னம் ஆண்டவன்' ('அன்னம் ப்ரஹ்ம') என்னும் உபநிஷத வாக்கியத்தின் அர்த்தத்தைப் புரிந்துகொள்வோமாக.

ருசியை விசாலப்படுத்து. பெண்ணைப் பார்த்ததும் மிரண்டு கண்ணை மூடிக்கொள்ளாதே. அவள் உருவத்திலும் கடவுளை தரிசி. இவ்வாறு கட்புலனைத் தூய்மைப்படுத்திக்கொள். கடவுளைத் தவிர வேறேதேனும் கண்களில் தென்பட்டுக் கொண்டிருக்கும் வரையிலும், உன் கண்கள் முழுமையாகத் தூயதாகவில்லை என்றே பொருள்.

எல்லாப் புலன்களும் தூய்மைப்பட்டதும் எங்கும் எதிலும் கடவுள் தெரிவார். பார்த்தால் எதிரில் கடவுள். தொட்டால் அவரைத் தொடும் உணர்வு. ருசி பார்த்தால் நாக்கில் அவரே! காதால் கேட்டால் கடவுளின் குரல், மூச்சை இழு, கடவுளின் நறுமணம். சூரியன் உதிக்கிறான், இல்லை, கடவுள் உதயமாகிறார். இரவில் ஆகாயத்தில் நட்சத்திரங்கள் நிரம்பியுள்ளன, இல்லை, அவர்தான் நிரம்பியுள்ளார். பூ மலர்கிறது, இல்லை, அவர் மலர்கிறார். பறவைகள் பாடுகின்றன, இல்லை, அது கடவுளின் கீதம்.

புலன்கள் தூய்மை அடைந்தவனுக்கு எங்கும் அந்த ஒரே கடவுளின் அனுபவம் கிடைக்கிறது. அவன் மட்டும் தனிமையில் இனிமையாக இருப்பான். ஏனெனில் அவனைத் தவிர வேறு யாரும் மிஞ்சியிருக்கவில்லை.

இங்கே தனிமை என்பதற்கு எதுவுமே இல்லாத நிலை என்று அர்த்தமில்லை. ஒருவனே இருப்பதாகப் பொருள்-not Loneliness but aloneness. தனிமை நிலையில், இன்னொருவரும் அருகிலிருந்தால் நன்றாக இருக்குமெனத் தோன்றும். அப்படி

யாரும் வராவிடில் நீயே உன்னுடன் பேசிக்கொள்வாய் அல்லது கடவுளை நினைத்துப் பேசுவாய். அதையே பிரார்த்தனை என்கிறோம். ஆனால் இப்போது இன்னொரு ஆளை உண்டாக்கி விட்டாயே.

மனநோய் மருத்துவமனையில் சென்று பார்த்தால் ஆங்காங்கே பைத்தியம் பிடித்தவர்கள் தனித்தனியே உட்கார்ந்து சத்தமாகப் பேசுவதைக் காணலாம். அதைப் பார்த்து நீ சிரிக்கிறாய். ஆனால் ஒருவன் உரக்க பிரார்த்தனை செய்வது காதில் விழுந்தாலும் நீ சிரிப்பதில்லை. கண்ணுக்கு யாரும் தெரியாத போதிலும் பைத்தியக்காரன் பேசுவதைக் கண்டு சிரிக்கிறாயே. பக்தன் யாரைப் பார்த்துப் பேசுகிறான்? நீ கோயிலுக்குச் சென்று கைகூப்பி. 'பாவங்களைப் போக்கும் பரமனே, என்மீது கருணை காட்டு' என்று உருகும்போது யாரிடம் பேசுகிறாய்? கடவுள் என்றொரு இன்னொருவர் உள்ளாரென்றும், அவருடன் பேச முடியும் என்றும் நீ கருதினால், உனக்குக் கடவுளைப் பற்றித் தெரியாது என்று அர்த்தம். கடவுள் என்று உரையாடுவதற்கு இன்னொருவர் கிடையாது. நீதான் அவர்!

ஆகவே இருப்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான் என்னும் அனுபவம் பெறுகிறாய். நான்-நீ என்ற இரட்டை உணர்வு நீங்குகிறது. அப்போது ஓர் அதிசயம், பூ மலர்வதுபோல், நிகழ்கிறது. அந்த அதிசய மனநிலையே உளது ஒன்றே (aloneness) என்னும் நிலை. அந்த ஒன்றே ஒன்றாக நான் இருக்கிறேன் என்பது சுவையான உணர்வாக இருக்கிறது. அப்போது நீ உன் மனத்தில் திருவிழாபோல் உணர்கிறாய். நீ எதுவும் பேசுவதில்லை; பேசு முடிவதும் இல்லை. கேட்பதற்கு இரண்டாமவர் இல்லையே. யாரிடம் பேசுவது? பேசுவது இழக்கப்பட்டதும் பேசாமை நிலையை அடைகிறாய்.

நீ மதத் தலைவர்கள் சிலர் கூறுவதைக் கேட்டிருப்பாய். கடவுளின் அருள் கிடைத்தால், ஊமையும் பேசுவான்; முடவனும் ஓடுவான் என்று அவர்கள் அறிவிக்கிறார்கள். ஆனால் அஷ்டாவக்ரர் இதற்கு எதிர்மறையாகச் சொல்கிறார். அவர் கூறுவது — கடவுளை அடைந்துவிட்டால், பேசுபவனும்

மௌனியாகி விடுவான்; நடப்பவன், ஒரேயடியாக விழுந்து விடுவான்; உழைப்பாளி, ஓய்வெடுப்பான், சோம்பேறியாகி விடுவான்; ஓட்டமெல்லாம் நின்றுவிடும். எங்கே ஓடுவது? எதை நோக்கிச் செல்வது?

பிரார்த்தனை என்பது என்ன? எதிரே கடவுள் என்னும் இரண்டாமவர் நிற்பதுபோல் அவரிடம் பேசுவதை மக்கள் பிரார்த்தனை என நினைக்கிறார்கள். அது தவறு. சொல்லுவதற்கு ஒன்றும் மிச்சமில்லாமல், சொல்பவனும் இல்லாமல், கேட்பவனும் இல்லாமல்போய் அப்போது பரவியிருக்கும் சூழ்நிலையின் பெயரே பிரார்த்தனை. சத்தமாக ஏதாவது சொல்லி பிரார்த்தனையை அசுத்தப்படுத்தாதே. அதன் குறிக்கோளைக் கெடுத்துவிடாதே நீ ஏதாவது உரக்கச் சொன்னால் நீ உன்னைத் தவிர இன்னொருவரும் உள்ளதாகவும், நீ பாவி-அவர் பாவிகளை ரட்சிப்பவர் என்று இரண்டாகப் பிரிப்பதாகவும் அர்த்தமாகும். ஆனால் நீ பாவி என்று சொல்பவனும் சரி, பாவிகளைக் கடைத்தேற்றுபவன் என்று நீ சொல்பவனும் சரி, உனக்குள்ளேதான் இருக்கிறார்கள். ஆனால் இரண்டாகப் பிரித்து, 'நீ மேலே நான் கீழே; நீ உன்னதமானவன் நான் அற்பன்' என்கிறாயே. உனக்கு உள்ளேயும் வெளியேயும் இருப்பவன் ஒருவன்தானே. அவனே இரண்டாக, பலவாகப் பரவினாலும் அடிப்படையில் இருப்பது ஒருவனே.

ஆகவே தனிமையை நாடி இமயமலை குகைக்குச் செல்ல வேண்டியதில்லை. நீ பக்குவப்பட்டுவிட்டால், இனி நீ கூட்டத்திலிருந்தாலும், கடைத்தெருயில் இருந்தாலும், தனிமையை உணர முடியும். தெருவில் திரளும் கூட்டமும் ஒரே கடலில் எழும் அலைகள்தாம். அந்த அலைகளில் நீயும் ஓர் அலை.

நீ குகையில்போய் உட்கார்ந்தாலும் நீ எதிர்பார்க்கும் தனிமை உனக்குக் கிடைக்காது. ஊரிலிருந்து உனக்குச் சாப்பாடு எடுத்துவந்து ஓராள் தருவான். அவன் திரும்பிச் செல்லும்வரை உன் தனிமை பாதிக்கப்படுகிறது. திடீரென்று ஒரு காகம் எங்கிருந்தோ பறந்துவந்து, குகை வாசலில் அமர்ந்து கத்துகிறது. துறவியின் தவத்தைக் கலைக்கக்கூடாதென்று அதற்கு எப்படித்

தெரியும்? ஒரு காக்கை கரைதலைக் கேட்டு, மேலும் பல காக்கைகள் அந்த இடத்திற்கு வந்து கத்துகின்றன. சந்நியாசிக்கும் சம்சாரிக்கும் இடையேயான வேறுபாடு காக்கைகளுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? துறவி தியானம் செய்வதையோ, ஜெபமாலை உருட்டுவதையோ அவை கவனிப்பதில்லை. எங்கிருந்தோ ஒரு நாய் ஓடிவந்து, குகை ஓரமாக 'நீர்ப்பாய்ச்சி' படுத்திருக்கிறது, உன் தனிமை குலைகிறது. எப்பொழுதும் தனிமை உணர்வு பெற வேண்டுமானால் தனியாக நிற்கின்ற பரம் பொருளுடன் இணைந்துவிடு. அதற்குப் பிறகு நீ எங்கிருந்தாலும், எப்படியிருந்தாலும், உன் இருப்பிடத்திற்குக் காகமோ, நாயோ வந்தாலும், இருப்பது அவர் ஒருவர் மட்டுமே. உள்ளே-வெளியே, மேலே-கீழே, எல்லா திசைகளிலும் அந்த ஒரே பொருளே எதிரொலிக்கிறது.

இப்படித் தன்னை இழந்து, அந்த ஒன்றாக மட்டும் இருப்பதால் வேறொன்றும் இல்லாமல் போகும் நிலையில் பரிசாக ஞானம் கிடைக்கிறது. அவ்வாறின்றி நீ எத்தனை சாஸ்திர நூல்களைக் கற்றாலும் ஞானம் கிடைக்காது. நீயே ஒரு புத்தகம். உன்னையே நீ புரட்டிப் படி. இதுவரை நீயாகிய புத்தகம் மூடப்பட்டே கிடக்கிறது. நீ மற்றவர்களிடம் 'நான் யார்?' என்று கேட்டுத் திரிகிறாய். உனக்கே உன்னைப் பற்றித் தெரியாதெனில் மற்றவர்களுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? நீதானே உனக்கு அதிகபட்சமான நெருக்கத்தில் இருப்பவன். மற்றவர்கள் உன் வெளித்தோற்றத்தை மட்டுமே காணமுடியும். உன் உள் மனத்தை நீ ஒருவனே அறிவாய். வேறு எவரும் உனக்குள்ளே எட்டிப்பார்க்க முடியாது. மற்றவர்கள் உன்னைக் காட்சிப் பொருளாக மட்டுமே காண்பர். காணப்படுபவன் என்ற முறையில் நீதான் உன்னைப் பார்க்க முடியும்.

'நான் யார்?' என்பதே உனது தியானயோகத்தின் அடிப்படையாக இருக்கட்டும். இதை சப்தமிட்டுச் சொற்களால் சொல்ல வேண்டிய கட்டாயமில்லை. கண்களை மூடிக்கொண்டு இந்தக் கேள்வியை ஓர் உணர்வாகக் கற்பனை செய்தாலும் போதும். இந்தத் தேடுதலில் ஈடுபடு. ஆழமாக இறங்கியபடியே செல். நீ சந்திக்கும் எதுவெல்லாம் 'நான்' ஆக இருக்க முடியாது

எனத் தோன்றுகிறதோ அதையெல்லாம் மறந்துவிடு. இன்னும் ஆழத்தில் இறங்கு.

முதலில் உடல் வருகிறது. ஆனால் நீ என்பவன் உடலாக இருக்க முடியாது. கைவெட்டுப்பட்டாலும் நீ என்பவன் இருக்கும் உணர்வு நீங்குவதில்லை. குழந்தைப் பருவத்திலிருந்து முதுமை வரை உன்னிடம் மாறுதல்கள் தோன்றினாலும், நீ என்னும் உணர்வு அவற்றைக் கடந்து நீடிக்கிறது. உடலில் நரை தோன்றினாலும் உள்ளே ஆத்ம உணர்வு பசுமையாகவே நீடிக்கிறது. உன் ஆத்மா உன் உடலுடன் வந்தபோது எப்படி இளமையாய் இருந்ததோ, அப்படியே என்றும் நீடிக்கிறது.

உடல் விரைவில் அழிகிறது. அது தினமும் மாற்றமடைந்து வருகிறது. வாழ்க்கைப் பிரவாகம் நதியைப்போல் நிற்காமல் ஓடுகிறது. அதைச் சுழன்றுகொண்டே இருக்கும் சக்கரம் என்றும் சொல்லலாம். உன் ஆத்மாவோ அசையாது ஒரே மையத்தில் நீடிக்கும் தன்மை உடையது.

ஒன்று நிச்சயம். நாம் காட்சிப்பொருளாக எதையாவது பார்க்க நேர்ந்தால் அதிலிருந்து நாம் பிரிந்து தனிப்பட்டு நிற்கிறோம் என்று அர்த்தமாகும். உடலை நம்மால் பார்க்க முடிவதால்தான் நாம் உடலல்ல என்று ஆகிறது.

கண்ணாடியில் நமது பிரதிபிம்பத்தைக் காண்கிறோம். அதுதான் நீ என்று சொல்ல முடியுமா? கண்ணால் பார்க்கும் உடலிலாவது மனம் என்னும் ஒன்றிருப்பதை உணர்கிறோம். கண்ணாடியில் தெரியும் பிம்பத்திற்கு மனம்கூட கிடையாதே. இதோ உடல். அதோ கண்ணாடியில் பிரதிபிம்பம். இரண்டையும் பார்ப்பவனோ இரண்டையும் கடந்தவன்.

இன்னும் ஆழமாக இறங்கு. எண்ண அலைகளால் நீ சூழப்படுகிறாய். 'இவையோ நான்?' என்று கேட்டுப்பார். இந்த அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்த வண்ணம் உள்ளன. ஆனால் உன் ஆத்மாவோ ஸ்திரமானது. சில எண்ணங்கள் அழகானவை; சில விகாரமானவை. சில மங்களமானவை, சில கெட்டவை. உலகம் முழுவதையும் நேசிப்பேன் என ஒரு சமயம்

நினைக்கிறாய். உலகம் முழுவதையும் அழிப்பேன் என்று இன்னொரு சமயம் உனக்கு வெறி உண்டாகிறது. ஒரு சமயம் மனத்தில் கருணை சுரக்கிறது. இன்னொரு சமயம் மனத்தில் சினம் பொங்குகிறது. நீ இவை எல்லாவற்றையும் கடந்து சாட்சிபோல் பார்க்கிறவன்.

இப்படி மனமென்னும் சுரங்கத்தில் இறங்கிக்கொண்டே செல். ஒரு கட்டம் வரும், ஒரு வேளை வரும். நீ எதெல்லாம் இல்லையோ அதெல்லாம் அகன்றுவிடும். நீ மட்டுமே மிஞ்சியிருப்பாய் இவ்வாறு 'இல்லை-இல்லை' (நேதி-நேதி) என்று சொல்லிக்கொண்டு உன் நிஜமான இல்லத்தினுள் வந்து விடுவாய். 'இல்லை-இல்லை' என்று உனக்குள்ளே சொன்னானே ஒருவன், அவன்தான் நீ. உள்ளே பெயர்ப்பலகை கிடையாது. ஆனால் அனுபவம் உன்னை உனக்கு உணர்த்திவிடும்.

இதுதான் ஞானத்தின் பலனாகக் கிடைப்பது-இதன் விளைவாக உன் புலன்கள் பரிசுத்தமாகிவிடும். இதனால் வாழ்க்கையில் திருப்தி உண்டாகும். நீ தனிமைப்படுவாய். அதாவது, நீ ஒருவன் மட்டுமே உள்ளாய் என்பது புரியும். அந்த ஒரே ஆளாகிய நீயும் கடவுளும் வேறல்ல.

நீ தற்சமயம் கண்களை மூடியபடியே வாழ்க்கை நடத்துகிறாய். இதைக் கேட்டுத் திகைப்பாய். 'என் கண்கள் திறந்துதானே உள்ளன' என்று நீ எதிர்வாதம் செய்வாய். உன் வெளிப்புறம் நோக்கும் புறக்கண்கள்தாம் திறந்தநிலையில் உள்ளன. அகக் கண்கள் இன்னும் திறக்கவில்லை. ஒரேசமயத்தில் உள்ளேயும் வெளியேயும் பார்க்க முடியாது. நீ வெளியுலகத்தில் கண்கள் மேய்வதைக் குறைத்துக்கொண்டே வந்தால் அதேவிகிதத்தில் அகக் கண்கள் திறக்கத் தொடங்கும். இது ஒரு விசித்திரமான கணக்கு.

கொஞ்சமாவது புறக் கண்களை மூடு. அகக் கண்கள் திறக்கட்டும். வெளியுலகில் வீணாகும் பார்வை ஆற்றல் உள்முகம் பாயட்டும். வெளியிலுள்ளதைக் காணும் ஆசையை உள்ளே காணும் ஆசையாக மாற்று. பார்வையை உள்ளே திருப்புமாறு கண்களுக்கு அறிவுறுத்து; அவற்றைக் கெஞ்சிக் கேள்; உன்

வழிக்குக் கொண்டுவா. இதுவரை பார்வையை வெளிப்புறமே செலுத்தியதால் கண்கள் களைத்துப் போயினவேயன்றிப் பலன் எதுவும் கிடைக்கவில்லை. மாற்று முயற்சியாகப் பார்வையை உள்ளே திருப்பிப் பார்.

நாம் எவரைத் தேடுகின்றோமோ, யார் கண்டது, அவர் நமக்குள்ளேயே இருக்கக்கூடும். அவரை வெளியுலகில் தேடக் கிளம்புவதற்கு முன்பாக உன் வீட்டிலேயே எங்காவது ஒளிந்திருக்கிறாரா என்று பார்த்தால் என்ன? ஏனெனில் உலகம் மிகவும் விசாலமானது. தேடுவது கடினம். மேலும் நமக்குள்ளே இருப்பவரை வெளியுலகில் தேடினால் அவர் நமக்கு எப்படிக் கிடைப்பார்? வெளியுலகில் கடவுளைத் தேடியவர்களுக்கு அவர் இதுவரை கிடைத்ததில்லை.

உனக்குள்ளேயே மகாசூரிய சக்தியை வைத்துக்கொண்டு அதைப் பயன்படுத்தாமல் வாழ்கிறாய். உள்ளே இருக்கும் முடிச்சை அவிழ். உள்ளே கிடக்கும் மூட்டையைத் திற. உள்ளே இருக்கும் கலயத்தை உடை. கிரணங்களாகப் பொழியும். அந்த கிரணமழையில் புலன்கள் பரிசுத்தமாகிவிடும்; உயிர் திருப்தியாக உணரும். உனது வாழ்க்கை ஆன்மிக வெற்றியின் அடையாளமாகத் திகழும்.

'சீடனே, தத்துவஞானி உலகத்தில் ஒருபொழுதும் துன்ப நிலையை அடைவதில்லை. ஏனெனில் அந்த ஒரே பரம் பொருளால் மொத்த உலகமும் நிரம்பியிருக்கிறது.' **(சுலோகம் 153)**

**த**த்தாத்ரேயரின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி. பிட்சை பெறுவதற்காக அவர் ஒரு வீட்டிற்குச் சென்றார். ஓர் இளம்பெண் வெளிப்பட்டுச் சொன்னாள்: "சுவாமி, என் பெற்றோர்கள் வெளியே போயுள்ளனர். நான் நெல் குத்தி, உமி நீக்கி, அரிசி எடுத்துத் தருகிறேன். தாங்கள் சற்று நேரம் ஓய்வெடுத்துக் காத்திருங்கள்." தத்தாத்ரேயர் வாசல் திண்ணையில் உட்கார்ந்தார்.

உள்ளே நெல் குத்த ஆரம்பித்ததும் பெண் அணிந்திருந்த வளையல்களின் ஓசை பலமாகக் கேட்டது. அவள்

சங்கோஜப்பட்டாள். இந்த ஓசை வாசலில் உட்கார்ந்திருக்கும் பெரியவர் ஓய்வெடுக்க இடைஞ்சலாகிவிடுமே என அவள் வருந்தினாள். ஆகவே மங்களச் சின்னமாக ஒரு வளையலை மட்டும் விட்டு மற்ற வளையல்களைக் கழற்றிவிட்டாள். அந்த ஒரு வளையல் மட்டும் லேசாக ஒலித்தது.

அவள் அரிசி எடுத்துவந்து தத்தாத்ரேயரின் ஜோல்னா பையில் போட்டபோது அவர், "பெண்ணே, நீ நெல் குத்த ஆரம்பித்தபோது கூடவே கலகலவென்று சப்தம் கேட்டது. பிறகு குறைந்து, கடைசியில் சன்னமான ஒலி மட்டுமே கேட்டது. என்ன நடந்தது?" என்று விசாரித்தார்.

"நீங்கள் வந்தபோது கையில் நிறைய வளையல்கள் அணிந்திருந்தேன். அவை எழுப்பிய ஓசையில் நீங்கள் ஓய்வெடுப்பது பாதிக்கப்படுமே என அஞ்சினேன். ஒவ்வொரு வளையலாகக் கழற்றி ஒலியைக் குறைத்தேன். மங்களத்திற்காக ஒரு வளையலுடன் நிறுத்திக் கொண்டதும் சப்தம் ஏறத்தாழ நீங்கிவிட்டது," என்று விளக்கினாள் அப்பெண்.

தத்தாத்ரேயரின் வாயிலிருந்து சட்டென்று ஒரு சுலோகம் கிளம்பியது:

**வாஸோ பஹூனாம் கல ஹோ பவேத்வார்த்தா த்வயோரபி|**
**காகீ விசரேத்வித்வான் குமார்யா இவு கங்கண:||**

குமரிப் பெண்ணின் கைகளில் வளையல்கள் அதிகமாக இருந்தால் பலத்த ஓசை கேட்பதுபோல், மனத்தில் எண்ணங்கள் கூட்டம் கூட்டமாக இருந்தால், மனத்தில் ஆரவாரமாக இருக்கும். அமைதி நிலவாது. அப்பெண்ணின் கையில் ஒரு வளையல் மட்டும் மிஞ்சியபோது ஒரே ஒலி-சன்னமான ஒலி-கேட்பதுபோல், மனத்தில் ஒரே ஒரு பொருள்-பரம்பொருள்-மிஞ்சும்படி பார்த்துக் கொண்டால், எண்ணங்களின் அலை ஓசை அடங்கிவிடும். மனம் சாந்த நிலையை அடையும். இதையெல்லாம் உணர்ந்து தத்தாத்ரேயர் நெகிழ்ந்துபோய், "மகளே, அருமையான கருத்தைச் சொன்னாய். அதன் மூலம் நான் ஞானம் பெற்றேன்," என்றார்.

உண்மையாகவே ஞானம் தேடி செல்பவனுக்கு அது எந்த இடத்திலும் திடீரெனக் கிடைத்துவிடும். ஆனால் உண்மையில்

ஞானத் தாகம் இல்லாதவன் புத்தரின் எதிரில் உட்கார்ந்து, அவருடைய உபதேசங்களைக் கேட்டாலும், ஒரு பலனும் விளையாது. எருமை மாட்டின் எதிரே புல்லாங்குழல் வாசித்தாலும் அதற்கு ரசிக்கத் தெரியாததுபோல்தான் நல்லுபதேசம் அறிவிலியைக் கவராது.

ஜீன் பால் ஸார்த்ரே* கூறுகிறார், 'தி அதர் இஸ் ஹெல்'. இரண்டாவது நபர் என்றாலே நரகம்தான். அந்த இன்னொருவனால்தான் நரகம் உருவாகிறது. இரண்டாமவன் இருந்தால் கலகம் மூளக் களம் தயாராகிவிடுகிறது. எதிரில் இன்னொருவன் இருந்தாலே அதன் விளைவு மோதல்தான். அப்படியா விஷயம்? அவனைவிட்டு ஓடிப்போகலாமே என நினைக்கலாம். இது நீ நினைக்கிற மாதிரி அவ்வளவு எளிதன்று.

இரண்டாமவன் எங்கு வேண்டுமானாலும் எதிர்ப்படுவான். இரண்டாவது, இரண்டாமவன் என்னும் பாவனையே நீங்கிவிட வேண்டும். உடலளவில் இன்னொருவன் வந்தாலும் அவன் உன்னிலிருந்து வேறுபட்டவன் என்னும் நினைப்புக் கூடாது. இந்தப் பக்குவம் வராதவரையிலும் வாழ்க்கை நரகமாகவே நீடிக்கும்.

நீ உன் அறையில் ஓய்வாக அமர்ந்திருக்கிறாய். வீட்டில் யாரும் இல்லை. தனிமையை, அமைதியை ரசிக்கிறாய். திடீரென யாரோ கதவைத் தட்டுகிறார்கள். உடனே உன் உள்ளமும் உடலும் இறுக்கமடைகின்றன. ஓய்வும் அமைதியும் பறந்துபோயின. யாரோ நண்பர், பெரியவர். நீ போலியாக வரவேற்கிறாய். "நீண்ட காலத்திற்குப் பிறகு உங்கள் தரிசனம் கிடைத்துள்ளது. ஆனந்தமாக இருக்கிறது," என்றெல்லாம் கதையளக்கிறாய். ஆனால் உன் முகம் இறுக்கமாகவே உள்ளது. உன் கண்களில் வரவேற்பில்லை. சம்பிரதாயமான வரவேற்பு. உட்காரவும் சொல்கிறாய்.

---

* Jean-Paul Sartre (1905-1980) பிரெஞ்சு தத்துவமேதை, நாவல்-நாடக ஆசிரியர். இருத்தலியல் கோட்பாட்டை நுட்பமாக விளக்கியவர் (existentialism).

முல்லா நஸ்ருத்தீன் வீட்டிற்கு இப்படித்தான் ஒருநாள் ஒரு விருந்தாளி வந்துசேர்ந்தார். அவர் மணிக்கணக்காக அரட்டையடிப்பவர். முல்லாவுக்குச் சலிப்பேற்பட்டது. பேச்சை முடிக்க அவர் பலவாறு முயன்றார். அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்தார். பலமுறை கொட்டாவி விட்டார். வந்திருந்த அரட்டையடிப்பவர் இதையெல்லாம் அசட்டை செய்து பழக்கப்பட்டவர். அவர் முல்லாவிடம் தென்பட்ட மாறுதல்களை அலட்சியம் செய்து தொடர்ந்து பேசிக்கொண்டே இருந்தார்.

ஒரு கட்டத்தில் முல்லா அவரிடம், "ராத்திரியாகிவிட்டது. நீங்கள் வீடு திரும்பத் தாமதமாகிவிடும்," என்று நினைவூட்டியதும் அவர் எழுந்தார், "ஆமா, நீங்க சொல்றது சரிதான். என் மனைவியும் எதிர்பார்த்துக் கவலைப்படுவா. சரி, இப்போ நான் கிளம்பறேன்," என்று விருந்தாளி எழுந்தார்.

சில அடி தூரம் நடந்து ஒரு மேசைப் பக்கமாகப் போகையில் மேசை மேல் ஒரு புத்தகம் கிடப்பதைக் கண்டு அதை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தார். 'இதென்னடா புதிய தொல்லை' என்று முல்லா தடுமாறினார். விருந்தாளி சாவகாசமாக ஆரம்பித்தார் "இந்த புஸ்தகத்தைப் புரட்டியதும் நான் சொல்ல மறந்துபோன விஷயம் ஞாபகத்திற்கு வந்தது." என்று இழுத்தார்.

முல்லாவிற்கு ரோஷம் வந்துவிட்டது. "அதை நானே நினைவுபடுத்துகிறேன். நீங்கள் சொல்ல மறந்தது என்ன தெரியுமா? 'நமஸ்தே, நான் போய்ட்டு வரேன்' என்பதுதான்," என்று ஒரு போடுபோட்டார்.

நம் ஜனங்களுக்கு பக்குவம் போதாது. நம்மிடம் நயமான நடத்தை குறைவு. ஒருவர் தனிமையிலிருந்தால், தனிமையை விரும்பினால், அவரைத் தொந்தரவு செய்யக்கூடாது என்னும் நாகரிகம் நம்மிடம் கிடையாது. தோளில் அடித்து, 'ஏன் தனியா உட்கார்ந்துக்கிட்டு மோட்டுவளையைப் பார்த்துக்கிட்டிருக்கே?" என்று கேட்போம். ஐரோப்பிய நாடுகளில் தனிமை விரும்பிக்களை யாரும் சீண்ட மாட்டார்கள். அவரைத் தொந்தரவு செய்வதை எல்லை மீறுவதாக நினைப்பார்கள். அவரிடம் போய்த்தான் ஆகவேண்டுமெனில், 'நான் உங்களுக்கு

இடைஞ்சல் செய்கிறேனா?" (Am I disturbing you?) என்று பணிவுடன் முதலில் விசாரிப்பார்கள்.

ஒருவரது தனிமையை நாம் ஏன் சேதப்படுத்தக்கூடாது? அது ஏன் அநியாயமான செயல்? ஏனெனில் தனிமையில்தான் ஒருவனுக்குச் சற்று ஓய்வு கிடைக்கிறது. இன்னொருவர் வந்தால் அந்த ஓய்வு அகன்றுவிடுகிறது. அவர் இருப்பது சூழ்நிலையை இறுக்கமாக்குகிறது. சந்திப்பவர் நெருக்கமானவர் எனினும் சற்று சங்கடமாகவே உணர்கிறோம். நம்மால் சகஜமாக இருக்க முடியவில்லை. குளியலறையில் தனிமையில் நீ இறுக்கமின்றி இருப்பாய். ஆனால் கதவில் எங்கோ ஓட்டை வழியாக யாரோ உள்ளே பார்ப்பதுபோல் தெரிந்தால் நீ இறுக்கமாகிவிடுவாய். குளியலறையில் கண்ணாடியில் உன் முகத்தைக் கோமாளிபோல் நீ தெரியச்செய்வதாக அல்லது சினிமா பாட்டு முணுமுணுத்தபடி லேசாக ஆடுவதாக வைத்துக்கொள்வோம். அப்போது கதவு ஓட்டை வழியாக யாராவது பார்ப்பதுபோல் நீ உணர்ந்தால்-அவன் வயது குறைந்த உன் மகனாயினும்-அதன் பின்னர் உன்னால் சுபாவமாக (சுயமான பாவனையுடன்) இருக்க முடியாது.

நமது வாழ்க்கையில் மன இறுக்கம் அதிகமாக இருக்கக் காரணம் மற்றவர்களின் கண்பார்வை நம்மை சங்கடப்படுத்து வதுதான். அந்தப் பார்வையை ஏமாற்ற நாம் முகமூடி அணிய வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகிறோம். நாம் எப்படியோ அப்படியே காண்பித்துக் கொள்ள முடியவில்லை. எதை-எப்படிப் பேச விரும்புகிறோமோ அதை அப்படியே கூற முடியவில்லை. இயற்கையான சிரிப்பு வராததால் போலியாக நகைக்க வேண்டியுள்ளது. நமது இயற்கையான பழகும் தன்மை வெளிவராதபடி தடுக்க நேரிடுகிறது. அதிக நேரம் மற்றவர்களின் முன்னிலையில் நாம் வாழ்வதால் நாம் ஒவ்வொரு நாளும் அதிக நேரம் முகமூடி அணிந்தே இருக்கிறோம். காலப்போக்கில் நாம் நமது நிஜமான முகத்தையே மறந்துவிடுகிறோம்! மூக்குக் கண்ணாடி அணிபவர் தனது கண்ணாடியுள்ள முகத்தையே நினைவில் வைத்திருப்பதுபோல் முகமூடியுடன் கூடிய முகமே நமது நினைவில் நிற்கிறது.

நீ அலுவலகம் செல்கிறாய். பியூன் எதிர்ப்படுகிறார். அவரெதிரே உன் முகத்தில் ஒரு முகமூடி அணிகிறாய். பிறகு முதலாளியின் அறைக்குள் நுழைந்து வணங்குகிறாய். அப்போது வேறு முகமூடி தெரிகிறது! பியூன் எதிர்ப்படுகையில் புழு-பூச்சிபோல் அற்பமாகக் கருதித் திமிரைக் காட்டும் முகமூடி அணிந்திருக்கிறாய். முதலாளியின் முன்னால் செல்கையில் நீயே ஒரு புழு-பூச்சிபோல் உன்னைக் கருதி இன்னொரு முகமூடி அணிகிறாய். திறமை வாய்ந்த டிரைவர் தன்னையறியாமலே கியரை மாற்றுவதுபோல் நீ முகமூடிகளை உன்னை அறியாமலே வேகமாக, எளிதாக மாற்றிக் கொள்கிறாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீனைச் சந்திக்க ஒருவர் வந்தார். எப்போதோ பார்த்த முகம். ஆனால் யாரென நினைவிற்கு வரவில்லை. ஆகவே வந்தவரை உட்காரச் சொல்லவில்லை. வந்தவர், "போன தேர்தல் சமயம் இதே வீட்டிற்கு வந்திருக்கிறேன். நான் உங்கள் தொகுதி எம்.எல்.ஏ.," என்றார். முல்லா பதறி ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு, "ஐயா, இதில் அமருங்கள்," என்று கூறி, தான் நின்றபடியே இருந்தார்.

வந்தவர் தொடர்ந்தார்: "அமைச்சரவையில் உள்ள காலியிடங்களை முதலமைச்சர் நிரப்பப் போகிறார். எனக்கு வாய்ப்பு உள்ளதாகக் கூறுகிறார். ஆனால் தொகுதி மக்களிடமிருந்து கோரிக்கை வந்தால் அதை ஏற்பதுபோல் காட்டி அவர் என்னை அமைச்சராக நியமிக்க வசதியாக இருக்கும். நான் தொகுதி மக்களைச் சந்தித்து என்னை அமைச்சராக்கும்படி முதலமைச்சருக்கு கடிதம் எழுதும்படி கேட்டுவருகிறேன. நீங்களும் அவருக்குக் கடிதம் எழுதுங்கள்," என்றார். உடனே முல்லா சோபாவை இழுத்துப்போட்டு, "நீங்கள் அமைச்சராகப் போவதால் அந்த நாற்காலியைவிட்டு இந்த சோபாவில் அமருங்கள்," என்று கைகூப்பினார்.

எதிரே நிற்பவருக்கு ஏற்றபடி நாள் முழுதும் முகமூடியை மாற்றுகிறோம். வீடு திரும்பியபின் மனைவி எதிரில் ஒரு முகமூடி, குழந்தைகளின் எதிரில் வேறு முகமூடி. இப்படி முகமூடி மாற்றியே வாழ்க்கை கழிவதால் இத்தனை முகங்களிடையே நமது

உண்மையான, அசலான முகம் எது என்பது நமக்கே மறந்து விடுகிறது!

**ஜென்** துறவியர் தம்மிடம் பயிற்சி பெற வருபவர்களுக்குப் பின்வருமாறு அறிவுரை கூறுகிறார்கள்: 'நீ முதல் நடவடிக்கையாக உனது உண்மையான முகத்தைத் தேடி கண்டுபிடி-ஒரிஜினல் ஃபேஸ். பிறகு பயிற்சியைத் தொடங்கலாம். இப்போது உன்னிடம் போலியான முகத்தோற்றங்கள் தென்படுகின்றன. ஆன்மிகப் பயிற்சிக்கு இவை உதவா. நீ பிறக்கும்போது இருந்ததே அது உண்மையான முகம். இறக்கும் நிலையில் மீண்டும் தெரியுமே அது உண்மையான முகம். நடுவிலே கூட்டம் கூட்டமாகத் தெரிந்த முகங்களை விரட்டு.'

உண்மையான முகம் தனிமையில்தான் வெளிப்படுகிறது. ஆனால் நாம் சாதாரணமாகவே தனிமையில் சற்று நேரமாவது இருக்கும் பழக்கத்தை மேற்கொள்ளுவதில்லை. 'இருப்பது ஒருவரே. அவர் கடவுள் மட்டுமே' என்று உணர்ந்துகொண்டால் தனிமையின் (ஏகாந்தத்தின்) உச்ச நிலையை அடைந்து விடுகிறோம். பிறகு கடவுளாகிய நம்மைத் தவிர, அல்லது, நாமாகிய கடவுளைத் தவிர வேறு யாரும் கிடையாது என்பதால் முகமூடிகள் தேவைப்படா. இன்னொருவர் இல்லை என்னும் மனநிலையில் யாரிடமிருந்து நம்மை மறைத்துக்கொள்ள வேண்டும்? யாரை ஏமாற்ற வேண்டும்? யாரிடம் சூழ்ச்சிசெய்ய வேண்டும்? யாரிடம் கபடமாக நடந்துகொள்ள வேண்டும்? பிறரை ஏமாற்றுவது என்பது ஆன்மிக அடிப்படையில் நம்மையே ஏமாற்றிக் கொள்வதாகும். ஒரு கை இன்னொரு கையை ஏமாற்ற முயல்வதுபோலாகும்.

ஒருவகைச் சீட்டாட்டத்தில் (patience) ஒருவரே சீட்டுகளை வரிசைப்படுத்துவார். ஆனால் தன்னை இரண்டு பேராகக் கருதி மாற்றி-மாற்றி விளையாடுவார். அப்போது யார் வெற்றி பெற்றாலென்ன, தோல்வியடைந்தாலென்ன?

தனிமை கிடைப்பதற்கு இரண்டாமவர் என்பவர் தடையாக இருக்கிறார். அவரை விலக்க இரண்டு வழிகள் உள்ளன. எளிதான

வழி நீ காட்டுக்கு ஓடிப்போவதுதான். ஆனால் அது ஒரு தீர்வு இல்லை. நீ காட்டில் வாழ்வதற்கும் பிறர் உதவி தேவைப்படுகிறது.

அஷ்டாவக்ரர் வேறு உபாயம் சொல்கிறார். நீ உன்னை அறிந்துகொள் என்கிறார். அப்போது நீதான் எல்லோருக்குள்ளும் இருக்கிறாய் என்பது புரியவரும். மொத்தம் இருப்பதே ஒன்றுதான் என்று தெரிந்து கொள்வாய். நான்-நீ என்பது வலது-இடது கைகள் போன்ற பிரிவுதான்; பறவையின் இரு இறக்கைகள்போல்தான்.

இரண்டாமவர் என்பவர் இல்லாத நிலையில் துன்பமும் உண்டாகாது. இன்னொருவர் இருப்பதுதான் நம் எல்லைகளைச் சுருக்கிவிடுகிறது; பாறாங்கல் வைத்ததுபோல் சுமையாக இருக்கிறது. கணவன்-மனைவி கூட ஒருவர் மற்றவரின் முழுமை யான வளர்ச்சிக்குத் தடையாக இருப்பதாகப் புழுங்குவதுண்டு.

ஒருநாள் முல்லா நஸ்ருத்தீனுக்கும் அவர் மனைவிக்கு மிடையே சண்டை. மனைவி அவரைத் துரத்தினாள். அவள் அவரை அடிப்பதும், அவர்மீது பொருள்களை எறிவதும் வழக்கம். அவர் பயந்துபோய் கட்டிலின் கீழே ஒளிந்து கொண்டார். மனைவி, "ஏ கோழையே! வெளியே வா, பார்க்கலாம்," என்று கத்தினாள். முல்லா தைரியமாகச் சொன்னார், "என்னை யார் வெளியே கிளப்ப முடியும்? நான்தான் இந்த வீட்டின் எஜமானன். எனக்கு எங்கே இஷ்டமோ அங்கே நான் உட்கார்ந்து கொள்வேன்." அவரது தைரியத்தின் காரணம் என்ன என்றால் கட்டிலின் கீழே குனிந்து பார்க்க முடியாத அளவிற்கு அவர் மனைவி பருமனாயிருந்தாள்.

கணவன் மனைவியை அடக்க முயல்கிறான். மனைவி அவன் தன்னைப் பின்தொடர்ந்து வரவேண்டுமென எதிர்பார்க்கிறாள். இதற்குக் காரணம், இன்னொருவர் என்று ஒருவர் இருப்பதை உணர்வதுதான். ஆகவே அவர் நம்மை அடக்கும் முன் நாம் அவரை அடக்கிவிட அவசரப்படுகிறோம்.

நீங்கள் குழந்தைகள் மீது பாசம் காண்பிப்பதாகச் சொல் கிறீர்கள். கணவன்-மனைவி பரஸ்பரம் அன்பு செலுத்துவதாகக் கூறுகிறார்கள். இது உண்மையில்லை. அன்பு இருக்குமிடத்தில்

அடக்குமுறை இருக்காது. நீங்கள் எவரிடம் அன்பு செலுத்து கிறீர்களோ அவரை சுதந்திரமாகச் செயல்பட விட்டால்தான் உங்கள் அன்பு உண்மையானது.

பெற்றவர்களும் குடும்பத்தினரும் பிள்ளைகளுக்கு சுதந்திரம் கொடுப்பதை விரும்புவதில்லை.ஆகவே நாம் கட்டளைக்கு அடங்கி நடப்பதைச் சிறந்த பண்பெனக் கருதுகிறோம். இதன் அர்த்தமென்ன? 'நீங்கள் உங்கள் இஷ்டப்படி இருக்கக்கூடாது. நாங்கள் சொல்கிறபடிதான் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும்' என்று மறைமுகமாகத் தெரிவிக்கிறோம்.

உன் பெற்றோர் உன்னை அடக்கினார்கள். நீ உன் பிள்ளைகளை அடக்குகிறாய். அவர்கள் எதிர்காலத்தில் தங்கள் குழந்தைகளைக் கட்டுப்படுத்துவார்கள். இந்த அடக்குமுறை நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக, தலைமுறை-தலைமுறையாகத் தொடர்கிறது. நீ உன் பிள்ளைகளை உண்மையாகவே நேசிப்பவ னாயின் அவர்களுக்கும் சிந்திக்க, செயல்பட உரிமை உண்டு என்பதை ஏற்றுக்கொள்.

கலீல் ஜிப்ரான்* சொல்கிறார்: 'அன்பு காட்டு, உன் கொள்கையைத் திணிக்காதே. அன்பு காட்டு, உன் சாஸ்திரத்தை சுமத்தாதே. அன்பு காட்டு, பிறர் சுதந்திரத்தைப் பறிக்காதே.'

சுதந்திரத்தைப் பறித்தால் அங்கு அன்பு இருக்க முடியாது. அன்பு, சுதந்திரம் தருகிறது. அன்பு, ஏற்புத் தருகிறது. அன்பு இருப்பது சுதந்திரம் மூலம் நிரூபிக்கப்படுகிறது. அன்பு பிறரைத் தன்னைப்போல் நினைக்கச் செய்கிறது; பிறரில் தன்னைக் காணவைக்கிறது.

நீ எப்பொழுதும் சுதந்திரமானவனாக இருக்க வேண்டுமென விரும்புகிறாய் அல்லவா? அப்படியானால் நீ எவரிடம் அன்பு வைத்திருக்கிறாயோ அவரை சுதந்திரமாக இருக்கவிடு. ஆனால் நாமோ நாம் எவரிடம் அன்பு காட்டுகிறோமோ அவர் நமக்கு

---

* Khalil Gibran (1883-1931) லெபனான் நாட்டில் பிறந்து அமெரிக்காவில் குடியேறியவர். கட்டுரை, நாவல், கவிதை எழுதியவர். கலைஞர். முக்கியமான நூல் தீர்க்கதரிசி The Prophet.

அடங்கியிருக்க வேண்டுமென எதிர்பார்க்கிறோம். நமக்கு அடங்கியிருக்குமாறு அவரைக் கட்டுப்படுத்துகிறோம்.

இந்த இரண்டாவது நபர் இருப்பதுதான் பிரச்சினை. ஹிட்லர் இப்பிரச்சினையைத் தீர்க்கக் குறுக்கு வழியை, ஆனால் குரூரமான வழியை மேற்கொண்டார். இரண்டாமவரைக் கொலை செய்துவிடு என்றார்.

புத்தர் காட்டிய வழி வேறு. அந்த இரண்டாமவரை உள்முகமாகப் பார்த்து நீதான் அங்கிருப்பதைத் தெரிந்துகொள் என்றார். புத்தரது வழியில் இன்னொருவரை அழிக்க வேண்டிய தில்லை. வன்முறை தேவைப்படாது. அந்த இன்னொருவரில் உன் நிழல் படிந்திருப்பதைக் காண்பாய். பிறகு இன்னொருத்தன் என்பவனே கிடையாது. இரண்டாமவன் இல்லாத வாழ்க்கையில் துன்பத்திற்கு வாய்ப்பில்லை என்கிறார் அஷ்டாவக்ரர்.

இருப்பதெல்லாம் ஒருவனே என்னும் காற்று உன் வாழ்வில் சிறிதளவாவது வீசுவதாக. உன் வாழ்க்கை வசந்தமாகிவிடும்.

காலைப் பொழுதின் முதல் காற்று. பூக்களை எழுப்புகிறது. இலைகளை அசைக்கிறது. பறவைகளின் பலவிதமான பாடல்கள் கேட்கின்றன. தூக்கம் கலைந்து விடுகிறது. கனவுகளைச் சிதறடிக்கிறது. நீ உலகில் இருப்பது ஒரு பொருள்தான் என்னும் விழிப்பைப் பெற்றால் உன் வாழ்வில் நறுமணம் சூழும். ஒரு புனிதக் காற்று வீசி உன்னைச் சூழ்ந்திருந்த அழுகிய காற்றைப் போக்கிவிடும். உன் எல்லைகள் நீங்கிவிடும். எல்லையற்ற ஒன்று உன்னைத் தழுவும். அப்போது உனக்கு சுகம் கிடைக்கும், அமைதி கிடைக்கும், ஓய்வு கிடைக்கும்.

**உருவமும் உருவமற்றதும்**
**ஒன்றுடன் ஒன்று**
**போட்டியிடவில்லை**
**அவை இணைந்தே உள்ளன**
**கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம்போல்.**

நானும் நீயும் கண்ணாடியும் பிம்பமும்போல் இணைந்துள் ளோம். நீ கண்ணாடியின் முன் நின்றால் நீ தனியாகவும்,

கண்ணாடியில் பிம்பம் தனியாகவும் காட்சி கிடைக்கும். நீ நகர்ந்தால் பிம்பமும் விலகிவிடும். ஆகவே நீயும் பிரதிபிம்பமும் இரண்டல்ல, ஒன்றேதான்!

உனது பிரதிபிம்பம் உன்னுடன் இணைந்திருப்பதுபோல் கடவுள் உலகுடன் இணைந்துள்ளார்; உடல் ஆத்மாவுடன் இணைந்துள்ளது; நான் உன்னுடன் இணைந்துள்ளேன். ஆனால் ஆழமாகப் பார்த்தால் மொத்தம் இருப்பது ஒன்றுதான். அதுவே அதனுடன் இணைந்திருக்கிறது.

'சுவையான இலைதழைகளை உண்டு களித்த யானை வேப்பிலைகளைத் தின்னக் கொடுத்தால் மகிழ்ச்சியுறாது. இதேபோல் ஆத்ம சுகத்தில் லயிப்பவனுக்குப் புலன்வழி இன்பம் எதுவும் சுகம் தராது.' **(சுலோகம் 159)**

**யா**னைக்குச் சுவையான இலைதழைகளை முதலில் உண்ணக் கொடுத்தபிறகு கசப்பான வேப்பம் இலைகளை அதன் முன்னால் போட்டுப்பார். நீ எவ்வளவு தூண்டினாலும் அது அந்த இலைகளைத் தொடாது. தரமானவற்றை ருசி பார்த்தவன் தாழ்வானவற்றைத் தொடக்கூட மாட்டான். ராம ரசம் பருகியவனுக்கு காமரசம் ருசியாகத் தெரியாது. சமாதிநிலையைச் சிறிதாவது அறிந்தவன் உடலின்பத்தை மதிக்க மாட்டான். தியானம் சற்றாவது பயின்றவனுக்குப் பணத்தாசை குறைந்து போகும். மகோன்னதமான ஒன்று நிகழும்போது அற்பமானது நீங்கிவிடும்.

சாது-சந்நியாசிகள் வழக்கமாகச் சொல்வது, கடவுளை அடைய வேண்டுமானால் உலகத்தை உதறித் தள்ளு. நான் சொல்வது இதற்கு எதிரானது. உலகைவிட வேண்டுமானால் முதலில் கடவுளைப் பெறு என்பது என் வழி. மதத் தலைவர்கள் தேவையற்றதைத் தள்ளிவிட தேவையானதைப் பிடித்துக்கொள் என்கிறார்கள். நானோ தேவையானதைப் பிடித்துக்கொண்டால் தேவையற்றது தானாகவே நீங்கிவிடும் என்கிறேன்.

கசப்பானதையே சாப்பிட்டுப் பழகியவன் இனிப்பான பொருளும் உண்டு என்பதை நம்பவேமாட்டான். அவனுக்குத் தெரிந்ததெல்லாம் அந்த ஒரு சுவைதான். கசப்பு ருசியே

பழக்கமாகிவிட்டால் பிறகு அதைக் கைவிடுவது எளிதல்ல. கனவிலும் கசப்பான உணவுகளையே அவன் உண்பவனாக இருப்பான்.

என்னிடம் வருபவர்களில் சிலர், "நாங்கள் வாழ்க்கை இன்பங்களில் ஆழ்ந்துள்ளோம். நாங்கள் போகிகள். எப்படி நாங்கள் சந்நியாசி ஆவது?" என்று கேட்கிறார்கள். நான் சொல்வது, "நீங்கள் தைரியமாக சந்நியாசம் மேற்கொள்ளுங்கள். போக விருப்பம் படிப்படியாகக் குறைந்துவிடும்," என்பதுதான்.

இனிப்பெனும் ருசியை நீ அறிந்துகொண்டால் தானாகவே கசப்பைக் கைவிடுவாய். நான் உனது ஜோல்னா பையை வைரங்கள்-முத்துகளால் நிரப்ப விரும்புகிறேன். உனது பையில் ஏற்கெனவே உள்ள கூழாங்கற்களை வெளியே எறி என்றுகூட சொல்லமாட்டேன். நீயாகவே அவற்றை எறிந்துவிடுவாய். வைரத்தையும் முத்தையும் கண்டதும் நீ உன் பையை உதறி காலியாக வைத்திருப்பாய்.

நீ முதலில் கடவுளை அழை. உலகம் தானாகவே உன்னைவிட்டு நழுவி விலகிச் சென்றுவிடும். அதைப் பற்றி நீ கவலைப்படாதே. மாறாக, முதலில் உலகைவிடும் முயற்சியில் இறங்கினால் நீ சிக்கலில் அகப்பட்டுக்கொள்வாய். சுகம் கிடைக்காது என்பது மட்டுமன்று; இதுவரை உனக்குக் கிடைத்து வந்த துன்பமும் மேற்கொண்டு கிடைக்காமல் போய்விடும். மனிதன் காலியாக இருப்பதைவிட துன்பம் அனுபவித்து வருவதையே அதிகம் விரும்புவான். நீ இதை நம்பமாட்டாய். ஆனால் தற்காலத்திய உளவியல் அறிஞர்களின் கருத்துப்படி, மனிதன் வெறுமையை உணர்வதைவிட துன்பப்பட்டுக் கொண்டிருப்பதை அதிகம் விரும்புகிறான். ஏனென்றால் சிந்திக்க, பொழுதுபோக ஏதாவது விஷயம் கையில் உள்ளதே என்று அவனுக்குத் திருப்தி உண்டாகிறது. நாம் வெறும் வாயுடன் இருப்பதைவிட, வாயில் எதையாவது போட்டுக்கொண்டு கொறித்தபடி இருக்க விரும்புகிறோம்.

அன்றாட வாழ்வில் ஏதேனும் பிரச்சினை இல்லையெனில் நாம் மந்தமாகிவிடுகிறோம். பொழுதுபோக, நீயாகவே ஒரு

சிக்கலை உருவாக்கிக் கொள்கிறாய். அதில் சிக்கி சுறுசுறுப் படைகிறாய். வேலையோ, சிக்கலோ இல்லாத மனிதனுக்கு பயமாகவுள்ளது. 'நான் எதற்கும் பிரயோஜனமில்லையோ' என்ற குற்ற உணர்வு அவனுக்கு விளைகிறது. ஏதாவது செய்தபடி இருந்தால்தான், நமது ஆளுமை வெளிப்படுகிறது; 'நான் யார்?' என்று வரையறுத்துக் கூற முடிகிறது. மருத்துவமனையில் நோயாளியாக இருந்தால்கூட சுற்றுப்புறக் காட்சிகளால் அவனது மனத்தின் இயக்கம் தொடர்கிறது. ஆனால் மனத்தை வெறுமையாக (காலியாக) வைத்திருப்பதை அவனால் தாங்க முடிவதில்லை. சிந்தனைகளே, பிரச்சினைகளே இல்லாமல் அமைதியாக இருப்பதைவிட மனிதன் பைத்தியக்காரனாக ஆர்ப்பாட்டம் செய்வதையே விரும்புகிறான்! உலகத்தைவிட்டுத் தன்னையோ, தன்னைச் சுற்றியுள்ள உலகத்தையோ அவன் இழக்க தயாராக இல்லை.

உனக்குத் துன்பத்திலும் ஒருவகையான பிடிப்பு, ஒருவித ருசி ஏற்பட்டுவிட்டது. அதுதான் தற்போது உனது சொத்து. அதைத் தற்போது நீ நெஞ்சுடன் அணைத்தபடி உள்ளாய். உனக்கு சுகத்தின் சுவை தெரியாததால், உன் கையிலுள்ள துன்பத்தை நான் பிடுங்கிக் கொள்ள விரும்பவில்லை. இப்போது நீ வெறுங்கையுடன் இல்லை. எதையாவது பிடித்தபடி உள்ளாய். அது பணமாக, வீடாக, குடும்பத்தினராக இருக்கலாம். கையிலிருப்பது சாம்பலாயினும், அதற்கு விபூதி என்று நல்ல பெயர் கொடுத்தாலும், அதுவாவது கையில் இருக்கத்தானே செய்கிறது. காகிதத்தால் செய்த கப்பல்தான் எனினும் அதுவும் ஒரு பொருள்தானே. அது முழுகும், பரவாயில்லை. இன்னொரு கப்பல் செய்யலாம். ஒரு விஷயம் கனவுதான் என்றாலும் அது நீடிக்கும்வரை விட்டு விடலாமே. தற்சமயத்துக்கு அது உனக்கு ஊன்றுகோலாக உதவத்தான் செய்கிறது.

உனக்கு சத்தியம் வசப்படாதவரையிலும் உன் கையிலுள்ள கனவைப் பிடுங்குதல் சரியன்று. விழித்ததும் கனவு தானாகக் கலைந்துவிடும். ஞானிகள் சத்தியத்தை முதலில் அடைய விரும்புகிறார்கள். அப்போது பொய்ம்மை தானாகவே விலகி விடுகிறது.

அறையில் இருட்டு. எப்படிப் போக்குவது? ஒரு வழி. இருட்டிற்கு உதை கொடுத்து வெளியே விரட்டுவது. ஆனால் இது பைத்தியக்காரச் செயல். காலால் உதைத்தால் இருட்டு ஓடிவிடாது. இன்னொரு வழி உள்ளது. விளக்கு எடுத்துவா. அதை ஏற்று. இருட்டு தானாகவே காணாமல் போய்விடுகிறது.

'தான் அனுபவித்த இன்பங்களில் பிடிப்புக் கொள்ளாத வனாகவும், தான் அனுபவிக்காத இன்பங்களுக்காக ஆசைப் படாதவனாகவும் இருக்கக்கூடிய மனிதன் உலகில் அரிது.' **(சுலோகம் 160)**

**உ**லக வாழ்க்கையில் இரண்டு வகையான பற்றுகள் மனிதனை உறுதியாகப் பிடித்துக் கொண்டுள்ளன. ஒன்று, ஏற்கெனவே அனுபவித்த இன்பங்கள். நீ அனுபவித்த இன்பங்களின் சுவை உன் மனத்தில் பதிந்து விடுகிறது. அதை மீண்டும் அனுபவித்துப் பார்க்கும் ஆசை மூள்கிறது. மறுபடியும் பலமுறை அந்த சுகத்தை அனுபவிக்க மனம் ஏங்குகிறது. இந்த அனுபவித்த சுகம் கடந்த காலத்துடன் சம்பந்தப்பட்டது.

இதுவரை அனுபவிக்காத சுகங்களும் மிஞ்சியிருக்கின்றன. அவற்றைத் துய்க்கவும் விருப்பம் எழுகிறது. இந்த வகை சுகம் எதிர்காலத்துடன் சம்பந்தப்பட்டது. முற்கால மாவரைக்கும் இயந்திரத்தின் இரு பகுதிகளுக்குமிடையில் மாட்டிக் கொண்ட தானியம் போல் மனிதன் இந்த இருவகைத் துன்பங்களிடையே சிக்கி அரைபடுகிறான். முற்கால இன்பங்கள் 'எங்களை மீண்டும் அனுபவி' என்று துரத்துகின்றன. அனுபவித்திராத இன்பங்களோ 'சாவதற்கு முன் எங்களை ஒருமுறையாவது அனுபவி' என்று இன்னொரு பக்கம் இழுக்கின்றன.

இந்த முற்கால-எதிர்கால இழுப்புகளிலிருந்து தப்பிய மனிதன் உலகில் தேடினாலும் கிடைப்பதற்கு அரியவன். அவன் தான் வாழ்க்கையின் சத்தியத்தை அறிந்தவனாக இருப்பான். அவன்தான் ஞானப்பழத்தைச் சுவைப்பவனாக இருப்பான்.

கடந்த காலத்திலிருந்து விடுபடு. கடந்த காலத்தைப் புரிந்துகொள். ஏற்கெனவே அனுபவித்ததை மீண்டும்

அனுபவிப்பதில் சாரம் இல்லை. அனுபவித்தாய் சரி, என்ன கிடைத்தது? ஒன்றும் கிடைக்கவில்லையே. கையில் எதுவும் அகப்படவில்லையே. பிறகு அதையே அனுபவிக்க விழைவது நீ சுயவுணர்வுடன் இல்லை என்பதைத்தான் காட்டுகிறது. இன்று நீ அனுபவித்தது நேற்று அனுபவித்திராததாய் இருந்தது. ஆகவே நீ அதை நோக்கிக் கவரப்பட்டு அனுபவித்தாய். ஆனால் திருப்தி பெறவில்லை. ஆகவே நீ அனுபவித்திராத இன்னொரு சுகத்தைத் துரத்திக்கொண்டு ஓடுகிறாய். வீடு கட்டினாய். கொஞ்சம் சுகம் விளைந்தது. அது நீடிக்கவில்லை. அதை எப்படிப் பெரியதாக ஆக்குவது என்பது பற்றியோ, வேறு பெரிய வீடு கட்டுவது-வாங்குவது பற்றியோ யோசிக்கிறாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஓர் அரசரின்கீழ் வேலை பார்த்து வந்தார். அவரது முக்கியமான வேலை அரசரது படுக்கை அறையை சுத்தமாக வைத்திருப்பது. அரசரது ஒய்யாரமான படுக்கையைப் பார்த்து வியந்த முல்லா அதில் ஒரு தடவையாவது படுத்துப்பார்க்க ஆசைப்பட்டார். அந்த வெல்வெட் மெத்தையைத் தொட்டால்கூட அவருக்குக் குறுகுறுப்பு உண்டானது. வெள்ளியாலும் தங்கத்தாலும் செய்யப்பட்ட கட்டில். நாற்புறமும் வைரங்களும் ரத்தினங்களும் பட்டுநூலில் கோக்கப்பட்டுத் தொங்கின.

ஒருநாள் அரசர் தமது சபை நடவடிக்கைகளில் மும்முரமாயிருந்தார். அவர் திரும்பத் தாமதமாகும் என்று தெரிந்ததும் ஒரு ஐந்து நிமிடம் அந்தப் படுக்கையில் படுத்துப் பார்த்தால் போதுமென நினைத்தார். ஆனால் படுக்கையின் மென்மையில் அவர் அசந்து தூங்கிவிட்டார். அரசர் திரும்பியதும் இதைக் கண்டு சினமடைந்தார். சேவகரைக் கூப்பிட்டு முல்லாவுக்கு 50 கசையடி தரும்படி கட்டளையிட்டார்.

மூன்று-நான்கு முறை சவுக்கடிபட்டதும் முல்லாவின் முதுகில் தோல் பிரிந்தது; ரத்தம் தெரிந்தது. ஆனால் பலமாகச் சிரித்தார். அரசரின் படுக்கையில் படுத்த குற்றத்துக்காகப் பயப்பட வேண்டிய முல்லா, சவுக்கடி வலியிலும் சிரிப்பது கண்டு அரசருக்குக் குழப்பமேற்பட்டது. அவர், "உனக்கென்ன

பைத்தியமா பிடித்துள்ளது? ஏன் இப்படிச் சிரிக்கிறாய்?'' என்று அதட்டினார்.

முல்லா அரசரை வணங்கி, ''நான் அதிகபட்சம் 15 நிமிடம் தூங்கியிருப்பேன். அதற்கே 50 கசையடி தண்டனை என்றால் தினமும் பலமணி நேரம் தூங்கும் உங்களுக்கு எத்தனை கசையடி தரவேண்டும் என்று கணக்குப் போட்டேன். அதைக் கணக்கிட முடியாமல் மீண்டும்-மீண்டும் திணறியதால் சிரிப்புவந்தது'' என்று விளக்கம் தந்தார்.

நீ ஏற்கெனவே அனுபவித்த சுகங்களின் முடிவில் உனக்குத் துன்பமே விளைந்தது. சவுக்கடிக் காயம் போன்ற அந்தத் துன்பங்களின் அடையாளங்களைக் கவனித்துப் பார். சவுக்கடியால் முதுகு முழுதும் காயம் ஏற்படுவதுபோல் சுகம் என நீ நினைத்தவை துன்பக் காயமாக உன் மனத்தை நிரப்பியுள்ளன. இந்த நிலையில் நீ இன்னும் அனுபவித்திராத சுகங்களுக்காக ஏங்குகிறாயே. அவற்றின் பின்விளைவும் காயங்களாகத்தானே இருக்கும். பின்விளைவு துன்பமாயினும் உலகில் உள்ள எல்லா சுகங்களையும் அனுபவித்தபிறகு உலகைக் கைவிடுவேன் என்று நீ நினைத்தால் அது நடைபெறாது. ஏனெனில் உலக சுகங்களுக்கு எல்லையே இல்லை.

உலகில் இன்பங்களை நாடுபவர்களையும், மோட்சத்தை விரும்புபவர்களையும் பார்க்க முடியும். ஆனால் போகம்-மோட்சம் இரண்டிற்கும் ஆசைப்படாதவர்கள் அரிதாகவே இருப்பார்கள்.

ஒவ்வொருவனும் தனக்கு அநியாயம் இழைக்கப்படுவதாகக் கூறுகிறான். உலகில் இன்பங்கள் கொட்டிக்கிடக்கின்றன. ஆனால் சிலவற்றையே அனுபவிக்கும் வாய்ப்பு தனக்குக் கிடைக்கிறது. எங்கும் ரசம் நிறைந்த கலசங்கள். ஆனால் அணுகமுடியாதபடி சுவர்கள் தடுக்கின்றன. காவல்காரர்கள் தடுக்கிறார்கள் — இவ்வாறெல்லாம் ஒவ்வொருவரும் புகார் செய்கிறார்கள்.

அப்படியில்லை, நண்பா, யாரும் உன்னைக் கொடுமைப் படுத்தவில்லை. உண்மையில் கலசங்கள் ரசத்தால் நிரம்பியிருக்க

வில்லை. அவை கண்ணீர்க் குடங்கள். அவற்றை நெருங்கிய பின்தான் இந்த உண்மை தெரியவரும். உன் வாழ்க்கையை ஆராய்ந்து பார். கண்ணீரால் உன் வாழ்க்கைச் சரிதம் எழுதப்பட்டுள்ளது புரியும். அப்படி ஆகுமாறு மற்றவர்கள் அதை எழுதவில்லை. நீயேதான் அப்படி ஆகுமாறு எழுதினாய்.

**அன்றொரு நாள் கனவுக் காட்சியில்**
**சற்றே நான் புன்னகை செய்தேன்**
**பின்விளைவாய்க் கிடைத்தது**
**முடிவேயற்ற கண்ணீர் மாலை.**

**இன்னொரு நாள் கனவுக் காட்சியில்**
**பொன்னாரம் அணிந்து ஆடினேன்**
**பின்விளைவாய்க் கிடைத்தது**
**கால்-கை பூட்டும் இரும்புச் சங்கிலி!**

ஒவ்வோர் அற்ப சுகமும் ஆழ்ந்த துன்பத்தில் கொண்டுபோய்த் தள்ளுகிறது. சற்றே தெரியும் சுவர்க்கத்தின் பின்னால் எத்தனை நரகங்கள்! நாம் அனுபவித்த ஒவ்வொரு சுகமும் ஒரு கட்டத்திற்கப்பால் நம்மைப் பழிவாங்கத் தொடங்கு கிறது. ஒவ்வொரு சுகமும் சிதறும்போது நம்மை ஆழ்ந்த சோகத்திலாழ்த்துகிறது.

இப்படி ஒவ்வொரு சுகமும் கிடைத்தாலும் துன்பம், கிடைக்காவிடிலும் துன்பம் என்னும் நிலை உருவாகிறது. பணக்காரன்-ஏழை, திருமணமாகாதவன்-குடும்பஸ்தன் இப்படி எல்லாத் தரப்பினரும் துன்பத்தில் ஆழ்ந்துள்ளார்கள். எவனாவது திருப்தியுடன் காணப்பட்டால், அவன் வெற்றி-தோல்வி இரண்டிலிருந்தும் விலகி நிற்பவனாக இருப்பான். அவன் வாழ்க்கையை வெளியிலிருந்து சாட்சிபோல் பார்ப்பவனாக இருப்பான். தோற்பவனுக்கு சுகமில்லை என்பது தெரிந்ததுதான். வெல்பவனுக்கும் உண்மையான, நிரந்தரமான சுகமில்லை. இந்த இரண்டு நிலைகளையும் கடந்தவனே சுகமாக உணர்வான்.

'வாழ்க்கையைக் குறுகலாக்கும் எவ்வித ஆசையும் இல்லாதவன், எல்லாத் தரப்பிலிருந்தும் வெளிப்படையாக வாழ்பவன்; போகங்கள் மீது மட்டுமில்லாமல் மோட்சத்திற்கும்

ஆசைப்படாதவன்-அத்தகைய அதிசயமானவனே மாமனிதன்' **(சுலோகம் 161)**

**இ**ந்த சுலோகத்தின் கடைசியில் வரும் 'மஹாஷய்' என்னும் சொல் கவனிக்கத் தக்கது. 'ஆஷய்' எனில் எண்ணம், கருத்து, லட்சியம் என்றெல்லாம் பொருள்படும். தற்காலத்தில் கடிதப் போக்குவரத்தில் 'டியர் சார்' என்பதற்கு இந்தியில் 'ப்ரிய மஹாஷய்' (அன்புள்ள ஐயா) என்றெழுதப்படுகிறது. ஆனால் உன்னதமான எண்ணம் கொண்ட லட்சியவாதியே மஹாஷய் ஆவான்.

இதற்கு எதிரான ஆசைகள் கொண்டவன் அற்பாசைக் காரன் ஆகிறான். 'அல்பம்' என்று அவனை இகழ்கிறோம். பணத்தாசை, பதவியாசை போன்றவை அற்பாசையில் அடங்கும். பணத்தாசை பிடித்தவன் பணத்தைவிடவும், பதவியாசை பிடித்தவன் பதவியைவிடவும் தாழ்ந்துபோகிறான், அற்பமாகி விடுகிறான். ஏனெனில் அவன் தனது ஆசைக்கு அடிமையாக உள்ளான்.

பதவி ஆசை-நாற்காலி ஆசை-தாழ்வு மனப்பான்மையை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. ஆகவே அரசியல்வாதிகள் அனைவரும் நுணுக்கமான விதத்தில் தாழ்வு மனப்பான்மையால் பாதிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்கு சிகிச்சை தேவை. பதவி வெறியும் மனக்கோளாறின் ஒருவகையே.

தன்னிடம் சிறப்பு ஒன்றுமில்லை என்பதை நினைத்துத் தாழ்வு மனப்பான்மை உள்ளவன்தான் தன்னைப் பெரிய மனிதன் என்று காட்டிக் கொள்ள முயற்சிகளெடுக்கிறான். விளம்பரம் நாடுகிறான். 'நான் யார் தெரியுமா?' என்று சத்தம் போடுகிறான். 'நான்தான் கவர்னர்' என்கிறான். அதைக் கேட்டு நாலு பேர் அவனைக் கும்பிட்டால்தான் அவன் திருப்தியடைகிறான். அந்த அளவிற்குத் தாழ்வு மனப்பான்மை மனிதனை உட்புறமாக அரிக்கிறது.

மாமனிதன் யார்? தன்னைக் கட்டுப்படுத்துகின்ற எந்த விசேஷமான விருப்பமும் இல்லாதவன், திறந்த வாழ்க்கை உடையவன், உன்னத லட்சியங்கள் கொண்டவன்-

இத்தகையோனே மாமனிதன். மோட்சம் பெறுவது ஆசைகளில் தலையாயது. அதற்கு ஆசைப்படுபவனும் மாமனிதன் அல்லன் என்று அஷ்டாவக்ரர் கூறுவது கேட்டு நீ ஆச்சரியப்படலாம். ஏனென்றால் மோட்ச ஆசை பணத்தாசையைவிட பெரியதுதான்; பதவி ஆசையைவிட பெரியதுதான் என்று ஒப்புக் கொண்டாலும் அடிப்படையில் அதுவும் ஓர் ஆசைதானே. ஆசையின்மை என்னும் நிலைதான் உன்னை மாமனிதனாக உயர்த்தும்.

'எவனொருவன் அறம்-பொருள்-இன்பம்-வீடு, வாழ்வு-சாவு ஆகியவை மீது பற்றில்லாதவனோ அவற்றின் பயன்களிலும் ஆசை வைக்காதவனோ, அவன் பெருந்தன்மையின் சிகரமாக விளங்குகின்றவன் ஆவான். அத்தகையவன் அரியவன்.' **(சுலோகம் 162)**

**பெ**ருந்தன்மைக்கு, விசாலத் தன்மைக்கு எதிரானது அற்ப புத்தி. உனது ஆசை எத்துணை குறுகியதோ அதற்கேற்ப உன் ஆளுமையும் குறுகலாக இருக்கும். இந்த விஷயம் உன் கையில்தான் உள்ளது. உனது ஆசைக்கேற்ப உனது சிறையின் பரப்பளவு அமையும். நீ விடுதலை பெற வேண்டுமாயின் முதலில் எல்லா ஆசைகளிலிருந்தும், அத்தனை சிறைகளிலிருந்தும் விடுபடு. நீ எதற்குமே ஆசைப்படவில்லையெனில் அக்கணமே முக்தி பெற்றுவிடுகிறாய். ஆசையின்மையே மோட்சமென்பது. மோட்சம் என்பது ஆசைப்பட்டுப் பெறும் விஷயமன்று. ஆசையென்னும் அம்பைக் கொண்டு நீ மோட்சத்திற்குக் குறிவைக்க முடியாது. மோட்சம் என்பது அடைவதற்கான ஓர் இலக்கு இல்லை. அது ஒரு நிலை, மாமனிதனின் நிலை. உன் லட்சியம் விசாலத் தன்மை பெற்று, உன் மனத்தில் ஆசை எழுவது நின்று போனதும் நீ கடவுளாகிவிடுகிறாய். உனக்குள் கடவுள் எழுந்தருளி அமர்கிறார். அந்த பரம திருப்தியான நிலையில் புலன்களெல்லாம் தூய்மையாகி விடுகின்றன. உனது ஆன்மிகப் பயணம் நிறைவுற்றது. நீ உனது சொந்த வீட்டிற்கு வந்து சேருகிறாய்.

'எவனுக்கு எந்தவிதமான விருப்பமும் இல்லையோ, உலகம் அழிய வேண்டும் என்றோ, உலகம் இருப்பதால் தனக்கு

ஒன்றும் ஆட்சேபணை இல்லை என்றோ இவ்விரு நிலைப்பாட்டிலும் எவனுக்கு ஆர்வமில்லையோ, அவன் போற்றுதலுக்கு உரியவன். அவன் கிடைத்ததைக் கொண்டு சுகமாக இருப்பான்.' **(சுலோகம் 163)**

பொதுவாக, மோட்சம் பெற ஆசைப்படுபவன் உலகம் அழியும் நாளை ஆவலுடன் எதிர்பார்ப்பான். உலகம் அழியட்டும்; எல்லா பந்தங்களும் விலகட்டும்; பாசவலை அறுகட்டும்; மாயக் கனவு கலையட்டும் என்று எதிர்பார்க்கிறான்.

ஆனால் எவன் உலகம் அழிய வேண்டும் என்று விரும்புவதில்லையோ, அது இருந்துவிட்டுப் போவதில் அவனுக்கு விரோதம் இல்லையோ, எது எப்படியோ அப்படியே சரிதான், எது எப்படியிருக்கிறதோ அப்படியே நீடிக்கட்டும், எந்த மாற்றமும் தேவையில்லை என்றெல்லாம் எவன் நினைக்கிறானோ, அத்தகையவன் பாராட்டிற்குரியவன். கிடைத்ததை அவன் பிரசாதமாக நினைப்பான். கடவுள் தனக்கு வழங்கியிருக்கும் அளவே போதுமானது என்று அவன் கருதுவான். அதனால்தான் அவன் சுகமாக வாழ்வான் என்கிறார் அஷ்டாவக்ரர்.

தனக்கு ஏற்கெனவே கிடைத்துள்ளதைவிட கூடுதலாகக் கிடைத்திருக்கலாம் என்று அவன் எண்ணியதே இல்லை. வேறு விதமாகக் கிடைத்திருக்கலாம், அல்லது வேறு பொருளாகக் கிடைத்திருக்கலாம் என்றும்கூட அ்வன் நினைத்ததில்லை. இதுதான் ஞானம் அடைந்தவனின் நிலை. இதுதான் சாட்சி மனப்பான்மையாளனின் நிலை.

சாட்சி மனப்பான்மை பெறுவதற்கு உதவும் கருவி எதுவும் கிடையாது. சாட்சி ஆவதேதான் அதற்கான கருவியும் ஆகும். சாட்சி ஆவதற்கு நீ ஏதேனும் ஏற்பாடு செய்யவேண்டியிராது. நீ எப்படி உள்ளாயோ அதுவேதான் அதன் ஏற்பாடும். வெளிக் கண்களை மூடி, அகக் கண்களைத் திற. அவற்றின் மூலம் உள்ளே பார். 'நீ யார்?' என்று கண்டுபிடிக்கும் பேரார்வத்திற்கு விடை தேடு. எதுவெல்லாம் நீ இல்லை என நினைக்கிறாயோ அவற்றின் மீதுள்ள பற்று-பாசத்தைத் துற. கடைசியில் எது மிஞ்சுகிறதோ

அதுவே நீ. அந்தச் சுவை உனக்குக் கிடைத்துவிட்டால், அது வாழ்க்கையை முழுமையாகப் புரிந்துகொண்டதற்கு சமமாகும்.

அஷ்டாவக்ரக் கொள்கையில் மறுப்பு வாதமோ, எதிர் மறையோ கிடையாது. எது உள்ளதோ அதுவே பரிபூரணமானது தான். எது உள்ளதோ அது பிரம்மத்தின் தோற்றம்தான்; பிரம்மத்தின் விரிவுதான். நீயும் அந்த விரிவாக்கத்தின் ஓர் அங்கமாகிவிடு. பிறகு நீ எங்கிருந்தாலும், எப்படி இருந்தாலும், உனக்கு எது கிடைத்தாலும், நீ திருவிழாபோல ஆனந்தமாக உணர்வாய். நீ பாக்கியசாலி. இதனால் நீ வாழ்க்கை முழுவதும் ஒவ்வொருவருக்கும், ஒவ்வொன்றிற்கும் இயற்கையாகவே நன்றி யுள்ளவனாக இருப்பாய். இவ்வாறு 'தான்' என்ற அகங்காரமின்றி நன்றியால் நிறைந்து விளங்குபவனே உண்மையான ஆன்மிகவாதி.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! காமம்—சினம்—பேராசை—மோகம் முதலியவை காலத்தின் வெவ்வேறு பிரதிபலிப்புகளா? காலம் என்பதன் விளக்கம் என்ன?**

**கா**லம் குறித்து இரண்டு விதமாகச் சிந்திக்க முடியும். கடிகாரம் காட்டும் காலம் ஒன்று. அது வெளியுலக காலம். ஆன்மிகம் பயிலும் உனக்கு அதனுடன் சம்பந்தமில்லை.

உனக்குள்ளேயும் ஒரு கால ஓட்டம் இருக்கிறது. அது கடிகார ஓட்டத்துடன் தொடர்புடையதன்று. உன் உள் கடிகாரம் தியானத்தின்போது. சமாதியில் இருக்கும்போது சூனியமாகி ஓடாமல் நின்றுவிடும்.

நீ மகிழ்ச்சியாக இருக்கும்போது கடிகாரம் வழக்கமான, ஒரேமாதிரியான வேகத்தில்தான் ஓடுகிறது. ஆனால் உனக்குள்ளே இருக்கும் காலம் அவசரமாகப் பாய்ந்தோடுகிறது. நமக்குப் பிரியமானவருடன் சந்திப்பு நிகழும்போது பல மணி நேரமும் சில நிமிடங்களிலேயே முடிந்துவிட்டதுபோல் வருந்து கிறோம். கடிகாரத்தின் ஓட்டம் சீராகத்தான் உள்ளது. ஆனால் நேரம் போனதே தெரியவில்லை என்கிறோம். நீ மகிழ்ச்சியாக இருக்கும்போது காலம் சுருங்கிவிடுகிறது. நீ துன்பப்படும்போது காலம் நீள்கிறது. உன் தாயார் மரணப்படுக்கையில் இருப்பதாகவும், நீ அருகே உட்கார்ந்துள்ளதாகவும் வைத்துக்கொண்டால் ஒரு மணி நேரம் கழிவது ஓர் ஆண்டு போலிருக்கும். ஒவ்வொரு நிமிடமும் நொண்டியபடி இழுத்துக்கொண்டே செல்வதுபோல் தோன்றும். சுகமாக உணரும்போதோ ஒலிம்பிக் பந்தயம்போல் சட்டென முடிவது போலிருக்கும்.

ஆகவே, சுகமான நிலையில் காலம் பறப்பதுபோல் தோன்றுவதால் அது எப்போது முடிந்துபோனது என்பது கூட தெரிவதில்லை. இதேபோல், துக்க நிலையில் நேரம் நகர்வதாகவே தெரியவில்லை. துக்கத்தின் ஒரு மணி நேரம் சுகத்தின் ஒரு மணியைவிட நீண்டதாகத் தோன்றுகிறது.

நரக வாழ்க்கைக் காலத்திற்கு முடிவே இல்லை என்று சொல்வது இதனால்தான். அங்கே எப்போதும் துன்பத்தின் ஆட்சியே நடப்பதால் ஒவ்வொரு வினாடியும் நீண்ட நேரம்போல் தோன்றும். அங்கே விதம் விதமான தண்டனைகள் தொடர்ந்து தரப்படுகின்றன. இதற்கு மாறாக, சுவர்க்கத்தில் எல்லாம் விரைந்து நிகழும். நீண்ட காலமும் ஒரு நிமிடத்தில் கழிந்துவிட்டதாகத் தோன்றும்.

சுகம் வேறு. மகாசுகம் வேறு. சுகம் உலக இன்பங்களைக் குறிக்கிறது. அப்போது காலம் வேகமாக ஓடுவது தெரிகிறது. மகாசுகம் ஆன்மிகத்தின் உச்சகட்ட நிலையைக் குறிக்கிறது. அங்கே துக்கமே கிடையாது. அப்போது நேரம் ஓடுவதுமில்லை, ஊர்வதுமில்லை. காலம் என்னும் கூறு அங்கே கிடையாது. இது காலத்தைக் கடந்த நிலை; கால சூனிய நிலை; இயக்கமற்ற நிலை.

இந்த உள்ளிருக்கும் காலக் கூறைத்தான் புரிந்துகொள்ள வேண்டும். வெளியுலக கடிகாரம் அதன் போக்கில் ஓடியபடி இருக்கிறது. நீ ஞானியாக இருந்தாலும், முட்டாளாக இருந்தாலும், உன் சுகத்திலும், துக்கத்திலும், நீ சமாதிநிலையில் இருந்தாலும் வெளியுலக கடிகாரம் அதைப் பொருட்படுத்துவதில்லை. ஆனால் நீ தியானத்தில் ஆழ்ந்துவிட்டால், பல மணி நேரம் ஆகியிருந்தாலும், கண்ணைத் திறந்து பார்க்கும்போது காலம் அப்படியே நின்றுபோயிருந்ததுபோல் உனக்குத் தோன்றும். ஆனால் வெளியுலக கடிகாரம் மூன்று மணி நேரம் கழிந்து போனதைக் காண்பிக்கும்.

**ரா**மகிருஷ்ண பரமஹம்சர் தியான சமயம் ஆழ்ந்த சமாதிநிலைக்குச் சென்றுவிடுவார். அப்போது அவரது உடல் கல்லாகி விட்டதுபோல் இருக்கும். இதைக் கண்டு சீடர்கள் பயந்துவிடுவார்கள். அவர் உள்முகப் பயணம் மேற்கொண்டு

விட்டது போலிருக்கும். அவர் திரும்புவாரா, திரும்பமாட்டாரா; அவரால் திரும்ப முடியுமா-முடியாதா என்றெல்லாம் சீடர்கள் கவலைப்படுவார்கள்.

ஒருமுறை அவர் தொடர்ந்து ஆறு நாள் சமாதியில் இருந்தார். மூச்சு விடுவதுகூட தெரியவில்லை. எல்லாம் சூனியமாகத் தோன்றியது. சீடர்கள் இனி அவர் உயிருடன் திரும்புவார் என்ற நம்பிக்கையை இழந்துவிட்டனர். திடீரென அவர் கண்விழித்தார். "தாங்கள் சுய உணர்வுக்கு மீள ஆறு நாளாகிவிட்டது தெரியுமா?" என்று கேட்டனர். அதற்கு ராமகிருஷ்ணர், "நீங்கள் சொல்வது ஆச்சரியமாக உள்ளதே. நான் இப்போதுதான் சமாதியில் பிரவேசித்து ஒரு நிமிடத்தில் வெளிவந்துவிட்டதாக அல்லவா நினைத்தேன்" என்று பதில் கூறினார்.

இதனால்தான் தியானிகள் தற்காலத்தில் வாழச் சொல்கிறார்கள். 'இப்போது இங்கேயே வாழ்' என்கிறார்கள். இதற்கப்பால் உனக்கு ஆசைகள் கிடையாதெனில் காலம் என்பதன் தேவை முடிந்துவிட்டது. நாளை என்பது வேண்டுமானால்தான் காலம் தேவைப்படுகிறது. இன்று துன்பமாக உள்ளதால் சுகத்திற்காக நாளையப் பொழுது தேவைப்படுகிறது. இன்று கண்ட கனவு நனவாக நாளை என்பது தேவை. ஆனால் நாளை என்பதும் இன்றுபோல்தான் இருக்கப்போகிறது. ஆகவே சுகத்தை அதற்கு மறுநாள் எதிர்பார்க்கிறாய். இப்படி நாட்கள் கடந்து போகின்றன. ஆனால் பலன் சூனியம்தான்.

எதிர்காலம் இன்னமும் வரவில்லை. கையிலுள்ளதெல்லாம் நிகழ்காலம்தான். போன காலம் போனதுதான். இன்னும் வராத காலம் வந்துசேரவில்லை. எதிர்காலத்துக்கும் கடந்த காலத்துக்கு மிடையே சிறு பாலம்போல் சில மணி நேரமே கைவசமுள்ளது. அந்தச் சிறிய கால அளவில் மூழ்கிவிடு. அந்த கால அளவில் வாழ மட்டும்தான் செய்யலாம். வாழ்க்கைக்கான திட்டம் தயாரிக்க முடியாது. நிகழ்காலத்தில் சத்தியம் கிடைக்கும். ஆனால் கனவைப் பரப்ப முடியாது. கனவு காண கால அவகாசம் தேவை. சத்தியத்தைக் காண காலம் என்பது தேவையில்லை. பேராசைக்

கனவாக இருந்தால் அதைக் கண்டு முடிக்க நீண்ட காலம் தேவைப்படும்.

நம்மிடம் எவ்வளவு ஆசைகள் உள்ளனவோ அந்த அளவிற்கு நமக்கு சாவு பயம் உண்டாகிறது. சாவிடம் பயம் என்றால் என்ன அர்த்தம்? சாவு என்ன செய்கிறது? அது காலத்தைப் பறித்துக் கொண்டு விடுகிறது. எதிர்காலம் என்னும் கதவை அடைத்துவிடுகிறது. அது எதிர்கால வாய்ப்புகளுக்கு இடமில்லாமல் செய்துவிடுகிறது.

ஆனால் கெட்டிக்காரர்களான மனிதர்கள் இதைச் சமாளித்துச் சரிக்கட்டவும் வழி கண்டுபிடித்துள்ளனர். அவர்கள் அடுத்த பிறவி உண்டு என்கிறார்கள். இதனால் ஆசைகள் விரிவடைகின்றன. 'இப்பிறவியிலே அனுபவிக்காததை அடுத்த பிறவியில் பார்த்துக் கொள்ளலாம், அவசரமில்லை' என்கின்றனர். இதையே சாவை ஏமாற்றும் முயற்சியாகக் கருதுகின்றனர். சாவு பயம் குறைந்து போகிறது. நாளை என்பது கிடையாது என்பதுதான் சாவின் மிரட்டல். நம் ஒவ்வொருவரின் காலத்தை அழிப்பதால்தான் சாவுக்கு காலன் என்று பெயர். நாளை என்பது இல்லை என்பது தெரிந்ததும் உயிர் நடுங்குகிறது. இன்றோ எதுவும் கிடைக்கவில்லை. 'இன்று' என்னும் நாளில் என்றுமே எதுவும் கிடைக்காது. இன்று விரயமாகிவிட்டது. நாளை உண்டு என்னும் நம்பிக்கையுடன் உயிர்வாழ்கிறோம். அதையும் சாவு பிடுங்கிக்கொள்கிறது.

மரணம் உண்மையில் உன்னிடமிருந்து எதையும் பிடுங்குவதில்லை — உன் ஆசைகளைத் தவிர. ஆசைகள் நீங்கியவனைச் சாவு மிரட்ட முடியாது. கனவுகள் காணாதவனை (எதிர்பார்ப்புகள் இல்லாதவனை) சாவு ஒன்றும் செய்ய முடியாது. சாவால் கனவுகளைத்தான் சிதைக்க முடியும். சத்தியத்தை அழிக்க முடியாது. எதிர்பார்ப்புகள் இல்லாதவனுக்கு எமபயம் கிடையாது. சாவு அவனுக்குக் கிடையாது. அவன் அமிர்த-அம்ருத-ஆகிறான் (ம்ருத=இறந்த).

கனவுகளைக் கடந்தவன் காலத்தைக் கடந்தவனாகிறான். அவனுக்கு அமரத்துவம் கிடைக்கிறது (மர்னா=மரித்தல்).

சாதாரண, சராசரி மனிதன் அமரத்துவம் குறித்துத் தவறான கருத்துக் கொண்டுள்ளான். அவன் அமரத்துவம் என்றால் நெடிய வாழ்க்கை, முடிவற்ற வாழ்க்கை என நினைக்கிறான். என்றும் வாழ்வோம், இறக்க மாட்டோம் என்று கற்பனை செய்கிறான். காலம் நீண்டுகொண்டே போவதுதான் அமரத்துவம் என்று அவன் கூறுகிறான். ஞானி கூறும் அமரத்துவத்தின் பொருள் வேறு. கால நீட்டிப்பை அவர் அமரத்துவம் என்று கருதவில்லை. அவர் அமரத்துவம் என்றால் காலம் என்ற அம்சத்திற்கு இனி வேலை இல்லை என்று அர்த்தம் கொள்கிறார்.

இவ்வாறு ஞானியும் அறிவிலியும் சில சமயம் ஒரேமாதிரியான சொற்களைக் கூறுகிறார்கள். ஆனால் அவற்றின் அர்த்தம் முற்றிலும் வித்தியாசமாக இருக்கிறது. 'நீ அமரனாகி விட்டாய்' என்று ஞானி கூறினால், நீ என்றும் சாகாமல் வாழ்வாய் என்று அதற்கு அர்த்தமில்லை. அவர் சொல்வதன் அர்த்தம் நிகழ்காலத்திலேயே மனம் குவித்து வாழ்வது நிரந்தர வாழ்க்கை என்பதாகும். வாழ்தல் என்பது கடந்த காலம், எதிர்காலங்களில் சாத்தியமில்லை. இக்கணத்தில் நீ என்பவன் இருக்கிறாய். இது போதும். இதைவிட அதிகம் தேவையில்லை. இந்த நிமிடம்தான் நிரந்தரமானது, சாஸ்வதமானது. இதில் நீளம் கிடையாது, ஆழம் உண்டு. இக்கணத்தில்தான் நீ வாழ்க்கையை அனுபவிக்க முடிகிறது.

காமம்-சினம்-பேராசை-மோகம் முதலியவை நிழல்கள் போல் காலத்தின் பிரதிபலிப்புகளா என்று நீ கேட்டாயல்லவா? காமம் மட்டுமே காலத்தின் பிரதிபலிப்பாகும். காலம் காமத்தின் நிழல் என்று கூறுவது அதிகம் பொருந்தும். காமம் வீழ்ந்து போனால் காலமும் விழுந்துவிடும். காமம்தான் வேர் என்பதால் அதை வீழ்த்தவே நீ முயல வேண்டும். காமம் என்பது பெண்ணாசையை மட்டுமல்ல, எவ்வகை இச்சையையும் குறிக்கிறது. ஒன்று வேண்டும் என்று ஆசைப்பட்டாலே அது காமம்தான். தான் எப்படியோ அதனுடன் திருப்தியடையவில்லை என்பது இதன் பொருள். இன்னும் வேண்டும் என்ற துடிப்பு மூள்கிறது. தன் கனவுகள் நிறைவேற வேண்டும் என்னும் ஏக்கம் சூழ்கிறது.

கடுகளவு அதிருப்தி இருந்தாலும் அதை நீக்கி கொள்ளும் ஆசை தோன்றுகிறது. அந்த ஆசை பரவுகையில் காலம் என்பதும் தோன்றுகிறது. ஆகவே காமமும் காலமும் ஒரே காசின் இரண்டு பக்கங்கள் எனலாம்.

உனது ஆசை நிறுவேறுவதை யாராவது தடுத்தால் உனக்குக் கோபம் பிறக்கிறது. ஆகவே கோபம் என்பது மூல உணர்வு இல்லை. அது காமத்தின் பின் கிளைவிளைவு (by-product) மட்டுமேயாகும். நீ பந்தயத்தில் வெல்ல வேண்டுமென வேகமாக ஓடும்போது ஒருவன் வழிமறித்தால் கோபம் பொங்குவது காமம் தடைப்படுவதால்தான்.

அற்பமான பொருட்கள் மீதும் உனக்குக் கோபம் வரக்கூடும். நீ கடிதம் எழுத உட்காருகிறாய். பேனா சரியாக எழுதவில்லை. கோபத்தில் நிப்பை ஓங்கிக் குத்துகிறாய். பிறகு இப்படி பார்க்கர் பேனாவைக் கெடுத்ததற்காக வருந்துவாய். அப்படிப் பேனாவை ஓங்கி அடித்ததன் அர்த்தமென்ன? அது ஓர் அடையாளம், உணர்ச்சி வெளிப்பாடு. நீ காதலிக்குக் கடிதம் எழுத உட்கார்ந்தாய். சொற்கள் வந்து கொட்டுகின்றன. கவிதை நடை இயல்பாக வந்தது. இந்த சமயம் பார்த்துப் பேனா 'மக்கர்' செய்தால், அது கொடிய விரோதிபோல் நமக்குத் தோன்றாதா?

எனக்குத் தெரிந்த கண்ணியமான ஒருவர் கிரிக்கெட் பைத்தியம். எங்கு கிரிக்கெட் போட்டி நடந்தாலும் டிரான்ஸிஸ்டர் வைத்து 'ஸ்கோர்' கேட்டபடி இருப்பார். ஒருமுறை அவர் ஆதரித்த அணி தோற்றுவிட்டது. கோபத்தில் அவர் டிரான்ஸிஸ்டரைத் தூக்கி எறிந்துவிட்டார்! தோற்றதற்கும் ரேடியோவை வீசி எறிந்ததற்கும் என்ன சம்பந்தம்? ரேடியோமீது எந்தத் தப்பும் இல்லை. ஆனால் கோபத்தை வெளிப்படுத்த அச்சமயம் கைக்கருகில் வேறு பொருள் இல்லாமல் போய்விட்டது.

நீ விரும்பும் விதமாக ஒரு செயல் நடைபெறாவிடில் உனக்கு வெறிபிடித்து விடுகிறது. பிறகு நீ என்ன செய்கிறாய் என்கிற சுயவுணர்வு உனக்கு இருப்பதில்லை. கோபத்தில் சிலர் ஜடப்பொருளைக்கூட திட்டுவதுண்டு. கார் உடனே கிளம்பா

விட்டால் 'சனியன் பிடிச்ச கார்' என்று நிந்திக்கிறார்கள். அச்சமயம் அவர்கள் யோசித்துப் பார்ப்பதில்லை. அவர்களின் மூளை வேலைசெய்வதில்லை. நீ அவசரமாக அலுவலகம் போக வேண்டியதுள்ளது. காரோ நடுவழியில் நின்றுவிட்டது. உனக்கு கோபம் வருகிறது. நீ காரைக் கண்டபடி திட்டுகிறாய். ஆனால் கார் வேண்டுமென்றா ஓட மறுத்தது?

நீ உன் கோபத்தை ஆராய்ந்து பார். கோபம் மூல உணர்வாக எழவில்லை. விருப்பம் (காமம்) நிறைவேறுவதில் எங்கெல்லாம் இடைஞ்சல் ஏற்படுகிறதோ அங்கு கோபம் பீறிடுகிறது. எதன் மீதான காமம் (விருப்பம்) நிறைவேறுகிறதோ அப்பொருள் (நபர்) நம் கையைவிட்டுப் போகக்கூடாதென்ற மோகம் எழுகிறது.

ஆகவே மோகமும் மூல உணர்வில்லை. நீ ஆசை காரணமாகப் பணம் சம்பாதித்தாய். பிறகு மோகம் காரணமாக அதை இரும்புப்பெட்டிக்குள் பூட்டிவைத்தாய். வேறு யாரும் அதன் அருகே நெருங்க முடியவில்லை. அதைப் பாம்பு காப்பதுபோல் சீறுவாய். முடிந்தவரையிலும் செலவு செய்யாமலிருந்தாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் ஊரில் ஆற்றில் வெள்ளம் வந்தது. முல்லாவின் மகன் ஆற்றில் விழுந்துவிட்டான். இதைக் கவனித்த ஒரு போலீஸ்காரர் தன் உயிருக்கு ஆபத்து நேரலாம் என்பதைப் பொருட்படுத்தாமல் ஆற்றில் குதித்தார். கஷ்டப்பட்டுக் காப்பாற்றி, அவனிடம் விலாசம் கேட்டு முல்லாவின் வீட்டிற்கு அழைத்து வந்தார். வீட்டை அடைந்ததும் பையன் உள்ளே ஓடினான். உள்ளேயிருந்து பையனின் பெற்றோர் வெளிப்பட்டு, குறைந்தபட்சம் நன்றியாவது கூறுவார்கள் என்று போலீஸ்காரர் காத்திருந்தார்.

சில நிமிடங்களுக்குப் பின் முல்லா பையனுடன் வந்தார். "நீங்கள்தான் என் மகனைக் காப்பாற்றியவரா?" என்று போலீஸ்காரரிடம் கேட்டார். போலீஸ்காரர் மகிழ்ச்சியடைந்தார். முல்லா பணமோ, பரிசோ வழங்குவார் என எதிர்பார்த்தார். "ஆம், ஐயா, நான்தான் காப்பாற்றினேன். மிகவும் ஆபத்தான சூழ்நிலையாக இருந்தது." என்று தெரிவித்தார்.

“நீங்கள்தான் என் மகனை மீட்டுக்கொண்டு வந்தீர்கள் என்றால், இவன் அணிந்திருந்த தொப்பி எங்கே காணாமல் போனது? அதையும் ஏன் மீட்கவில்லை?'' என்று முல்லா கேட்டார் அதட்டலாக!

ஏழையைவிட பரம ஏழையாக இருப்பவன் பணக்காரன் தான்! ஏழை கையிலிருக்கும் பணத்தைச் செலவிட்டு வாழ்க்கையைச் சற்றாவது அனுபவிக்கிறான். அன்றாடம் சம்பாதிப்பதை அன்றன்றே செலவிட்டு ஓரளவு மகிழ்கிறான். அவனால் மிச்சப்படுத்த முடியாது. ஆனால் பணக்காரனிடம் பணம் சேரச் சேரக் கருமித்தனம் அதிகரிக்கிறது. அவன் எதையும் அனுபவிப்பதை நிறுத்திக்கொண்டு அதிகபட்சம் சேமிக்கிறான். காலப்போக்கில் அவன் தான் எதற்காகப் பணத்தை இப்படி மிச்சப்படுத்தினோம் என்பதையே மறந்துபோகிறான். பணத்தைச் செலவழிக்காமல் பதுக்கிவைப்பதே அவனது வாழ்க்கையின் ஒரே லட்சியமாக அமைந்துவிடுகிறது.

ஆகவே மோகம் என்னும் தீவிரப் பிடிப்பும் ஒரு கிளைவிளைவுதான். கிடைத்ததை வைத்து யாருக்குத்தான் திருப்தி விளைகிறது? ஆகவே அதிருப்தி என்னும் வலை விரிந்தபடி செல்கிறது. ஆயிரம் பெற்றவன் பத்தாயிரம் எதிர்பார்க்கிறான். பிறகு லட்சம் தேவைப்படுகிறது. உன்னிடமுள்ள கையிருப்பிற்கும் உன் எதிர்பார்ப்பிற்கும் இடையே பத்து மடங்காவது வித்தியாசம் இருப்பது வழக்கமாகிவிட்டது.

வாழ்க்கையின் கணிதத்தை நீ கவனித்தால் நீ ஆச்சரியப் படுவாய். உன்னிடம் ஒரு ரூபாய்தான் இருந்தபோது பத்து எதிர்பார்த்தாய். உன்னிடம் கோடி ரூபாய் இருந்தால் பத்து கோடி எதிர்பார்ப்பாய். இப்படி ஒன்பது மடங்களவு பற்றாக்குறை எப்போதும் இருக்கும். இப்படி காமம் (ஆசை) பல மடங்களவு பெருகிக்கொண்டே போவதே பேராசை (லோபம்) என்பது.

இவ்வாறாக, சினம்-மோகம்-பேராசை அடிப்படையான உணர்வுகள் அல்ல. ஆகவே நீ இவற்றுடன் நேரடியாக மோதாதே. சிலர் மோதப் பார்க்கிறார்கள். மோதினால் வெற்றி கிடைக்காது. விதையுடன் மோது. அதைவிட்டு இலைகளுடன் மோதுவதால்

என்ன பயன்? வேரை வெட்டு. கிளைகளை வெட்டி என்ன பயன்? நீ கோபத்துடனேயே மோதியபடி இருந்தால் ஒரு மாறுதலும் விளையாது. காமம் என்னும் மரத்தில் தொடர்ந்து புதிய இலைகள் தோன்றும். நீ வெட்ட-வெட்ட ஆசை மரம் அதிக வலுப்பெறும். ஆகவே கிளை உணர்வுகளுடன் மோதாதே. மூலத்தை, அடிப்படையை எதிர்த்துநில்.

காமத்தை வெட்டினால் கோபம்-மோகம்-பேராசை தாமாகவே பலம் இழந்துவிடும். காமத்தை வெட்டுவதால் காலம் என்னும் கூறும் பலகீனமாகிவிடும். நீ பரிபூரண நிலையை அடையும் கட்டம் உருவாகிவிடும். நீ இருக்கும் விதத்திலேயே உனக்கு ஆழமான திருப்தி உண்டாகும். உள்ளம் ஓர் அலைகூடஎழாமல் அமைதியாக விளங்கும். எந்த மாற்றமும் தேவைப்படாது. இருக்கும் விதமே சரியெனத் தோன்றும். கடவுளை நினைத்து நன்றி உணர்வு பெருகும். இந்த சூழ்நிலையில் காலம் என்ற ஒன்றே இருக்காது. அப்போது நீ காலத்தைக் கடந்தவன் ஆகிறாய்.

நான் அடிக்கடி உனக்குக் கூறும் அறிவுரை இதுவே. நீ எது செய்தாலும் முழு லயிப்புடன் செய். காலம் என்பது நினைவில் வராதபடி செயலில் ஆழ்ந்துவிடு. அதுதான் தியானம் என்பதும். நீ தோட்டத்தில் பள்ளம் தோண்டிக் கொண்டிருந்தால் தோண்டுதல் என்னும் அச்செயலிலேயே உன்னை மறந்து ஈடுபடு. தோண்டுதலிலேயே சுவையை உணர்ந்து, இதற்குமேல் ஒன்றும் கிடையாதுபோல் திருப்தி பெறு. அப்போது பள்ளம் தோண்டுவதே கூட தியானம் ஆகிவிடும். அப்போது நீ காலம் என்னும் எல்லையைக் கடந்துவிடுவாய். தியானத்தின் ஆன்மிக ரசத்தைப் பள்ளம் தோண்டும் செயலிலேயே பெறுவாய்.

எங்கே காலம் இல்லாமல் போகிறதோ அந்நிலையே தியானம். எங்கே காலம் சூனியமாகிறதோ அந்நிலையே சமாதி.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் அடிக்கடி ஒரு குறிப்பிட்ட உபதேசம் செய்கிறீர்கள். 'நீ எப்படி உள்ளாயோ அப்படியே உன்னை ஏற்றுக்**

**கொள்வதுதான் சுகமும் அமைதியும் பெறும் வழி' என்று கூறுகிறீர்கள். உடலைப் பொறுத்தவரையில் முதுமையைத் தவிர மற்றவற்றை அப்படியே ஏற்பதில் சிரமம் தெரியவில்லை. என் மனத்தில் பேராசை, பகைமை, வெறுப்பு, வன்முறை, அழிக்கும் வெறி முதலியவை தவிர வேறென்ன உள்ளது? என்னைவிட குறுகிய புத்தி உடையவனோ, அற்பமான நோக்கங்கள் கொண்டவனோ இருக்க முடியாது. ஆகவே இந்த நிலையிலுள்ள என்னை அப்படியே நான் ஏற்றுக்கொள்வதா? இது சரியான அணுகுமுறையா?**

**நீ** ஒப்புக்கொண்டாலும், ஒப்புக்கொள்ளாவிடிலும், எது எப்படியோ அப்படியேதான் இருக்கிறது. உன் கருத்துக்காக அது மாறிவிடாது. முதுமை வந்தால் வந்ததுதான். அதை மறப்பதால் என்ன வித்தியாசம் உண்டாகும்? நீ முதுமையை எதிர்த்தால், நீ முதுமைக்கால அமைதியையும் வசதிகளையும் சேர்த்தே இழப்பாய். முதுமையில் கனிவையும் கண்ணியத்தையும் நீ உணர மாட்டாய். முதுமையும் இயற்கைத் தரும் பிரசாதம். அது கிடைக்காமல் போய்விடும். முதுமை எப்படியும் பின்வாங்காது. நீ அங்கீகரிக்காவிடில் அது நீங்கிவிடாது.

முதுமையை முகம் சுளிக்காமல் ஏற்றுக்கொண்டவனின் முகத்தில் ஒருவகையான அழகு தெரியும். அத்தகைய அழகை இளைஞனின் முகத்திலும் காண முடியாது. இளைஞனின் அழகில் காய்ச்சல் அடிப்பதுபோல் ஒரு தகிப்பு இருக்கும்; துடிப்பு இருக்கும். முதுமையின் அழகில் குளிர்ச்சி துலங்கும். இளமையின் அழகில் இன்ப நுகர்ச்சிக்கான அலைகள் பொங்கும். இளமையின் அழகில் புயல்வெறி வெளிப்படும்.

முதுமையின் அழகில் புயல் வந்தது, நீங்கியது. ஆழ்ந்த அமைதி சூழ்ந்ததுபோல் சாந்தம் தெரியும். மேகங்கள் திரள்கின்றன; புயல் வந்தது; மின்னல் வெட்டியது; இடி முழங்கியது. பிறகு எல்லாம் நீங்கிவிட்டது. புயலுக்குப்பின் இயற்கையில்

எங்கும் வர்ணிக்க முடியாத அமைதி நிலவுகிறது. அத்தகைய அமைதிதான் முதுமையின் சௌந்தர்யத்தில் காணப்படுகிறது.

முதுமையையும் ஒரு வரமாகக் கருது. வயதானவருக்குத் தலைநரைத்து விடுகிறது. அதற்காக வருந்தாமல் அந்த மாறுதலை அப்படியே ஏற்றுக்கொண்டால், நரைத்த கேசம் இமயமலையின் வெண்பனிக்கு சமமாகிவிடும். தனது நரை முடியிலும் அழகு தெரியும்.

நீ மனத்தளவில் ஏற்றுக்கொள்ளாவிடிலும், தயாராக இல்லாதபோதிலும், முதுமை வந்துவிட்டால் அதைத் தடுக்கவோ, மாற்றவோ முடியாது. நீ எதிர்ப்புக் காட்டினால் உன் படபடப்பும் மன இறுக்கமும்தான் அதிகரிக்கும். முதுமை முன்பைவிட, நீ நினைத்ததைவிட, மேலும் விகாரமாக, மேலும் குரூபமாக உனக்குத் தோன்றும். முதுமையை முகம் சுளிக்காமல் ஏற்றாலும் அது பரவுவது நிற்காது என்பது உண்மைதான். அது யாருக்குமே சாத்தியமில்லை. ஆனால் முதுமையை அதன் தனிப்பட்ட அழகிற்காக ஏற்பதால், அதன் கடுமை குறையும், கசப்பு குறையும்.

**உயிரில் சோர்வு, வாழ்வில் களைப்பு;**
**கனவுகள் சிதறி, தாரகையாய் மறைதல்;**

**விருப்பங்கள் நிறைவேறாத இலையுதிர் காலம்;**
**எதிர்பார்ப்புகள் மறைந்தன எட்டு திசைகளிலும்,**

**ஆகாயத்தை என் நோஞ்சான் தோள்களில்**
**தூக்கியபடி தனிமையில் நிற்கிறேன்;**
**இது பெரிய சாதனையில்லை எனினும்**
**மாற்றுவழி வேறொன்றுமில்லையே.**

ஆனால் முதுமையை இப்படி வேறுவழியின்றி சுவீகரிக்கக்கூடாது. சூழ்நிலையின் அழுத்தத்தால் ஒன்றை ஏற்பதை சுவீகரித்தல் என்று சொல்ல முடியாது. இயலாமையால் ஒன்றை ஏற்பது விரும்பத்தக்கதன்று. வருவது வந்தே தீரும் என்று முதுமை வரும்போது, இதுவரை வாழ முடிந்ததே என்ற நன்றியுணர்வுடன் அதை வரவேற்றலே அதை அங்கீகரிப்பது என்பதாகும்.

உரிய வரவேற்பின்றி சுவீகரிப்பு என்பது உண்மையாக இருக்காது. ஏற்பு என்பதன் உயிரே வரவேற்பில்தான் உள்ளது. ஏற்பு என்பது பின்வருமாறு வெளிப்படும்: "இறைவா, உனக்கு என் நன்றி. குழந்தைப் பருவத்தின் அறியாமை நிலையைக் கொடுத்தவன் நீ. இளமையில் பாதி அறியாமையும் பாதி அறிவுமாகக் கலந்த மனநிலை தந்தவன் நீ. முதுமையில் சுத்தமான அறிவு அளித்தவன் நீ. இளமையில் அழகுணர்ச்சி காரணமாக வாழ்க்கை புயல்வேகத்தில் கழியச் செய்தாய். இப்போது, முதுமையில் சாந்தம் நிறைந்த மென்மையான அழகை எனக்களித்துள்ளாய். மிக்க நன்றி.

நீ வாழ்க்கையை ஏற்பு உணர்வோடு பின்பற்று. வாழ்க்கை ஓட்டத்தில் கிடைப்பதைக் கொண்டு திருப்தியாக இரு. உனக்குள் ஆழ்ந்த நன்றியுணர்வு சுரக்கட்டும். தற்போது மூடியுள்ள எல்லாக் கதவுகளையும் திறக்கக்கூடியதான முதன்மை சாவி (மாஸ்டர் கீ) உன் கைக்கு வந்துசேர்ந்தது போலிருக்கும். வாழ்க்கையின் எந்த ரகசியமும் உனக்குத் தெரியாமல் மறைந்திருக்க முடியாது. சுவரில் முட்டிக்கொள்வதால், ஓலமிடுவதால், ஒரு பயனும் இல்லை. ஓலமிடுபவன் பிற்காலத்தில் வாழ்க்கையை அதன் போக்கிலேயே அங்கீகரித்தாலும், அதற்குள் அவன் களைத்துப்போய் தோல்வி உணர்வுடன் இருப்பான். 'சரி, அங்கீகரித்துத் தொலைப்போம்' என்று அரை மனதாக முடிவெடுப்பான்.

நம்மிடையே 'சமர்ப்பணம்' என்றொரு சொல் வழங்கி வருகிறது. இதை ஆங்கிலத்தில் 'சரண்டர்' என்று மொழி பெயர்ப்பது சரியானதாகத் தோன்றவில்லை. ஆகவே ஐரோப்பாவிலிருந்து வரும் சாதகர்களுக்கு சமர்ப்பணமாகுதல் குறித்து முழுத்தெளிவுடன் விளக்க முடிவதில்லை. 'சரண்டர்' என்னும் சொல்லின் பின்னணியில் முயற்சியில் தோல்வி என்னும் கருத்து உள்ளது. இரு நாடுகளிடையே போர் நடந்தால், தோல்வி யுறும் நாடு 'சரண்டர்' ஆகிறது. தோல்வியடைந்த சிப்பாய் எதிரி சிப்பாயிடம் தன் ஆயுதங்களை 'சரண்டர்' செய்கிறான்.

இந்திய மொழிகளிலுள்ள அர்த்தத்தின்படி, காதலிலும் சமர்ப்பணம் உண்டு. காதலில் தோல்விபோல் தடைகள் பின்னிக்கிழுப்பினும் அதுவும் ஒருவகை வெற்றியே.

ஓர் எதிரி தன் எதிரியிடம்தான் சமர்ப்பணம் ஆகவேண்டு மென்றில்லை இந்தியாவில் சீடன் குருவிடம் சமர்ப்பணம் ஆகிறான். புருஷோத்தமன் (போரஸ்) அலெக்சாந்தரிடம் தோல்வியை ஒப்புக்கொண்டதும், ஜெர்மனி இங்கிலாந்துக்கு மண்டியிட்டதும் 'சரண்டர்'. அச்சொல்லையே இங்கு வரும் ஐரோப்பிய சாதகர்களிடம் நான் சொன்னால் அவர்கள் திடுக்கிடுகிறார்கள். 'தோல்வியை ஒப்புக்கொள்' என்கிறாரே என்று திகைக்கிறார்கள். யார்தான் தோல்வியடைய சம்மதிப்பான்? நம் ஆன்மிக மொழியில் சமர்ப்பணம் என்றால், 'வந்துவிட்டாய். இனி ஓய்வெடு. அலட்டிக்கொண்டது போதும்' என்று அர்த்தம். நீ உன்னைவிட உயர்ந்த ஒருவரிடம், நீ நேசிப்பவரிடம் சமர்ப்பணமாவது தோல்வியாகாது.

ஞானி லாவோத்ஸு, சொல்கிறார்: 'என்னை யாரும் தோற்கடிக்க முடியாது. ஏனென்றால் நான் ஏற்கெனவே தோற்றுப்போனவன்தான். நீ என்னை வெல்ல முடியாது. ஏனெனில் நான் யாரையும் வெற்றிகொள்ள விரும்பவில்லை. நீ என்னைத் தோற்கடிக்கவும் முடியாது. ஏனெனில் நான் முன்கூட்டிய சமர்ப்பணமாகிவிட்டேன்.

அது என்ன சமர்ப்பணம்? வாழ்க்கை எப்படியுள்ளதோ அப்படியே ஏற்பது; எதைக் காட்டுகிறதோ அதையே காண்பது; எதைக் கொண்டுவந்து தருகிறதோ அதையே வாங்கிக்கொள்வது- இதுதான் சமர்ப்பண உணர்வு. எங்கும் தடையில்லை, எதிர்ப் பில்லை, போராட்டமில்லை. திறந்த மனத்துடன் வாழ்க்கையை எதிர்கொள்வது சமர்ப்பணம்.

'சுவீகரிப்பதில்தான் சுகம்' என்று சொல்வதுகூட துல்லிய மில்லை. இதன் பொருள். முதலில் ஏற்பு, பிறகு அதனால் சுகம் என்பதுபோல் அமைகிறது. மாறாக, சுவீகரிப்பே சுகம்தான். இரண்டும் ஒரே சமயம் நிகழ்பவை.

அங்கீகரிக்காமை துக்கத்தை விளைவிக்கிறது. அங்கீகரிக்காமை உன் மனத்தில் ஆசைகள் நிறைவேறாமல் தேங்கியுள்ளதைக் காட்டுகிறது. கிடைத்த வாழ்க்கையில் மனநிறைவு அடையாமல், நான் எதிர்பார்த்ததும் கிடைக்கவில்லை,

எதிர்பார்த்த அளவும் கிடைக்கவில்லையே என்று கடவுளை நினைத்துப் புகார் செய்யும் மனநிலை உண்டாகிறது. கடவுளின் ஏற்பாடு தவறென்று கூறுவதுபோல் உள்ளது. கடவுளின் உலகத்தில் தவறு எப்படி நிகழ முடியும்? அவர்தாம் உலகத்தில் இருந்துகொண்டு உலகைப் பார்த்தபடி உள்ளாரே.

உலகத்தில் எல்லாம் தப்பாக நிகழ்வது போலுள்ளதால் கடவுள் என்றொரு சக்தியோ, நபரோ இருக்க முடியாது என்கிறார் நாத்திகர். தவறான உலகில் கடவுள் இருக்க முடியாது என்னும் வாதம் எனக்கும் நியாயமாகவே படுகிறது. உலகம் தவறுகள்மயமாக இருந்தால், யாருக்குத்தான் கடவுள் நம்பிக்கை நீடிக்க முடியும்? ஏனெனில் கடவுள் உள்ள இடத்தில் குறை எப்படி இருக்கும்? ஆகவே, கடவுள் உண்டெனில் தவறுகள் இருக்க முடியாது; தவறுகள் இருந்தால் அங்கே கடவுள் கிடையாது என்று இந்த வாதம் இரண்டாகப் பிரிகிறது.

ஆனால் எவனாவது 'கடவுள் உண்டு, தவறுகள் சகஜம்' என்று சொல்வானேயானால், அவன் போலி ஆத்திகன். அப்படியானால் அவன் குறிப்பிடும் கடவுளும் பொய்யே. உண்மையான ஆத்திகன் வேறுவிதமாகச் சொல்வான்: உலகில் தவறுகள் எப்படி இருக்க முடியும்? கடவுள்தான் கவனித்தபடி இருக்கிறாரே. நான் உலகைப் பார்க்கும் விதத்தில்தான் தவறு இருக்கும். என் பார்வையில்தான் கோளாறு இருக்கும். என் கண்தான் கட்டடப்பட்டிருக்கும். என்னைக் கொல்ல ஒருவன் வந்துகொண்டிருந்தால், அது சரியாகத்தான் இருக்கும். ஏனெனில் அதுவும் கடவுள் விருப்பப்படியே நிகழ்கிறது. அவனின்றி ஓரணுவும் அசையாது.

வாழ்க்கையை அப்படியே ஏற்பதுதான் சுகம். அதுவே மனத்தை சாந்தப்படுத்தும். கொலை செய்ய வருபவனின் கையும் கடவுளின் கைதான் என்று புரிந்ததும் உனக்குள்ளே கடவுளைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதும் புரிந்துபோகும். கொலைகாரனிலும் கடவுள்; உன்னிலும் கடவுள்; ஆகவே உன்னிலும் கொலைகாரன் என்னும் சமன்பாடு முழுமை பெற்றதும் நீயே கடவுளும் ஆகிவிடுகிறாய்.

'மனத்தில் பேராசை, அதனாலுண்டான பகைமை, அன்பின்மை, வன்முறை, கெடுக்கும் மனப்பான்மை இருப்பதால் என்னைவிட குறுகிய மனமும், அற்ப எண்ணங்களும் கொண்ட மனிதன் இருக்க முடியாதல்லவா?' என்று கேள்வி எழுப்பப் பட்டது.

அந்த அளவிற்கு எவரும் மறந்தும் தாழ்வு மனப்பான்மை கொள்ள வேண்டாம் என்பதே என் வேண்டுகோள். உலகில் எத்தனையோ பேர் கடவுளைப் பற்றி பேசுகிறார்கள். இவர்களின் கடவுள் பேச்சுடன் முடிந்துவிடுகிறார். இவர்களின் பார்வைதான் குறுகலானது.

**வி**வேகானந்தர் இளமையில் வறுமையில் வாடியவர். தந்தை உயிருடன் இல்லை. குடும்பத்தினர் அரை வயிறு-கால் வயிறே உண்ண முடிந்தது. ராமகிருஷ்ணர் ஆலோசனை சொன்னார், "நீ ஒன்று செய். நீ கடவுளிடம் போய் உதவி கேட்டா லென்ன? கோயிலுக்குப் போய்க் கேள். உன் பிரார்த்தனையை அவர் நிச்சயம் காதுகொடுத்துக் கேட்பார். இவ்விஷயத்தில் எனக்கு முழு நம்பிக்கையுள்ளது. நீ போய்க் கேட்டால் கிடைக்கும்." என்று கூறி அனுப்பினார்.

விவேகானந்தர் கோயிலுக்குள் சென்று அரை மணி நேரம் வேண்டினார். பிறகு அவர் வெளியே வந்தபோது கண்களில் நீர். மெய்ம்மறந்த நிலையில் அசைந்தாடியபடி இருந்தார். ராமகிருஷ்ணர் இக்கோலத்தில் அவரைக் கண்டு, "காளியிடம் வரம் கேட்டாயா?" என்று வினவினார். "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" விவேகானந்தர் திருப்பிக் கேட்டார்.

"நான் உன்னை அன்னையிடம் உன் வறுமையைப் போக்கும்படி வரம் கேட்டு வேண்டச் சொல்லி அனுப்பினேனே. வரம் கேட்டாயா?" என்றார் ராமகிருஷ்ணர்.

"அடடா! நான் மறந்துவிட்டேனே. காளியின் சன்னிதியில் எனக்கு எதுவும் கேட்கத் தோன்றவில்லை. ஏதோ மயக்கம் மாதிரி உணர்வினால் நான் ஆட்கொள்ளப்பட்டேன்." என்று விவேகானந்தர் விளக்கினார்.

ராமகிருஷ்ணர் அவரை மேலும் இரண்டு முறை கோயிலுக்கு அனுப்பினார். அப்பொழுதும் அவர் வரம் கேட்காமலேயே திரும்பிவிட்டார். இதையறிந்து ராமகிருஷ்ணர் சத்தமாகச் சிரிக்க, விவேகானந்தர் காரணம் கேட்டார்.

"நீ மட்டும் வாய் திறந்து வரம் கேட்டிருந்தால், உனக்கும் எனக்குமான எல்லா சம்பந்தங்களும் இன்றோடு நீங்கியிருக்கும். அவ்வாறு வரம் கேட்டுக் கெஞ்சாததால், நீ என் இதயத்திற்கு மிக அருகில் வந்துவிட்டாய். இதுவே உண்மையான சீடனின், உண்மையான பக்தனின் அடையாளம்," என்று ராமகிருஷ்ணர் மகிழ்ந்து தெரிவித்தார்.

எல்லாக் கோரிக்கைகளும் அற்பமானவை. வரம் வேண்டி வாழ்பவன் குறுகிய மனம் படைத்தவன். அது எந்தக் கோரிக்கையாக வேண்டுமானாலும் இருக்கலாம். இந்த உலகம் பிச்சைக்காரர்களால் நிரம்பிவழிகிறது. ஒவ்வொருவனும் எதற்காவது பிச்சை கேட்கிறான். செல்வம் கொடு, சொந்த வீடு கொடு என்று கடவுளிடம் கேட்டாலும் சரி, தியானம் சித்திக்கட்டும், பகைமை-பொறாமையற்ற மனம் வாய்க்கட்டும் என்று கேட்டாலும் சரி, எல்லாமே வெவ்வேறு வகையான கோரிக்கைகள்தான்.

முதலில், உன் மனத்தில் மண்டியுள்ள பகைமை, பொறாமை நீங்க வேண்டும் என்று வரம் கேட்பதற்குப் பதிலாக, உனக்குக் கிடைத்தவற்றை முழுமையாக ஏற்றுக்கொள். அதன் பின் ஓர் அதிசயம் நிகழும். உன் அங்கீகரிப்பு உணர்வானது நெருப்பைப் போல் பகைமை, பொறாமை முதலிய தீய அம்சங்களை எரித்துவிடும். பலர் தங்களிடம் எந்தத் தீயபண்பும் உள்ளது என்பதையேகூட ஒப்புக்கொள்வதில்லை. எனவேதான் அவை உள்ளன என்னும் அங்கீகரிப்பு தேவைப்படுகிறது. அப்போதுதான் அடுத்த கட்ட நடவடிக்கை சாத்தியமாகும்.

அன்பின்மை எதைச் சுட்டுகிறது? நாம் எதிர்பார்த்த மாதிரி ஒருவர் இல்லாமல் போவது அன்பின்மையைத் தோற்றுவிக்கிறது. நாம் யாரை நேசிப்பதாகச் சொல்கிறோமோ அவரையும் எங்கே முழுமையாக நேசிக்கிறோம்? அவருடன் பழகப் பழக அவரிடமும் ஏராளமான குறைகள் தெரியவருகின்றன. ஒரு கணம்

அவரை நேசிக்கிறோம். சட்டென அவர்மீது கோபமும் எழுகிறது. ஏனெனில் அவரிடமுள்ள குறை தென்படுகிறது.

நம் கண்களுக்கு எதுவுமே பரிபூரணமாக, குறையின்றி முழுமையாகத் தெரிவதில்லை. கடவுள் நம் எதிரே வந்து நின்றாலும், அவரிடம் நாம் ஏதேனும் விட்ட குறை-தொட்ட குறை காண்போம். இதனால்தான் கடவுள் நம் எதிரே தோன்றத் தயங்குகிறார்! நீ கூக்குரலிட்டு நூற்றுக்கணக்கான முறை அழைத்தாலும் அவர் உன் முன் ஆஜராவதில்லை. உன் கண்ணெதிரே தோன்றினால் தொந்தரவு என்று அவருக்குத் தெரியும். அந்த அளவிற்கு நீ அவரிடம் ஏராளமான குறைகளைக் காண்பாய்.

கடவுள் வரை ஏன் போகவேண்டும்? மகாத்மாக்களின் கதை என்ன? புத்தர் உன் கண்ணெதிரே வாழ்ந்தார். அவரிடம் குறைகள் கண்டாய். மகாவீரர் உன் காலத்தில்தான் வாழ்ந்தார். அவரிடம் குறைகள் கண்டாய். கிருஷ்ணர் உன் எதிரில் இருந்தார். அவரைப் பற்றி நீ நிறையப் புகார் சொல்கிறாய். இயேசுநாதரிடம் நீ கண்ட குறைகளுக்காக அவரைச் சிலுவையில் அறைந்துவிட்டாய். சாக்ரடீசுக்கு விஷம் கொடுத்துக் கொன்றாய். இன்னும் எத்தனையோ மகான்களை நீ கொடுமைப்படுத்தியிருக்கிறாய்.

**ப**ரமபிதாவிற்கு சொர்க்கத்தில் நீண்ட காலம் வாழ்ந்து சலிப்பாகிவிட்டது. அங்கிருந்த ஆலோசகர் ஒருவர், "தாங்கள் சில நாள் விடுப்பு எடுத்துக்கொண்டு எங்காவது சென்று வாருங்களேன்," என்றார்.

"என்னை எங்கே சிலநாள் போய்விட்டு வரச்சொல்கிறாய்?"

"தாங்கள் பூலோகம் சென்று நீண்ட காலம் ஆகிவிட்டதால், அங்கே சென்று சில நாள் தங்கித் திரும்புங்கள்."

பரமபிதா பதறினார். "பூலோகமா? வேண்டவே வேண்டாம். அங்கே நடந்த கசப்பான விஷயங்களை இவ்வளவு சீக்கிரம் மறக்க முடியுமா? இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்புதான் என் புத்திரன் இயேசுவை அங்கே அனுப்பினேன். என்ன நடந்தது என்று உனக்குத் தெரியுமே. நான் பூமிக்குப் போனால்

அங்குள்ளவர்கள் என்மீதும் குற்றம் சுமத்தி, வழக்குத் தொடர்ந்து, தண்டனை கொடுத்துவிடுவார்கள்," என்றார்.

இது நான் எங்கோ படித்த கதை. ஆனால் உண்மையை, உலக நடப்பை அடிப்படையாகக் கொண்டது.

உன் வாழ்க்கையில் பூரணமான அங்கீகரிப்பு ஏற்படாத வரையிலும் நீ எங்கும்-எதிலும் குறையே காண்பாய். ஆனால் வாழ்க்கையை ஏற்று அங்கீகரித்தால், நீ எங்கும்-எதிலும் கடவுளை உணர்வாய். பூவில் அவரே மலர்ச்சியாக வெளிப்படுவார். அருவியின் மூலம் அவரே பிரவாகித்து வருவார். ஆகாயத்தில் அலையும் மேகத்தில் அவரே நீந்திவருவது தெரியும். பறவைகளின் ஒலியில் அவரது பேச்சு கேட்கும்.

இந்த அங்கீகரிப்பு என்பது ஒரு புரட்சிக்கு சமம். இதன் காரணமாக உலகம் மாறித் தோற்றம் தரும். நீ மட்டும் மாறாமலா இருக்க முடியும்? நீயும் மாறத்தான் செய்வாய்.

சமயத் தலைவர்களும் மகான்களும் என்ன சொல்கிறார்கள்? உன்னிடம் போதுமான அளவு பணம் இல்லையா, கிடைத்ததை ஏற்றுக்கொள். உன்னிடம் மாளிகை இல்லையா, குடிசைதான் உள்ளதா? சரி, அதையே ஏற்றுக்கொள். குழந்தை இல்லையா, அந்த நிலைமையைப் பொறுத்துக்கொள். ஆனால் மதத் தலைவர்கள் உன்னிடமுள்ள கோபத்தையும், பொறாமையையும் வெறுப்பையும்கூட ஏற்றுக்கொள் என்று சொல்வதில்லை. நான்தான் இவற்றையெல்லாமுமே ஏற்றுக்கொள் என்று சொல்கின்றவன். ஏற்பு என்பது சம்பூரணமாக அமைய வேண்டும். வெளியுலகத்திலுள்ளவற்றை மட்டும் ஏற்பது அரைகுறை ஏற்பாக அமையும்.

நீ உன்னையும்கூட மன்னித்துவிடு. மகாபுருஷர்கள் மற்ற மனிதர்களை மன்னித்துவிடு என்பதுடன் நிறுத்திக்கொள்வார்கள். ஆனால் தன்னை மன்னிக்க முடியாதவனால் பிறரை மன்னிப்பதென்பது முடியாது. ஏனெனில் தன்னைப் போலத்தானே மற்றவர்களும் இருப்பார்கள்.

நீ உன்னிடமே கடுமையாக இருந்தால், மற்றவர்களிடமும் கடுமையாகத்தான் நடந்துகொள்வாய். உன்னிடம் பகைமை உணர்வு இருந்து, அது தவறான உணர்வு என்று அறிந்திருந்து, அதை மன்னிக்காவிடில், மற்றவனிடம் காணப்படும் பகைமை உணர்வை எப்படி மன்னிப்பாய்? உன் சுபாவத்தில் முன்கோபம் மிகுந்திருந்து, அவ்வுணர்வை உன்னால் மன்னிக்க முடியவில்லை என்றால், இன்னொருவனிடம் கோபத்தின் சாயலைக் கண்டால் அதை எப்படி மன்னிப்பாய்?

மகாத்மா காந்தி தன்னைப் பின்பற்றுபவர்களுக்கு ஓர் அறிவுரை சொன்னார். நீங்கள் உங்களிடம் கடுமையாகவும், மற்றவர்களிடம் மென்மையாகவும் நடந்து கொள்ளுங்கள் என்றார். இது கடைப்பிடிக்க முடியாத விஷயம். இது தவறான புத்திமதியும்கூட. தன்னிடம் கடுமையாக இருப்பவன் (பூரணத்தை எதிர்பார்ப்பவன்), அறிந்தோ-அறியாமலோ பிறரிடமும் கடுமையாகத்தான் இருப்பான். உண்மையில், பிறரிடம் கூடுதலாகக் கண்டிப்புடன் இருப்பான்.

நீ உன்னிடம் எப்படி நடந்துகொள்கிறாயோ, அப்படித்தான் மற்றவர்களிடமும் நடந்துகொள்வாய். இதற்கு வேறான வழியில் உன்னால் செல்ல முடியாது. மதிப்பற்ற சிறு-சிறு விஷயங்களுக்காக நீ மற்றவர்களை மனத்திற்குள் நிந்திப்பாய். உன்னால் அந்தக் குறைகளை மன்னிக்க முடியாது.

நீ உன்னையும் மன்னித்துவிடு. ஏனெனில் உனக்குள் இருப்பவரும் மற்றவர்களிடம் உள்ளே அதே கடவுள்தான். அந்த கடவுள் உன்னை எப்படிப் படைத்தாரோ அப்படியே ஏற்றுக்கொள். உன்னிடம் கோப குணம் பிரதானமாக இருக்க வேண்டுமென கடவுள் விரும்பியிருப்பார். நீ இனி என்ன செய்ய முடியும்? அதை அப்படியே சுவீகரி.

சற்று யோசி. உன்னிடம் கோபம் இருந்ததை வெளிப் படையாக உணர்ந்து அதை அங்கீகரித்துவிட்டால், பிறகு கோபம் மிஞ்ச முடியுமா? ஒன்றை ஏற்காத சூழ்நிலையில்தான் கோபம் பிறக்கிறது. கோபம் என்பது மன இறுக்கத்தின் வெளிப்பாடு;

கையாலாகாத்தனத்தின் வெளிப்பாடு. எதிர்க்காமல் சூழ்நிலையை ஏற்றுக்கொண்டுவிட்டால் கோபத்திற்கு இடமில்லை.

எப்பொருளை, எந்த நிகழ்ச்சியை, எவரை, நீ அங்கீகரிக்கிறாயோ அப்போது கோபம் உண்டாகாது. யாரோ ஒருவர் உன் முதுகில் ஓங்கிக் குத்துகிறார். கோபம் தோன்றும் மனநிலையுடன், மூக்கின் நுனிவரை வந்துவிட்ட கோபத்துடன் திரும்பிப் பார்க்கிறாய். உன் முதுகுப்புறம் உன் நெருங்கிய நண்பன் சிரித்தபடி இருக்கிறான். கோபம் வந்த சுவடு தெரியாமல் மறைந்துவிட்டது. உனக்குத் தெரியாத ஒருவன் உன்னை முதுகில் இலேசாகத் தட்டியிருந்தாலும் நீ அவனுடன் சண்டைக்குப் போயிருப்பாய்.

குத்து விட்டவன் நண்பனோ, எதிரியோ, அறிமுகமற்றவனோ, குத்தின் அழுத்தம், குத்தின் தாக்கம் ஒன்றுதான். நீ திரும்பிப் பார்க்காதவரையிலும் நீ வித்தியாசப்படுத்திப் பார்த்திருக்க மாட்டாய். நீ அப்படியே நின்றபடி குத்தியவன் நண்பனா, பகைவனா என்று ஊகித்துப் பார். வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. ஆகவே கோபம்தான் பொங்கும். ஆனால் திரும்பிப் பார்த்து பின்னால் உள்ளவன் நண்பன் என்று அறிந்ததும் நிலைமை மாறிவிடுகிறது. ஏன் மாறுதல்? குத்தியவனை உன் மனம் அங்கீகரித்ததுதான் காரணம். 'ஓஹோ நண்பனா! அதனால்தான் அன்புக் குத்துவிட்டிருக்கிறான்' என்று மனம் சமாதானம் அடையும். குத்தியவன் உனக்கு வேண்டாதவனாக இருந்தால் அந்தக் குத்தை ஏற்காமல் அவனைத் திருப்பித் தாக்கத் தூண்டும். குத்து ஒன்றேதான். ஏற்றால் ஒரு விளைவு; ஏற்காவிடில் வேறு விளைவு.

நண்பர்கள் சில சமயம் கெட்ட வார்த்தைகள் கூறி வாத விவாதம் செய்வதுண்டு. ஆனால் யாரும் கோபப்படுவதில்லை. ஒருவரை ஒருவர் திட்டும் உரிமை இல்லாவிடில் அங்கு இயல்பான, பாசமான நட்பும் இருக்க முடியாது. பரஸ்பரம் திட்டும் உரிமை நட்பை பலப்படுத்துகிறது. நட்பு என்பது அப்படித்தான் இருக்க வேண்டும். எந்த விஷயங்களால் சாதாரணமாகப் பகைமை உண்டாக வேண்டுமோ அவற்றாலும் விரோதம்

உண்டாகாவிடில் சம்பந்தப்பட்டவர்களின் நட்பு உறுதியானது எனலாம், திட்டினாலும் நம்மவன்தானே திட்டினான் என்று ஏற்கிறோம். இது ஒரு பிரச்சினையில்லை என்கிறோம். நண்பன் திட்டினால் அதில் இனிமையை உணர்கிறோம். அவன் உரிமையுடன் திட்டுவதால் அவன் நம்மை மறக்கவில்லை என்றும், அவன் நம்மீது கொண்டிருக்கும் நட்பு நீடிக்கிறது என்றும் நிரூபணமாகிறது. ஆனால் அதே திட்டு, அதே வசவுச் சொல், நண்பனாக இல்லாதவனின் வாயிலிருந்து கிளம்பியிருந்தால் நடப்பதே வேறு.

நீ அங்கீகரிக்கும் மனநிலையிலிருந்தால் அங்கே பூ மலர்கிறது. நீ புறக்கணிக்கும் மனநிலையிலிருந்தால் அங்கே முள் குத்துகிறது. ஆகவே நீ எதையும் முழுமையாக சுவீகரி. இது சரி-இது சரியில்லை என்ற உளறலைக் கைவிடு. நீ யார்? உனக்கென்று தனி அந்தஸ்து என்ன உள்ளது? நீ கடவுளை நினைத்து, 'உனது விருப்பம் எதுவோ அதுவே எனது விருப்பமும் ஆகும்' என்று அறிவித்துவிடு.*

**எ**ன்னைச் சந்திக்க முதியவர் ஒருவர் வந்தார். தனக்கு அடிக்கடி கடுமையான கோபம் வருவதாகக் கூறி வருத்தப்பட்டார்.

"உங்க வயதென்ன?" என்று விசாரித்தேன்.

"எழுபத்தெட்டாகிறது."

"எத்தனை ஆண்டுகளாக கோபத்தை அடக்கப் போராடி வருகிறீர்கள்?"

"ஏறத்தாழ வாழ்க்கை முழுவதும் கோபத்துடன் போராடி வந்துள்ளேன்."

"இதோ பாருங்க, எழுபத்து எட்டு ஆண்டுகளாயினும் கோபம் வருவது குறையவில்லை. இதற்கு என்ன அர்த்தம்? இப்படிப் போராடுவதால் லாபம் இல்லை என்றுதானே அர்த்தமாகிறது. கோபத்தை எதிர்கொள்ள வேறு வழி உள்ளது.

* If this is the way God wants it to be, this is the way I want. (Tom Booley)

கடைசி மூச்சுவரை நீங்கள் கோபத்தை ஏற்றுக்கொண்டு விடுங்கள். அந்த உணர்விற்கு சமர்ப்பணமாகி விடுங்கள். நீங்கள் முன்கோபி யாகத்தான் வாழ வேண்டும் என்பதே கடவுளின் விருப்பம் என்று தெளிவாகத் தெரிகிறது. எழுபத்தெட்டு ஆண்டுகளாகத் தோல்வி கண்டது போதாதா? இனியும் மிஞ்சியுள்ள ஆண்டுகள் ஏன் தோல்வியில் கழிய வேண்டும்?''

நான் தொடர்ந்தேன். ''நான் சொல்வதைக் கவனியுங்கள். கோபத்தை விரட்டாமல் உங்கள் சுபாவத்தின் அங்கமாக ஏற்றுக்கொள்ளுங்க. போராடியே எழுபத்தெட்டு வருஷங்களைப் போக்கிவிட்டீர்கள். நீங்க ஒரு வருஷம் தலையிடாமல் கோபத்தை அதன் போக்கில் விட்டுவிடுங்கள்,'' என்றேன் அவரும் இத்தனை ஆண்டுகளாக மற்றவர்கள் சொன்ன முறையில் கோபத்தை அடக்கிப் பார்த்திருக்கிறார். நான் தெரிவித்த புதிய முறையை அவர் யோசித்ததே இல்லை.

ஆனால் மனிதன் யோசிப்பதே இல்லையே. போய்க் கொண்டே இருக்கிறான். அவசரமாக ஓடிக்கொண்டே இருக்கிறான். ஓய்வின்றி ஏதேனும் செயல்களில் ஈடுபட்டபடி உள்ளான். முன்பு செய்த விதமாகவே திரும்பத் திரும்பச் செய்கிறான். பலனில்லை எனினும் அவன் ஒரேவிதமாக இயங்குவதை நிறுத்துவதில்லை. மணலிலிருந்து எண்ணெய் எடுக்க முயல்வது போன்ற வீண்முயற்சிகளில் இறங்குகிறான்.

''கோபம் காரணமாக எத்தனை தடவை நீங்கள் வழக்குகளில் மாட்டிக்கொள்ள நேர்ந்திருக்கிறது?'' என்று கேட்டேன்.

"கோபம் காரணமாகப் பிறருடன் சண்டை ஏற்பட்டுப் பல முறை என் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. என் வாழ்க்கையே சண்டைமயமாகத்தான் இருந்திருக்கிறது. நான் எங்கே எதைச் செய்தாலும் பலன் சண்டைதான். எல்லாமே தொல்லை. வீட்டிலும் சண்டை, மகன்கள், சகோதரர்களுடனும் ஒத்துப்போக முடியவில்லை. என் தந்தை சண்டை காரணமாகவே மனமுடைந்து இறந்தார். அந்த சமயம் எங்களுக்குள் பேச்சும்

கிடையாது. மனைவியுடன் பேரட்ட சண்டைகளால் அவள் அழுது அழுதே செத்தாள்" என்று முதியவர் விவரமாகச் சொன்னார்.

நான் சமாதானப்படுத்தினேன். "உங்கள் மேல் தப்பில்லை. நீங்கள் நீண்ட காலமாக கோபத்தை அடக்க முயன்றீர்கள். இப்போது நான் சொன்னபடி கோபத்தை மறுக்காமல், எதிர்க்காமல் அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். என்ன பலன் விளைகிறது என்று பாருங்கள்" என்றேன்.

ஒரு வருஷம் கழித்து அவர் மீண்டும் என்னைச் சந்திக்க வந்தார். ஆளை அடையாளமே தெரியவில்லை., முகத்தில் அப்படியொரு சாந்தம். அவர் சொன்னார். "என் வாழ்வில் அதிசயம் நிகழ்ந்தது. கோபம் என்னிடம் மிகுந்திருப்பதை ஒப்புக்கொண்டேன். நான் கோபக்காரன், அதுதான் என் சுபாவம், நான் வேண்டுமென்று கோபிக்கவில்லை என்று எல்லோருக்கும் — மகன்கள், சொந்தக்காரர்களுக்கும் — தெரிவித்து விட்டேன். என்னை இயல்பாகவே கோபக்காரன் என்றும், ஒருவன் தன் இயல்பை மாற்றிக் கொள்ள முடியாது என்பதைப் புரிந்து கொள்ளுமாறும் அவர்களைக் கேட்டுக் கொண்டேன். ஒரு வருஷம் போனதே தெரியவில்லை, எனக்குக் கோபமே வரவில்லை!"

என்ன நடந்தது? ஒன்றை இயல்பென ஏற்றுக்கொண்டதும் இறுக்கம் நீங்கிவிடுகிறது. உன்னை நீ கோபக்காரன் என ஒப்புக்கொண்டதும் நீ சமர்ப்பணமானதை அது தெரிவிக்கிறது. நமது இயல்பிலுள்ள குறையை ஒப்புக்கொள்ளாவிடில் நாம் செக்குமாடு மாதிரி சுற்றி வந்து கொண்டிருப்போம். நமக்கெனப் போய்ச்சேருமிடம் இருக்காது. இதனால் தான் வாழ்க்கை சக்கரம் என்னும் சொல்லைக் கூறுகிறார்கள்.

இந்திய தேசியக் கொடியின் நடுப்பகுதியில் ஒரு சக்கரம் உள்ளது. அது பௌத்தர்களின் தர்ம சக்கரம். பௌத்தர்கள் வாழ்க்கையை சக்கரம் போன்றதாகக் கருதினார்கள். அச்சாணியை ஆதாரமாகக் கொண்டு அது சுழன்றபடியே உள்ளது. ஆரங்கள் மேலே சென்று கீழே இறங்கினாலும் சக்கரம் ஒரே இடத்தில் உள்ளது.

நீ உன் ஒரு நாள் வாழ்க்கையை ஆராய்ந்து பார். கோபம் வருகிறது. கோபித்துக்கொண்டோமே என்று வருத்தம் மூளுகிறது. மறுபடி கோபம் உண்டாகிறது. நேசம் பிறக்கிறது. பிறகு அது வெறுப்பாக மாறுகிறது. மறுபடியும் நேசம், இதேபோல் நட்பு விரோதம் — நட்பு. இப்படியே சுற்றிச் சுற்றி வருகிறாய். ஒரேயிடத்தில் சுழலும் சக்கரம் போல் உன் வாழ்க்கை மீண்டும் மீண்டும் ஒரே மாதிரி நடக்கிறது.

இதுவரை நீ மாற முயன்றபோதெல்லாம் அப்படியே இருந்தது தெரிந்தது. ஆகவே வேறுவகையாக முயலு. நீ எப்படியோ அப்படியே உன்னை ஏற்றுக்கொள். அப்போது உன் வாழ்க்கையில் புதிய அத்தியாயம் தொடங்கும். நீ இம்மாதிரி முயன்றதே இல்லை. இது உனக்குப் புதிது. வேறு வழியின்றி நீ உன்னை ஏற்றுக்கொண்டதாக இருக்கக்கூடாது. கடவுள் உன்னை இப்படிப் படைத்தமைக்கு ஒரு காரணம் இருக்கும். ஆகவே உன்னை நீ நன்றி உணர்வுடன் அங்கீகரி. கடவுள் உன்னை கோபக்காரனாகப் படைத்துள்ளாரெனில் ஏதோ பிரயோஜனம் கருதியே.

சமயத் தலைவர்கள் கோபத்தை விட்டொழி என்கிறார்கள். கடவுள் அப்படி நினைக்கவில்லை. தலைமுறைகளாக எத்தனையோ மனிதர்கள் கோபத்துடன் பிறக்கிறார்கள். கோபக்காரனாக வளரும் குழந்தையிடம் உயிர்த்துடிப்பும் மிகுந்திருக்கும். அது பலசாலியாக இருக்கும். இத்தகைய துடிப்புள்ள குழந்தைகளே பிற்காலத்தில் சாதனைகள் புரிகிறார்கள். சாந்தமான குழந்தை மண்பொம்மை மாதிரிதான். அதனால் எதனையும் சாதிக்க இயலாது. மகாவீரர் மகா பொறுமைசாலி. எதையும் மன்னிக்கும் குணம் உடையவர் என்பார்கள். அப்படியானால் என் கற்பனையில் அவர் கடுங்கோபக்காரராக இருந்திருப்பார். கோபமும் பொறுமையும் சேர்ந்தே வரும்.

சமண மதத்தின் 24 தீர்த்தங்கரர்களும் க்ஷத்திரியர்கள். புத்தரும் க்ஷத்திரியர். அப்படி வீரம் நிறைந்தவர்களாக இருந்தமையால்தான் அகிம்சையின் சிறப்பை உணர்ந்து அதை அவர்கள் போதித்தனர். க்ஷத்திரியக் குடும்பத்தில் பிறந்த

அவர்கள் ஆயுதங்களின் உரசல் ஒலியில் வளர்ந்தவர்கள். போர்க்கலை பயின்றவர்கள். கொல்லுதல் அவர்களது குலத் தொழில். இரத்தத்தில் குளித்தவர்கள். ஆனால் அவர்கள் அனைவரும் கடைப்பிடித்து போதித்தது பரம அகிம்சைக் கொள்கையே.

ஆனால் நேர்மாறாக, பிராமணர்களில் தலைசிறந்தவரான பரசுராமன் தீவிரமான வன்முறைவாதி. அவர் 18 முறை க்ஷத்திரிய குலத்தினரை அழித்தார் என்பர். பிராமண குலத்தில் இப்படியோர் அதிசயப் பிறவி!

இந்த ஒப்பீட்டிலிருந்து நாம் அறிவது: கோபம் எங்குள்ளதோ, வன்முறை எங்குள்ளதோ, அங்கிருந்துதான் அகிம்சையும் பிறக்கிறது. ஆகவே, அகிம்சைக் கொள்கை கோழைக்கு ஒத்துவராது. கோழை சூடற்றவன். யாரிடம் அக்னி நிறைந்துள்ளதோ அவனுக்குத்தான் அகிம்சைக் கொள்கை சொந்தமானது.

கடவுள் உனக்கு சக்தியூட்டவே கோப குணம் கொடுக்கிறார். அந்த சக்திக்கு மெருகேற்றி, அதை அப்படியே ஒப்புக்கொண்டு, புரிந்துகொண்டு, ஒரு நாள் நீ விழிப்புப் பெறுகையில் உன் மகாகோபமே மகாப் பொறுமையாக மாறியிருப்பதை அறிந்துகொள்வாய். மகாகோபம் மகாகருணையாக மாறுகிறது. காமம் தன்னிடம் உள்ளதை, மிகுதியாக உள்ளதை, முதலில் ஒப்புக்கொண்டால்தான் பிறகு பிரம்மசரியம் சாத்தியமாகும். காமம், குரோதம் முதலிய உணர்வுகளுடன் எதிர்த்துப் போராடி வெல்ல முடியாது. அவற்றை ஏற்றல், புரிந்து கொள்ளுதல் ஆகியவை மூலமே மேம்படுத்த முடியும்.

கடவுள் தமது படைப்பை முழுமையாக ஏற்றுக்கொண்டுதான் இருப்பார். படைப்பை மறுக்க, புறக்கணிக்க, நிந்திக்க அவரால் எப்படி முடியும்? உலக நடவடிக்கைகள் எல்லாவற்றையும் அங்கீகரிக்கிறார். அதனால் தான் அவை நிகழ்கின்றன. அவருடைய பார்வையில் அவை லீலைகள் மட்டுமே. நீ எத்துணை கெட்டவனாக இருந்தாலும் அவருக்கு ஏற்புடையவனே ஆவாய். நீ அவரைவிட்டு விலகி வெகுதொலைவு சென்றாலும்

அவரது பார்வை உன்மீது பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. இயேசுநாதரின் நீதிக்கதை ஒன்றில், ஓர் இடையர் மேய்ச்சலிலிருந்து 99 ஆடுகள் திரும்பி வந்து, ஓர் ஆடு வராமலிருந்தால் வழி தவறிய அதைத் தேடி கவலையுடன் அலைகிறார். கடவுளும் எத்தகைய பாவியையும், கைவிடுவதில்லை. அவன் மீது தான் அவரது கவனம் விசேஷமாக, அதிகமாகச் செல்கிறது. தன்னிடமிருந்து மிகவும் தள்ளிச் சென்றுவிட்டவனையும், தேடி, அவனைத் தோளிலே சுமந்து வருவார் கடவுள், வழி தவறியவன் மீது அவர் அதிக அக்கறை காட்டுகிறார். நீயும் அவரைப் போலவே எல்லோரையும், அவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் ஏற்று மதிப்புக் கொடு.

**மூன்றாம் கேள்வி?**

> **ஓஷோ அவர்களே! உங்கள் உரையை நான் தினமும் கேட்டு வருகிறேன். என் கண்களில் நீர் ததும்புகிறது. நீங்கள் ஆழமாக உரையாற்றுகையில் கங்கை — யமுனையில் நீராடுவது போல் உணர்கிறேன். உங்கள் தோற்றமே கூட ஆனந்தம் தருகிறது. அப்போது உங்களைப் பார்க்க முடிந்ததற்காக என் மனத்தில் நன்றியுணர்வு பெருக்கெடுக்கிறது. அன்பு வழியும் தியான வழியும் ஒரே தெய்வ சக்தியையே உணர்த்துவதைப் புரிந்து கொள்ள முடிகிறது.**

**அ**ன்பும் தியானமும் இரண்டு பயண வழிகள். அவை முடிவடையும் இடம் ஒன்றே தான். தியானம் கைகூடும் போது அன்பு தானாகவே உதிக்கும். அன்பு வழியின் இறுதியில் தியானம் நமக்கு வசப்படும். ஞானம் தேடி புறப்படுபவன் அன்பு, தியான வழி ஆகிய இரண்டில் எந்த வழியை மேற்கொண்டாலும், இறுதிக் கட்டத்தில், தான் மேற்கொள்ளாத இரண்டாவது வழியும் வந்து முடிவதைக் காண்பான். தியானத்தைப் பின்பற்றுபவனிடம் அன்பின் ஈரப்பசை நிச்சயமாக இருக்கும். தியானத்தின் மூலம் நீ பரிபூரணமாக சாந்தமாகிவிடும் போது உன் இதயத்தில் எல்லோர் மீதும் அன்பு மட்டுமே மிஞ்சியிருக்கும்.

உலக மதங்களை தியான வழி மதங்கள், அன்பு (பக்தி) வழி மதங்கள் என இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். பௌத்தமும் சமணமும் தியான வழி மதங்கள். இஸ்லாம், இந்து மதம், கிறிஸ்தவ மதம், சீக்கிய மதம் முதலியவை அன்பு வழி மதங்கள். ஆனால் அவை கொண்டு போய்ச் சேர்க்கும் இடம் ஒன்றேதான். மலை மீது ஏறப் பல வழிகள். ஆனால் கடைசியில் உள்ளது ஒரு சிகரம் தான். ஒருவன் கிழக்கிலிருந்து ஏறுகிறான், இன்னொருவன் மேற்கிலிருந்து. ஆகவே அவர்களின் பாதையில் வெவ்வேறு காட்சிகள், பள்ளத்தாக்குகள், வெவ்வேறு குன்றுகள் குறுக்கிடு கின்றன. கடைசிக் கட்டமாக அவர்கள் வந்து சேருமிடம் ஒரே சிகரம்தான்.

நான் உபதேசிப்பதாகச் சொன்னாய். ஆனால் நான் சித்தாந்தம் (கொள்கை) எதுவும் அறிவிக்கவில்லை. என் பேச்சு சங்கீத வகையைச் சேர்ந்தது. உன்னை என் இசை எழுந்திருக்க வைக்கிறது. ஒருவகை இசை உறக்கம் தருகிறது. தாயார் பாடும் தாலாட்டால் குழந்தை நிம்மதியாகத் தூக்கத்தில் ஆழ்கிறது. இன்னொரு வகை இசை திருப்பள்ளியெழுச்சியாகும். கடிகாரத்தில் அலாரம் அடிப்பதைப்போல் உன்னை எழுப்புகிறது.

என் உரை, அதாவது என் இசை, அதுபோன்றது. அதைக் கேட்டால் நீ விழித்தெழுவாய். அந்த ஸ்வரத்தைப் பற்றிக்கொண்டு சென்றால் நீ தோன்றிய இடத்தைச் சென்றடைவாய். நீ எப்படி ஆக வேண்டுமோ, அதாவது உண்மையில் நீ எப்படியோ, அவ்வண்ணமே ஆவாய். அந்த இசையின் ஒலியில் உன் சுயத்தன்மையை (சுபாவத்தைப்) புரிந்து கொள்வாய். அப்போது கங்கை-யமுனையில் நீராடியது போலவே உணர்வாய்.

இவ்வாறு நான் உன் இல்லத்தின் வாசற்படியில் கங்கை-யமுனையைக் கொண்டுவருகிறேன். கரையிலேயே தங்கி நிற்காதே. முழுகி நீராடு. ஆனால் கண்ணெதிரே கங்கை இருந்தும் தாகத்தால் தவிக்கும் துரதிருஷ்டசாலிகள் ஏராளமானோர் உள்ளனர். உள்ளங்கையால் தண்ணீரை ஏந்தக்கூட அவர்களால் முடிவதில்லை.

நான் இப்படிச் சொல்வது ஏதாவது சித்தாந்தமோ, தத்துவ சாஸ்திரமோ அன்று. நான் உன்னை இந்துவாக, முஸ்லிமாக, கிறிஸ்தவராக என்றெல்லாம் வகைப்படுத்திப் பிரிக்க விரும்ப வில்லை. நான் உன்னை எழுப்ப மட்டுமே விரும்புகிறேன். நீ யாரென உன்னில் நீ அறிய எழுப்புகிறேன். உன்னிடம் ஏற்கெனவே உள்ளதைத்தான் நான் எடுத்துக்காட்டி உனக்குத் தர ஆசைப்படுகிறேன். நீ அதைத் தற்போது மறந்திருக்கிறாய். அது உனக்குள்ளேயேதான் இருக்கிறது. என் வேலை உனக்கு அதை நினைவூட்டுவதுதான்.

சிலர் என்னிடம் வந்து. 'நாங்கள் கடவுளைத் தேடுகிறோம்,' என்பார்கள். 'நன்றாகத் தேடுங்கள். ஆனால் உங்களுக்கு ஒருபோதும் கிடைக்கமாட்டார்' என்பேன் நான். 'எப்பொழுது அவரை இழந்தோம் இப்போது தேடுவதற்கு?' என்று நீங்கள் உங்களையே கேட்டுப் பாருங்கள். இழந்து போயிருந்தால் தேடலாம் தான். இழக்காதபோது அவரை எங்கே, எப்படித் தேடுவீர்கள்?

உனக்கு இறைவனின் போதை ஏறிவிட்டால், உனக்குள்ளே ஏதோ ஒரு கதவு திறந்தால், உள்ளே சுரங்கம்போல் உண்டானால், யாரிடமும் நீ அடைந்த மாறுதல் பற்றி சொல்லாதே. மௌனமாக உனக்குள்ளேயே அடக்கிக்கொள். ஏனெனில் உனக்கேற்பட்ட ஈஸ்வர அனுபவத்தை மற்றவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள். மாறாக, சிரித்துக் கேலி செய்வார்கள். 'யாராவது உனக்கு வசியம் போட்டு விட்டார்களா? உனக்குக் கிறுக்குப் பிடித்துவிட்டதா? உன் புத்தி மாடுமேய்க்கப் போய்விட்டதா?' என்றெல்லாம் அவமானப் படுத்துவார்கள். பிறர் பெற்ற அனுபவத்தைத் தான் பெறாத வரையிலும் அதன் உண்மைத் தன்மையை உணர முடியாது.

**நான்காம் கேள்வி**

**ஓஷோ அவர்களே! எனக்கு வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் தியானம், பஜனை, ஆன்மிகப் பணியில் ஈடுபட்டு இன்பம் பெறுகிறேன். இவை எல்லாவற்றிலிருந்தும் ஒரே அளவில்லான ஆனந்தம் கிடைக்கிறது.**

**எந்த சூழ்நிலையுடனும் எனது மனம் ஒத்துப் போகிறது. ஆனால் எனக்கென்று ஒரு வழியை, தனி வழியை, என்னால் தேர்ந் தெடுக்க முடியவில்லை. வழி காட்டுங்கள்.**

இனி உனக்கு வழி எதுவும் தேவையில்லை. ஏனெனில் உன் மனம் எந்த சூழ்நிலையிலும் ஒத்துப்போய் லயிக்க முடிகிறது. மருந்து கொடுப்பது நோயாளிக்குத்தான். ஏற்கெனவே உடல் நலத்துடன் இருந்தால் அல்லது வந்த நோய் குணமாகியிருந்தால் மறந்தும் மருந்தின் பக்கம் போகாதே. ஏனெனில் நோயாளிக்கு மருந்தினால் லாபம் விளைகிறது. உடல் நலமுள்ளவனுக்கு மருந்து விஷம்போல் கேடு தரும்.

நீ பல தூய விஷயங்களில் ஆனந்தம் பெறுவதாகச் சொன்னாய். அப்படியானால் அது பரமானந்தத்தின், இறையின்பத்தின் முன்னுணர்வு ஆகும். கடவுளே ஆனந்தம்தான். உன் அனுபவப்படி அவர் உன்னை நெருங்கிவிட்டது தெரிகிறது. அவரை வரவேற்பதற்குத் தயாராக (உள்ளக்) கதவை முழுமையாகத் திறந்துவை. ஆன்மிகப் பணியில், தியானத்தில், பிரார்த்தனையில், பஜனையில், இசையில், நடனத்தில் முழு லயிப்பால், உனக்கு இதுவரை உணர்ந்திராத ஆனந்தம் கிடைக்கப் பெற்றால், விஷயம் முடிந்தது! நீ எந்த வழியையும் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை. உன் ஈடுபாடுகளை தொடர்ந்து நடத்து.

எல்லாவற்றுடனும் உன் மனம் ஒத்துப்போக முடிகிறதெனில், அதற்காகக் குழப்பமடையாதே. அதை ஒரு பிரச்சினையாக்காதே. இந்த ஒத்துப்போகும் நிலை உண்மையில் முன்பிருந்த பிரச்சினைகளுக்குத் தீர்வாகும். நீ கூறிய ஒவ்வொன்றிலிருந்தும் நீ பெறும் இன்பமே உனது வழியாகும். இந்த ஆனந்த ரசத்தில் நீ மூழ்க வேண்டும்; உன்னையே மறக்க வேண்டும்; அதில் ஆழ்ந்து நீயே இல்லாமல் போய்விட வேண்டும்.

உலகம் ரசமயமானது. மரங்களில் பசுமையாக மகாரசமே பரவி நிற்கிறது. சந்திரனிலிருந்தும் நட்சத்திரங்களிலிருந்தும் இதமான ஒளியாக ரசம் கசிறது. ஓரிடத்தில் மயில்களின் நடனம். வானத்தில் படைபோல் திரண்டு வரும் மேகங்களின் கூட்டம்.

அதே ரசமே அருவியிலிருந்து, சுனையிலிருந்து, இறை அன்புடையோர் கண்ணிலிருந்து விழுகிறது. ஒரே ரசமே எல்லா இடங்களிலும் உணரப்படுகிறது. இந்த பரமானந்த ரச வெள்ளத்தில் நீ ஆழ்ந்து மூழ்கிவிட்டால், மந்திரம் போடப்பட்டவன் போல் மயங்கிவிட்டால், நீயே இல்லாமல் போனது போன்ற நிலை உருவானால், நடனம் மட்டுமே மிஞ்சும்; அதை ஆடுபவன் மிஞ்சமாட்டான். பாட்டு மிஞ்சியிருக்கும்; அதைப் பாடுபவன் மிஞ்சியிருக்கமாட்டான்.

இதோ நான் பேசுகிறேன். பேச்சின் பின்னணியில் பேசுபவனும் உணரப் பட்டால் அந்தப் பேச்சு சாரமற்றது. இதோ நீ பேச்சுக் கேட்கிறாய் கேட்பதன் பின்னணியில் கேட்பவனும் இருந்தால் அந்த கேட்பதில் சுவை யிருக்காது. இது உடலளவிலான தொடர்பு. ஆனால் ஆத்ம அடிப்படையில் இந்தப் பக்கம் பேசுபவனும் இல்லை, அந்தப் பக்கம் கேட்பவனும் இல்லை. தனித்தனியாக யாரும் இல்லை என்றால் குருவும் இருக்கமாட்டார். சீடனும் இருக்கமாட்டான். அவர்களைத் தனிதனியாகப் பிரித்தறிவது கூட இயலாத காரியம். இவ்வாறு எல்லைகள் மீறப்படும்போது, எல்லைகள் உடையும்போது, எல்லைகள் சிதறும் போது, அங்குதான் பரமானந்த ரச உலகம் உள்ளது.

**கடைசிக் கேள்வி**

**ஓஷோ அவர்களே! பகவான் புத்தரை ஒருவன் திட்டினான். 'உன் திட்டாகிய பரிசை நான் ஏற்கவில்லை. அதை திருப்பி எடுத்துச் செல்' என்று கூறிவிட்டார். ரமண மகரிஷியுடன் பிடிவாதமாக, முரட்டுத் தனமாக ஒருவன் வாதம் செய்தான். அவர் தடியை ஓங்கினார் (விளையாட்டாகத்தான்). ஒருமுறை உங்கள் மீது செருப்பு வீசப்பட்டது. நீங்கள் அதன் ஜோடியையும் எறியுமாறு சொன்னீர்கள். உங்கள் மூவருக்கும் அவமானம் இழைக்கப்பட்டது. ஆனால்**

**நீங்கள் வெவ்வேறு விதமாக எதிர் கொண்டீர்கள்.' இந்த வேறுபாட்டின் காரணமென்ன ?**

**இ**ந்த வேறுபாடு மேலோட்டமானது. வெவ்வேறு சூழ்நிலையில் ஒவ்வொரு விதமாகச் செயல்பட நேரிடுகிறது. புத்தரைத் திட்டியவனைப் போன்றவனே என் மீது செருப்பை எறியவில்லை. ரமணரை அவமதித்தவனைப் போன்றவனே என் மீது செருப்பை எறியவில்லை.

வேறுபாடு மகாபுருஷர்களிடையே இல்லை. நீ கூறும் வேறுபாடு செருப்பை எறிந்தவன், திட்டியவன், அவமதித்தவனிடையேதான் உள்ளது. இந்த வேறுபாட்டை நீ சரியாகப் புரிந்து கொள்.

புத்தரைத் திட்டிய அதே மனிதனே என் மீது செருப்பை எறிந்திருந்தால், நானும் அவனிடம் எனக்கு இந்தப் 'பரிசு' வேண்டாம் என்று சொல்லியிருப்பேன். ரமணரை அவமானப் படுத்தியவனே என் மீது செருப்பை வீசியிருந்தால், நான் கையில் கிடைத்த கம்பை ஓங்கியிருப்பேன் (விளையாட்டாகத்தான்).'

சூழ்நிலை எப்படியோ அந்த நிலையில் எந்த முன்னேற் பாடும் இல்லாமல் எது நடக்கிறதோ அதை அப்படியே நடக்கவிடுவது மகான்களின் வழக்கம். அவர்கள் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவர்கள்.

**மு**ல்லா நஸ்ருத்தீனுக்கு ஒருநாள் பாதையில் கிடந்த கண்ணாடி தென்பட்டது. அதை எடுத்து அவர் தன் முகத்தைப் பார்த்தார். 'அட! என் அப்பாவைப் போலவே இந்த உருவம் இருக்கிறதே. ஆனால் அப்பா உயிரோடிருந்தபோது புகைப்படமே எடுத்துக் கொண்டதில்லையே. சரி, இந்த புகைப்படம் கிடைத்தது நல்லதாயிற்று. வீட்டிற்குக் கொண்டு போய் இதைப் பாதுகாப்பாக வைத்துவிடலாம்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார். வீட்டை அடைந்ததும் கண்ணாடியைப் பரண்மேல் ஒளித்துவிட்டார்.

மனைவிகளிடமிருந்து கணவர்கள் எந்தப் பொருளையாவது இதுவரை மறைக்க முடிந்திருக்கிறதா? முல்லா நேரடியாக உள்ளே

வராமல் நேரடியாகத் தன் அறைக்குப் போனதால் அவர் மறைத்து வைப்பதற்காக எதையோ கொண்டுவந்துள்ளார் என்று அவர் மனைவி சரியாக ஊகித்துவிட்டாள். அவர் ஒளித்துவைத்தது பணமா, வைரக்கல்லா என்று மட்டும் அவளால் ஊகிக்க முடியவில்லை.

முல்லா மதியம் தூங்கும்போது அவர் மனைவி ஆங்காங்கே தேடி கண்ணாடியைக் கண்டுபிடித்துவிட்டாள். அவள் அதில் தன் முகத்தைப் பார்த்தாள். அதிர்ச்சியடைந்தாள். 'யார் இந்தப் பெண்? என் புருஷனுக்கு இவளை எப்படித் தெரியும்? ஏன் போட்டோவை மறைத்து வைத்தார்? இவள் என் சக்களத்தியாக வரவா பார்க்கிறாள்?' என்று சினம் கொண்டாள்.

கண்ணாடி, பாவம், என்ன செய்யும்? உன் உருவம் தான் அதில் பிரதிபலிப்பாகிறது. பார்க்கின்றவர் முகம் மாறினால் கண்ணாடியில் அந்த மாறிய முகமே தெரியும். மகான்களும் சூழ்நிலைப்படி நடவடிக்கை மேற்கொள்ளுகிறார்கள். திட்டுதல், வாதம் செய்தல், செருப்பு வீசுதல் ஆகியவற்றை பிரதிபிம் பங்களெனக் கொண்டால், அவற்றை வெவ்வேறாகக் காட்டும் கண்ணாடியே மகான்கள். ஆனால் ஒரு கண்ணாடி தான் அப்படிப் பலவற்றை பிரதிபலிப்பதை நினைவில் கொள்ள வேண்டும். அந்தக் கண்ணாடியின் அளவு,. வகை, தரம், நிறத்திற்கேற்ப பிரதிபலிப்பு ஏற்படுவதுபோல் மகான்கள் சூழ்நிலை, மனநிலைக்கு ஏற்ப வெவ்வேறு நடவடிக்கை எடுக்கிறார்கள்.

**கி**ருஷ்ணர் ஒன்று மொழிந்தார். அஷ்டாவக்ரர் ஏதோ கூறினார். புத்தர் ஏதோ அருளினார். இயேசுநாதர் ஏதோ உபதேசித்தார். மொத்தத்தில், அவர்கள் சொன்ன விஷயங்கள் வெவ்வேறு அல்ல. சீடர்கள் வேறு வேறு என்பதால் உபதேசங்கள் எல்லாம் வெவ்வேறுபோல் தோன்றுகின்றன. அஷ்டாவக்ரருக்கு அர்ஜுனன் சீடனாகக் கிடைத்திருந்தால் பகவத் கீதை தான் உருவாகியிருக்கும். கிருஷ்ணருக்கு ஜனகர் சீடராகக் கிடைத்திருந்தால் அஷ்டாவக்ர மகா கீதை தான் மொழிந்திருப்பார். இயேசுநாதர் இந்தியாவில் பிறந்திருந்தால் புத்தரைப் போலவே உபதேசித்திருப்பார். அவர் யூதர்களுக்கு

உபதேசித்ததால் வித்தியாசம் தெரிகிறது. கண்ணாடி மாறிவிட்டது. அது சுயமாக மாறவில்லை. எதிரே இருப்பவன் காரணமாகக் கண்ணாடி மாற்றி பிரதிபலிக்கிறது. கண்ணாடியின் உட்புறம் படமெதுவும் கிடையாது. எதிரே யாருமில்லாவிடில் கண்ணாடி காலியாகத் தெரியும். மகான்களின் உபதேசங்களில் வேறுபாடுகள் தெரிவது சிஷ்யர்கள் காரணமாகத்தான்; உபதேச உரையைக் கேட்க வந்திருப்பவர்களின் புரிந்து கொள்ளும் திறன் வேறுபடுவதால்தான்.

**கடைசியாக ஏதும் கேள்வி கேட்க நினைத்தோம். அப்படி எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. ஆகவே ஓஷோ அவர்களே! சீடர்களாகிய நாங்கள் தங்களைப் பணிந்து வணங்குகிறோம்.**

**ம**கிழ்ச்சி, சிலசமயம் சொல்வதற்கென்று நம் மனத்தில் ஏதோ மிஞ்சியிருக்கும். ஆனால் சொல்லவராது. பாடலாம் என்று தோன்றும் ஆனால் பாட்டு வெளிப்படாது. ஒரு தெளிவற்ற தன்மை, மங்கலான தன்மை, மனத்தில் நிலவுவதால் எதையும் வெளிப்படுத்துவதும் தடைப்படுகிறது. முக்கியமான விஷயம் மனத்தில் தேங்கியுள்ளது. வெளியிட முடியவில்லை. மனிதன் என்ன செய்வது? அவனது சங்கடம் கண்ணீராக வெளிவருகிறது. சில சமயம் சிரிப்பாக வெளிப்படுகிறது. வேறு சில சமயம் அவன் மௌனமாகி விடுகிறான். அல்லது பணிந்து வணங்கி விட்டுச் சும்மா நிற்கிறான். இந்தக் கண்ணீர், சிரிப்பு, மௌனம், வணக்கம் மூலம் தான் சொல்ல விரும்புவதைச் சொல்ல முயலுகிறான்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் மகான்களின் பாதங்களில் சிரம்படும்படி வணங்கி வருகின்றனர். மரியாதை மட்டுமல்ல, வேறெதுவும் சொல்லவோ, செய்யவோ தெரியாததால்தான் இப்படிச் செய்கிறார்கள்.

ஐரோப்பிய நாடுகளில் இப்படிக் காலைத் தொட்டு வணங்கும் வழக்கம் கிடையாது. காரணம், அங்கெல்லாம் புத்தர் போன்ற புனிதர்கள் அதிகமாகத் தோன்றியதில்லை. கீழ்திசை நாடுகளில்தான் மகான்கள் அதிகம். அவர்களை தரிசிக்கும் போது

என்ன செய்வது? உங்கள் வழிகாட்டுதலுக்கு நன்றி என்று கூறவதா? நன்றி என்னும் வார்த்தை அற்பமாகத் தெரிகிறதே — மேலும் அந்த பரவச நிலையில் பேசமுடியாதபடி வாயடைத்துப்போகிறதே.. ஒரு வழிதான் உள்ளது. அவர்களின் பாதங்களை நம் தலை தொடும்படியாக அவர்களை வணங்குவது.

உனக்கு கோபம் வந்தால் செருப்பைக் கழற்றி, கோப மூட்டியவன் தலையில் அடிக்கிறாய். அது எதன் அடையாளம்? என் காலை உன் தலைமேல் வைக்கிறேன் என்று சொல்லாமல் தெரிவிப்பதன் அடையாளம் இது! நேரடியாக நம் காலால் இன்னொருவன் தலையை உதைக்க முடியாதல்லவா? அதையே செருப்படி மூலம் நிறைவேற்றிக் கொள்கிறோம். அடக்க முடியாத கோபத்தில் அவ்வாறு செய்கிறோம். அதேபோல் அளவற்ற மரியாதையைக் காட்ட பிறர் காலை நம் தலையால் தொடுகிறோம்.

சீடர்களாகிய நீங்கள் பல்லாண்டுகளாக என்னுடன் இணைந்துள்ளீர்கள். பல வகையில் இணைந்துள்ளீர்கள். நட்புடன், எதிர்ப்பு மனப்பான்மையுடன், சிரத்தையுடன், அலட்சியமாக, என்னை ஆதரித்து, என்னை எதிர்த்து என்று எல்லா விதமாகவும், இணைந்துள்ளீர்கள். வலுவாக இணைந்துள்ளீர்கள். கால ஓட்டத்தில் இந்த வகைகள் மறைந்துவிட்டன. குரு-சீடன் உறவு மட்டுமே மிஞ்சியுள்ளது. எல்லா விதத்திலும் நீங்கள் என்னை நெருங்கிவிட்டீர்கள். எல்லாப் பருவங்களையும் கடந்து ஞானம் என்னும் ஒரே பருவத்தில் வாழும் நிலையை அடைந்து விட்டீர்கள்.

குரு-சீடர் உறவு எப்பொழுதும் ஒரே மாதிரி இருக்காது. அப்படியிருந்தால் சுவை நீங்கிவிடும். குருவின் மீது மிகுந்த மரியாதயுள்ள சீடன் சில சமயம் அவ்வளவு மரியாதை தேவையில்லையென நினைப்பான். குருவை மிகவும் நேசிக்கின்ற அவன் சில சமயம் அவர் மீது கோபமும் கொள்வான். தனது எல்லாவற்றையும் குருவுக்கே சமர்ப்பிக்க விரும்பும் சீடன் ஒரு சமயம் அவர் அதற்குத் தகுதியுள்ளவரா என்று யோசிப்பான். குருவைப் பற்றி சில சமயம் கவலைப்படுவான். சில சமயம் அவரை சந்தேகிப்பான். இதெல்லாம் இயற்கை தான். இதில்

தவறில்லை. இந்த வெயிலும் நிழலும் போல நிறம் மாறும் விளையாட்டெல்லாம் (chiaroscuro) ஒரு கட்டத்தில் முடிவடைந்து சீடனின் மனம் நிதானமடைந்து பக்குவம் பெறும். அப்போது குருவே சீடன், சீடனே குரு என்று ஒருவரையொருவர் பிரதிபலிக்கும் அதிசயம் நிகழும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**